# மயிலை சீனி. வேங்கடசாமி

# ஆய்வுக் கட்டுரைகள்







மக்கள் வெளியீடு



மக்கள் வெளியீடு






பதிப்பாசிரியர்கள்

மே.து. ராசு குமார் - ப. சரவணன்

# மயிலை சீனி. வேங்கடசாமி ஆய்வுக் கட்டுரைகள்

தொகுதி - 1

*பதிப்பாசிரியர்கள்*

மே.து. ராசு குமார் – ப. சரவணன்

*தொகுப்பாசிரியர்*

ப. சரவணன்

விலை ரூபாய் நூறு

முதற்பதிப்பு டிசம்பர் 2001

மக்கள் வெளியீடு 61

*கோப்பு*

ராகவேந்திரா லேசர் பிரிண்டர்ஸ்

15 தானப்ப தெரு திருவல்லிக்கேணி சென்னை 600 005

*அச்சு*

தேவா ஆப்செட் சென்னை 600 005

*நூலமைப்பு*

மக்கள் அச்சகம் சென்னை 600 002



மக்கள் வெளியீடு

49 உனிசு அலி சாகிப் தெரு எல்லிசு சாலை சென்னை 600 002

தொலைபேசி அலு. 8545532 இல் 8475561

# உள்ளடக்கம்

## தொகுதி - 1

# பதிப்புரை

ஆய்வறிஞர் மயிலை சீனி. வேங்கடசாமி அவர்கள் தமிழியல் ஆய்வுகளில் மிகவும் குறிப்பிடத்தக்கவர். தமிழ் இலக்கிய, வரலாற்று ஆய்வுகளில் ஒருசார்புத் தன்மை தொடர்ந்து இருந்து வந்த காலகட்டத்தில் வாழ்ந்த அவர், இந்த ஆய்வுகளை முறையாக வழிப்படுத்தத் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக்கொண்டவர்.

வரலாறு, கல்வெட்டு, கலை, இலக்கியம், மொழியியல், சமயம், அறிவியல், அரசியல் எனப் பல முனைகளைக் கொண்ட அவருடைய எழுத்துக்கள், ஒரு கட்டத்தில் இத்துறைகளின் ஆய்வுப் போக்குகளையே தடம் மாற்றியிருக்கின்றன.

வாழ்நாள் முழுமையும் சளைக்காமல் ஆய்வுக் கட்டுரைகளும் நூல்களும் எழுதி வந்தார் அவர். அவரது படைப்புகள் அவர்தம் காலத்தில் வெளியான பல்வேறு இதழ்களில் வெளியிடப்பட்டிருக்கின்றன. நூல் வடிவாக வெளிவந்த ஆய்வுகள், பயன்பாட்டுக்கு ஓரளவு கிடைக்கக் கூடியவையாக இருப்பினும், தனிக் கட்டுரைகளாக இதழ்களிலும் சிறப்பு மலர்களில் எழுதப்பட்ட ஆய்வுகள் இன்று பெரும்பாலும் ஆய்வாளர்களின் பயன்பாட்டுக்கு எட்டாதனவாகவே இருந்துவருகின்றன.

இந்த நிலையில், அவரது நூற்றாண்டு விழாவினையொட்டி தமிழக அரசு அவருடைய படைப்புக்களின் காப்புரிமையை நீக்கி, நாட்டுடைமையாக்கிச் சிறப்பித்தது. இதனையடுத்து ஏற்கனவே நூல்களாக வெளியிடப் பெற்று பல பதிப்புகளைப் பெற்றவை மீண்டும் அச்சேற்றப்பட்டன. மயிலையாரின் ஆய்வுகளை அடுத்த தலைமுறையினரும் காணக்கூடிய ஒரு வாய்ப்பு இதனால் ஏற்பட்டது. ஆயினும், உதிர்ந்த மலர்களாகக் கிடந்த அவரது ஆய்வுக் கட்டுரைகள் தொடர்ந்து ஆய்வாளர்களுக்கும் தமிழர் களுக்கும் எட்டாக் கனியாகவே இருந்தன.

இச்சூழலில், மயிலையார் அவர்களின் ஆய்வுக் கட்டுரை களைத் தொகுக்கும் பணியினைத் தாமாக ஏற்றுக்கொண்டு களத்தில் இறங்கினார் ப. சரவணன் என்ற இளைஞர். ஆர்வமும் துடிப்பும் வேகமும் கொண்ட அவரது முயற்சியினால் நூற்றுக்கணக்கான கட்டுரைகள் திரட்டப்பட்டிருக்கின்றன. இவையே, இங்கே தொகுப்புகளாக இடம்பெற்றிருக்கின்றன.

இக்கட்டுரைகள் யாவும் வரலாறு (தொகுதி-1), கலை, இலக்கணம்-மொழி (தொகுதி-2), சமயம், அறிவியல் (தொகுதி-3), பொது, கதை, மொழிபெயர்ப்பு, பெருமக்கள், நேர்காணல், அணிந்துரை, முன்னுரை (தொகுதி-4), இலக்கியம் (தொகுதி-5) எனப் பல்வேறு தலைப்புகளில் முறைப்படுத்தப்பட்டிருக்கின்றன. இலக்கியம் தொடர்பான கட்டுரைகளையும் இலக்கணம்/மொழி

தொடர்பானவற்றையும் பிரித்துக் காட்டுவதும் பண்டைய இலக்கியம், வரலாறு தொடர்பான வற்றை இனம் பிரிப்பதும் சிக்கலானது. இலக்கியம் தொடர்பான சில கட்டுரைகளை வரலாற்றுப் பிரிவில் சேர்ந்திருக்கலாமோ என்று தோன்றுவதும், சமயம் சார்ந்த சிலவற்றை இலக்கியப் பிரிவில் அடக்கியிருக்க லாமோ என்று தோன்றுவதும் இயற்கை. இவை போன்று, ஒன்றோடொன்று இயைபு கொண்ட பல துறை சார்ந்த கட்டுரைகளைத் தெளிவான வரையறைகளுக்குள் கொண்டு வருதல் எளிதல்ல. எனவே, இந்தப் பிரிவுகள் பயன்பாட்டு எளிமைக்காகவே மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. மயிலை யாரின் ஆய்வுகள் வெளிக்கொண்டுவரப்படவேண்டும் என்பதே அடிப்படை நோக்கமாக இருந்தது.

பதிப்புக்காக, இக்கட்டுரைகளில் எத்தகைய மாற்றங்களும் செய்யப்படவில்லை. இருப்பினும், இவை இதழ்களில் வெளியிடப் பட்டவை என்பதால் பதிப்புச் செம்மையை மனத்தில் கொண்டு சில சீர்மைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

இத்தகைய சீர்மையை மேற்கொள்வதில் சில தடைகள் இருக்கவே செய்கின்றன. தமிழ்ச்சொற்கள் சிலவற்றைப் பிரித்து எழுதுவதில் ஏற்றுக்கொள்ளப்பட்ட நடைமுறை வழக்காறுகள் இன்னும் ஏற்படாததால் தமிழ்நாடு, சைவசமயம், வெற்றி பெற்றான், எடுத்துச்சென்றான், ஏற்படுத்திக்கொள்ளவேண்டு மெனில், மேற்கொள்ளப்பட்டுவருகின்றன என்பன போன்ற சொற்களை ஒரே சொல்லாகக் கொள்வதா, பிரித்து எழுதுவதா என்பதில் வெவ்வேறான நடைமுறைகளே இன்று மேற்கொள்ளப் பட்டு வருகின்றன. ஆகையால் இதைப் பொறுத்தவரை ஒத்த தன்மைக்காக, பெருமளவு மாற்றம் எதுவும் செய்யப்படவில்லை. முடிந்தவரை உள்ளது உள்ளவாறே தரப்பட்டுள்ளன.

கோயில் - கோவில், ஆப்பிரிக்கா - ஆப்ரிக்கா, பிராஃமி - பிராமி என்பன போன்ற சில சொற்கள் வெவ்வேறு வகையில் தரப்பட்டுள்ளன. ஐம்பது ஆண்டுகளுக்கு மேலான கால எல்லைகளைக் கொண்ட மயிலையாரின் படைப்புகளில் இயைபு நோக்கி மாறுதல் செய்யப்படவில்லை.

மேற்கோள்களைப் பொறுத்தவரை, அவர் கொடுத்துள்ள வாறே தரப்பட்டுள்ளன. இதழ்கள், நூல்களுக்கேற்ப மயிலையார் மேற்கோள் பகுதிகளைத் தனித்து இறுதியில் தருதல், அவ்வப் பக்கங்களிலேயே அமைத்தல், வருமிடங்களில் அடைப்புக் குறிக்குள் அடக்குதல் என்ற பல நடைமுறைகளைக் கையாண்டுள் ளார். இவை பெரும்பாலும் அவ்வவ்வாறே இடம்பெற்றுள்ளன. சில கட்டுரைகளில் மட்டும், அவற்றின் தன்மைக்கும் இயைபுக்கும் ஏற்பத் தனித்துத் தரப்பட்டிருந்த மேற்கோள் பகுதிகள் வருமிடங்களிலேயே அமைக்கப்பட்டுள்ளன.

ஒரு சில இடங்களில் வரிகள் அல்லது சொற்கள் விடப்பட்டிருப்பமை தெரிகின்றது. இந்த 'அச்சுப்பிழை'களை முழுமை செய்ய இயலவில்லை. இருந்தாலும் பிற அச்சுப் பிழைகளும் 'அச்சகப் பிழை'களும் திருத்தப்பெற்றுள்ளன.

நாள், திங்கள், ஆண்டு, மேற்படி போன்றவற்றைக் காட்டும் குறியீடுகள் கணினிக் கோப்பில் இடம்பெறாததால், அவற்றுக்குரிய சொற்களே பயன்படுத்தப்பட்டுள்ளன. முடிந்தவரை நூல்கள், இதழ்கள், வேற்று மொழிச் சொற்கள் ஆகியன சாய்வெழுத்தில் தரப்பட்டுள்ளன. மேற்கோள் பகுதிகள் "/" என இரட்டைக் குறிகளோடும் அழுத்தத்திற்கும் தனித்துக் காட்டுதற்கும் உரிய சொற்கள் - சொற்றொடர்கள் '/' என ஒற்றைக் குறிகளோடும் அமைக்கப்பட்டுள்ளன. இவை போன்ற ஒரு சில செம்மைப்படுத்து தலையன்றி, வேறு மாற்றங்கள் மேற்கொள்ளப்படவில்லை.

*மயிலை சீனி. வேங்கடசாமி ஆய்வுக் கட்டுரைகள்* என்ற தலைப்பிட்டு ஐந்து தொகுதிகளாக அவரது படைப்புகள் வெளிவருகின்றன. அவரது ஆய்வுக் கட்டுரைகளன்றி, நூல் வடிவம் பெறாத எழுத்துக்கள் யாவும் தொகுக்கப்பட வேண்டும் என்ற நோக்கத்தினால், அவர் பெயரில் வெளிவந்த யாவும் சேர்க்கப் பட்டுள்ளன. அதனாலேயே, அவர் பிறருடைய நூல்களுக்குக் கொடுத்திருந்த அணிந்துரைகள், பெருமக்கள் பலரை பற்றிய கருத்துரைகள் என யாவும் உள்ளடக்கப்பட்டிருக்கின்றன.

நூல் வடிவில் வந்துள்ள *சமயம் வளர்த்த தமிழ், அஞ்சிறைத் தும்பி* ஆகியன கட்டுரைத் தொகுப்புகள். ஆகவே, இவற்றில் உள்ளடங்கியிருந்தவை மட்டும் கட்டுரைகளாகக் கொள்ளப்பட்டு இத்தொகுப்பிலும் இணைக்கப்பட்டுள்ளன. அத்துடன், இந்த இரு நூல்களுக்கு மயிலையார் எழுதிய 'முன்னுரை'களும் தனியே சேர்க்கப்பட்டுள்ளன.

இத்தொகுப்புகளில் இடம் பெற்றுள்ள கட்டுரைகள் மட்டுமன்றி, வேறு சிலவும் விடுபட்டிருக்கலாம் என்பது உண்மையே. மலர்கள், சிறப்பிதழ்களுக்கு எழுதிய கட்டுரைகள் விடுபட வாய்ப்புகள் மிகுதி. பிற நூல்களுக்கு எழுதிய அணிந்துரைகள் இன்னும் இருக்கலாம்; தனிப்பட்ட மடல்களும் பலரிடம் இருக்க முடியும். இவற்றின் படிகளை அனுப்பிக் கொடுத்தால் அவற்றையும் அடுத்தடுத்த பதிப்புகளில் நன்றியுடன் சேர்த்துக் கொள்ள விழைகின்றோம். திரு. மா.சு. சம்பந்தம் அவர்களின் *அச்சுக்கலை* நூலுக்கு மயிலையார் எழுதிய அணிந்துரை அந்த நூலின் இடம்பெறவில்லையாயினும் அவர் அதனைப் பொறுப்புடன் கொண்டிருந்ததால் இந்நூலில் சேர்க்கும் வாய்ப்புக் கிடைத்தது. இதைப் போன்று அவர் எழுதி அனுப்பிய கட்டுரைகளை வெளியிட முடியாத நிலையில் யாரேனும் வைத்திருந்தால் நிறைவுடன் வெளியிட்டு மகிழ்வோம்.

மறைந்த போன தமிழ் நூல்களையும் பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியங்களையும் தோண்டித் தொகுத்துக் கொடுத்த மயிலையாரின் படைப்புகள் தமிழ் அறிவுச் செல்வத்தின் ஒரு பகுதியாகும். இதனைக் கால வெள்ளத்தில் கரைந்து விடாது காப்பாற்றித் தரும் அரிய பணியினைத் தம்பி சரவணன் செய்திருக்கிறார். இது ஆய்வு முயற்சிகளைப் போலவே வைத்து எண்ணத்தக்கது; போற்றுதலுக்கும் வரவேற்புக்கும் உரியது.

இக்கட்டுரைகளைத் தொகுக்கும் பணியை மேற்கொண்டிருந்த போதும் இத்தொகுப்புகள் அச்சுக்குச் செல்லும்போதும் அவர் நிலையான பணி எதிலும் இல்லை. இருந்தாலும் ஓய்வின்றி, உறுதியுடன் பணியினை முடித்துக் கொடுத்திருக்கிறார் - இல்லை இல்லை இன்னும் தேடிக்கொண்டிருக்கிறார் என்றுதான் கூறவேண்டும்.

இந்த முயற்சி, உணர்ச்சி, உழைப்பு, உறுதி, நம்பிக்கை அவரது வாழ்நாள் முழுதும் தொடரவேண்டும். இத்தகைய பணிகளில் மட்டுமல்ல, எத்தகையப் பணியிலும் இதைப்போன்ற கடமை களைக் கைக்கொள்ளக்கூடிய சுறுசுறுப்பு இவருக்கு வாய்த் திருக்கிறது. அதன் வழியே மேலும் வளர்ச்சி பெற வாழ்த்துக்கள்.

முடிந்தவரை முழுமையான தொகுப்பாக அமைந்துள்ள இந்த முயற்சிகளுக்கிடையில், மயிலையாரின் வாழ்க்கைக் குறிப்பையும், கால வரிசையில் தொகுத்துக் கொடுத்திருப்பது மற்றொரு தனிச்சிறப்பாகும். இத்தகைய பணியினையும் முதன்முதலாக மேற்கொண்டவர் தம்பி சரவணன்தான். இதனை மேலும் விரிவுபடுத்தி, மயிலையாரின் வாழ்க்கையை அவரது படைப்புச் சூழ்நிலைகளினூடே பார்க்கின்ற மற்றொரு முயற்சியை அவர் மேற்கொள்ளவேண்டும்.

இப்பணிகளில் ஊக்கமும் ஈடுபாடும் காட்டிய பேரா. கார்த்திகேசு சிவத்தம்பி, சிறுநீரக இயல் வல்லுநரும் எனது மைத்துனருமான டாக்டர் மு.ஆ. முத்துசேதுபதி, பேரா. ஆ. சிவசுப்பிரமணியன், பேரா. ஆ.இரா. வேங்கடாசலபதி ஆகியோருக்கு எமது நன்றி. இதைப் போன்று தமிழின் அறிவுச் செல்வத்தை விரிவாக்கிய - வளப்படுத்திய - வலுப்படுத்திய பல அறிஞர் பெருமக்களின் ஆய்வுகளையும் தொகுத்து வெளியிட முயற்சிகளை மேற்கொள்ளவேண்டும் என்ற முனைப்புடன் செயல்பட்டு வரும் மக்கள் வெளியீட்டின் உரிமையாளர் திருமதி. ரா. வசந்தா அவர்களின் முழு ஒத்துழைப்பு எமது பணிகளில் பேருதவியாக அமைந்தது.

**மே.து. ராசுகுமார்**

# தொகுத்தவன் பேசுகின்றேன்

தொகுப்புக் கலை என்பது படைப்புக் கலையைப் போன்றே இன்றியமையாதது மட்டுமல்ல, மிகுந்த இன்னல்களுக்கு இடையில் செய்ய வேண்டியது. தொகுப்புப் பணியும் அகழ் வாய்வைப் போன்றதே என்பதை இந்த அநுபவம் எனக்கு உணர்த்திற்று. எனினும், தமிழுக்காக உழைத்துவிட்டுத் தலைமறைவாகிப்போன அறிஞர் பெருமக்களை அகழ்ந்தெடுத்து அவர்களையும் அவர்தம் படைப்புகளையும் ஆவணப்படுத்து தலில் உள்ள நாட்டமே என்னை இது போன்ற பணியில் தொடர்ந்து ஈடுபடுத்துகிறது.

"வாழையடி வாழையென வந்த தொகுப்பாளர் வரிசையில் நானும் அடியெடுத்து வைத்துள்ளேன். எனக்கு முன்பே தொகுப்புப் பணியில் ஈடுபட்ட அறிஞர் பலருள் யாரேனும் ஒருவரைச் சுட்டிக் காட்ட வேண்டுமானால், அதற்கு மயிலை சீனி அவர்கள் நல்ல எடுத்துக்காட்டு. அவர் 1948இல் *ஈழமணி* மலரில் திரு. விபுலாநந்த அடிகளின் படைப்புகளைத் தொகுத்துள்ளார். அந்த அடிச்சுவட்டைப் பின்பற்றியே நானும் ஆங்காங்கே சிதறிக் கிடக்கும் அவரது படைப்புகளை ஒருங்கே தொகுத்துள்ளேன். மயிலை சீனியின் படைப்புகளைத் தொகுக்கும் ஆர்வமும் அதற்கான சூழலும் எனக்கு வாய்த்ததைப் பற்றி இங்குக் குறிப்பதும் அவசியம்.

மயிலை சீனியின் *கிறித்துவமும் தமிழும்* என்னும் நூலை எனது பள்ளிப் பருவத்தில் முதன்முதலில் படிக்க நேர்ந்தது. மயிலை சீனி என்ற தனிமனிதரைப் பற்றிய கேள்வி ஞானமோ அல்லது பிறவோ எதுவும் என்னை அந்த நூலின்மீது ஆட்சி செலுத்தவில்லை. ஆனாலும் அந்த நூல் என்னை ஈர்த்தது (அந்த வயதில் ஒரு கிறித்துவ வீட்டில் நான் டியூஷன் கற்றுவந்த சூழல் இதற்குக் காரணமாக இருக்கலாம்). இதன் பிறகு மயிலை சீனியைப் பற்றிய பல்வேறு முகங்கள் எனக்குத் தெரியவந்தன. வரலாற்று ஆய்வாளாராக, கல்வெட்டு நிபுணராக, மொழியியல் வல்லுனராக, ஏன்? சிறுகதை ஆசிரியராகக்கூட அவர் இயங்கியிருப்பதை அறிந்தேன். மயிலை சீனியின் இந்தப் பலதரப்பட்ட ஆளுமையை எனக்கு அறிமுகம் செய்து வைத்தவர் திரு.ச. விருஷபதாஸ் ஜெயின். மயிலையாரின் எழுத்துக்கள், களப் பயணங்கள், ஜீவபந்து திரு.

டி.எஸ். ஸ்ரீபால் உடன் அவருக்கிருந்த உறவு, எங்கள் ஊருக்கு மயிலை சீனி வந்தது முதலியன குறித்து ஜெயின் பலமுறை எனக்குச் சொல்லியிருக்கிறார். 1961இல் எனது ஊரான மேல்மலையனூர் கிராமத்தில் கொங்குவேளிர் இலக்கிய மன்றம் என்னும் அமைப்பைத் தொடங்கி வைக்க மயிலை சீனியை அழைத்து வந்தவர் ஜெயின். *நல்லறம், முக்குடை* போன்ற ஜைன இதழ்களில் வெளிவந்த மயிலை சீனியின் கட்டுரைகள் அவர்தம் பிற படைப்புகள் ஆகியன குறித்துத் தொடக்கக் காலத்தில் என்னோடு விவாதித்தவர் இவரே. இந்தப் பின்புலமே மயிலை சீனியின்மீது எனக்குப் பற்றுதலை உண்டாக்கியது. அதுமுதல் அவரது எழுத்துக்களை நான் திரட்டத் தொடங்கினேன். இத்துடன் சென்னைப் பல்கலைக்கழகத்தில் நான் ஆய்வு மாணவனாக இருந்தபோது மயிலை சீனியின் கட்டுரைகளை மட்டும் தொகுக்கும் வாய்ப்பும் வேறொரு வகையில் எனக்கு வாய்த்தது. அந்த வாய்ப்பை எனக்கு நல்கியவர் பேரா. வீ. அரசு அவர்கள்.

இதற்கிடையில் மயிலை சீனியின் நூற்றாண்டு நாள் வந்தது. நூற்றாண்டு விழாவை நடத்த முன்வந்த 'வடசென்னைத் தமிழ் வளர்ச்சிப் பேரவை', விழாவின்போது மயிலை சீனியின் கட்டுரைகளை மட்டும் கண்காட்சியாக வைக்க விரும்பியது. என்னிடம் இருந்த சில கட்டுரைகளை நான் கொடுத்துதவினேன். 29-01-2000 அன்று வடசென்னை தியாகராயர் கல்லூரியில் நூற்றாண்டு விழா சிறப்பாக நடந்தது. அதே நாளில் அவ்விழாவிற்காகத் *தினமணியில்* என்னால் எழுதப்பட்ட 'நமது அடையாளங்களை மீட்டவர்' என்னும் கட்டுரையும் இந்த விழாவிற்குப் பெரிய வரவேற்பை ஏற்படுத்திற்று. மயிலை சீனிக்கு நூற்றாண்டு விழா எடுக்கக் கோரியும் அவரது படைப்புகளை நாட்டுடைமை ஆக்கக் கோரியும் சட்டமன்றத்தில் எழுந்த விவாதத்திற்கு இந்தக் கட்டுரையும் ஒரு காரணமாக அமைந்தது எனலாம்.

இதையடுத்து என் போன்ற சிலர் அவரது படைப்புகளைத் தேடுவது, வெளியிடுவது என்று அக்கறை காட்டினர். இதில் என்னோடு ஒத்த கருத்துடையவர்களாக எனக்கு இருவர் வாய்த்தனர். ஒருவர் ஆ.இரா. வேங்கடாசலபதி. மற்றொருவர் டாக்டர் மே.து. ராசுகுமார். மயிலை சீனியின் கட்டுரைகளை நான் தொகுத்துக்கொண்டிருந்தபோது சிலரால் ஏற்பட்ட சங்கடங்களைக் களைந்து மக்கள் வெளியீட்டிடம் என்னை ஆற்றுப்படுத்தியவர் அண்ணன் சலபதி. மயிலை சீனியின் *களப்பிரர் ஆட்சியில் தமிழகம்* என்னும் நூலை இதற்கு முன்பே மக்கள் வெளியீடு வெளியிட்டிருந்ததால் அது எத்தகைய தயக்கமும் இன்றி என்னை அரவணைத்தது.

மயிலை சீனி பல துறைகளிலும் தமது பங்கைச் செலுத்தியிருப்பதால் அவரது படைப்புகள் வகை தொகைப் படுத்தப்பட்டு தற்போது ஐந்து தொகுதிகளாக வெளிவருகின்றன. கட்டுரைகள் கால வரிசையில் அமைக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு கட்டுரையின் இறுதியிலும் அது எங்கிருந்து பெறப்பட்டது என்பது குறிப்பிடப்பட்டுள்ளது. சிலவற்றிற்குச் சான்று மூலம் கிடைக்கவில்லையானால் அவை மட்டுமே விடுபட்டுள்ளன.

இந்நூலில் உள்ள 'ஆனைக்கோயில்' கட்டுரை புதிய வரவு. மயிலை சீனி இதை ஒரு சிறு நூலாகவே வெளியிடத் திட்டமிட்டிருந்தார் போலும். ஆனால் அவர் அதை இறுதிவரை நூலாக்கம் செய்ததாகத் தெரியவில்லை.

இந்தத் தொகுப்புப் பணியில் பலரது அறிவையும் உழைப்பையும் நான் பயன்படுத்திக் கொண்டிருக்கிறேன். அறிஞர் திரு. மா.சு. சம்பந்தம் அவர்கள் இதில் குறிப்பிடத் தகுந்தவர். மயிலை சீனியைப் பற்றிய பல குறிப்புகள், புகைப்படங்கள், கட்டுரைக்கான சில குறிப்புகள் முதலியவற்றை அவர் வழங்கினார்.

பேரா. திரு. தன்யகுமார் தம்மிடமிருந்த மயிலை சீனியின் கட்டுரைகள் சிலவற்றைக் கொடுத்ததோடு அவரது சில கையெழுத்துப்படிகளையும் கொடுத்து உதவினார்.

*கொங்கு* பத்திரிகையிலிருந்து சில கட்டுரைகளை படியெடுத்துக்கொள்ள உதவியவர் திரு. கொடுமுடி சண்முகம்.

திரு. சலபதி சில கட்டுரைகளுக்கான தகவல்களையும் ஆலோசனைகளையும் வழங்கினார். திரு. பழ. அதியமான் *ஊழியன்* இதழிலுள்ள சில கட்டுரைகளின் குறிப்புகளைத் தந்துதவினார். *ஊழியனி*லிருந்து சில கட்டுரைகளை எடுத்து அனுப்பி உதவியவர் திரு. மு. நடேசன்.

அய்யா திரு. 'இலக்கிய வீதி' இனியவன் அவர்கள் சில இதழ்களின் பட்டியல் உள்ள இடங்களைத் தெரிவித்தார். அன்பு நண்பர் திரு. து. இலட்சுமிபதி சில துணுக்குகளையும் கட்டுரை களையும் அளித்தார். அவை மயிலை சீனியின் வாழ்க்கைக் குறிப்பைத் தொகுக்கப் பெரிதும் உதவின.

சாமி. சிதம்பரனாரைப் பற்றிய தமது முனைவர் பட்ட ஆய்வினூடே, *குடியரசு* இதழிலிருந்து மயிலை சீனியின் பல கட்டுரைகளைப் படி எடுத்துத் தந்தவர் எனது ஒருசாலைத் தோழியர் க. பிரீதா.

*இராமலிங்கர் பணிமன்ற முத்திங்களிதழி*லிருந்து சில கட்டுரைகளை வடலூரில் இருந்து எனக்குப் படியெடுத்து அனுப்பியவர் எனது குருநாதர் திரு. சீனி. சட்டையப்பன் அவர்கள்.

இவற்றோடு திரு. அ.ம. சத்தியமூர்த்தி எழுதிய *தமிழகம் நினைக்க மறந்த தமிழறிஞர்கள்* என்னும் நூலில் அவர் தொகுத்தளித்த மயிலை சீனியின் படைப்புகளும் எனக்குப் பெரிதும் உதவின.

பல்வேறு வகையில் இந்நூலாக்கத்திற்குப் பெரிதும் உதவியவர்கள் தஞ்சைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் திரு. இ. சுந்தரமூர்த்தி, திரு. இராமர் இளங்கோ, திரு. மா. ரா. அரசு, திரு. கி. ஜெயகுமார், திரு. தெ. மதுசூதனன், திரு. பா. வீரமணி, திரு. ப. வேனுகோபால், கு. அன்புசெல்வம் ஆகியோர்.

தொகுப்புப் பணியில் எனக்கு உதவிய நூலகங்கள்: மறைமலையடிகள் நூலகம், அண்ணா அறிவாலய நூலகம், பெரியார்திடல் நூலகம், வட சென்னைத் தமிழ் இளைஞர் கழக நூலகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை ஆவணக் காப்பகம், காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழக நூலகம் ஆகியவை. இங்குள்ள ஊழியர்களின் ஒத்துழைப்பு இல்லாது போயிருந்தால் இவ்வளவு பெரிய பணி சாத்தியமில்லை.

மயிலை சீனியின் மீது அளவு கடந்த மரியாதையை வைத்திருக்கும் திரு. மே.து. ரா. அவர்கள், இந்த நூலின் பக்க வரையறைகளைப் பற்றி எல்லாம் கவலைப்படாமல் வெளியிட முன்வந்தவர். அவருக்கும் மக்கள் வெளியீடு உரிமையாளர் திருமதி ரா. வசந்தா அவர்களுக்கும் நான் பெரிதும் கடமைப்பட்டவன்.

இந்தப் பெரிய பணியில் என்னோடு கைகோர்த்துத் தங்களது ஒத்துழைப்பை நல்கிய அனைவருக்கும் இந்த நேரத்தில் நன்றியைத் தெரிவிப்பது என் கடன்.

சரன்

# மயிலை சீனி. வேங்கடசாமி வாழ்க்கைக் குறிப்புகள்

1900 டிசம்பர் 16, சென்னை மயிலாப்பூரில் பிறப்பு. தாய்: தாயாரம்மாள்; தந்தை: சீனிவாச நாயக்கர்.

1905 தமையனார் சீனி. கோவிந்தராசனிடம் இளமைக் கல்வி. பள்ளி இறுதி வகுப்புவரை மயிலாப்பூர் புனித தோமையர் (St. Thome) பள்ளியில் பயிலுதல். பின்பு எழும்பூர் ஓவியக் கல்லூரியிலும் சிறிது காலம் பயிற்சி பெறுதல்.

1922 தந்தையும் தமையனும் அடுத்தடுத்து இறந்ததால் குடும்பத்தைப் பேண, மோட்டார் வண்டி உதிரிப் பொருள்கள் விற்கும் கடை ஒன்றில் எழுத்தராகப் பணிபுரிதல். அவ்வப்போது இதழ்களுக்குக் கட்டுரை எழுதுதல்.

1925 நீதிக் கட்சியின் சார்பில் வெளியான *திராவிடன்* பத்திரிகையில் ஆசிரியர்குழு உறுப்பினர்.

1926 குடியரசு பத்திரிகையில் பகுத்தறிவு தொடர்பான செய்திகளை எழுதுதல். தந்தை பெரியாருடன் நெருக்கமான உறவு.

1929 ஏப்பிரல், *ஆரம்பாசிரியன்* மாத இதழ் உதவி பத்திராதிபர்.

1932 ஜனவரி, *ஆரம்பாசிரியன்* உதவி பத்திராதிபர் பதவியில் இருந்து விலகல்.

1934 மாமல்லபுரத்தில் முழுநிலா இரவில் பாரதிதாசன், ப. ஜீவானந்தம், குத்தூசி குருசாமி, குஞ்சிதம் குருசாமி,மாயூரம் நடராசன், சாமி. சிதம்பரனார், நாரண. துரைக்கண்ணன் ஆகியோருடன் படகில் செல்லல். *ஓடத்தில் ஒரு நாள்* படைப்புப் பிறந்தது.

1937 தமிழகத்தில் நடந்த இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் பங்கேற்பு.

1938 சுவாமி விபுலாநந்தருடன் தொடர்பு.

1942 மயிலாப்பூர் நகராண்மைப் பள்ளியில் தொடக்கக் கல்வி ஆசிரியர்.

1952 அக்டோபர் 14, புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் தமிழ் நிலம் என்னும் பகுதியில் மயிலை சீனி. குறித்து பா புனைந்து அவரது தமிழ்ப் பணியைப் புகழ்தல்.

1955 ஆசிரியப் பணியிலிருந்து ஓய்வு பெறுதல்.

1955 மே 13, *திராவிடன்* பத்திரிகையில் திராவிடப்பித்தன் என்பவர் தமது தொடர் கட்டுரை ஒன்றில் இவரது மேற்கோளை எடுத்தாண்டு புகைப்படத்தையும் இட்டு மேலைநாட்டு ஆய்வாளருக்கு நிகராகப் போற்றுதல்.

1956 *தமிழர் வளர்த்த அழகுக் கலைகள்* என்னும் இவரது நூலுக்குத் தமிழக அரசு ரூ.1000 முதற்பரிசு வழங்குதல்.

1956 மதுரைத் தமிழ்ச் சங்கப் பொன்விழாவில் பங்கேற்பு.

1958-60 தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் துணைத் தலைவர்.

1959 ஜூன் 12, மறைமலையடிகள் ஆராய்ச்சிக் குழுவில் ஆயுள் உறுப்பினர். இத்துடன் நக்கீரர் கழகம், தொல்பொருள் ஆய்வுச் சங்கம் ஆகியவற்றிலும் உறுப்பினராகச் செயலாற்றுதல்.

1959 ஆய்வுரை பல நிகழ்த்தியமைக்காக ஒய். எம். சி. ஏ. பட்டிமன்றம், பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தல்.

1959 அக்டோபர் 25, நக்கீரர் கழகத்தின் சார்பில் டாக்டர் அ. சிதம்பரநாதன் தலைமையில் மாமல்லபுரத்திற்குக் களப்பயணம் மேற்கொள்ளுதல். 'மாமல்லபுரம் குறிப்பு' என்னும் தலைப்பில் மாமல்லபுரம் வரலாற்றை விளக்குதல்.

1960 மே 17, *காஞ்சி மணிமொழியார் மணிவிழா மலர்* வெளியீட்டுக் குழு உறுப்பினர்.

1961 மார்ச் 17, வெள்ளிக்கிழமை மாலை 4.30 மணியளவில் சென்னை கோகலே மண்டபத்தில் உயர்நீதி மன்ற நடுவர் எஸ். கணபதியா பிள்ளை தலைமையில் மணிவிழா நடத்தல். 'ஆராய்ச்சி அறிஞர்' பட்டம் பெறுதல்.

1961 மே 25, 26, 27, கொங்கு நாட்டிலுள்ள அறச்சலூர், விஜயமங்கலம், திங்களூர், சீனாபுரம், பூந்துறை, வெள்ளோடு ஆகிய இடங்களில் சமணம் தொடர்பான வரலாற்றுச் சான்றுகளைப் பார்வையிடவும் ஆங்கு குடியேறிய சமணர்களைப் பற்றி ஆராய்ச்சி செய்யவும் ஜீவபந்து டி.எஸ். ஸ்ரீபால் மற்றும் ஈரோடு வரலாற்றுச் சங்க உறுப்பினர்களுடன் களப்பயணம் செல்லுதல்.

1962 ஜனவரி 19, செஞ்சி - மேல்மலையனூர் கிராமத்தில் 'கொங்குவேளிர் இலக்கிய மன்றம்' தொடங்கிவைத்து உரையாற்றுதல்.

1962 பிப்ரவரி 26, 27, 28, அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் 'சங்ககாலத் தமிழக வரலாற்றில் சில செய்திகள்' என்னும் தலைப்பில் ஆய்வுரை நிகழ்த்துதல்.

1964 தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவர்.

1964 'எழுத்துலகம்' நடத்திய கவியரங்கத்திற்குத் தலைமை தாங்குதல்.

1968 டிசம்பர், *தாமரை* இலக்கியத் திங்கள் இதழ் அட்டையில் முகப்போவியம் அமைதல்.

1969 ஜீவபந்து டி.எஸ். ஸ்ரீபால் நடத்திய *நல்லறம்* இதழ் ஆசிரியர் குழுவில் முதலிடத்தை வகித்தல்.

பேரா. நா. வானமாமலை தொடங்கிய *ஆராய்ச்சி* என்ற காலாண்டு ஆய்வேட்டின் முதல் இதழில் ஆய்வுக்கட்டுரை இடம்பெறுதல்; தொடர்ந்து அதில் அரிய பல கட்டுரை களை எழுதுதல்.

1971 மே 5, சைதாப்பேட்டை கலைவளர் பகுதியில் நாவலர் நெடுஞ்செழியனின் சிறப்புரையைத் தொடர்ந்து டாக்டர் அ. சிதம்பரநாதன் தலைமையில் 'கல்வெட்டுப் பயிற்சிப் பாசறை' குறித்து அரியதோர் உரை நிகழ்த்துதல்.

1972 டிசம்பர் 31, *அப்பாண்டைநாதர் உலா* நாயகரான பகவான் பார்சுவநாதரைக் காண திருநறுங்கொண்டை என்னும் ஊருக்குச் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழிலக்கியத் துறையின் வாயிலாக பேராசிரியர்கள், ஆய்வுமாணவர்கள் முதலியோருடன் களப்பயணம் மேற்கொள்ளுதல்.

1973 பிப்ரவரி 27, ஒய். எம். சி. ஏ. பட்டிமன்றக் கூட்டத்திற்குத் தலைமை தாங்குதல். (இவரது தலைமையில் பேரா. க.த. திருநாவுக்கரசு 'சங்க இலக்கியக் கோட்பாடுகள்' என்னும் தலைப்பில் உரையாற்றினார்).

1975-79 தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு உறுப்பினர்.

1976 உடல் நலம் சீர் கெடுதல்.

1979 டிசம்பர் 9, சென்னை ஜைன இளைஞர் மன்றம் அண்ணா சாலை மத்திய நூலகத்தில் நடத்திய மகாவீரரின் 2505ஆவது ஆண்டு பரிநிர்வான விழாவில் ஜினகாஞ்சி மடாதிபதி 'திறனாய்வுத் திலகம்' என்னும் பட்டம் வழங்குதல்.

1980 மார்ச் 29, மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் சார்பில் தமிழக ஆளுனர் மாண்புமிகு பிரபுதாஸ் பட்வாரி 'தமிழ்ப் பேரவைச் செம்மல்' என்னும் பட்டத்தை வழங்குதல்.

1980 மே 8, மூளை நரம்பு செயலிழந்ததன் காரணமாக இராயப்பேட்டை அரசு மருத்துவமனையில் அனுமதிக்கப் படுதல். சிகிச்சை பயனின்றி இயற்கை எய்துதல். மறுநாள் கிருஷ்ணாம்பேட்டை சுடுகாட்டில் உடல் தகனம்.

1980 மே 13, ஒய். எம். சி. ஏ. பட்டிமன்றம் இரங்கற் கூட்டம் நடத்துதல். அடுத்தடுத்த நாள்களில் மற்ற இலக்கிய அமைப்புகளும் இரங்கற் கூட்டங்கள் நடத்துதல்.

2001 தமிழக அரசு நூற்றாண்டு விழாக் கொண்டாடுதல்.

2001 மயிலை சீனியின் படைப்புகளைத் தமிழக அரசு நாட்டுடைமை ஆக்குதல்.

தொகுப்பு: ப. சரவணன்

# தமிழ்நாட்டின் தொன்மை

அண்மையில் வெளிவந்து பாடசாலைகளில் பிள்ளைகளுக்குப் பாடமாக வைத்திருக்கும் இந்திய சரித்திரப் புத்தகம் ஒன்றைக் கண்டேன். அதில், *சிலப்பதிகாரக்* கதையைத் தமிழ்நாட்டின் ஆதிச் சரித்திரமாக எழுதப்பட்டிருப்பதைக் கண்டு ஆச்சரியமடைந்தேன். அப்புத்தகத்தை வாசிக்கும் பிள்ளைகள் கி.பி. முதல் நூற்றாண்டில் நடந்த கோவலன் கதையையன்றித் தமிழ்நாட்டிற்கு வேறு புராதன சரித்திரம் இல்லையோ என்று ஐயுறுவார்களன்றோ? அவ்வித ஐயம் எனக்கும் தோன்றிற்று. ஆகவே, தமிழ்நாட்டின் சரித்திர ஆரம்ப காலத்தை ஆராய்ந்தறியத் தொடங்கினேன். இவ்வாராய்ச்சியில் பாரத, இராமாயண காலத்துடன் தமிழ்நாடு சம்பந்தப்பட்டிருந்ததையும் இராமாயண காலத்திற்கு முன்னரே தமிழ்நாடு நாகரிகமடைந்து விளங்கியதையும் கண்டேன். அதனையே இங்கு எழுத முற்பட்டேன்.

கி.மு. 1000 வருடங்களுக்கு முன் செங்கோலோச்சிய சாலோமன் என்னும் அரசன் காலத்தில் எழுதப்பட்ட *எபிரேய வேத* புத்தகத்தில் "தார்ஷிஸ் (Tarshish) கப்பல்கள் மூன்று வருடங்களுக்கு ஒரு முறை, பொன்னையும் வெள்ளியையும் யானைத் தந்தங்களையும் குரங்கையும் மயிலையும் சுமந்து கொண்டு வந்தன" என்று எழுதப்பட்டிருப்பதைக் கொண்டு தமிழ்நாட்டின் தொன்மை கி.மு. 1000 வருடங்களுக்கு முற்பட்டதென்பது யூகிக்கப்படும். இது புறப்பாட்டுப் புறச்சான்றாகும்.

அகச் சான்று, புறச் சான்றுகளைக் கொண்டு பாரதப் போரில் தமிழ்நாட்டின் தொடர்பை விளக்குவோம். பாரத காலத்தில் தமிழ்நாட்டின் மூவேந்தர் அரசாண்டனர் என்பது *புறநானூறு, சிலப்பதிகாரம்* என்னும் நூல்களில் காணப்படுகிறது. பாரதப் போர் நடந்த காலத்தில் சேரநாட்டில் செங்கோல் செலுத்தியவன் உதியன் சேரலாதன் என்னும் தமிழரசன். இவன் பாரதப் போரில் எக்கட்சியையும் சேராமல் நடுவுநிலைமை வகித்தான். ஆனால், பாண்டவர் சேனைக்கும் துரியோதனனாகியோர் சேனைக்கும் பாரதப் போர் முடியும் வரையில் உணவு அளித்தான். இச்செய்கையால் இவ்வரசன் பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் என்னும் சிறப்புப் பெயர்

பெற்றான். இதனைப் *புறநானூறு* இரண்டாவது செய்யுளில் அறியலாம். இதே சரித்திரத்தைச் *சிலப்பதிகாரம்* வாழ்த்துக் காதையில்,

ஓரைவ ரீரைம்பதின் மருடன் றெழுந்த
போரிற் பெருஞ்சோறு போற்றாது தானளித்த
சேரன் பொறையன் மலையன் திறம்பாடிக்
கார்செய் குழலாட வாடாமோ வூசல்
கடம்பெறிந்த வாபாடி யாடாமோ வூசல்

(*சிலம்பு* 29:25)

என்னும் செய்யுளால் இளங்கோவடிகள் நன்கு விளக்கியிருக் கிறார். சேரனைப்போலவே சோழ அரசனும் (அவன் பெயர் சொல்லப்படவில்லை) பாரதப் போர் வீரர்களுக்கு உணவளித் தான் என்னும் சரித்திரமும் காணப்படுகிறது. ஆனால், பாரத காலத்தில் பாண்டிய அரசனைப் பற்றி யாதொன்றும் பண்டைத் தமிழ் நூல்களில் காணப்படவில்லை. ஆயினும், பாண்டவர் துரியோதனனாகியோர் காலத்தில் பாண்டி நாட்டினை அரசாண்டவன் சித்திரவாகனன் என்னும் அரசன். அவன் மகள் சித்திராங்கதை என்பவளைப் பாண்டவர்களுள் ஒருவனாகிய பார்த்தன் (அர்ச்சுனன்) மணம்புரிந்தான் என்றும் இக்கடிமணங் காரணமாக அவர்களுக்குப் புலந்தரன் என்னும் அரசிளங்குமரன் பிறந்தான் என்றும் பாரதப் போர் தொடங்கு முன் இப்புலந்தரன் பாண்டவர் பொருட்டுத் துரியோதனன் பால் தூது சென்றான் என்றும் பாரத சரித்திரம் விளம்பு கின்றது (புலந்தரனுக்குப் பப்ரவாகனன் என்னும் பெயரும் உண்டு). மேற்சொல்லிய இக்காரணங்களால் தென்னாட்டுச் சரித்திரம் வடநாட்டுச் சரித்திரத்திற்குப் பிற்பட்டதன்று என்பது வெள்ளிடைமலைபோல் விளங்குகிறதன்றோ?

இனி பாரத காலத்திற்கு முற்பட்ட இராமாயண சரிதத்தை ஆராய்வோம். சங்க காலத்தில் இயற்றப்பட்ட *இராமாயண வெண்பா* என்னும் நூல் துரதிஷ்டவசமாக மறையுண்ட படியால் இராமாயண காலத்தில் தமிழ்நாட்டின் சரித்திரக் குறிப்புகளைத் தெரிவிக்கும் அகச்சான்றுகள் இல்லை. ஆயினும் போதிய புறச்சான்றுகள் உள. சீதாபிராட்டியாரைத் தேடும் பொருட்டு வானர வீரர்களைப் பல திசையிலும் அனுப்பிய சுக்ரீவன் அவ்வீரர்களுக்குக் கீழ்க்கண்டபடி கட்டளையிட்டதாக வடமொழி இராமாயணத்தை எழுதிய வான்மீகி மகரிஷி எழுதியிருக்கிறார்: "ஆந்திரம், புண்டரம், சோளம் (சோழம்), கேரளத்தோடு கூடிய பாண்டிய நாடுகளைக் காண்பீர்கள். பிறகு பொன்னிறத்ததாயும் அழகுடைத்தாயும்

முத்தமயமான மணிகளால் அலங்கரிக்கப்பெற்றதாயும் பாண்டியர்களுக்கு யோக்கியமாயுமுள்ள கவாடத்தையும் பார்க்கக் கடவீர்கள்." வால்மீகி இராமாயணத்தில் கண்ட இக்குறிப்புகளால் இராமாயண காலத்தில் அல்லது வால்மீகி மகரிஷி காலத்தில் தமிழ்நாட்டினை மூவேந்தர் ஆட்சி செய்தனர் என்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கும். இன்னும், இராம, இராவணர் காலத்தில் இருந்த பாண்டிய அரசன் பிரமசிரம் என்ற அஸ்திரத்தைப் பெற்றுப் பராக்கிரம னாக விளங்கினான் என்றும் அதனால் இராவணன் அப் பாண்டியனுடன் சந்தி (சமாதானம்) செய்துகொண்டு பின்னர் இந்திரலோகத்தை வெல்லப் போனான் என்றும் காளிதாச மகாகவி இயற்றிய *இரகுவமிசம்* என்னும் காவியத்தில் காணப்படுகிறது. இதனால் இராமாயண காலத்தில் இருந்த பாண்டிய மன்னன் இராவணனும் அஞ்சும்படியான பராக் கிரமம் உடையவனாயிருந்தானென்பது வெளிப்படை. இவை வடமொழி நூல்களிலுள்ள புறச்சான்றுகள்.

இராமாயண காலத்திற்கு முற்பட்ட பரசுராமர் காலத்தில் தமிழ்நாட்டை ஆண்ட சோழ மன்னனைப் பற்றிப் பண்டைத் தமிழ் நூலாகிய *மணிமேகலையில்* சொல்லப்பட்டிருக்கிறது. இச்சோழன் பெயர் காந்தன் என்பது. இக்காந்த மன்னன் புகார் பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டு அரசாண்ட காலத்தில், பரசுராமர் அரச குடும்பங்களை நாசம் செய்யும் பொருட்டுச் சோழநாட்டுக்கு வந்தார். பரசுராமர் தன்னுடன் போர் செய்ய வருவதைக் கேட்ட காந்தன் அவருடன் எதிர்த்துப் போர் செய்யத் துணிந்து நின்றான். இதனையறிந்த பரத கண்டத்தின் அதி தேவதையாகிய சம்பாபதி (துர்க்கை என்றும் சொல்வதுண்டு) சோழன் முன் தோன்றிப் பரசுராம ருடன் எதிர்த்துப் போர்செய்யத் தகாதென்று கூறிற்று. இத் தெய்வத்தின் கட்டளையை மீறிச் செல்ல உடன்படாமல் காந்தன், அரச குடும்பத்தில் உதிக்காத ஒருவனைத் தன் சிங்காதனத்தில் வைத்துத் தான் வருமளவும் சோழநாட்டை ஆளும்படி கட்டளையிட்டுப் பொதிகையிலுள்ள அகத்திய முனிவரிடம் சென்றான். பரசுராமர் சோழநாட்டுக்கு வந்து அங்கு அரச குடும்பத்தவனல்லாத ஒருவன் அரசாட்சி செய்வதைக் கண்டு அவனுடன் போர் செய்யாமல் வாளா சென்றார். இது, *மணிமேகலை* சிறைசெய் காதையில் உள்ள கீழ்க்கண்ட அடிகளால் நன்கு விளங்கக்கிடக்கிறது:.

மன்மருங் கறுத்த மழுவா ணெடியோன்
றன்முன் னோன்ற றகாதொழி நீயெனக்
கன்னி யேவலிற் காந்த மன்னவ

னிந்நகர் காப்போர் யாரென நினைஇ
நாவலந் தண்பொழி னண்ணார் நடுக்குறக்
காவற் கணிகை தனக்காங் காதல
னிகழ்ந்தோர் காயினு மெஞ்சுத லில்லோன்
ககந்த னாமெனக் காதலிற் கூஉய்
அரசா ளுரிமை நின்பா லின்மையிற்
பரசு ராமனின் பால்வந் தணுகா
னமர முனிவ னகத்தியன் றனாது
துயர்நீங்கு கிளவியின் யான்றோன் றளவுங்
ககந்தன் காத்தல் காகந்தி என்றே
யியைந்த நாம மிப்பதிக் கிட்டீங்
குள்வரிக் கொண்டவ் வுரவோன் பெயர்நாள்

(மணி. 22: 25-39)

இனி, பரசுராமரும் ஸ்ரீராமரும் சற்றேறக்குறைய ஒரே காலத்தில் இருந்தவர்கள் என்பது வெளிப்படை. அன்றியும் ஸ்ரீராமர் இலங்கைக்குச் சென்றபோது இடையில் அகத்திய முனிவர் ஆசிரமத்தில் தங்கினார் என்று இராமாயணக் கதை விளம்புகிறது. அகத்தியர் காலத்தில் சோழநாட்டை அரசாண்டவன் காந்தன் என்னும் அரசன் என்பதும் மேலே விளக்கப்பட்டது. ஸ்ரீராமர் காலத்தில் இலங்கையை யாண்டவன் ராவணன் என்பதும் வெளிப்படை. அந்த ராவணன் பாண்டியனுக்கு அஞ்சி அவனுடன் சமாதானம் செய்துகொண்டான் என்பதிலிருந்து ராமாயண காலத்தில் பாண்டியன் பராக்கிரமசாலியாக விளங்கினான் என்பது வெள்ளிடைமலை போல் விளங்காநிற்கும். இவ்வித ஏதுக் களால் தென்னாட்டுச் சரித்திர காலம், வடநாட்டுச் சரித்திர காலத்திற்குப் பிற்பட்டதல்ல வென்பது விளங்குகிறதன்றோ?

இனி, வால்மீகி மகரிஷி “பாண்டியனுடைய கபாடத்தையும் காண்பீர்கள்” என்று சொல்லியிருப்பதையும் ஆராய்வோம். முதற் சங்கம் கடல்கொண்ட குமரி நாட்டில் இருந்த மதுரை நகரில் இருந்தது என்றும் பிற்காலத்தில் அக்குமரி நாட்டின் ஒரு பாகம் (மேற்படி மதுரை நகரம் உட்பட) கடலில் மூழ்கிய பின்னர், கபாடபுரம் என்னுமிடத்தில் பாண்டியன் இடைச் சங்கத்தை ஸ்தாபித்தான் என்றும் அதன்பின் நெடுங்காலம் சென்ற பிறகு அக்கபாடபுரமும் அதைச் சேர்ந்த நாடும் மீண்டும் கடலில் மூழ்கிப் போயிற்றென்றும் அதன் பின்னர் இப்பொழுதுள்ள மதுரை நகரத்தில் பாண்டியன் கடைச் சங்கத்தை ஸ்தாபித்தான் என்றும் அக்கடைச் சங்கம் கி. பி. முதல் அல்லது இரண்டாவது நூற்றாண்டு வரையில் நிலை பெற்றிருந்ததென்றும் கர்ணபரம்பரையாகவும் தக்க ஆதாரங்

களோடும் சொல்லப்படுகிறது (ஆதாரங்களை யெல்லாம் இங்கு எழுதினால் மிகவும் விரியும்). எனவே இடைச் சங்கம் கபாடபுரத்தில் இருந்தது என்பதிலிருந்தும் வால்மீகி மகரிஷி "பாண்டியனுடைய கபாடத்தைக் காண்பீர்கள்" என்று எழுதியிருப்பதிலிருந்தும் இராமாயண காலம் இடைச் சங்க காலத்தில் நடை பெற்றதாக ஏற்படுகிறது. பல பெரியோர் களும் இதே அபிப்பிராயத்தைக் கொண்டிருப்பதும் நோக்கற் பாலது. எனவே, தமிழ்நாட்டுச் சரித்திர ஆரம்ப காலம் இராமாயண காலத்திற்கும் முற்பட்டதென்பது விளங்குகிறது. இவற்றையெல்லாம் ஆராயாமல் சரித்திரமெழுதுவோர் கி. பி. முதல் நூற்றாண்டில் (கடைச்சங்க காலத்தில்) நடைபெற்ற சிலப்பதிகாரக் கதையைத் தமிழ்நாட்டின் ஆதி சரித்திரமாகக் குறிப்பிடுவது நகைப்பிற் கிடமாகிறதன்றோ?

*லக்ஷ்மி*, மலர் 2, இதழ் 8, மார்ச் 1925

# நெய்க் குடத்தில் கை விடுதல்

குமிழி கிளம்பும்படி நன்றாகக் காய்ச்சப்பட்ட நெய்யில் கையை விட்டால் எப்படியிருக்கும்?

இது என்ன முட்டாள்தனமான கேள்வி என்று நீங்கள் நினைக்கலாம். ஆனால், இப்படிச் செய்வது பண்டைக்கால வழக்கம். பண்டைக் காலத்தில் நமது நாட்டில், காய்ச்சின நெய்க் குடத்தில் கையை விடுவது ஒரு முறையாக (சத்திய சோதனையாக) நடைபெற்றுவந்தது. ஆங்கில அரசாட்சிக்குப் பிறகு அவ்வழக்கம் நிறுத்தப்பட்டு விட்டது. உடன்கட்டை ஏறுதல், நரபலி கொடுத்தல் முதலிய கொடிய வழக்கங்களை ஆங்கில அரசாங்கத்தார் தடுத்துவிட்டது போலவே, நெய், எண்ணெய் இவற்றைக் கொதிக்கவைத்து அதில் கையை இடச் செய்வதையும் அரசாங்கத்தார் தடுத்துவிட்டார்கள். ஒருவன் ஒரு வழக்குத் தொடர்கிறான். அந்த வழக்கில் வாதியாவது, பிரதிவாதியாவது சொல்வது உண்மை, சத்தியம் என்று எப்படிக் கண்டுபிடிப்பது? அதற்கு ஒரு முறையைப் பண்டைக் காலத்தில் வழங்கி வந்தார்கள். அது என்னவென்றால், ஒரு குடத்தில் நெய் அல்லது எண்ணெயை விட்டு அதை நன்றாகக் கொதிக்கும்படி காய்ச்சி அது கொதித்துக் கொண்டிருக்கும் போதே, வழக்கில் சம்பந்தப்பட்ட வாதியை அல்லது பிரதிவாதியை அதில் கை விடச் செய்வதுதான். அவன் சொல்வது சத்தியமாக இருந்தால் அவன் கை சுட்டு வெந்து போகாமலிருக்குமாம்! அவன் சொல்வது பொய்யாக இருந்தால் அவன் கை சுடப்பட்டு வெந்து விடுமாம்! இந்த வழக்கத்துக்குத்தான் நெய்க் குடத்தில் கை விடுதல் என்று சொல்வது.

இன்னொரு முறையும் உண்டு. அதென்னவென்றால் நெய் அல்லது எண்ணெய்க்குப் பதில் ஒரு நல்ல பாம்பைப் பிடித்துக் குடத்தில் அடைத்துக் குடத்தின் வாயைத் துணியால் மூடிக் கட்டி விடுவார்கள். பிறகு, வாதி அல்லது பிரதிவாதியை அக்குடத்தில் கையை விடச் செய்வார்கள். அவன் சொல்வது உண்மையாக இருந்தால் குடத்தில் உள்ள பாம்பு அவனைக் கடிக்காதாம்; பொய்யாக இருந்தால் பாம்பு கடித்து விடுமாம்! இந்த வழக்கம் நமது தென் இந்தியாவில் பண்டைக் காலம் முதல் இன்றைக்குச் சுமார் 150 வருஷங்கள் வரையில் நடை

முறையில் இருந்து வந்ததாகத் தெரிகிறது. இதற்கு அத்தாட்சியாக இலக்கிய ஆதாரமும் சரித்திர ஆதாரமும் உண்டு. அவற்றை இங்கே விளக்குவோம்.

*பழமொழி நானூறு* என்பது சங்கச் செய்யுளாகிய *பதினெண் கீழ்க்கணக்குள்* ஒன்று. இந்த நூலில் உள்ள ஒரு செய்யுள், பாம்புக் குடம் அல்லது நெய்க் குடத்துள் கைவிடும் வழக்கத்தைச் சொல்கிறது. அது வருமாறு:

கைவிட்ட ஒண்பொருள் கைவர வில்லென்பார்
மெய்ப்பட்ட வாறே உணர்ந்தாரால் - மெய்யா
மடம்பட்ட மானோக்கின் மாமயி லன்னாய்!
கடம்பெற்றான் பெற்றான் குடம் (*பழமொழி*. 119)

இப்பாட்டில் குறிக்கப் பெற்ற குடம் என்பது பாம்புக் குடம் அல்லது நெய்க் குடத்தைக் குறிக்கும். "பாழ்ந்தனிசு வேண்டிப் பாம்புக் குடம் பெற்றான்" என்பதும் பழந்தமிழ்ப் பழமொழி.

வைணவ சமய ஆழ்வார்கள் பன்னிருவரில் ஒருவராகிய குலசேகர ஆழ்வார் சேரநாட்டில் திருவாஞ்சைக்களம் என்னும் நகரத்தில் அரசாண்டிருந்தவர். அவர் சிறந்த வைணவ பக்தர். அவரது அரண்மனையில் ஒருநாள் ஸ்ரீமத் நாராயண மூர்த்தியின் விக்ரகத்துக்கு அபிஷேகம் செய்யும் பொருட்டு அவ்விக்ரகத்தின்மேல் அணியப்பட்டிருந்த விலையுயர்ந்த ஆபரணங்களைக் கழற்றிவிட்டு திருமஞ்சனம் செய்த பிறகு மீண்டும் ஆபரணங்களை அணிகிற சமயத்தில் முக்கியமான சில ஆபரணங்கள் காணாமல் போய்விட்டன. அதைப்பற்றி அரண்மனை அதிகாரிகளை விசாரித்தபோது அவர்கள் திருமஞ்சனம் செய்த பட்டர்மீது பழி சுமத்தினார்களாம். வைணவ பக்தராகிய குலசேகராழ்வார் பட்டர்கள் களவு செய்திருக்கமாட்டார்களென்றும், அவர்கள் யோக்கியர்களென்றும் சொல்லி, அதை நிரூபிக்கப் பாம்பு அடைக்கப் பட்ட குடம் ஒன்றைத் தருவித்து சபை முன்பாக அக்குடத்துள் தமது கையை விட்டாராம். பாம்பு அவரைக் கடிக்கவில்லை என்று சரித்திரம் கூறுகிறது. இதிலிருந்து பாம்புக் குடத்தில் கையிடும் வழக்கம் அக்காலத்திலிருந்ததென்பது விளங்கும்.

இந்தச் சரித்திர ஆதாரம் தெய்வகடாக்ஷம் பெற்ற ஆழ்வார்களைப் பற்றியது. ஆகையால் இதை ஒரு ஆதாரமாகக் கொள்ளக்கூடாது என்று வாசகர்களில் சிலர் நினைக்கலாம். ஆனால் இந்தக் குடத்தில் கையிடும் வழக்கம் பண்டைக் காலத்தில் தோட்டி முதல் தொண்டமான் வரையில் எல்லோரிடத்திலும் வழங்கி வந்ததாகத் தெரிகிறது. இதற்குக் கூழங்கைத்

தம்பிரான் சரிதையும் குடகு நாட்டரசன் சரித்திரமும் தக்க சான்றாகும்.

தஞ்சை ஜில்லாவிலுள்ள மடங்கள் ஒன்றில் ஒரு தம்பிரான் இருந்தார். அவர் இலக்கண இலக்கியங்களிலும் சைவ சாஸ்திரங்களிலும் மிக்க வல்லவர். அவர்மீது அம் மடத்தைச் சேர்ந்த மற்றத் தம்பிரான்கள் ஒரு அவதூறான குற்றத்தைச் சுமத்தினார்கள். அவர் தம்மீது சாட்டப்பட்ட குற்றத்தை மறுத்தபோது அவரை எண்ணெய்க் குடத்துள் கையிட்டுச் சத்தியம் செய்யச் சொன்னார்களாம். அவரும் அதற்குச் சம்மதித்து, கொதிக்கக் காய்ச்சின எண்ணெய்க் குடத்தைக் கொண்டுவரச்செய்து பலர் முன்பாக அக்குடத்துள் கையை விட்டார். சூட்டின் மிகுதியால் கை நன்றாகச் சுட்டு வெந்து போய் விட்டது. அதுமுதல் அந்தக் கை அவருக்கு உபயோகப்படாமலே போய்விட்டது. அதனால் அவருக்குக் கூழங்கைத் தம்பிரான் என்று பெயர் வழங்கப்பட்டது. இவர் யாதொரு குற்றமும் செய்யாமலிருந்தும் தம்மீது அவதூறாக அடாப்பழி சுமத்தப்பட்டதையும், தான் குற்றமற்றவர் என்பதை வெளிப்படுத்தும் பொருட்டு எண்ணெய்க் குடத்தில் கையிட்டு அதனால் கையைக் கூழையாக்கிக் கொண்டதையும் கண்டு மனம் நொந்து இந்த ஊரிலேயே இருக்கக்கூடாது என்று நினைத்து இலங்கைக்குச் சென்று அங்கு யாழ்ப் பாணத்தில் தம் வாழ்நாளைக் கழித்தார்.

வாசகர்களே! இவர் கொதிக்கும் எண்ணெயில் கையிட அது கையைச் சுட்டுவிட்டதாலேயே இவர் குற்றவாளி என்று சொல்லிவிடலாமா? கொதிக்கும் எண்ணெய்க்கு இவர் நல்லவர், இவர் கெட்டவர், இவர் உண்மை சொல்கிறார், இவர் பொய் பேசுகிறார் என்று தெரிந்து கொள்ளும் ஆற்றல் உண்டா? நல்லவனையும் கெட்டவனையும் அது ஒரு தன்மையாகவே சுட்டுவிடும் குணமுடையதல்லவா? இதை உணராமல் அவர் குற்றஞ் செய்திருப்பதால்தான் எண்ணெய் அவரைச் சுட்டு விட்டது என்று சொல்வது பகுத்தறிவுக்குப் பொருந்துமா? அவர்மேல் குற்றஞ் சாட்டினவர்களும் கொதிக்கும் எண்ணெயில் கையைவிட்டு, கை சுடப்படாமல் இருந்தால் அல்லவோ குற்றஞ் சாட்டினவர் சொல்வது உண்மை என்று ஏற்படும். வாதி, பிரதிவாதி இருவரையும் எண்ணெயில் கையிடச் செய்து யாருடைய கை வெந்து போகாமல் இருக்கிறதோ அவர்கள் சொல்வதுதான் நியாயம் என்று முடிவுகட்ட வேண்டும். அப்படிக்கின்றி ஒரு பக்ஷத்தாரை மட்டும் கையிடச் செய்வது நியாயமாகுமா?

யாழ்ப்பாணஞ் சென்ற கூழங்கைத் தம்பிரானைப் பற்றிச் சிறிது சொல்லிவிட்டு மேலே செல்லுவோம். கூழங்கைத் தம்பிரான் யாழ்ப்பாணஞ் சென்று அங்கு இருபாலை நெல்லையப்ப முதலியார் முதலியவர்களுக்குத் தமிழ் ஆசிரிய ராக அமர்ந்து தமிழ் இலக்கண இலக்கியங்களைப் பாடஞ் சொல்லி வந்தார். டச்சு பாஷை, போர்த்துகீசு பாஷைகளையுங் கற்றுத் தேர்ந்தார். யாழ்ப்பாணத்தில் பெருஞ் செல்வராக இருந்த வைத்தியலிங்கச் செட்டியார், பெருங் கல்விமானாய் விளங்கிய பிலிப்பு - தெ- மெல்லோ (Philip De Melho 1723-1790) முதலியவர்களின் உற்ற நண்பராக விளங்கினார். பல தனி நிலைச் செய்யுட்களும் *சித்திவினாயகர் இரட்டை மணிமாலை* முதலிய நூல்களும் இயற்றியிருக்கிறார். *யோசேப்புப் புராணம்* என்னும் கிறிஸ்து சமயநூல் ஒன்றை இயற்றியதாகவும் கூறுவர். இவர், யாழ்ப்பாணம் ஆங்கிலேயர் கையில் அகப்பட்ட சிறிது காலத்திற்குப் பின் காலமானார்.

சுமார் நூறு வருஷங்களுக்கு முன் மைசூருக்கு அடுத்த குடகு நாட்டில் ஒரு அரசன் இருந்தான். இந்த அரசனுடைய தகப்பனார் லிங்கராஜா என்பவர் இறந்து போனதற்குக் காரணம், அரண்மனையில் உத்தியோகஞ் செய்திருந்த பண்டித ராமையா என்பவன் நஞ்சு வைத்ததனால்தான் என்று அவன்மேல் இவ்வரசன் ஐயுறவு கொண்டான். ஆகவே பண்டித ராமையாவை சபை முன்பாக வரவழைத்து லிங்கராஜா இறந்ததற்குக் காரணங்கேட்டான். பண்டித ராமையா, தான் குற்றமற்றவன் என்றும் தனக்கு ஒன்றுந் தெரியாதென்றுஞ் சொல்ல, அந்த அரசன், அப்படியானால் கொதிக்கும் எண்ணெயில் கையிட்டுச் சத்தியஞ் செய்யும்படிச் சொன்னான். அவன் அதற்குச் சம்மதித்து அவ்விதமே கொதிக்கும் எண்ணெயில் கையிட கை வெந்து கொப்புளித்துப் போயிற்று. அப்போது அவன், இது கலிகாலமாகையால் அப்படி வெந்து போயிற்றென்றும் நான் குற்றமற்றவன் என்றும் வாதாடினான். அதை ஒப்புக்கொள்ளாமல் அந்த அரசன் அவனைக் கொலை செய்வித்தான்.

இதுபோலவே பழுக்கக் காய்ச்சிய இரும்பில் கையை அறைந்து சத்தியம் செய்யும் வழக்கமும் முற்காலத்தில் இருந்ததாகத் தெரிகிறது. இது கொடுமையான மூட நம்பிக்கை என்பதில் சற்றும் ஐயமில்லை. தன்னைச் சேர்ந்த பொருள் களைச் சுட்டுச் சாம்பலாக்குவது நெருப்பின் தன்மை. கிரேதாயுகமாயிருந்தாலும், கலியுகமாயிருந்தாலும் இதுவே நெருப்பின் இயல்பாகும். நெருப்பாயிருந்தாலும் கொதிக்கக் காய்ச்சின நெய்யாக இருந்தாலும் அல்லது பழுக்கக் காய்ச்சின

இரும்பாயிருந்தாலும் தன் மீது கையிடுபவன் சத்தியவந்தனா அல்லது பொய்யனா என்று எண்ணும் வித்தியாசம் இல்லாமலே இருவரையும் சுட்டுக் கொளுத்தி விடும். இது நெருப்பின் இயற்கைத் தன்மை என்றுணராமல் அதில் கையையிட்டுச் சத்தியம் செய்யச் சொல்வது எவ்வளவு மூடத்தனம்? சத்தியத்தைக் கண்டுபிடிப்பதற்கு வேறு வழி கிடையா? இதுபோன்ற முட்டாள்தனமானதும் கொடுமை யானதுமான பழக்கவழக்கங்கள் நமது நாட்டில் அனேகம் இருந்தன. இப்போது அவை தடுக்கப்பட்டுப்போயின.

இந்த மூடத்தனம் நமது நாட்டில் மட்டிலுமல்ல, வெளிநாட்டிலும் (வேறுருவில்) இருந்ததாக அறிகிறோம். இங்கிலாந்தில் தகராறு ஏற்படும் இரு கட்சியார்களுக்குள் யார் குற்றவாளி என்று பார்ப்பதற்காகச் சண்டைக்கு விடுவது வழக்கம். சண்டையில் எவன் வெற்றி பெறுகிறானோ அவனே நியாயவான் என்று கொள்ளப்பட்டது. இந்தச் சண்டை - நியாயமுறை தனிப்பட்ட இடங்களில் மட்டிலுமல்ல, ஆங்கில நீதிமன்றங்களில்கூட நடைபெற்றதாம். வாரன் ஹேஸ்டிங்ஸ் வங்காளத்தை ஆண்டு வந்த காலத்தில் அவரது நிர்வாக சபையிலிருந்த ஒருவருக்கும் அவருக்கும் தீராப் பகை ஏற்பட்டது. அதனைத் தீர்த்துக் கொள்வதற்காக இறுதியில் இருவரும் சண்டை போட்டார்கள் என்றும் வாரன் ஹேஸ்டிங்ஸ் வெற்றிபெற்றதால் அவர் நீதிவான் என்று கருதப்பட்டதென்றும் கதை.

*ஊழியன்*, மலர் 14, இதழ் 52, 28–06–1935

# ஐரோப்பியர் வருகை

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே, மேல் நாட்டார் நமது இந்தியா தேசத்துடன், சிறப்பாகத் தென் இந்தியாவுடன், வர்த்தகத் தொடர்பு கொண்டிருந்ததாகத் தெரிகிறது. யவனர் (உரோமர், கிரேக்கர்) என்னும் ஐரோப்பிய ஜாதியார், சேர நாட்டின் கடற்கரைப் பட்டினங்களிற் பண்ட சாலைகள் அமைத்து, அவற்றில் நமது நாட்டுச் சரக்குகளைச் சேமித்து வைத்துக் கப்பல்கள் மூலமாக ஐரோப்பிய நாடுகளுக்குக் கொண்டு போனார்கள். மதுரை, புகார், (காவிரிப்பூம் பட்டினம்) முதலிய நகரங்களிலும் யவனர் வசித்து வந்ததாகத் தமிழ் நூல்களினால் அறிகிறோம். கி.மு. 22இல் மதுரையில் அரசாண்டிருந்த பாண்டிய மன்னன், அகஸ்தஸ் ஸீஸர் (Augustus Ceasar) என்னும் யவன அரசனிடம் தூதுவர்களை அனுப்பினான் என்று ஸ்த்ராபோ (Starbo) என்னும் மேல் நாட்டாசிரியர் எழுதியிருக்கிறார். தமிழருக்கும் யவனருக்கும் இருந்த இவ்வர்த்தகத் தொடர்பு, கி.பி. 47 முதல் மேன்மேலும் அதிகப்பட்டது. ஏனென்றால், அந்த ஆண்டில் ஹிப்பலஸ் (Hippalus) என்பவர், இந்து சமுத்திரத்தில் வீசுகிற வட கிழக்கு தென் மேற்குப் பருவக் காற்றைக் கண்டுபிடித்தார். இப்பருவக் காற்று வீசுகிற காலங்களிற் பிரயாணம் செய்வதால் மாலுமிகள் விரைவாகக் கப்பல்களைச் செலுத்திக் குறிப்பிட்ட இடங் களுக்கு ஏறக்குறையக் காலத்தில் செல்லக் கூடியதாயிருந்தது. ஆகவே, யவன வியாபாரிகள் அதிகமாகத் தமிழ் நாட்டிற்கு வரத் தலைப்பட்டார்கள். இவ்வர்த்தகப் பெருக்கத்தினால் நமது தேசத்தாருக்கு ஏராளமான வருவாய் கிடைத்தது.

“இந்தியா தேசம் ஏராளமான செல்வத்தை யவன தேசத்திலிருந்து ஆண்டுதோறும் கவர்ந்து கொள்கிறது” என்று பிளினி என்னும் ஆசிரியர் எழுதியிருக்கிறார்.

இந்தத் தமிழர் யவனர் வியாபாரத் தொடர்பைப் பற்றிப் *புறநானூறு, மணிமேகலை, சிலப்பதிகாரம்* முதலிய சங்க நூல்களிலும் குறிப்புகள் காணப்படுகின்றன. தமிழருக்கும் யவனருக்கும் இருந்த இத்தொடர்பு, வியாபாரத்தோடு மட்டும் நின்றிருந்ததே தவிர, சமயம், கலை, பாஷை முதலியவைகளிற் சிறிதும் இடம் பெறவில்லை. யவனர் நம்முடன் நேர்முகமாகக்

கொண்டிருந்த இந்த வியாபாரத் தொடர்பு, கி.பி. ஏழாம் நூற்றாண்டு வரையில் நிலை பெற்றிருந்தது.

ஏழாம் நூற்றாண்டில், அரபி தேசத்து முகம்மதியர்கள் எகிப்து, பாரசிகம் முதலிய நாடுகளை வென்று கைப்பற்றிய பிறகு, யவனர் நமது தேசத்துடன் வைத்திருந்த நேர்முகமான வியாபாரத் தொடர்பு தடைப்பட்டுவிட்டது. ஏழாம் நூற்றாண்டிற்குப் பிறகு, முகம்மதியர் கடல் வழியையும், தரை வழியையும் கைப்பற்றி ஆதிக்கம் பெற்றதோடு, இந்திய வியாபாரத்தையும் கைப்பற்றிக் கொண்டார்கள். இந்தியப் பொருள்களை வாங்கிக் கொண்டு போய் ஐரோப்பிய தேசங்களில் விற்பனை செய்வதால் பெரும் பொருள் ஊதியங் கிடைப்பதைக் கொண்டு முகம்மதியர், ஐரோப்பியரை இந்தியாவுடன் நேர்முகமாக வியாபாரம் செய்யவொட்டாத படி தடுத்துவிட்டார்கள். இவ்விதமாகப் பண்டைக் காலத்தில் ஐரோப்பியர் நமது தேசத்துடன் கொண்டிருந்த வியாபாரத் தொடர்பு அற்றுப் போயிற்று.

முகம்மதியர், மலையாளக் கரையிற் பண்டக சாலைகளை அமைத்து, மிளகு முதலிய பொருள்களைச் சொற்ப விலைக்கு ஏராளமாய் வாங்கிச் சேமித்து வைத்து, அவற்றைக் கப்பல்களில் ஏற்றிக் கொண்டு அரபிக்கடல் வழியாகச் செங்கடலிற் சென்று அங்கிருந்து தரை வழியாகச் சூயஸ், கெய்ரோந்தி அலக்ஸாந்திரியா முதலான நகரங்களின் வழியாக ஐரோப்பிய நாடுகளுக்குக் கொண்டு போய், ஒன்றுக்குப் பன்மடங்கு அதிகமாக விலை வைத்துச் சரக்குகளை விற்று பெரும் பொருள் திரட்டினார்கள். வர்த்தகத் தொழில் செய்யும் ஜாதியார் எப்பொழுதும் செல்வந்தராயிருப்பது எல்லோரும் அறிந்த உண்மை. இதன்படி, வியாபாரத் தொழிலில் ஈடுபட்ட முகம்மதியர், மேன்மேலும் செல்வம் பெற்றுச் சிறப்படைந்து விளங்கினார்கள். ஐரோப்பியர் இப்போது கைத்தொழில் நாகரிகம் முதலியவற்றில் சிறப்படைந்திருப்பது போய் அக்காலத்திற் சிறப்புப் பெறாமல் தாழ்ந்த நிலையில் இருந்தார்கள். ஆகையால், ஆடை முதலிய பல பொருள்கள் இந்தியா முதலிய கீழைத் தேசங்களிலிருந்தே ஐரோப்பாவுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு வந்தன. இதனால், இந்த வியாபாரத்தைத் தங்கள் கையில் வைத்திருந்த முகம்மதியர், பெருஞ்செல்வம் சம்பாதித்ததில் அதிசய மொன்றுமில்லை. இவ்வாறு சில நூற்றாண்டுகள் கழிந்தன.

இந்தியச் சரக்குகளை ஐரோப்பிய நாடுகளிற் கொண்டு போய் விற்பதனால் முகம்மதியர் செல்வம் பெற்றும் சிறப்புடன் வாழ்வதைக் கண்ட ஐரோப்பிய தேசத்தார், தாங்களும் நேர்முகமாக இந்தியாவுடன் வியாபாரம் செய்து பொருள்

ஈட்டவேண்டுமென்று ஆவல் கொண்டார்கள். அனால், இந்தியாவுக்குச் செல்லும் வழி, முகம்மதியர் ஆதிக்கத்திலிருந்த படியாலும், வேறு ஜாதியார் இவ்வியாபாரத்தைக் கைக்கொள் ளாதபடி அவர்கள் (முகம்மதியர்) வெகு கருத்தாகக் காவல் செய்திருந்த படியாலும், ஐரோப்பியரின் எண்ணம் கைகூட வில்லை. அக்காலத்தில் பூகோள சாஸ்திரம் தெரியாதபடியால் வேறு மார்க்கமாக இந்தியாவுக்குச் செல்லும் வழியையும் ஐரோப்பியர் அறிந்திருக்கவில்லை. இந்தியா, ஐரோப்பாவுக்குக் கிழக்குப் பக்கத்தில் இருக்கிறதென்பது மட்டும் அவர்களுக்குத் தெரியும்; ஆனால், அங்குச் செல்வதற்கு வேறு வழி தெரியாமல் திகைத்தனர். அக்காலத்தில், ஐரோப்பாக் கண்டத்தில் இந்தியாவைப் பற்றிப் பல கதைகள் வழங்கி வந்தன. இந்தியா தேசம் பூலோக சுவர்க்கம் என்றும், பணம் காய்க்கும் மரங்கள் அங்கே ஏராளமாக வளர்கின்றனவென்றும், தேன் ஆறும், பால் ஆறும் அங்குக் கரை புரண்டோடுகின்றன என்றும் பலவிதமான செய்திகள் உலவி வந்தன. இவ்விதச் செய்திகளைக் கேட்டபோது ஐரோப்பியருக்கு நாவில் நீர் சுரந்தது. தேனாறும் பாலாறும் கரை புரண்டோடும் அந்தப் பூலோக சுவர்க்கத்தை, பணம் காய்க்கும் மரங்கள் வளருகிற ஆச்சரியமான இந்தியா தேசத்தைக் காண வேண்டும் என்றும், அத்தேசத்துடன் நேர் முகமாக வியாபாரத் தொடர்பு பெற்றுப் பொருள் சம்பாதிக்க வேண்டும் என்றும் ஐரோப்பியர் ஆவலோடு விரும்பினார்கள். அக்காலத்தில் ஐரோப்பா முழுவதும் இந்தியாவின் பேச்சாகவே இருந்தது. ஆனால், இந்தியாவுக்கு எப்படிப் போவது? இந்தியாவுக்குச் செல்லும் வழியை முகம்மதியர் கைப்பற்றித் தங்கள் ஆதிக்கத்தில் வைத்துக்கொண்டு, வேறு ஜாதியார் அவ்வழியாகச் செல்லாதபடி, கண்ணை இமை காப்பது போல் காத்து வருகையில், ஐரோப்பியர் இந்து தேசம் செல்ல நினைத்தது, முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்டது போல் இருந்தது.

இவ்வாறிருந்த வகையில், பூகோள சரித்திரத்தைப் பற்றி ஆராய்ந்து வந்த அறிவாளிகள், பூமி அப்பளம் போல் தட்டையாக இருக்கவில்லை என்றும், பந்து போல் உருண்டை வடிவாக இருக்கிறதென்றும் அறிந்தார்கள். ஆனால் இப்பூகோள சாஸ்திர உண்மையை ஜனங்கள் ஒப்புக் கொள்வதற்கு நெடுநாள் சென்றது. கடைசியாக, போர்ச்சுகல் தேசத்தவராகிய கொலம்பஸ் என்பவர் இப்பூகோள சாஸ்திர உண்மையை அடிப்படையாகக் கொண்டு இந்தியா தேசத்திற்குச் செல்ல வேறொரு வழியைக் கண்டுபிடிக்கத் துணிந்தார். எப்படி என்றால், பூமி உருண்டையாயிருப்பதால், ஒருவன் ஓரிடத்திலிருந்து புறப்பட்டு மேற்கு முகமாகப் பிரயாணம்

செய்து கொண்டே போனால், கடைசியில் அவன் கிழக்குப் பக்கமாகத் தான் புறப்பட்ட இடத்திற்கு வந்து சேர்வான் என்றும் பூகோள சாஸ்திர உண்மையை மனத்திற் கொண்டு, இந்தியா தேசம் ஐரோப்பாவுக்குக் கிழக்கில் இருக்கிறபடியால், ஐரோப்பாவிலிருந்து மேற்குப் பக்கமாய்ப் பிரயாணம் செய்து கொண்டு போனால் இந்தியா போய்ச் சேரலாம் என்று கொலம்பஸ் என்பவர் நம்பினார். ஆனால், அவர் சொல்லிய கருத்தை ஒருவரும் ஆதரிக்கவில்லை. கடைசியாக, மிகுந்த சிபாரிசின் மேல், ஸ்பெயின் தேசத்து அரசன் கொலம்பஸுக்கு உதவி செய்யச் சம்மதித்து, சில கப்பல்களையும் மாலுமி களையும், பிரயாணத்துக்கு வேண்டிய சாமான்களையும் கொடுத்து உதவினான். கொலம்பஸ், ஸ்பெயின் தேசத்தை விட்டுப் புறப்பட்டு, மேற்குப் பக்கமாகக் கடலிற் பிராயணம் செய்து கொண்டு போனார். சில நாட்கள் பிராயணம் செய்தபிறகு, கொலம்பஸ் மேற்கிந்தியத் தீவுகளையும், புதிய உலகம் என்னும் அமெரிக்காக் கண்டத்தையும் கண்டு பிடித்தார். ஆனால், கொலம்பஸ் அத்தீவுகள் இந்திய தேசத்தைச் சேர்ந்தவை என்றும், அக்கண்டம் இந்தியா தேசம் என்றும் தவறாக நினைத்தார். அவர், தாம் கண்டு பிடித்த பூபாகம் இந்தியா தேசந்தான் என்கிற நம்பிக்கையுடன் இறந்தார்.

ஆனால் உண்மையில் அது இந்தியா தேசம் அன்று. "ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட்டொன்றாகும்" என்றபடி, கொலம்பஸ் இந்தியா தேசத்தைக் கண்டு பிடிக்கும் நோக்கத்தோடு செல்ல, தற்செயலாகப் புதிய பூபாகங்களைக் காணப் பெற்றார். கொலம்பஸ் புதிய உலகத்தைக் கண்டு பிடித்த செய்தி ஐரோப்பியர்களுக்குப் புதிய உணர்ச்சியை யளித்தது. ஏனைய ஐரோப்பிய ஜாதியாரும் இந்தியா தேசத்துக்குப் புதிய வழியைக் கண்டு பிடிக்க ஊக்கங்கொண்டு முயற்சி செய்தார்கள். இவ்வாறு ஊக்கங் கொண்டவர்களில் போர்ச்சுகல் தேசத்தரசனும் ஒருவன். எமானுவெல் (Emanuel) என்னும் பெயருள்ள அந்த அரசன் ஆப்பிரிக்காக் கண்டத்தைச் சுற்றிக் கொண்டு, கிழக்கு முகமாகப் பிரயாணம் செய்தால், இந்தியா தேசம் போய்ச் சேரலாம் என்று நம்பிக்கை கொண்டவன். ஆகையால் அவ்வழியாகச் சென்று, இந்தியா தேசத்தைக் கண்டு பிடிக்கும்படி வாஸ்கொ-டா-காமா என்பவரை அனுப்பினான். வாஸ்கொ-டா-காமா போர்ச்சுகல் தேசத்துத் துறைமுகப் பட்டினமாகிய லிஸ்பன் என்னும் பட்டினத்தை விட்டு, 1497ஆம் வருஷம், ஜுலை மாதம், 9ஆம் நாள் புறப்பட்டுக் கடல் வழியாகச் சென்ற போது,

எதிர்காற்றில் அகப்பட்டு அனேக கஷ்ட நஷ்டங்களுக்குட் பட்டார். ஆனாலும் மனந்தளராமல், மேன்மேலும் கப்பலை யோட்டிக் கொண்டு, ஆப்பிரிக்காக் கண்டத்தின் தென் கோடியாகிய நன்னம்பிக்கை முனையைச் சுற்றிக் கடந்து, அக்கண்டத்தின் கிழக்குக் கரையோரமாகப் பிரயாணம் செய்து, கடைசியில் மிலாண்டா (Milanda) என்னும் கடற்கரைப் பட்டினத்தை அடைந்தார். அது பேர்பெற்ற துறைமுகப் பட்டினம், ஆகையால், இந்தியாவிலிருந்து பல கப்பல்கள் அங்கு வந்திருந்தன. வாஸ்கொ-டா-காமா அங்கிருந்து ஒரு முகம்மதிய மாலுமியை, இந்தியா தேசத்திற்கு வழிகாட்டும்படி தம்முடன் அழைத்துக் கொண்டு, அங்கிருந்து புறப்பட்டு, அந்த முகம்மதிய மாலுமியின் உதவியால், 1497 ஆம் வருஷம், மே மாதம், 22ஆம் நாள் மலையாளக் கரையில் உள்ள கள்ளிக் கோட்டை (Calicut) என்னும் பட்டினத்தை யடைந்தார். முதல் முதல் இந்தியாவுக்கு வந்த கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்த ஐரோப்பியர் இவர்தாம்.

பிறகு வாஸ்கொ-டா-காமா கள்ளிக்கோட்டையை யரசாண்டிருந்த சாமுத்திரி அரசனைக் (zamarin) கண்டு பேசிப் போர்ச்சுகல் தேசத்தார் கள்ளிக்கோட்டையில் வர்த்தகம் செய்ய அவ்வரசனிடம் உத்தரவு பெற்றுக் கொண்டு, மீண்டும் தம் ஊருக்குச் சென்று, தாம் இந்தியாவைக் கண்டு பிடித்த சந்தோஷச் செய்தியைத் தம்முடைய அரசனுக்குத் தெரிவித் தார். போர்ச்சுகல் தேசத்தரசன் மிகவும் மகிழ்ச்சியடைந்து, இந்தியா தேசத்துடன் வர்த்தகம் செய்வதற்காகவும், கூடுமானால் அத்தேசத்தைத் தன் ஆட்சிக்குட்படுத்துவதற் காகவும் சில கப்பல்களை ஆயத்தம் செய்து, பீட்ரோ ஆல்வாரெஸ் காப்ரால் (Pedro Alvarez Cabral) என்பவர் தலைமையிற் பல போர்ச்சுகீசியரை அனுப்பினான். இந்தக் காப்ரால் என்னும் தலைவர் கப்பலைச் செலுத்திக் கொண்டு போகிற போது, ஆப்பிரிக்காக் கண்டத்தின் கரையோரமாகச் சென்றால், எதிர்காற்றில் அகப்பட்டு வருந்த வேண்டியிருக்கும் என்று நினைத்து, அக்கண்டத்துக்கு மேற்கே அதிக தூரமாய்க் கடலில் போய்க் கொண்டிருக்கையில், தென் அமெரிக்காவில் உள்ள, இப்போது பிரேசில் (Brazil) என்று வழங்கப்படுகிற, செழிப்பான தேசத்தில் தற்செயலாகப் போய்ச் சேர்ந்தார். தாம் போகக் கருதி வந்த இந்தியா தேசம் செல்லாமல், தற்செயலாய் வேறு ஒரு புதிய தேசத்திற் சென்றதை அறிந்து ஆச்சரியப்பட்டு, அவர் மீண்டும் அங்கே இருந்து புறப்பட்டு இந்தியா தேசம் வந்து சேர்ந்தார். பிரேசில் தேசத்திலிருந்து இந்தியா புறப்படும் போது, அங்கிருந்து சில பழச்செடிகளை இந்தியாவிற் கொண்டு

வந்து பரவச் செய்தார் அவர் கொண்டு வந்தவை மிளகாய், முந்திரிக் கொட்டை, கொய்யாப் பழம், அன்னாசிப் பழம், சீத்தாப் பழம், பப்பாளிப் பழம் முதலியவை. இப்படிச் செடிகள் இவர் கொண்டு வருவதற்கு முன்பு நமது நாட்டிற் கிடையா.

பதினைந்தாம் நூற்றாண்டின் கடைசியில் நமது நாட்டிற்கு வந்த பறங்கியர் (போர்ச்சுகீசியருக்குப் 'பறங்கியர்' என்று பெயர்) கொச்சி, கள்ளிக் கோட்டை, கோவா முதலிய கடற்கரைப் பட்டினங்களில் அமர்ந்து, வியாபாரம் செய்யத் தொடங்கினார்கள். இவர்களுக்கு முன் ஏகபோகமாய் வர்த்தகம் செய்திருந்த முகம்மதியருக்குப் பறங்கியர் வந்து வர்த்தகம் செய்வது பிடிக்கவில்லை. இதனால் பறங்கியருக்கும் முகம்மதியருக்கும் சில சண்டைகள் வந்தன. அச்சண்டைகளிற் பறங்கியர் வெற்றி பெற்று முகம்மதியரை யடக்கி, அராபிக் கடலைத் தங்கள் ஆதிக்கத்திற் கொண்டு வந்தார்கள். அது முதல் சுமார் ஒரு நூற்றாண்டு வரையில் பறங்கியர்கள் இந்தியா, இலங்கை முதலிய கீழைத் தேசங்களில் வியாபாரம் செய்து வந்தார்கள். இவர்கள் வர்த்தகம் செய்வதோடு மட்டும் நில்லாமல், கிறிஸ்தவ மதத்தைப் பரவச் செய்யவும் பாடு பட்டார்கள். ஏசுவின் சபைப் பாதிரிமார்களைக் கொண்டு வந்து, பெருந்தொகையான இந்துக்களைக் கிறிஸ்தவராக் கினார்கள். சவேரியார், தத்துவ போதக சுவாமி, ஜான் - டிபிரிட்டோ, வீரமா முனிவர் முதலிய பாதிரிமார்கள் இவர்கள் அழைத்து வந்த ஏசுவின் சபையைச் சேர்ந்த துறவிகளாவர். இதுவுமன்றி, பறங்கியர் தங்கள் வியாபாரப் பட்டினங்களைக் காவல் புரியும் பொருட்டு, பறங்கிப் போர் வீரர்களையும் கொண்டு வந்திருந்தார்கள். இப்போர் வீரர்கள் இந்தியப் பெண்களை மணஞ்செய்து கொள்ளும்படி கட்டாயப் படுத்தப்பட்டனர். இவ்விதக் கலப்பு மணத்தினாற் பிறந்த பிள்ளைகள் 'துப்பாசி' என்னும் பெயருடைய புதிய ஜாதியானார்கள். இந்தத் துப்பாசிகள் பறங்கிப் பாஷையைப் பேசி வந்தனர்.

இவ்விதமாகப் பறங்கியர் இந்தியாவுக்குப் புது வழி கண்டு பிடித்து, இந்திய தேசத்துடன் வியாபாரம் செய்து பொருள் திரட்டிச் செல்வந்தராவதைக் கண்டு, ஏனைய ஐரோப்பிய ஜாதியாரும் இந்தியா தேசத்துடன் வியாபாரம் செய்ய ஆவல் அடைந்தனர். அவர்களுள் ஹாலாண்டு (Holand) என்னும் நாட்டிலுள்ள டச்சுக்காரரும் இம்முயற்சியில் முனைந்து நின்றார்கள். இந்த டச்சுக்காரருக்கு ஒல்லாந்தர் என்பதும் பெயர். இந்த ஒல்லாந்தர் இந்தியாவுக்கு வடகிழக்கு வழியொன்றைப் புதிதாகக் கண்டுபிடிக்க முயற்சி செய்தார்கள்.

கொலம்பஸ் ஐரோப்பாவுக்கு மேற்கு முகமாய் இந்தியாவுக்குப் போக ஒரு வழியைக் கண்டு பிடிக்க முயன்றாரல்லவா; பறங்கியர், ஐரோப்பாவுக்குத் தெற்கு முகமாய் ஆப்பிரிக் காவைச் சுற்றிக் கிழக்கு முகமாகச் சென்று, இந்தியாவுக்கு ஒரு வழியைக் கண்டு பிடித்தார்களே, அதைப் போலவே தாங்களும் ஐரோப்பாவுக்கு வடகிழக்குப் பக்கமாய்ச் சென்று இந்தியாவுக்குப் புது வழி ஒன்றைக் கண்டு பிடிக்கலாமே' என்று ஒல்லாந்தர் நினைத்தார்கள். அப்படி நினைத்தது அக்காலத்தில் பூகோள சாஸ்திரத்தை அவர்கள் சரிவர அறியவில்லை என்பதைத் தெரிவிக்கிறது. இந்த எண்ணத்தோடு அவர்கள் நான்கு கப்பல்களை இந்தியாவுக்கு வட கிழக்குப் பாதையைக் கண்டுபிடிக்க அனுப்பினார்கள். இந்த முயற்சியில் அவர்கள் தோல்வியடைந்தார்கள். ஆனால், முன்பு அறிந்திராத சில தீவுகளையும், கடல்களையும் கண்டு பிடித்தார்கள். ஒல்லாந்தர், வட கிழக்குப் பக்கமாய்ப் புது வழி கண்டுபிடிக்க முயற்சி செய்த அதே காலத்தில், வேறு நான்கு கப்பல்களைப் பறங்கியர் கண்டு பிடித்த வழியைப் பார்த்து வரும்படி அனுப்பினார்கள்.

இக்கப்பல்கள் கிழக்கிந்தியத் தீவுகளில் ஒன்றான ஜாவா (சாவகம்) தீவு வரையிற் சென்று திரும்பி வந்தன. அது முதல் ஒல்லாந்தர், இந்தியா தேசத்துடனும், கிழக்கிந்தியத் தீவுகளுடனும் வியாபாரம் செய்யத் தொடங்கினார்கள். இந்த வியாபாரத்தை முதலில் தனிப்பட்ட முறையில் நடத்தி வந்தனர். பின்னர், 1602ஆம் வருஷம், மார்ச்சு மாதம், 2ந்தேதி, 'கிழக்கிந்திய வர்த்தகச் சங்கம்' என்னும் பெயரால் ஒரு சங்கத்தை ஏற்படுத்திக் கொண்டார்கள். இந்த ஒல்லாந்தர் பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில், பறங்கியரை, இந்தியா, இலங்கை முதலிய இடங்களிலிருந்து துரத்தி விட்டு, அவர்கள் இருந்த இடங்களைத் தாங்கள் கைப்பற்றிக் கொண்டு வியாபாரம் செய்து வந்தனர். இவர்களும் யாழ்ப்பாணம் முதலிய இடங் களில் இந்துக் கோயில்களை இடித்தும், இந்துக்களைக் கட்டாயப்படுத்திக் கிறிஸ்துவர்களாக்கியும், கிறிஸ்துவர் களுக்கு மட்டும் உத்தியோகங்களைக் கொடுத்தும் வந்தனர். முதலில் வர்த்தகர்களாக வந்த இவர்கள், பிறகு நாடுகளைப் பிடித்து அரசாள முற்பட்டார்கள். ஆனால் ஆங்கிலேயர் இவர் களை இந்தியாவிலும் இலங்கையிலுமிருந்து துரத்திவிட்டார்கள்.

இந்தியாவுடன் வர்த்தகம் செய்து செல்வந் திரட்ட விரும்பிய மற்றொரு தேசத்தார் ஆங்கிலேயராவர். இவர்களும் ஒல்லாந்தரைப் போலவே, இந்தியாவுக்கு வட கிழக்குப் பாதை யொன்றைக் கண்டுபிடிக்க முதலில் முயன்றனர். இவர்கள் சுமார் 50 ஆண்டுகளாக வட கிழக்குப் பாதையைக் கண்டு

பிடிக்க முயற்சி செய்தும் பயனடையவில்லை. 1568ஆம் ஆண்டில் ஸர் பிரான்ஸிஸ் டிரேக் (Sir Frncis Drake) என்னும் ஆங்கிலேயர், இந்தியாவிலிருந்து போர்ச்சுகல் தேசத்துக்குச் சென்று கொண்டிருந்த ஒரு பறங்கிக் கப்பலைப் பிடித்துக் கொள்ளையடித்தார். கொள்ளையிடுகையில், ஆப்பிரிக்காவின் நன்னம்பிக்கை முனையைச் சுற்றிக்கொண்டு இந்தியாவுக்குச் செல்லும் வழியைக் குறிப்பிடுகிற படம் ஒன்றைக் கண்டெடுத்தார். அதன் பிறகு, 1594இல் ஸர் ஜான் லங்காஸ்டர் (Sir John Lancaster) என்னும் ஆங்கிலேயர் நன்னம்பிக்கை முனை வழியாக ஜாவா (சாவகம்) வரையில் யாத்திரை செய்து திரும்பிவந்தார். பின்னர், கி.பி. 1600ஆம் வருஷம் டிசம்பர் மாதம் 31ஆம் தேதி ஆங்கிலேய கிழக்கிந்தியக் கம்பெனி என்னும் வர்த்தகச் சங்கம் நிறுவப்பட்டது. அது முதல் ஆங்கிலேயர் இந்தியாவுக்கு வந்து வியாபாரம் செய்யத் தலைப்பட்டனர்.

நமது தேசத்தில் வியாபாரம் செய்ய வந்த இன்னொரு ஐரோப்பிய ஜாதியர் டேன்ஸ் (Danes) என்னும் டேனிஷ்காரர். இவர்கள் டென்மார்க்கு தேசத்தைச் சேர்ந்தவர். 1620இல் கிழக்கிந்திய வர்த்தகச் சங்கத்தை ஏற்படுத்திக் கொண்டு நமது தேசத்திலுள்ள தரங்கம்பாடி, பழவேற்காடு, சிராம்பூர் முதலிய இடங்களில் வர்த்தகம் செய்து வந்தனர். ஆனால் இவர்களின் வர்த்தகம் பலப்படவில்லை. பத்தொன்பதாம் நூற்றாண்டில், தரங்கம்பாடி முதலிய இடங்களை இவர்கள் இங்கிலீஷ் காரருக்கு விற்று விட்டுப் போய்விட்டார்கள். இவர்களும் கிறிஸ்தவ மதத்தைப் பரவச் செய்ய முயன்று வந்தனர்.

இந்தியாவுடன் வியாபாரம் செய்யக் கடைசியாக முயற்சி செய்தவர்கள் பிரஞ்சுக்காரர். பிரஞ்சுக் கிழக்கிந்திய வர்த்தகச் சங்கம் 1664இல் ஏற்படுத்தப்பட்டது. பிரஞ்சுக்காரர், புதுச்சேரி முதலிய இடங்களில் வர்த்தகம் செய்து வந்தனர். டியுபிலே என்பவர் புதுச்சேரிக்கு அதிகாரியாய் வந்தபோது இந்தியாவில் பிரஞ்சு அரசாட்சியை நிலைநாட்ட முயற்சி செய்தார். அவருடைய முயற்சி வெற்றியாகவேயிருந்தது. ஆனால் பிரெஞ்சுக்காரரின் வெற்றியையும் செல்வாக்கையும் தடைப் படுத்தி அவர்களை இந்தியாவிலிருந்து துரத்திவிட்டு, இங்கிலீஷ் அரசாட்சியை நிலைநாட்ட வேண்டும் என்னும் எண்ணத் துடன் ஆங்கிலேய கிழக்கிந்தியக் கம்பெனியார் முயற்சி செய்தார்கள். பிறகு இரு தரத்தாருக்கும் பல போர்கள் நிகழ்ந்தன. கடைசியாக ஆங்கிலேயர் வெற்றிபெற்று, ஆங்கில அரசாட்சியை நிறுவினர். இதற்கு அக்காலத்தில் இந்தியாவின் நிலைமை இடங்கொடுத்தது. பிறகு இலங்கை முதலிய

தேசங்களையும் பிடித்து, ஆங்கிலேயர் அரசாளத் தொடங்கினார்கள்.

வியாபாரத்துக்காக வந்த ஐரோப்பியர்கள், இந்தியரைக் கிறிஸ்தவ மதத்திற் சேர்க்கவும் முயற்சி செய்து வந்தார்கள். இந்துக்களைக் கிறிஸ்தவராக்கும் பொருட்டு அனேக பாதிரிமார்களை ஐரோப்பிய தேசங்களிலிருந்து அழைத்து வந்தார்கள். நமது தேசத்துக்கு வந்த பாதிரிமார்கள் கிறிஸ்தவ மதத்தைப் போதிக்க முற்பட்டபோது, அவர்களுக்குப் பாஷைகள் தடையாக நின்றன. ஆகவே அவர்கள் முதலில் இந்திய பாஷைகளைக் கற்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. தாங்கள் எந்த நாட்டாருக்கு மதபோதனை செய்யக் கருதினார்களோ, அந்த நாட்டுப் பாஷையைக் கற்றுத் தேர்ந்து, அதிற் பேசவும் பிரசங்கம் செய்யவும் முயன்றார்கள். அந்த முறையில் தமிழ் நாட்டிற்கு வந்த பாதிரிமார்கள் தமிழ் மொழியைக் கற்றுத் தேர்ந்து தமிழிற்பேசவும் சொற்பொழிவு நிகழ்த்தவும் நூல் இயற்றவும் தொடங்கினார்கள். இவ்வாறு தமிழ் மொழிக்கும் ஐரோப்பியப் பாதிரிமாருக்கும் ஏற்பட்ட தொடர்பினால், தமிழிற் சில மாறுதல்கள் அல்லது முன்னேற்றங்கள் ஏற்பட்டன.

தமிழ்மொழிக்கு ஏற்பட்ட மாறுதல் அல்லது அபிவிருத்தி அனைத்தும் பாதிரிமார்களால் உண்டானவையே. இல்லறத்தாராகிய ஐரோப்பிய உத்தியோகஸ்தர்களால் தமிழுக்கு அதிகமாக யாதொன்றும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. நமது நாட்டில் 19ஆம் நூற்றாண்டில் இருந்த ஆங்கிலேய உத்தியோகஸ்தர், தங்கள் உத்தியோக முறைக்கு உதவியாக இருப்பதற்காகவும், நமது நாட்டுக் கலையின் நோக்கை அறிவதற்காகவும், சென்னைக் கல்விச் சங்கம் (The Madras College) என்னும் ஒரு சங்கம் ஏற்படுத்திக் கொண்டு, அதன் மூலமாகத் தமிழைக் கற்று வந்தார்கள். இச்சங்கத்தினால் தமிழ் மொழிக்கு விசேஷமாக யாதொரு அபிவிருத்தியும் உண்டானதாகச் சொல்ல முடியாது. கிறிஸ்தவர்களால் தமிழுக்கு ஏற்பட்ட அபிவிருத்தி எல்லாம் பாதிரிமாரைச் சேர்ந்ததே. பாதிரிமாரும் தமிழுக்காகச் செய்ய வேண்டும் என்னும் கருத்துடன் செய்யவில்லை. தங்கள் மதத்தைப் பரப்புவதற்காகச் செய்த முயற்சியின் பலனே தமிழுக்குச் சில நன்மைகளை அளித்தது. எவ்வாறாயினும், அந்த நன்மைகள் ஐரோப்பியப் பாதிரிமார்களால் உண்டானவையே.

*தமிழ்மணிக் கோவை* (இரண்டாம் கோவை),
**வித்துவான் சி. குப்புசாமி ஆழ்வார் (தொ – ர்), சென்னை - மதுரை, 1937.**

# திருக்கேத்தீச்சுரம்

திருஞானசம்பந்த சுவாமிகளாற் பாடப்பெற்ற இலங்கை நாட்டுத் திருப்பதிகளுள் திருக்கேதீச்சுரமும் ஒன்று. இலங்கைத் தீவின் மிகப்பழைய துறைமுகப்பட்டினமாகிய மகாதிட்டை என்னும் இடத்தில் இத்திருப்பதி இருக்கிறது. மகாதிட்டை என்பது மாதோட்டம் என்றும் பெயர்பெறும். சிங்கள அரசர் சாசனத்தில் இது மகாவுட்டு என்று கூறப்படுகிறது. இது மகாதிட்டை என்று பெயர் மருவியது போலும். மகாதிட்டை இலங்கையின் மேற்குக் கரையில் மன்னாருக்கு அருகில் இருக்கிறது.

இத்துறைமுகப் பட்டினம், தமிழ் நாட்டிலிருந்து இலங்கைக்குச் செல்லும் பிரயாணிகள் கரை இறங்கும் துறைமுகப் பட்டினமாகத் தொன்றுதொட்டு இருந்து வருகிறது. இலங்கையின் முதல் அரசனான விஜயன் என்பவன் முதன் முதலாக இலங்கைக்கு வந்தபோது இந்தத் துறை முகத்திலேதான் இறங்கினான். இந்த விஜய அரசன் மணம் செய்து கொண்ட பாண்டிய மன்னன் மகள், இலங்கைக்குச் சென்றபோது இத்துறைமுகத்திலேதான் இறங்கினாள். இலங்கையிலிருந்து தமிழ்நாட்டுக்கும், தமிழ்நாட்டிலிருந்து இலங்கைக்கும் சென்ற பிரயாணிகளுக்கு இது வசதியான துறைமுகமாக இருந்தது. இங்குத் தமிழர்கள் கி.மு. ஐந்தாம் நூற்றாண்டு முதல் வாழ்ந்து வருகின்றனர்.

இலங்கையை கி.பி. 352 முதல் 379 வரையில் அரசாண்ட ஸ்ரீமேகவர்ணன் என்னும் அரசன் காலத்திலேயே இங்கு ஒரு இந்து தேவாலயம் இருந்ததென்று *தாட்டாவம்சம்* என்னும் நூலினால் தெரியவருகிறது. இந்தத் தேவாலயந்தான் திருக் கேத்தீச்சுரம் என்பதில் ஐயமில்லை. கி.பி. ஏழாம் நூற்றாண்டில் இருந்த திருஞானசம்பந்த சுவாமிகள் இத்தலத்தைப் பாடியுள்ளார். திருக்கேத்தீச்சுரம் கடற்கரையை அடுத்துள்ள மாதோட்டம் என்னும் இடத்தில் பாலாவி என்னும் ஆற்றின் கரைமேல் இருக்கிறதென்று அவர் பதிகத்தில் கூறியுள்ளார்.

இராஜராஜ சோழனுடைய உத்தியோகஸ்தனான தாழி குமாரன் என்பவன் இவ்விடத்தில் ராஜராஜேஸ்வரம் என்னும் கோயிலைக் கட்டினான் என்றும் சாசனத்தில் தெரியவருகிறது.

மாதோட்டம் பௌத்தர்களுக்கும் சைவர்களுக்கும் (சிங்களவருக்கும் தமிழருக்கும்) புண்ணிய க்ஷேத்திரமாகப் பண்டைக் காலமுதல் இருந்து வருகிறது. கி.பி. 10ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் இருந்த ஐந்தாம் தப்புலன் என்னும் சிங்கள அரசன், ஏறத்தாழ கி.பி. 924-ல் எழுதியுள்ள சாசனம் ஒன்றில், "மகாவோடி (மகாதிட்டை)யில் பசுவைக் கொன்றவர் செல்லும் நரகத்திற்குப் போவாராக" என்று எழுதியுள்ளான். இதனால், இதனைப் பரிசுத்த ஸ்தலமாகப் போற்றிவந்தார்கள் என்பது தெரிகிறது.

*லோகோபகாரி,* பு 51, இ 36, 20–12–1947

# பழஞ் செய்திகள்

நமது நாட்டுப் பழங்கால அரசியல் வரலாறு, நாகரிக வரலாறு, சமய வரலாறு முதலியவை வரன்முறையாக எழுதப்படவில்லை. இத்தகைய வரலாறுகள் நமது முன்னேற்றத்திற்கு இன்றியமையாதன. வரலாற்றுக் குறிப்புகள் சில சமய நூல்களிலும், இலக்கிய நூல்களிலும், உரை நூல் களிலும் ஆங்காங்கே சிதறிக் கிடக்கின்றன. சிதறுண்டு கிடக்கும் சில குறிப்புகள் வரலாறு எழுதுவதற்கு உதவி புரியும் என்னும் கருத்துடன் நான் கண்ட சில குறிப்புகளை எழுத முற்படுகிறேன். ஆழ்வார்கள் அருளிச் செய்த *நாலாயிரப் பிரபந்தத்திற்கு* எழுதப்பட்டுள்ள வியாக்கியானத்தில் (விரிவுரை யில்) காணப்படும் சில குறிப்புகளை ஈண்டுக் கூறுகிறேன்.

**1. செங்கட் சோழன் விளந்தை வேளை வென்றது**

மின்னாடு வேலேந்து விளைந்த வேளை
விண்ணேறத் தனிவேலுய்த் (து) உலகமாண்ட
தென்னாடன் குடகொங்கன் சோழன் சேர்ந்த
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே

என்பது திருமங்கையாழ்வார் அருளிய *பெரிய திருமொழி* (6ஆம் பத்து; 6ஆம் செய்யுள்).

இதற்குப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானம் “ஒளி வர்த்தியாநின்ற வேலைக் கையிலேயுடைய விளைந்த வேளாகிற குறும்பனை வீரஸ்வர்க்கத்தேற போம்படி ஏகப்ரயோகத்தாலே வேலை நடத்தி, ஜகத்தை யடையத் தானிட்ட வழக்காம்படி நிர்வகித்த ராஜாவானவன் கிட்டி ஆரம்பித்த திருநறையூர்.”

இதில் செங்கட் சோழன், விளைந்தவேள் என்பவனை வென்ற செய்தி கூறப்படுகிறது. மூலத்திலும் உரையிலும் ‘விளைந்த வேள்’ என்றிருப்பது தவறு. ‘விளந்தை வேள்’ என்று இருத்தல் வேண்டும் என்று தோன்றுகிறது.

செங்கட் சோழன் விளந்தை வேளை வென்ற செய்தி வேறு நூல்களில் கூறப்படவில்லை.

**2. செங்கட் சோழன் திருவழுந்தூரில் போர் வென்றது**

பாராளர் இவர்இவர் என்று அழுந்தை ஏற்ற
படைமன்னர் உடல் துணியப் பரிமாவுய்த்த

தேராளன் கோச்சோழன் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின் களே
*(திருமங்கை., பெரிய திருமொழி, 6ஆம் பத்து)*

“இன்னார் இன்னார் என்று ப்ரசித்தராயிருக்கிற ராஜாக்கள் ஸபரிகாரரராய்க் கொண்டு திருவழுந்தூரிலே வந்து எதிரிட, அவர்களுடல் துணியும்படிக்கீடாக வென்ற செங்கட் சோழன்” என்பது வியாக்கியானம்.

அழுந்தை என்றும் (அகம்., 196; 11), அழுந்தூர் என்றும் (அகம்., 246; 14) கூறப்படும் திருவழுந்தூர் சோழநாட்டில் இருக்கிறது. செங்கட் சோழனைப் பகைவர் எதிர்த்துத் தோற்ற செய்தி இதில் கூறப்படுகிறது.

**3. செங்கட் சோழன் 70 மாடக்கோயில்களைக் கட்டியது**

இருக்கிலங்கு திருமொழிவா யெண்டோ ளீசற்கு
எழில்மாடம் எழுபது செய்(து) உலகமாண்ட
திருக்குலத்து வளச்சோழன் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின் களே

இதில், செங்கட்சோழன் 70 திருக்கோயில்களைக் கட்டிய செய்தி கூறப்படுகிறது.

**4. சோழ அரசர் வெற்றிலை உண்டது**

திருமங்கை மன்னன் அருளிய முதல் பத்து மூன்றாந் திருமொழியில், “முற்ற மூத்துக் கோல்துணையா” என்னும் பாசுரத்துக்கு விரிவுரை கூறும் வியாக்கியான ஆசிரியர், சோழர்கள் வெற்றிலை உண்ணும் முறையைக் கூறுகிறார்.

“சோழர்கள் வெற்றிலை சிலரிடலன்றிக்கே தாங்களே எடுத்திறே தின்பது; ‘தலை கவிழ்ந்து வாங்கில் சிலரை வணங்கிற்று’ என்னும் துர்மானத்தாலே.”

இதனால், சோழ அரசர் பிறர் கொடுக்க வெற்றிலையை வாங்கி உண்பதில்லை என்பதும், தாங்களாகவே எடுத்து உண்ணுவர் என்பதும், இவ்வழக்கத்தின் காரணம், பிறர் கொடுக்க வாங்கினால், தாம் தலைவணங்கியது போலாகும் என்னும் கருத்தே என்பதும் தெரிகின்றன.

**5. சோழர் சாமந்த அரசர் தலைமேல் அடிவைத்து யானை ஏறியது**

சோழ அரசர் உலாப் போக யானைமேல் ஏறும்போது, தமக்குக் கீழ்ப்பட்ட சாமந்த அரசரின் தலைமேல் கால் வைத்து யானைக் கழுத்தில் ஏறி அமர்வர் என்கிற செய்தி, குருபராம் பராப்ரபாவம் என்னும் நூலினால் தெரிகிறது.

"பின்னையுஞ் சில நாள் கழிந்தவாறே, ஒரு நாளளவில் (சோழ) அரசன் வந்து மன்னனாரை (வீரநாராயணபுரத்துப் பெருமாளை) சேவித்து மீண்டுபோகையில், தன்னுடைய சாமந்தன் தலைமேலடியிட்டு ஆனைக்கழுத்தின்மீதேற, அதை இவர் (நாதமுனிகள்) கண்டு, 'சர்வேஸ்வரன் பிரம்மாதி தேவர்கள் தலைமீது அடியிட்டுப் பெரிய திருவடி (கருடன்) மேற்கொள்ளும்படி இது வாகாதோ' வென்று மோகித்தா ரென்பதும் பிரசித்தம்" (ஸ்ரீ நாதமுனிகள் வைபவம்).

**6. சாமந்த அரசர் (சிற்றரசர்) பேரரசர் அரண்மனையில் உழக்கரிசி பெறுதல்**

"சாமந்தர்க்குப் புறம்பே நாடுகள் கனக்க வுண்டாகிலும், மாளிகைக்குள்ளே செப்பாலே நாழி யரிசியைத் தங்களுக்கு வரிசையாக நினைத்திருப்பார்களிறே."

இது, *திருவாய்மொழி* முதல் பத்து, 3ஆம் திருவாய் மொழி 9ஆம் பாசுரத்தின் வியாக்கியானம்.

கப்பங் கட்டும் சிற்றரசர்களான சாமந்த அரசர்கள் தமக்கென்று நாடும் ஊரும் உடையவரேனும், தமது பேரரசனிடத்துச் சென்று, அவன் செம்பு நாழியாலே அளந்து கொடுக்கும் நாழி அரிசியைத் தமக்குரிய வரிசையாகப் பெற்றுவந்தனர் என்பது இதனால் அறியப்படுகிறது.

**7. மொட்டையடிப்பது**

காம்பறத் தலைசிரைத்(து)உன் கடைத்தலை யிருந்து
வாழும்
சோம்பரை உகத்திபோலும் சூழ்புனல் அரங்கத் தானே

என்பது தொண்டரடிப்பொடி ஆழ்வார் அருளிய திருமாலை 38ஆம் பாசுரம். இதில் 'தலை சிரைத்து' என்பதற்குப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானம் வருமாறு:

"தலைமயிராகிறதுதான் அபிமான ஹேதுவிறே. கோமுற்றவர் (?) தண்டிக்குமிடத்தில் தலையைச் சிரைக்கிறது. அபிமானத்தைப் போக்குகிறதாய்த்து. ஏகாந்தியாயும் சந்நியா சியாயும் வபநம் பண்ணுகிறது தன் அபிமானத்தைத் தானே போக்கிறபடியிறே - தண்டமுகத்தாலே பிறரபிமானத்தைப் போக்குவதும் இம்முகத்தாலே; ஸ்வாபிமானத்தைப் போக்கு வதும் இம்முகத்தாலேயிறே. ஆக, அஹங்கார கர்ப்பமான உபாயந்தர பரித்யாகத்தைச் சொன்னபடி."

இதனால், குடுமி வைப்பது அக்காலத்தில் அபிமான கரமாகக் கருதப்பட்டதென்பது விளங்குகிறது.

**8. கொல்லிப் பாவை**

பழைய சங்க நூல்களில் கொல்லிப்பாவையைப் பற்றிக் கூறப்படுகிறது. கொல்லி மலையில் இருந்த ஓர் அழகிய பெண் உருவமாகும் இது. சில உரையாசிரியர்கள், இக்கொல்லிப் பாவை ஒரு யக்ஷி தெய்வம் என்றும், அங்குச் செல்வோரை இது மயக்கி அழிக்கும் என்றும் கூறுவர். இந்த வியாக்கியானத் திலிருந்து, கொல்லிமலையில் எழுதப்பட்ட ஒரு சிற்ப உருவம் இது என்று தெரிகிறது. இக்கருத்துப் பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது.

"குவளையங்கண்ணி கொல்லியம்பாவை" என்றும், "குலங்கெழு கொல்லி கோமள வல்லி" என்றும் திருமங்கை ஆழ்வார் தமது பெரிய திருமொழியில் கொல்லிப் பாவையைக் குறிக்கிறார். இவற்றிற்கு வியாக்கியானம் இவ்வாறு கூறப்படு கிறது:

"கொல்லிமலை மேலே ஒரு பாவை யுண்டு. எல்லாரும் உருவகுப்புக்குத் தமிழர் சொல்லுவதொன்று."

"பாவை யுண்டு என்றது ஸ்திரி பிரதிமை எழுதி யிருக்குமென்றபடி" - குறிப்புரை.

"கொல்லி மலையிலே ஒரு பாவையுண்டு; வகுப்பழகி தாயிருப்பது; அதுபோலேயாயிற்று இவளுக்குண்டான ஏற்றமும் பிறப்பும்."

**9. பழமொழிகள்**

*நாலாயிரப் பிரபந்த* வியாக்கியானத்தில் சில பழமொழி களும் கூறப்படுகின்றன. அவை:

பூப்போலே வந்து புலியானி கோளோ.

('பூப்போலே' என்றிருப்பது பூனைபோலே என்றிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது).

மறக்குடி அறஞ்செய்யக் கெடும்.

கரும்பு தின்னக் கூலி கொடுப்போரைப்போலே.

ஆனைக்குப்பு ஆடுவோரைப்போலே அநாதரித்திருந் தான்.

(ஆனைக்குப்பு ஆடுதல் - சதுரங்கம் ஆடுதல்)

சண்டாளன் ஒத்துப்போகாது.

அம்மியைக் கட்டிக்கொண்டு ஆற்றில் இழிவாரைப் போலே.

அம்புக்குச் செல்லாத விடத்தை ஆசனத்தாலே திருத்துவோம்.

மூலையிற் கிடந்ததை முற்றத்திலே யிட்டோம்.

எருது கொடுத்தார்க்கும் ஏழே கடுக்காய்.

ஊமை கண்ட கனாவாய் விடமாட்டாததுபோல.
மிடறு தின்றால் சொறிய ஒண்ணாததுபோலே.
கண்ணாலப் பெண்டாட்டிக்கு உள்ள அவகாலமில்லை.
துடுப்பிருக்கக் கை வேகவேணுமே
கள்ளரச்சம் காடு கொள்ளாது.
மருண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்.

**10. தமிழ் நாட்டின் வடவெல்லை**

திருப்பாணாழ்வார் அருளிய "அமலன் ஆதிப்பிரான்" என்னும் பாசுரத்தில் திருப்பதி மலையை "வடவேங்கட மாமலை" என்று கூறினார். இதற்கு வியாக்கியானம் கூறுவது வருமாறு:

"வடவேங்கிடம் - தமிழ் தேசத்துக்கு எல்லை நிலம்."

பெரியவாச்சான் பிள்ளை உரை.

"திருமலை என்னாதே வடவேங்கடம் என்றது. தமிழர் தமிழுக் கெல்லை நிலம் அதுவாகச் சொல்லுகையாலே"

அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் உரை.

திருமங்கையாழ்வார் அருளிய பெரிய திருமொழி முதற் பத்தின் 8ஆம் திருமொழியில், "செங்கயல் திளைக்கும் சுனைத் திரு வேங்கடம் அடை நெஞ்சமே" என்று அருளியதற்கு, மேற்கண்டவாறே பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானம் அருளியிருக்கிறார்; அதாவது:

"தமிழ்ப் பாழை நடமாடுகிறதுக்கும் எல்லையான நிலமாயிருக்குமிறே" (பாழை - பாஷை).

இதனால், அக்காலத்தில் திருவேங்கட மலையும் அதனைச் சார்ந்த நாடும் தமிழ் நாடாக இருந்ததென்பது தெரிகின்றது. பிற்காலத்தில் முகம்மதிய அரசர் விஜயநகர அரசரை வென்றபிறகு திருவேங்கடத்தில் தெலுங்கர் வந்து குடியேறினர் என்பது சரித்திரம் கூறுகிற வரலாறு.

*செந்தமிழ்ச் செல்வி,* சிலம்பு 22, பரல் 7, 1948

# உதிரப்பட்டி அல்லது இரத்தக்காணி

பரும யானையொடு பாஞ்சால ராயனை
வெங்களத் தட்ட வென்றி யிவையென
நெய்த்தோர் பட்டிகை யாக வைத்துப்
பத்தூர் கொள்கெனப் பட்டிகை கொடுத்து

என்பது பெருங்கதை (வத்தவ காண்டம். கொற்றங் கொண்டது. 10 - 13). நெய்த்தோர்ப் பட்டிகை என்பதற்குக் குறிப்புரை எழுதிய டாக்டர் சாமிநாத ஐயர் அவர்கள், 'நெய்த்தோர் - இரத்தம். பட்டிகை - பத்திரிகை' என்று எழுதியிருக்கிறார்கள். ஆனால், இத்தொடருக்கு விளக்கம் காண முடியவில்லை. இஃது ஐயரவர்களுடைய குறையன்று. இக்காலத்துப் புலவர்கள் வேறு யார் உரை எழுதினாலும் இவ்வளவுதான் எழுத முடியும். பண்டைக்காலத்து உரையாசிரியர்கள் இத்தொடருக்கு உரை எழுதியிருந்தால் தெளிவான விளக்கவுரை எழுதியிருப்பார்கள். பண்டையுரையாசிரியர் ஒருவரும் இதற்கு உரை எழுதவில்லை.

'நெய்த்தோர்ப் பட்டிகை' என்பது, பண்டைக்காலத்தில் வழக்காற்றில் இருந்து இக்காலத்தில் வழக்கற்றுப்போன ஒரு செய்தியெனத் தெரிகிறது. பண்டைக் காலத்துச் சாசனங்களின் உதவியினாலே, இச்சொற்றொடரின் உண்மைப் பொருள் அறியக்கிடக்கிறது.

உதயணன், பாஞ்சால மன்னனை வென்று, அவ்வெற்றியின் மகிழ்ச்சியினாலே, பத்து ஊர்களை நெய்த்தோர்ப் பட்டிகை யாகக் கொடுத்தான் என்பது மேலே காட்டிய செய்யுளின் கருத்து. நெய்த்தோர் என்பது இரத்தம் அல்லது உதிரம் எனப் பொருள்படும். பட்டிகை என்பதற்குப் பத்திரிகை என்று பொருள் கொள்வதைவிட பட்டி எனப் பொருள் கொள்வது சிறப்புடைத்து. நெய்த்தோர்ப்பட்டி என்று பெருங்கதையில் வழங்கப்பட்டுள்ள இச்சொற்றொடர் சாசனங்களில் உதிரப் பட்டி என்று வழங்கப்பட்டிருக்கிறது. வேறு சாசனங்களில், இரத்தக்காணி என்றும் கூறப்பட்டுள்ளது. இதனால், நெய்த்தோர்ப்பட்டி, உதிரப்பட்டி, இரத்தக்காணி என்னும் பெயர்கள் ஒரே பொருளைக் குறிக்கின்றன என்பது விளங்குகிறது.

தன் அரசனுடைய வெற்றிக்காகப் போர்க்களம் புகுந்து பகைவருடன் ஆற்றலோடு போர் புரிந்து உதிரத்தைச் சிந்திக் கொற்றத்தை நாட்டிய போர் வீரர்களுக்கு, வெற்றி பெற்ற அரசன் நிலங்களை இனாமாக அளிப்பது வழக்கம். இவ்வாறு தானம் செய்யப்பட்ட நிலத்திற்கு இரத்தக்காணி, உதிரப்பட்டி, நெய்த்தோர்ப்பட்டி என்று பெயர் வழங்கப்பட்டன. சில சமயங்களில், போர் வீரன் உயிர் நீத்தலும் உண்டு. அப்போது அவனது ஆற்றலைப் பாராட்டி, இறந்துபட்ட வீரனுடைய உறவினருக்கு உதிரப்பட்டி வழங்கப்படும். தமிழ்நாட்டு மூவேந்தரும் குறுநில மன்னரும் மறைந்துபோன இக் காலத்திலே, பண்டைய பழக்க வழக்கங்களும் மறைந்து போயின. ஆயினும், பழைய நூல்களிலே அப்பழைய பழக்க வழக்கங்களைக் குறிக்கும் சொற்கள் நின்று நிலவுகின்றன. இக்காலத்து அச்சொற்களுக்குப் பொருள் கண்டுபிடிப்பது கடினமாக இருக்கிறது. சாசனங்கள், சில சமயங்களில், இவ்விதச் சொற்களுக்குப் பொருள் காண உதவிசெய்கின்றன. உதிரப்பட்டியைக் குறிக்கும் சில சாசனங்களைக் கீழே தருகிறேன்.

இராமநாதபுரம் சில்லா, திருப்புத்தூர் தாலுகா, சிவபுரியில் உள்ள சுயம்பிரகாசர் கோயில் சாசனம், திரிபுவன சக்கரவர்த்தி விக்கிரம சோழ தேவருடைய 7ஆவது ஆண்டில் எழுதப்பட்டது. இதில், சுந்தன் கங்கை கொண்டான் என்னும் பெயருடைய துவராபதி வேளான் என்பவன், தனது வாளிலார் (வாள் வீரர்?) போர்க்களத்தில் இறந்ததற்காக அவ்வீரர்களின் சுற்றத்தார்க்கு உதிரப்பட்டியாக நிலம் கொடுக்க வாக்குறுதி செய்ததைக் கூறுகிறது (47 of 1928).

இராமநாதபுரம் சில்லா, சாத்தூர் தாலூகா, திருத்தங்கல் கிராமத்தில் உள்ள பாறைக்குன்றில் எழுதப்பட்ட சாசனம் (577 of 1922). இதில், வரதுங்கராம தனிப்புலி, கலங்காத கண்ட நாயகரின் வழிவந்த வள்ளி பொம்மன், கலங்காத கண்ட நாயகர் என்பவருக்குத் திருத்தங்கல் கிராமத்தில் இரத்தக்காணி தானம் செய்யப்பட்ட செய்தி கூறப்படுகிறது. இந்தச் சாசனத்தின் பக்கத்தில், ஒரு வீரன் தரையில் நின்றவண்ணம் அருகில் இருக்கும் குதிரையின் தலையை வாளால் வெட்டுவது போன்றும், அக்குதிரையின் மீது ஒருவீரன் அமர்ந்து வாளேந்தியிருப்பது போன்றும், இக்குதிரை வீரனுக்கும் பக்கத்தில் மற்றொரு வீரன் குதிரைமீதமர்ந்து இருப்பது போன்றும் சிற்பம் கற்பாறையில் செதுக்கப்பட்டிருக்கிறது.

தென் ஆர்க்காடு சில்லா, திருக்கோவலூர் தாலுகா, காடையார் கிராமத்துச் சாசனம் கி.பி. 18ஆம் நூற்றாண்டில்

எழுதப்பட்டது. இதில், நாடியா கவுண்டர் மகன் கலிதீர்த்தான் என்பவன் போர்க்களத்தில் உயிர் நீத்தமைக்காக, ஏரம நாயகர் என்பவர் நிலம் தானம் செய்த செய்தி கூறப்படுகிறது (237 of 1936).

போர்க்களத்தில் பிறருக்காக உயிர் கொடுத்தவருக்கு மட்டும் உதிரப்பட்டி தானம் அளிக்கப்பட்ட போதிலும், போரில் இறக்காமல் தனிப்பட்ட முறையில் பிறருக்காகவோ அல்லது பிறர் தொந்தரவு பொறுக்க முடியாமலோ உயிர் விட்டவர்க்கும் உதிரப்பட்டி வழங்கப்பட்டுள்ளன. இவற்றிற்கு உதாரணம்:

தென் ஆர்க்காடு சில்லா, சிதம்பரம் தாலூகா, அரகண்டநல்லூர் ஒப்பிலாமணி ஈசுவரர் கோயில் சாசனம். இது, பொன்னாண்டை என்னும் பெயருள்ள தேவராட்டியார் மகன் இளவெண்மதி சூடி ஆடினான் என்பவன், கோயில் மண்டபம் கட்டி முற்றுப்பெறும் பொருட்டுத் தன் தலையை அறுத்துக் கொண்டதற்காக 100 குழி நிலம் உதிரப்பட்டியாகக் கொடுக்கப்பட்டதைக் கூறுகிறது (197 of 1934 - 1935).

புதுக்கோட்டை, திருமய்யம் தாலூகா காரமங்கலம் அகத்தீசுவரர் கோயில் சாசனம், பாண்டியன் ஸ்ரீ குலசேகர தேவரின் 32ஆவது ஆண்டில் எழுதப்பட்டது. மேற்படி கோயில் மண்டபத்தைப் பழுது தீர்த்துக்கொண்டிருந்த கல்தச்சன், அறங்குளவன் என்பவன் பெரிய அடிபட்டுக் காயம் பட்டபடியால், மிழலைக் கூற்றத்து பாம்பாற்று நாட்டுத் தலைவனான தன்ம ஆட்கொண்ட தேவர் என்னும் தன்மராயர் அவனுக்கு உதிரப்பட்டியாக நிலம் தானம் செய்தார் என்று இச்சாசனம் கூறுகிறது.

ஜடாவர்மன் திரிபுவன சக்கரவர்த்தி ஸ்ரீ வல்லப தேவருடைய 13ஆவது ஆண்டுச் சாசனம் (172 of 1935 - 36) சுந்தர பாண்டிய பட்டன் மனைவி பிறர் கொடுமை தாங்காது நஞ்சுண்டு இறந்தமைக்காக மேற்படி பட்டனுக்கு உதிரப் பட்டியாக நிலம் தானம் செய்யப்பட்ட செய்தியைக் கூறுகிறது.

தஞ்சை சில்லா நன்னிலம் தாலூகா அச்சுதமங்கலம் சோமநாதேசுவரர் கோயில் சாசனம், ராசராச தேவருடைய 20ஆம் ஆண்டில் எழுதப்பட்டது (406 of 1925). இதில், சோமநாத மங்கலம், சோமநாத சதுர்வேதி மங்கலம் என்னும் கிராமங்களுக்கும் சீதக்க மங்கலம் என்னும் கிராமத்துக்கும், முடிகொண்ட சோழப் பேராறு என்னும் ஆற்றின் நீரை நிலங்களுக்குப் பாய்ச்சுவதில் சச்சரவு ஏற்பட்டு அதன் காரணமாக ராசர்ராசப் பேரரையன் என்பவனைத் தவறாகக் கொன்றுவிட்ட குற்றத்திற்காக அவன் மகன் எதிரிலாப்

பேரரையனுக்கு உதிரப்பட்டியாக நிலம் தானம் செய்யப்பட்ட செய்தி கூறப்படுகிறது.

இதுகாறும் எடுத்துக் காட்டிய சாசனச் சான்றுகளிலிருந்து இரத்தக்காணி, உதிரப்பட்டி, நெய்த்தோர்ப்பட்டி என்பன இன்னதென்பது அறியக்கிடக்கிறது.

*செந்தமிழ்ச் செல்வி,* சிலம்பு 22, பரல் 10, 1948

# உறையூர் மறைந்த வரலாறு

ஊர்களும் நகரங்களும் சிற்சில காரணங்களால் அழிந்து படுவதுண்டு. எரிமலைகளாலும், ஆறுகளாலும், மண்காற்றி னாலும், கடற்பெருக்காலும் ஊர்கள் அழிகின்றன. இவ்வாறு அழிந்துபோன ஊர்கள் பலப்பல. கி.பி. முதலாம் நூற்றாண்டிலே கிரேக்க நாட்டிலே இருந்த பாம்பி என்னும் நகரம், வெசூவியஸ் என்னும் எரிமலை கக்கிய நெருப்பினாலும் சாம்பலினாலும் மூடுண்டு அழிந்துவிட்டது. அழிந்துபோன அந்நகரத்தைச் சில ஆண்டுகளுக்கு முன்னர் தோண்டியபோது, புதையுண்ட வீதிகளையும், மனைகளையும், மக்களின் எலும்புக் கூடுகளையும், ஏனைய பொருள்களையும் கண்டெடுத்தனர்.

சிந்து நதிக்கரையிலே இருந்த ஹரப்பா, மொகஞ்சதரோ என்னும் நகரங்கள் வெள்ளப் பெருக்கினால் நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் அழிந்துவிட்டன. சில ஆண்டுகளுக்கு முன்னர் அவ்விடங்களை அகழ்ந்து பார்த்தபோது, அக் காலத்துக் கட்டடங்களையும், தெருக்களையும், பாண்டங் களையும், எலும்புக்கூடுகளையும், ஏனைய பொருள்களையும் கண்டெடுத்தனர்.

புதுச்சேரிக்குத் தெற்கே பத்து மைல் தொலைவில் உள்ள அரிக்கமேடு என்னும் கடற்கரைப் பட்டினம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்த் தமிழ் நாட்டில் பேர்பெற்ற துறைமுகமாக இருந்தது. யவனர் முதலிய வெளிநாட்டவர் இங்கு வந்து வாணிகஞ் செய்தனர். இந்தத் துறைமுகப் பட்டினத்தைப் பற்றித் தமிழ் நூல்களில் யாதொரு குறிப்பும் இதுவரை காணப்படவில்லை. பிற்காலத்தில் இப்பட்டினம் மண்மூடி மறைந்து போயிற்று. அண்மைக் காலத்தில் இவ்விடத்தை அகழ்ந்து பார்த்தபோது, மட்பாண்டங்களும், பிராமி எழுத்தில் எழுதப்பட்ட தமிழ்ப் பெயர்களும், யவன நாட்டு நாணயங்களும், யவனருடைய மட்பாண்டங்களும், ஏனைய பொருள்களும் ஏராளமாகக் கிடைத்தன.

சங்க காலத்திலும் அதற்குப் பின்னும் முத்துகளுக்குப் பேர்போன கொற்கைப் பட்டினமும் மண்ணில் மறைந்து விட்டது. இவ்வாறு அழிந்துபோன பல நகரங்களும்

பட்டினங்களும் அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ளன. அகழ்ந் தெடுக்கப்படாத, பூமியில் புதையுண்டிருக்கிற ஊர்கள் இன்னும் பல உள. அவற்றுள் ஒன்று உறையூர்.

பண்டைக் காலத்திலே புகழ் பெற்று விளங்கிய உறையூர், பிற்காலத்திலே எவ்வாறு அழிந்துவிட்டது என்பதை ஈண்டு ஆராய்வோம். முதலில், உறையூரைப் பற்றிச் சங்க நூல்களிலும் பிற நூல்களிலும் கூறப்பட்டுள்ள செய்திகளைக் காண்போம்.

சோழர்களின் உள்நாட்டுத் தலைநகரமாக இருந்தது உறையூர். உறையூரை, உறந்தை என்று சங்க நூல்கள் கூறுகின்றன. இது காவிரியாற்றின் தென்கரையில் இருந்தது. உறையூருக்குக் கிழக்கே நெடும்பெருங் குன்றம் ஒன்று இருந்தது என்று *அகநானூறு* 4ஆம் பாட்டுக் கூறுகின்றது:

கறங்கிசை விழவின் உறந்தைக் குணாது
நெடும்பெருங் குன்றத்து அமன்ற காந்தள்

அந்த நெடும்பெருங் குன்றம், இப்போது திருச்சிராப் பள்ளி மலை என்று வழங்கப்படுகிறது. பிடவூர் என்னும் ஊர், உறையூருக்குக் கிழக்கே இருந்ததாகப் *புறநானூறு* (395) கூறுகிறது.

உறையூரைக் கோழி என்றும், கோழியூர் என்றும் கூறுவர். "கோழியோனே கோப்பெருஞ் சோழன்" என்பது *புறம்* 212ஆம் பாட்டு. "உறையூரென்னும் படை வீட்டிடத்திருந்தான் கோப்பெருஞ் சோழன்" என்பது இதன் பழைய உரை. "வஞ்சியும் கோழியும் போல" என்பது, *பரிபாடல் திரட்டு*, 7ஆம் செய்யுள் அடி. கோழி என்னும் சொல்லின் வேறு பெயர்களாகிய வாரணம், குக்குடம் என்னும் பெயர்களும் உறையூருக்கு உண்டு.

உறையூருக்குக் கோழியூர் என்று பெயர் வந்த காரணத்தைச் *சிலப்பதிகாரம்* கூறுகிறது:

முறஞ்செவி வாரணம் முன்சமம் முருக்கிய
புறஞ்செவி வாரணம் புக்கனர் புரிந்தென்
(*சிலப்.*, நாடுகாண் காதை)

"முறம்போலும் செவியையுடைய யானையைச் சமரிடத்துக் கெடுத்த, புறத்தே சிறையையுடைய கோழி என்னும் நகரின் கண்ணே விருப்பத்தொடு (கௌந்தியடிகளும் கோவலனும் கண்ணகியும்) புக்கா ரென்க" என்பது அடியார்க்கு நல்லார் உரை. இதனால், உறையூரில் கோழி யொன்று யானையுடன் போரிட்டு வெற்றிகொண்டதனால் அவ்வூருக்குக் கோழியூர் என்று பெயர் ஏற்பட்டதென்று தெரிகிறது.

வைகறை யாமத்து வாரணங் கழிந்து

என்று *சிலப்பதிகாரம்*, காடுகாண் காதையில் வருகிறது. இதற்கு உரை எழுதிய அடியார்க்கு நல்லார், "கோழியூரை வைகறை யாமத்தே கழிந்து. வாரணம் - கோழியூர்" என்று எழுதி யிருப்பது காண்க. நீலகேசி என்னும் சமண சமய மூதாட்டியார், உறையூரிலிருந்து சமதண்டம் என்னும் ஊருக்குச் சென்றதாக *நீலகேசி* என்னும் நூல் கூறுகிறது. அவ்வாறு கூறும்போது, உறையூரைக் குக்குடமாநகர் (அசீவகவாதச் சருக்கம், 8) என்று கூறுகிறது.

உறையூரின் நீதிமன்றம் நேர்மைக்கும் முறைமைக்கும் பேர்பெற்றது என்று சங்க நூல்கள் கூறுகின்றன:

அறங்கெழு நல்லவை யுறந்தை
மறங்கெழு சோழர் உறந்தை யவையத்து
அறநின்று நிலையிற் றாகலின், அதனால்
முறைமை நின் புகழும் அன்றே.........

(*புறம்* 39)

"மறம் பொருந்திய சோழரது உறையூர்க்கண் அவைக் களத்து அறம் நின்று நிலைபெற்றதாதலால், முறைமை செய்தல் நினக்குப் புகழும் அல்லவே" என்பது இதன் பழைய உரை.

நீயே, அறந்துஞ் சுறந்தைப் பொருநனை (*புறம்* 58)

நீ அறந் தங்கும் உறையூரின்கண் அரசன் என்பது இதன் பழைய உரை.

மறங்கெழு சோழர் உறந்தை யவையத்து
அறங்கெட அறியா தாங்கு....... (*நற்றிணை* 400)

இவையும் உறையூரின் நீதிமன்றத்தின் சிறப்பைக் கூறுகின்றன.

உறையூர் பண்டைக் காலத்தில் புகழ்பெற்றிருந்தது என்பதை, "செல்லா நல்லிசை உறந்தை" (*புறம்* 395) என்றும், "கெடலரு நல்லிசை உறந்தை" (*அகம்* 369) என்றும் வருவதனால் அறியலாம்.

பண்டைக் காலத்து நகரங்களைப் போலவே, உறையூரும் மதிலரண் வாய்ந்திருந்தது என்பதை, "நொச்சிவேலித் தித்தன் உறந்தை" (*அகம்* 122) என்றும், "உறையூர் நொச்சி ஒருபுடை ஒதுக்கி" (*சிலம்பு* நாடுகாண் காதை) என்றும் வருவதனால் அறியலாம். நொச்சி என்பது மதில். இதனால், உறையூரைச் சூழ்ந்து கோட்டை மதில் அமைந்திருந்த செய்திய்ை அறிய லாம். சோழன் நலங்கிள்ளி உறையூரின்மேல் படையெடுத்துச் சென்று, அவ்வூர்க் கோட்டை மதிலைச் சூழ்ந்து முற்றுகை யிட்டான் என்றும், கோட்டைக்குள்ளிருந்த நெடுங்கிள்ளி வாயிலை அடைத்துக்கொண்டு உள்ளேயே இருந்தான் என்றும் (*புறம்* 45) கூறப்படுவது இதனை வலியுறுத்துகின்றது.

உறையூரில், பங்குனி உத்திரத் திருவிழா பேர்போனது. என்னை? "மதுரை ஆவணி அவிட்டமே, உறையூர் பங்குனி யுத்திரமே, கருவூர் உள்ளி விழாவே என இவையும்" என்று *இறையனார் அகப்பொருள் உரை* கூறுவது காண்க.

உறையூரில் ஏணிச்சேரி என்னும் ஒரு தெரு இருந்தது (சேரி = தெரு). இந்த உறையூர் ஏணிச் சேரியில் முடமோசியார் என்னும் புலவர் வாழ்ந்திருந்தார். இவர் அல்லாமல் இன்னும் சில புலவர்களும் இவ்வூரில் வாழ்ந்திருந்தார்கள். அவர்கள் உறையூர்க் கதுவாய்ச் சாத்தனார், உறையூர் இளம்பொன் வாணிகனார், உறையூர்ச் சல்லியங் குமரனார், உறையூர்ச் சிறுகந்தனார், உறையூர்ப் பல்காயனார், உறையூர் மருத்துவன் தாமோதரனார், உறையூர் முதுகண்ணன் சாத்தனார், உறையூர் முதுகந்தனார் முதலியோர். இவர்கள் இயற்றிய செய்யுள்கள் சங்க நூல்களில் காணப்படுகின்றன.

உறையூர் அரசனுடைய மாளிகை பெரிய கட்டடம். "பிறங்குநிலை மாடத்து உறந்தையோன்" (*புறம்* 69) என்பது காண்க.

உறையூரை ஆண்ட சோழ அரசர்களைப் பற்றியும், ஏனைய வரலாறுகளைப் பற்றியும் ஈண்டு எழுதவேண்டு வதில்லை. சைவ நாயன்மார்களில் ஒருவராகிய புகழ்ச் சோழ நாயனாரும், ஆழ்வார்களில் ஒருவராகிய திருப்பாணாழ்வாரும் உறையூரில் இருந்தவர்கள்.

உறையூர் எப்படி அழிந்தது?

இவ்வாறு சங்க காலத்திலும் பிற்காலத்திலும் சிறப்புற் றிருந்த உறையூர் கி.பி. 11ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு மண்காற்றடித்து மண்ணால் மூடுண்டு அழிந்துபோயிற்று என்பதைப் பிற்காலத்துத் தமிழ் இலக்கியங்களாலும், அவற்றின் உரையினாலும் அறியக் கிடக்கிறது. இதனை ஆராய்வோம். உறையூர் அழிந்த செய்தி *தக்கயாகப் பரணி* உரையிலிருந்து தெரியவருகிறது. சமணர்கள் தமது மந்திரவலிமையினாலோ, தவவலிமையினாலோ கல்மழையும் மண் மழையும் பொழியச் செய்து உறையூரை அழித்தார்கள் என்பது அவ்வுரைச் செய்தி:

மலைகொண் டெழுவார் கடல்கொண் டெழுவார்
மிசைவந்து சிலாவருடஞ் சொரிவார்
நிலைகொண் டெழுவார் கொலைகொண் டெழுதற்
கிவரிற் பிறர்யாவர் நிசாசரரே

என்பது ஒட்டக்கூத்தர் இயற்றிய *தக்கயாகப் பரணி* 70ஆம் தாழிசை இதற்குப் பழைய உரைகாரர் இவ்வாறு விளக்கங் கூறுகிறார்:

"உறையூரில் கல்வருஷமும் மண்வருஷமும் (வருஷம் - மழை) பெய்வித்து, அதனைக் கெடுத்துத் துரோகமுஞ் செய்தார் இவர் (சமணர்). அதற்குப் பின்பு இராசதானி திருச்சிராப்பள்ளியாயிற்று."

இதனால் நாம் தெரிந்துகொண்டது என்ன? 'உறையூர் மண்மூடி மறைந்துவிட்டது; இவ்வூர் மண்மூடிப் புதையுண்ட தற்குக் காரணமாக இருந்தவர் சமணர்' என்பதை இவ்வுரைப் பகுதியால் அறிகிறோம்.

*தக்கயாகப் பரணி* நூலாசிரியராகிய ஒட்டக்கூத்தருக்கும், அதன் உரையாசிரியருக்கும் (இவர் பெயர் முதலியவை தெரியவில்லை) பிற்பட்ட காலத்தாய *செவ்வந்திப் புராணம்* என்னும் நூலும், உறையூர் மண்ணில் புதையுண்டு மறைந்த செய்தியைக் கூறுகிறது. ஆனால், அதை அழித்தவர் சமணர் என்று கூறவில்லை. சிவபெருமான் சோழ அரசன்மேல் சீற்றங் கொண்டு அவ்வூரை அழித்தார் என்று இந்தப் புராணம் கூறுகிறது. இப்புராணத்தை இயற்றியவர் கி.பி. 16ஆம் நூற்றாண்டில் இருந்தவராகிய சைவ எல்லப்ப நாவலர். *செவ்வந்திப் புராணத்துக்குத் திருச்சிராப்பள்ளிப் புராணம்* என்னும் பெயரும் உண்டு. இப்புராணத்திலே, உரையூரழிந்த சருக்கம் என்னும் சருக்கத்திலே, பராந்தகன் என்னும் சோழ அரசன்மீது சிவபெருமான் கோபங் கொண்டு, அவனது நகரமாகிய உறையூரை அழித்தார் என்னும் செய்தி கூறப்படு கிறது:

*மாமுகிற்கணம் இடத்ததிர்ந்து*
*எழுந்துமண் மழையைத்*
*தீமுகங்களாய் இறைத்தன*
*புனலையும் சிதறி.*

*சண்டமாருதஞ் சுழன்றுறை*
*யூரெலாஞ் சலியா*
*வெண்டிசாமுகந் திரிந்திட*
*ஒன்றிலொன் றெடுத்துக்*
*கொண்டுகீழ்விழ வெறிந்தன*
*பலபல குவையாய்*
*மண்டிரண்டன மலைபெருங்*
*குழவிகண் மான.*

*மாடமாளிகை மறைந்தன*
*மறைந்தன மணித்தேர்*
*ஆடரங்கெலாம் புதைந்தன*
*புதைந்தன அகங்கள்*

கூடகோபுரம் கரந்தன
கரந்தன குளங்கள்
மேடுபட்டன காவுடன்
ஆவண வீதி

இவ்வாறு உறையூர் மண்மூடி மறைந்துவிட்டது. அது மறைவதற்குக் காரணம் சமணரா, சிவபெருமானா என்னும் ஆராய்ச்சி வேண்டுவதில்லை. பழைய உறையூர் மண்ணுக்குள் மறைந்து கிடக்கிறது என்பதை இலக்கியச் சான்று கொண்டு அறிகிறோம்.

இந்த ஊரை அகழ்ந்துபார்த்தால், அங்குக் கிடைக்கும் பொருள்களைக் கொண்டு தமிழர் நாகரிகம், பண்டைய சரித்திரம், சமயம் முதலிய பல செய்திகளை அறியலாம். பழைய கட்டடங்களைப் பாதுகாப்பதற்கும், மறைந்துபோன இடங்களை அகழ்ந்து எடுப்பதற்கும் என்றே இந்திய அரசாங்கத்தார் ஆர்க்கியாலஜி இலாகா (Archaeological Dept.) என்னும் ஓர் இலாகாவை அமைத்திருக்கிறார்கள். இதன் கிளை இலாகா சென்னை மாகாணத்திலும் இருக்கிறது. இந்த இலாகா உறையூர் போன்ற மறைந்த இடங்களைத் தோண்டிப் பார்க்க முயற்சி செய்யவில்லை. வடநாடுகளில் வேலை செய்வதைவிட மிகக் குறைந்த அளவில்தான் இந்த இலாகா தென்னிந்தியாவில் வேலை செய்கிறது. அதிலும் தமிழ் நாட்டைப் பற்றி இந்த இலாகா சிறிதும் கருத்துச் செலுத்தவில்லை. தனிப்பட்ட முறையில் டூப்ரேயில் என்னும் பெயருள்ள பிரெஞ்சு நாட்டவர் தமிழ் நாட்டில் செய்த அளவு வேலைகூட இந்த இலாகா செய்யவில்லை என்றால், இதன் போக்கை என்னென்று சொல்வது! இந்த இலாகா கண்டுபிடிக்காமல் விட்டிருந்த சுமார் பன்னிரண்டு குகைக்கோயில்களையும் சாசனங்களையும் டூப்ரேயில் துரை அவர்கள் கண்டுபிடித்துக் காட்டினார். தமிழ் நாட்டுக் கோயில்களில் மறைந்து கிடந்த ஓவியங்களில் பலவற்றைக் கண்டுபிடித்துத் தெரிவித்தவரும் அவரே. அவருக்கு நமது நன்றி. அப்பெரியார் காலமாய்விட்டதற்காக வருந்துகிறோம்.

உறையூர், மதுரை, காஞ்சிபுரம், காவிரிப்பூம்பட்டினம், கொற்கை, பழையாறை, கும்பகோணம், நாகப்பட்டினம் முதலிய மிகப் பழைய இடங்கள் இன்றுவரை அகழ்ந்து பார்க்கப்படவில்லை. இவற்றையெல்லாம் ஆர்க்கியாலஜி இலாகா செய்யாமலே இருக்கிறது. செல்வர்களும், தனிப்பட்ட சங்கங்களும் அரசாங்கத்தார் உத்தரவு பெற்று அகழ்ந்து பார்க்கலாம். இத்தகைய செயல்களில் கருத்தைச் செலுத்த

வேண்டும்; கண்ணுங் கருத்துமாக இருக்க வேண்டும். ஆர்க்கியாலஜி இலாகாவை அடிக்கடி தூண்டி ஊக்கப்படுத்த வேண்டும்.

(இரண்டாண்டுகளுக்கு முன்பு ஆர்க்கியாலஜி இலாகா உறையூரில் ஓரிடத்தை அகழ்ந்துபார்த்து ஆராய்ச்சி செய்யத் தொடங்கியது; ஆனால், அதிகமாக ஒன்றும் செய்யவில்லை. சரியான இடங்களைத் தக்கபடி ஆராய்ந்து பார்த்தால், உறையூரின் பழங்காலப் பொருள்கள் பல கிடைக்கும் என்பதில் ஐயமில்லை.)

*செந்தமிழ்ச் செல்வி*, சிலம்பு 22, பரல் 11, 1948

# சென்னை நகரம் யாருக்கு உரியது?

சென்னை மாநகரம் தொண்டை நாட்டில் உள்ளது. இந்நகரம் ஏற்பட்டுச் சுமார் 300 ஆண்டுகள் ஆகின்றன. இருபத்து நான்கு கோட்டங்களில் ஒன்றான புலியூர்க் கோட்டத்தில் சென்னை நகரம் அமைந்திருக்கிறது. இந்த நகரத்தைத் தெலுங்கர்களில் சிலர், தங்களுடையது என்று வரலாறு உணராமல், விபரம் அறியாமல் கூறுவது பொருத்த மற்ற, உண்மைக்கு மாறான செய்தியாகும்.

விசயநகர அரசு, முகம்மதியரால் தோல்வியுற்றுச் சிதைந்து போயிற்று. சிதைந்துபோன விசயநகர அரசன் வழிவந்தவன் சந்திரகிரி அரசன். அக்காலத்தில் (17ஆம் நூற்றாண்டில்) நாடெங்கும் கொள்ளையும் குழப்பமுமாக இருந்தபடியால், எந்தெந்த நாடு யார்யாருக்குரியதென்று சொல்ல முடியாமல், தடி எடுத்தவன் தண்டல்காரன் என்னும் நிலையில் இருந்தது. அந்தக் காலத்தில் கிழக்கிந்தியக் கம்பெனியைச் சேர்ந்த டே என்னும் ஆங்கிலேயர் 1639இல் சந்திரகிரி அரசனிடமிருந்து சென்னையில் கோட்டையுள்ள இடத்தை மாத்திரம் வாடகைக்கு வாங்கினார். அக்காலத்தில், சென்னை சந்திரகிரி அரசனுக்குச் சொந்தம் என்றே வைத்துக்கொண்டாலும், பிற்காலத்தில் அது வேற்றரசருக்கு உரியதாயிற்று என்னும் செய்தியை வரலாறு கூறுகிறது.

1646இல் சந்திரகிரி அரசன், முகம்மதியரால் தாக்கப் பட்டுச் சந்திரகிரியைவிட்டு மைசூருக்கு ஓடி ஒளிந்தான். அவனுடைய அரசும் நாடும் முகம்மதியரால் பிடிக்கப்பட்டு முகம்மதியரின் ஆட்சிக்கு வந்துவிட்டன. அதாவது, கோல் கொண்டா அரசன் சந்திரகிரி அரசனைத் துரத்திவிட்டுச் சந்திரகிரி இராச்சியத்தைச் சென்னையுட்படப் பிடித்துக் கொண்டான். ஆகவே, 1670இல், கிழக்கிந்தியக் கம்பெனியார் தங்கள் செயின்ட் சார்ச் கோட்டையையும், சென்னை நகரத்தையும் கோல்கொண்டா அரசனிடம் இருந்து மீண்டும் வாடகைக்குப் பெற்றனர். இந்த வாடகை உடன்படிக்கைப்படி, கோல்கொண்டா (முகம்மதிய) அரசனுக்குக் கம்பெனியார் ஆண்டு ஒன்றுக்கு 1200 வராகன் வாடகை கொடுக்க ஒப்புக்கொண்டனர். இந்த உடன்படிக்கையை முன்னின்று

செய்துகொடுத்தவர் நவாப் நெக்நம் கான் (Nabob Neknam Khan) என்பவர்.

ஆகவே, வரலாறு அறியாத தெலுங்கரில் சிலர் 'மதராஸ் மனதே' என்று கூச்சல் போடுவதில் ஏதேனும் பொருள் இருக்கிறதா? அறிவு இருக்கிறதா? 1692இல் எழும்பூர், புரசைவாக்கம், தண்டையார்பேட்டைகளை கம்பெனியார் முகம்மதியர் இடத்தில் இருந்து பெற்றுக்கொண்டு சென்னை யுடன் சேர்த்தார்கள். அசித் கான் (Assid Khan), நவாப் சுல்பிகார் கான் (Nabob Zulfikar Khan) ஆகிய இருவர்களிடமிருந்து இந்தப் பகுதிகளை வாங்கினார்கள்.

நவாப்பின் சந்ததியார் இன்றும் (சென்னை நகரத்துக்கும் கர்நாடகத்துக்கும் சொந்தக்காரராக இருந்தபடியால்) பென்ஷன் பெற்று வருகிறார்கள். உண்மை இப்படியிருக்க, சுயநலம் கொண்ட இரண்டொரு ஆந்திரர் தந்நலம் கருதி, 'மதராஸ் மனதே' என்று சொல்வது பொருளற்ற கேலிக் கூத்தாகும்.

இவர்கள் முகம்மதியர்களான கர்நாடக நவாபுகளைத் தெலுங்கர் என்று கருதுகிறார்களா? தெலுங்கரும் முகம்மதி யரும் ஓர் இனம்தானா? சந்திரகிரி அரசர் வழிமுறையும் கர்னாடக நவாபு வழிமுறையும் ஒன்றுதான் என்று இவர்கள் ஒப்புக்கொள்வார்களா? அது உண்மையா?

ஆசை வெட்கம் அறியாது என்கிற பழமொழிப்படி வரலாற்றைப் புரட்டிப் பாராமல் வீண் புரளி செய்வது அறிவுடைமையாகாது.

இராசராசன் போன்ற சோழ அரசர்கள் ஆந்திரம் உட்பட கலிங்கநாட்டை வென்று அரசாண்டார்கள். ஆகையால், இப்போது ஆந்திர நாடும் கலிங்க தேசமும் தமிழர் களுக்குரியன என்று கூறினால், அது எவ்வளவு நகைப்பிற் கிடமாக இருக்குமோ அப்படித்தான், தெலுங்கர் சென்னை தெலுங்கருக்குரியது என்று கூறுவதும் நகைப்பிற்கிடமா யிருக்கிறது.

*செந்தமிழ்ச் செல்வி,* சிலம்பு 23, பரல் 2, 1948

# பழங்காலத்து எழுதுகருவிகள்

இந்தக் காலத்திலே உலகம் முழுவதும் காகிதத்தாளும் பேனாவும் எழுதுகருவிகளாகப் பயன்பட்டுவருகின்றன. இவை எழுத்து வேலைக்குப் பெரிதும் வாய்ப்பாகவும் எளிதாகவும் அமைந்திருக்கின்றன. ஆனால், காகிதத்தாள் வருவதற்கு முன்பு, பண்டைக் காலத்திலே இவ்வளவு எளிதானவும் வாய்ப்பானவும் ஆன எழுதுகருவிகள் இல்லை. பண்டைக் காலத்திலே உலக மக்கள் எவ்விதமான எழுதுகருவிகளை வழங்கிவந்தார்கள் என்பது பற்றியும், பின்னர் காகிதத்தாள் எவ்வாறு நடை முறையில் வந்தது என்பதைப் பற்றியும் ஈண்டுக் கூறுவோம்.

**களிமண் சுவடிகள்**

சிறிய ஆசியா தேசத்தில் யூப்ரெடிஸ், டைகிரிஸ் ஆறுகள் பாய்கிற இடத்தில் இருந்த கால்டியா, ஸைரியா நாட்டு மக்கள் ஆதிகாலத்தில் களிமண்ணை எழுதுகருவியாகக் கொண்டிருந்தார்கள். களிமண்ணைப் பிசைந்து சிறுசிறு பலகைகளைப்போல் அமைத்து, அப்பலகை காய்ந்து போவதற்கு முன்னமே ஆணி போன்ற கருவியினால் எழுதி உலரவைத்துப் புத்தகமாக உபயோகித்தார்கள்; அவர்கள் எழுதிய எழுத்துகளுக்குக் கூனிபார்ம் எழுத்து என்று பெயர் கூறுவர். அவர்கள் எழுதிய களிமண் சுவடிகளைப் புத்தகசாலையில் வைத்துப் போற்றினார்கள். அவ்வாறு போற்றி வைக்கப்பட்டிருந்த களிமண் சுவடிகள் பல, சமீப காலத்தில் பூமியிலிருந்து அகழ்ந்து எடுக்கப்பட்டுள்ளன. அந்தக் களிமண் சுவடிகள் மேல்நாட்டுக் காட்சிச்சாலைகளில் வைக்கப்பட்டுள்ளன.

**பேபரைஸ் புத்தகம்**

பண்டைக் காலத்திலே, நாகரிகம் பெற்று வாழ்ந்த மக்கள் எகிப்தியர் என்பது வரலாற்று ஆராய்ச்சியாளர் கண்ட முடிவு. அக்காலத்து எகிப்தியர்கள் எழுது கருவியாகப் பயன்படுத்திய பொருள் பேபரைஸ் என்பது. பேபரைஸ் என்னும் இச்சொல்தான் இப்போதும் 'பேபர்' என்று காகிதத்தாளுக்கு வழங்கப்படுகிறது. ஆனால், எகிப்தியர் கையாண்ட பேபரைஸ் வேறு; இப்போதைய பேபர் வேறு. பேபரைஸ் என்பது எகிப்து தேசத்துச் சதுப்பு

நிலங்களிலும், தண்ணீர்த் தேக்கமுள்ள இடங்களிலும் வளர்ந்த ஒருவகைக் கோரைச்செடியின் பெயர். இந்தக் கோரை, பத்து அல்லது பதினைந்து அடி உயரம் வளரும். ஒவ்வொரு தாளும் ஓர் ஆளின் கைப்பருமன் அளவு இருக்கும். இக்கோரைத்தாள்களை அறுத்துவந்து, பட்டையை உரித்து ஒரே அளவாக நறுக்கிப் பதப்படுத்தி, வெயிலில் வைத்து உலர்த்துவார்கள். காகிதம் போன்று இருந்த இக்கருவிக்குப் பேபரைஸ் என்னும் அக்கோரையின் பெயரே வாய்த்தது.

இவ்வாறு பதப்படுத்தப்பட்ட பேபரைஸ் தாள்களை ஒன்றோடொன்று ஒட்டிச் சேர்த்து நீண்ட சுருளையாகச் செய்வார்கள். பெரிய சுருளில் 20 தாள்கள் ஒட்டப்பட்டிருக்கும். பேபரைஸ் தாள்கள் பற்பல அளவுகளில் அக்காலத்துக் கடைகளில் விற்கப்பட்டன. அவை இரண்டு அங்குல அகலம் முதலாகப் பதினைந்து அங்குல அகலம் வரையில் இருந்தன.

இந்தப் பேபரைஸ் தாள்களில், எழுதுவதற்கு ஒரு வகைப் பேனா பயன்பட்டது. இப்பேனா நாணற் செடிகளின் தண்டினால் செய்யப்பட்டது. நாணற் குழாய்களைச் சுமார் 6 அங்குல நீளமுள்ள துண்டுகளாக வெட்டி, அதன் ஒரு முனையைக் கூர்மையாகச் சீவிக் கூரின் நடுவைச் சிறிது பிளந்துவிட்டால், அது நேர்த்தியான பேனாவாக அமையும். இந்தப் பேனாக்களினால் கறுத்த மை கொண்டு பேபரைஸ் தாள்களில் பண்டைக் காலத்து எகிப்தியர் எழுத்து வேலைகளைச் செய்துவந்தார்கள். இலக்கியம், இலக்கணம், காவியம், கணக்கு, கடிதம் முதலிய எல்லாம் பேபரைஸ் தாளிலேதான் எழுதப்பட்டன.

எகிப்தியர் கொண்டிருந்த இந்த வழக்கத்தையே, அந்நாட்டுக்கு அடுத்திருந்த தேசத்தவரும் கைக்கொண்டனர். எகிப்து தேசத்துக்கு அண்மையிலிருந்த கிரேக்கரும் (யவனர்), பினீஷியரும், உரோமரும், எபிரேயரும், அர்மீனியரும், அராபியரும் எகிப்தியர் வழங்கிய பேபரைஸ் தாள்களையே தமது எழுதுகருவியாகக் கொண்டனர். இக்கருவி பாலஸ்தீனத்தில் கி.மு. 6ஆம் நூற்றாண்டில் உபயோகத்திலிருந்துவந்தது. கிரேக்கர்கள் கி.மு. 5ஆம் நூற்றாண்டில் இதை உபயோகித்துவந்தனர். உரோமர்கள் கி.மு. 3ஆம் நூற்றாண்டில் பேபரைஸைப் பயன்படுத்தினர். இந்நாடுகளில், கி.பி. 7ஆம் நூற்றாண்டுவரையில் பேபரைஸ் வழக்காற்றில் இருந்துவந்தது.

எழுதுவோர் ஓரிடத்தில் அமர்ந்து, பேபரைஸ் சுருளையை வலது பக்கம் வைத்துக்கொண்டு, இடது கையினால், பிரிக்கப்பட்ட தாளைப் பிடித்துக்கொள்வார்கள். விரிந்த தாள்

மடியில் படிந்திருக்கும். அதன்மேல், வலது கையினால், விரிந்த பகுதியில் நாணற் பேனாவினால் மை தொட்டு எழுதுவார்கள். ஒரு பத்தி எழுதியானவுடன், எழுதப்பட்ட பகுதியை இடது கையினால் சுருட்டிப் பிடித்துக்கொண்டு, அடுத்த பத்தியை எழுதுவார்கள். இவ்வாறு சுருளை முழுவதும் பத்திபத்தியாக எழுதப்படும். முழுவதும் எழுதியானவுடன், நன்றாகச் சுருட்டிக் கயிற்றினால் கட்டிவைப்பார்கள். இவ்வாறு எழுதப்பட்ட பேபரைஸ் ஏட்டுச் சுரளைகளில் சில இப்போதும் மேல்நாட்டுக் காட்சிச்சாலைகளில் வைக்கப்பட்டிருக்கின்றன.

**பைபிள்**

கிரேக்க தேசத்தார், பேபரைஸ் சுருளைகளை பிப்லியன் (Biblion) என்று தமது மொழியில் வழங்கினர். பிப்லியன் என்னும் சொல்லுக்குச் சுவடி (புத்தகம்) என்பது பொருள். உரோமர்கள் தமது லத்தீன் மொழியில் பைபிள் (Bible) என்று வழங்கினர். பைபிள் என்றாலும் சுவடி என்பதுதான் பொருள். எனவே, நூல் அல்லது புத்தகம் என்னும் பொருள் உடைய பைபிள் என்னும் சொல், முற்காலத்தில் பொதுவாகப் புத்தகங்களுக்கு வழங்கப்பட்டு, இக்காலத்தில் கிறித்துவ வேதப்புத்தகத்துக்குச் சிறப்புப் பெயராக வழங்கப்படுகிறது என்பது விளங்குகிறது.

பிப்லியன், பைபிள் என்னுஞ் சொற்கள் பிப்லாஸ் என்னும் சொல்லிருந்து உண்டானவை. அக்காலத்தில் கப்பல் வாணிகத்தில் பேர்போன பினீஷியரின் முக்கியத் துறைமுகப் பட்டினம், மத்தியதரைக் கடலின் கிழக்குக் கரையிலிருந்த பிப்லாஸ் பட்டினம். துறைமுகத்திலிருந்து பேபரைஸ் தாள்களைக் கொண்டுபோய்க், கிரேக்க உரோம நாடுகளில் விற்றார்கள். கிரேக்கரும் உரோமரும் பிப்லாஸிலிருந்து வந்த பேபரைஸுக்குப் பிப்லியன் என்றும், பைபிள் என்றும் பெயரிட்டார்கள்.

**கோடக்ஸ் புத்தகம்**

தொடக்கத்திலே, நெடுங்காலம்வரையில், பேபரைஸ் நீண்ட சுருளைகளாக அமைந்திருந்தன. பேபரைஸ் சுருளையை முழுவதும் பிரித்துப் பார்த்தால் அன்றி, குறிப்பிட்ட ஒரு பகுதியை வாசிக்க இயலாது. இந்தச் சங்கடத்தைப் போக்குவதற்குப் பிற்காலத்திலே, புத்தக அமைப்பில் பேபரைஸ் தாள்களை அமைத்தனர். ஒரே அளவாக உள்ள பேபரைஸ் தாள்களை இரண்டிரண்டாக மடித்து, ஒன்றின்மேல் ஒன்றாக அடுக்கி 'பைண்ட்' செய்தனர்; அதாவது, தற்காலத்திய புத்தக உருவத்தில் அமைத்தனர். இவ்வாறு அமைக்கப்பட்ட பேபரைஸ் புத்தகங்களை எளிதாகப் புரட்டித் தமக்கு வேண்டிய பகுதியை

எடுத்து வாசிக்கலாம். இத்தகைய சுவடிகளுக்கு கோடக்ஸ் (Codex) என்பது பெயர். கோடக்ஸ் அல்லது கௌடக்ஸ் என்னும் லத்தீன் மொழிச் சொல்லுக்குப் பொருள் மரப்பலகை என்பது. மெல்லிய பலகைகளாக அறுக்கப்பட்ட சிறு பலகைகளை நன்றாக இழைத்து, அதன்மேல் மெழுகைப் பூசி, அதில் கூரிய ஆணியால் கடிதம் எழுதுவது உரோமரது பண்டைக் காலத்து வழக்கம். இவ்வாறு அமைக்கப்பட்ட பலகைகளைக் கோடக்ஸ் என்று வழங்கினர். பிறகு, புத்தக வடிவில் அமைக்கப்பட்ட பேபரைஸ் சுவடிகளுக்கும் கோடக்ஸ் என்னும் பெயர் வழங்கப்பட்டது.

**தோல் புத்தகம்**

எகிப்து நாடு வெப்பமுள்ள நாடு. அதைவிட வெப்பம் குறைந்த கிரேக்கம், இத்தாலி முதலிய தேசங்களில் பேபரைஸ் விரைவில் கெட்டுப்போனபடியால், அந்நாட்டார் வேறு எழுதுகருவிகளைத் தேடலாயினார். மிருகங்களின் தோல்கள் பேபரைஸுக்குப் பதிலாக உபயோகப்படுத்தப்பட்டன. எகிப்து தவிர ஏனைய மத்தியதரைக் கடல் ஓரத்திலுள்ள நாடுகள் தொன்றுதொட்டுத் தோலை எழுது கருவியாக வழங்கிவந்தன. பிறகு, பேபரைஸ் உபயோகப்படுத்தப்பட்டது. பேபரைஸ் விரைவில் கெட்டுப்போவதைக் கண்டபிறகு, இவர்கள் தோலையே மீண்டும் எழுதுகருவியாகப் பயன்படுத்தினர். எகிப்திலுங்கூடத் தோல் எழுதுகருவியாகப் பிற்காலத்தில் பயன்படுத்தப்பட்டது. ஆனாலும், பேபரைஸ் அடியோடு வழக்கொழிந்துவிடவில்லை. இரண்டும் கையாளப்பட்டுவந்தன.

சாதாரண மிருகங்களின் தோலைவிட, வெள்ளாட்டின் அல்லது செம்மறியாட்டின் தோலை நன்கு பதப்படுத்தி எழுது கருவியாகப் பயன்படுத்தினார்கள். இதற்கு மெம்ரெனா (Membrana) என்று பெயர் வழங்கினர். ஆட்டுத்தோலைச் சுண்ணாம்பு நீரில் ஊறவைத்து மயிர்களைக் களைந்துவிட்டு, மறுபுறத்தில் உள்ள சதைப்பற்றுகளையும் நீக்கி, மரச்சட்டத்தின் மேல் உலரவைத்து, சீமைச் சுண்ணத்தினாலும் ஒருவகைக் கல்லினாலும் தேய்த்து மெருகு ஏறச் செய்வார்கள். இது நேர்த்தியான எழுது கருவியாகவும், இருபுறத்திலும் எழுதக்கூடிய தாகவும் இருந்தது.

இதைவிட நேர்த்தியான எழுதுகருவி, கன்றுக்குட்டியின் தோலினால் செய்யப்பட்டது. இது வெல்லம் (Vellum) என்று பெயர்பெற்றது. இது ஆட்டுத் தோலினால் செய்யப்பட்ட எழுதுகருவியைவிட மிக நேர்த்தியாகவும், அழகும் மெருகும்

உள்ளதாகவும் இருந்தது கன்றுக்குட்டித் தோல் என்னும் பொருளுடைய 'வெல்லம்' என்னும் லத்தீன் மொழிச் சொல், பிறகு, ஏனைய மிருகங்களின் தோல்களினால் செய்யப்பட்ட எழுதுகருவிகளுக்கும் வழங்கப்பட்டது.

**பெர்கமேனா**

தோலினால் செய்யப்பட்ட எழுதுகருவிகளுக்கெல்லாம் இன்னொரு பொதுப் பெயரும் வழங்கிவந்தது. அப்பெயர் பெர்கமேனா (Pergamena) என்பது. சின்ன ஆசியாவில் பெர்கமம் என்னும் ஒரு நகரம் இருந்தது. இந்த நகரத்தில் ஏராளமான தோலினால் செய்யப்பட்ட எழுது கருவிகள் உற்பத்தி செய்யப்பட்டு, வெளிநாடுகளுக்கும் ஏற்றுமதி செய்து விற்கப்பட்டன. பெர்கமம் நகரத்தில் செய்யப்பட்டபடியால், இத்தோற்கருவிகளுக்குப் பெர்கமேனா என்று அந்நகரத்தின் பெயரே வழங்கப்பட்டது, கலிங்கநாட்டிலிருந்து வந்த துணிகளுக்குப் பண்டைக் காலத் தமிழர் கலிங்கம் என்று பெயர் வழங்கியதைப்போல.

பெர்கமேனா என்னும் எழுதுகருவி எப்படி வழக்காற்றில் வந்தது என்பது பற்றி வர்ரோ (Varro) என்பவர் கூறும் கீழ்க்கண்ட செய்தியைப் பிளினி (Pliny) என்னும் யவன ஆசிரியர் தமது *இயற்கைச் சாத்திர வரலாறு* என்னும் நூலில் குறித்துள்ளார்: 'பெர்கமம் நாட்டு அரசனான யூமேனஸ் இரண்டாமவன் (Eumenes II, B.C. 197 - 159) என்பவருக்கும், எகிப்து நாட்டு மன்னரான டாலமி (Ptolemy) என்பவருக்கும் தமது நாட்டுப் புத்தகசாலைகளைப் பற்றிப் போட்டி ஏற்பட்டது. பெர்கமம் நாட்டு நூல்நிலையம், அலெக்ஸாந்திரியா நகரத்து நூல்நிலையத்தைவிடச் சிறப்படைந்து விடுமோ என்று ஐயுற்ற டாலமி அரசன், தனது எகிப்து தேசத்திலிருந்து பேபரைஸ் எழுதுகருவிகளைப் பெர்கமம் நாட்டுக்கு அனுப்பக்கூடாதென்று உத்தரவிட்டான். இதனால், பெர்கமம் நாட்டில் அதிகமான நூல்கள் எழுதப்படுவது தடைப்படும் என்பது அவன் கருத்து. பெர்கமம் நாட்டாருக்கு பேபரைஸ் கிடைக்காமற்போகவே, அந்நாட்டார் மெம்ரேனா என்னும் தோற்கருவிகளைக் கையாண்டனர்.

இவர் கூறும் இச்செய்தி உண்மையா அல்லது கட்டுக் கதையா என்பது தெரியவில்லை. ஆனால், தோலினால் எழுதுகருவிகளை உண்டாக்கி வெளிநாடுகளிலும் விற்பனை செய்து பேர்பெற்ற இடம் பெர்கமம் என்னும் நகரம் என்பது இதிலிருந்து உறுதிப்படுகிறது.

கி.மு. முதல் நூற்றாண்டிலிருந்து, தோல் எழுது கருவி, மெல்ல மெல்ல நாடெங்கும் வழங்கலாயிற்று. பேபரைஸ் உபயோகமும்

இருந்துவந்தது. படிப்படியாகத் தோற்கருவிகள் அதிகமாகப் பயன்படுத்தப்பட்டன. கி.பி. 4ஆம் நூற்றாண்டில் தோல் எழுதுகருவிகள் முக்கிய இடம் பெற்றன. சீசரியா (Caesarea) என்னும் இடத்தில் இருந்த ஓரிஜன் (Origen), பாம்பிலஸ் (Pamphilus) என்பவர்கள் அமைத்திருந்த நூல்நிலையங்கள் பாழடைந்து விட்டன. கி.பி. 4ஆம் நூற்றாண்டின் மத்தியில் இந்நூல் நிலையங்களைப் புதுப்பித்துச் செம்மைப்படுத்திய அகசியஸ் யூசொய்யஸ் என்னும் இரண்டு பாதிரிமார்கள், இந்நிலையங் களிலிருந்த சிதைந்துபோன பேபரைஸ் சுவடிகளைத் தோல்களில் எழுதிவைக்கும்படி ஏற்பாடு செய்தார்கள்.

காஸ்டன்டின் என்னும் சக்கரவர்த்தி, தமது கான்ஸ்டான்டி நோபில் என்னும் நகரத்திலிருந்த 50 கிறித்துவக் கோயில்களுக்கு 50 விவிலிய நூல்களை வெல்லம் என்னும் தோல்களில் எழுதிவைக்கும்படி கி.பி. 332இல் உத்தரவு செய்தார் (இத்தோற் கருவிகள், புத்தக உருவ அமைப்பிலே செய்யப்பட்டன). இத்தகைய சான்றுகளினால் கி.பி. 4ஆம் நூற்றாண்டிலே, பேபரைஸ் தாள்களைவிடத் தோற்புத்தகங்கள் அதிகமாகப் பயன்படுத்தப்பட்டன என்பது தெரிகின்றது.

**பட்டும் மூங்கிலும்**

ஆதிகாலத்தில் சீன தேசத்தார் மூங்கிற் பட்டைகளின் மேலே எழுதிவந்தனர். பிறகு, பட்டுத் துணி நெய்யும் தொழில் சீன தேசத்திலே தோன்றிற்று. அப்போது அவர்கள் பட்டுத் துணிகளை எழுதுகருவியாகக் கொண்டனர். துகிலிகையினால் (பிரஷினால்) மையைத் தொட்டு ஓவியம் எழுதுவதுபோல அவர்கள் பட்டுத் துணியிலும் மூங்கிற் பட்டையிலும் எழுதிவந்தார்கள். பிறகு, காகிதம் செய்யும் முறையையும் அவர்களே கண்டுபிடித்தார்கள். அப்போது காகிதத்தில் எழுதும் பழக்கம் ஏற்பட்டது. அதனால் காகிதத் தொழிற்சாலைகள் சீன நாட்டில் ஏற்பட்டன.

காகிதத்தில் அச்சடிக்கும் முறையையும் சீனர்களே கண்டுபிடித்தார்கள். ஆனால், தனித்தனி அச்செழுத்துகளை அவர்கள் உண்டாக்கவில்லை. புத்தகத்தின் ஒவ்வொரு பக்கத்தையும் மரப்பலகையில் எழுத்துகளைச் செதுக்கி அச்சிட்டார்கள். ஆகவே, ஒவ்வொரு பக்கத்துக்கும் ஒவ்வொரு மரப்பலகை எழுத்துகள் செதுக்கி அச்சிடப்பட்டன.

**ஓலைச்சுவடிகள்**

எகிப்தியர், கிரேக்கர், உரோமர், அராபியர், யூதர் முதலிய இனத்தார் பண்டைக் காலத்தில் பேபரைஸ் தாளையும்

விலங்குகளின் தோல்களையும் எழுதுகருவியாக வழங்கிவந்த காலத்தில், நமது நாட்டார் பனையோலையினால் செய்யப்பட்ட ஓலைச்சுவடிகளில் நூல்களை எழுதிவந்தார்கள். பனையோலை களை ஒரே அளவாக நறுக்கி ஒன்றாகச் சேர்த்து இரண்டு மரச்சட்டங்களை இருபுறங்களிலும் நீண்ட பக்கமாக அமைத்து, அவைகளின் ஊடே இரண்டு துளைகளை அமைத்துக் கயிறு கொண்டு சுற்றிக் கட்டிய சுவடிகள்தாம் ஓலைச்சுவடிகள். இப்பனையோலை ஏடுகளில் இரும்பினால் அமைந்த எழுத்தாணி களினால் வரைவார்கள். ஓலைச்சுவடிகளைப் பற்றி எல்லோரும் அறிந்திருப்பார்கள் ஆகையால், அதைப் பற்றி அதிகமாக எழுதவேண்டியதில்லை. இத்தகைய ஓலைச்சுவடிகள்தாம் இந்தியா, பர்மா, இலங்கை முதலிய கீழைநாடுகளில் முற்காலத்தில் வழங்கிவந்தன

**குறியீடுகள் முதலியன**

பேபரைஸ், தோல், பனையோலை ஆகிய பண்டைக் காலத்து எழுதுகருவிகளில் எழுதப்பட்ட எழுத்துகள் முற்றுப்புள்ளி, அரைப்புள்ளி, காற்புள்ளி முதலிய குறியீடுகளைக் கொண்டிருக்கவில்லை. அன்றியும், சொற்களைத் தனித்தனியே பிரித்தெழுதாமல் ஒரே கோவையாக எழுத்துகள் எழுதப்பட்டன. இவ்வாறு எழுதப்பட்ட சுவடிகளைப் படிப்பது கடினமாகவும் வருத்தமாகவும் இருந்தது. பழக்கப்பட்டவர்கள் மட்டும் இவைகளைப் படிக்கமுடியும், பழக்கப்பட்டவர்களுக்கும் வாசகத் தொடரைப் புரிந்து கொள்வது கடினமாய் இருந்தது. மேல் நாட்டார் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் சொற்களைப் பிரித்து எழுதத் தொடங்கினார்கள். இன்னும் பிற்காலத்தில் புள்ளிகள் முதலிய குறியீடுகளை வழங்கினார்கள். நமது நாட்டு ஓலைச் சுவடிகளில் முற்றுப்புள்ளி முதலிய குறியீடுகள் அமைக்கப் படவில்லை.

**பேப்பர் கடதாசி வந்த வரலாறு**

இப்பொழுது பேபர் என்று வழங்குகிற எழுதுதாகளை முதன்முதல் கண்டுபிடித்தவர் சீன நாட்டுச் சீனர்கள் என்பதை முன்னமே கூறினோம். கந்தைத் துணி, சணல், நார், வைக்கோல், முசுக்கட்டை மரம் முதலிய பொருள்களிலிருந்து காகிதத்தை அவர்கள் செய்து உபயோகப்படுத்திவந்தார்கள். சீனர் காகிதத்தாளுக்கு என்ன பெயர் வழங்கினார்கள் என்பது தெரியவில்லை. இதற்கு இப்போது வழங்கப்படுகிற பேபர் என்னும் பெயர், 'பேபரைஸ்' என்னும் எகிப்திய மொழியிலிருந்து வந்தது. சீனர் கடதாசியைக் கி.பி. முதல் நூற்றாண்டில் உண்டாக்கினார்கள். அக்காலத்தில் சீனர் செய்த காகிதத்

துண்டுகளில் சில, சீனநாட்டு நெடுஞ்சுவர்களிலிருந்து இப்பொழுது கண்டெடுக்கப்பட்டன. அன்றியும், சீனநாட்டிலே, புதைபொருள் ஆராய்ச்சியாளர் பழைய சீனநாட்டுக் காகிதங்களைப் பூமிக்குள்ளிருந்தும் கண்டெடுத்தனர்.

கி.பி. 7ஆம் நூற்றாண்டில் அராபியர் பெருவாணிபத்தில் ஈடுபட்டிருந்தார்கள். அக்காலத்தில் அராபியர் அகலமான எலும்புகளையும் ஓடுகளையும் எழுது கருவிகளாக உபயோகித்து வந்தனர். அவர்கள் இந்தியா, சீனா முதலிய கீழ்நாடுகளுடன் பெருத்த வாணிபம் செய்து வந்தார்கள். அக்காலத்தில் மத்திய ஆசியாவில் சமர்கண்டு என்னும் இடத்தில் சீனர் காகிதப் பட்டறை ஒன்றை ஏற்படுத்திக்கொண்டு காகிதம் செய்துவந்தனர். வாணிபத்தின் பொருட்டு அங்குச் சென்ற அராபியர், காகிதம் செய்யும் தொழிலின் இரகசியத்தைக் கி.பி. 650இல் கண்டு கொண்டனர். பிறகு, தாங்களே காகிதம் செய்யத் தொடங்கினார்கள். இவ்விதமாக அராபியர் காகிதத் தொழிலைச் சீனரிடமிருந்து கற்றுத் தங்கள் நாடுகளில் பரவச் செய்தனர்.

கி.பி. 800இல் பாக்தாத் நகரத்தில் காகிதப் பட்டறை இருந்தது. கி.பி. 900இல் எகிப்து நாட்டில் ஒரு காகிதப் பட்டறை இருந்தது. கி.பி. 1100இல் மொராக்கோ தேசத்தில் காகிதத் தொழிற்சாலை இருந்தது. அராபியர், ஐரோப்பாக் கண்டத்தில் உள்ள ஸ்பெயின் தேசத்தையும் கைப்பற்றிச் சிலகாலம் அரசாண்டார்கள். அக்காலத்தில், அதாவது, கி.பி. 1150இல் ஸ்பெயின் தேசத்திலும் அராபியர் காகிதத் தொழிற்சாலையை ஏற்படுத்தினார்கள். பிறகு, அங்கிருந்து பிரான்ஸ், ஜெர்மனி முதலிய நாட்டினர் காகிதம் செய்யக் கற்றுக்கொண்டார்கள். இவ்வாறு, கீழ்நாடாகிய சீன தேசத்திலிருந்து காகிதத் தொழில், அராபியர் வழியாக மத்தியக் கிழக்கு நாடுகளுக்குச் சென்று, அங்கிருந்து அராபியர் மூலமாகவே மேல்நாடுகளுக்குச் சென்றது. கடதாசித்தாள், பேபரைஸ், தோல் இவைகளைவிட விலை குறைவாகவும் அதிக வாய்ப்பாகவும் இருந்தபடியால், கடதாசித் தாள்களை மக்கள் நாளுக்கு நாள் அதிகமாகக் கையாளத் தொடங்கினார்கள். ஆகவே, நாளடைவில் பேபரைஸூம் தோலும் வழக்கொழிந்துவிட்டன. நமது நாட்டுக்கும் முகம்மதியர்கள்தாம் கடதாசியை முதன்முதல் கொண்டுவந்தனர். கடதாசி வந்த பிறகு ஓலையில் எழுதும் வழக்கம் மறைந்துவிட்டது.

**இயந்திரக் காகிதம்**

காகிதப் பட்டறையில் கையினாலேயே கடதாசியை அக்காலத்தில் செய்துவந்தார்கள். ஆகவே, அக்கடதாசிகள் தடித்தனவாயும் முரடாயும் இருந்தன. பிறகு, 19ஆம் நூற்றாண்டு

தொடங்குவதற்கு முன்பே, பிரான்ஸ் தேசத்தில் மெஷின் என்னும் இயந்திரத்தினால் கடதாசித் தாள் செய்யத் தொடங்கினார்கள். இந்த யந்திரம் பிற்காலத்தில் படிப்படியாகச் சீர்திருத்தப்பெற்று, இப்போது புதிதாகப் பல நுட்பமான கருவிகளுடன் அமைக்கப் பட்டிருக்கின்றது. இந்தக் காகித யந்திரங்களின் மூலமாகப் பல வகையான காகிதங்களை நாம் இன்று பெற்றுக் கொள்ளுகிறோம்.

காகிதத் தொழில் செம்மைப்படுத்தப்பட்டது போலவே நாணற் குழாய்ப் பேனாக்களுக்குப் பதிலாகக் குவில்பேனா என்னும் இறகுப்பேனா வந்து, அதற்குப் பிறகு நிப்பு உள்ள முட்பேனா உண்டாகி, இப்போது பௌண்டன் பேனாவும் வழக்காற்றில் இருந்துவருகிறது.

நாம் இப்போது சாதாரணமாக வழங்கிவருகிற பேபர், பேனாக்களை, இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் இருந்த மக்கள் காண்பார்களானால், எவ்வளவு வியப்பும் மகிழ்ச்சியும் அடைவார்கள்!

*செந்தமிழ்ச் செல்வி*, சிலம்பு 23, பரல் 5, 1948

# இராவணன் இலங்கை

தமிழ் நாட்டை அடுத்துள்ள இலங்கைத் தீவினை, இராவணன் ஆண்ட இலங்கை என்று மக்கள் கருதிவந்தனர்; வருகின்றனர். ஆழ்வார்களும் ஏனையோரும் இலங்கையைத் தென் இலங்கை என்று கூறியிருக்கிறபடியால், சிங்களத் தீவாகிய இலங்கைதான் இராவணன் ஆண்ட இலங்கை என மக்கள் தவறாகக் கருதிவருகின்றனர் போலும். 'தென் இலங்கை' என்பதற்குத் தமிழ் நாட்டிற்குத் தெற்கிலுள்ள இலங்கை என்று பொருள் கூறுவது சரித்திரத்துக்கு முரண்பட்டது. தென் இலங்கை என்பதற்கு, 'அயோத்திக்குத் தெற்கிலுள்ள இலங்கை' என்று பொருள் கொள்வதுதான் சரித்திரத்திற்கும் ஆராய்ச்சிக்கும் பொருத்தமானது. ஆனால், தமிழ் நாட்டை அடுத்துள்ள சிங்களத் தீவாகிய இலங்கைதான் இராவணன் ஆண்ட இலங்கை என்று பல நூற்றாண்டுகளாகக் கருதப்பட்டு வருகிறது. இத்தவறான கருத்து சங்க நூல்களிலும் இடம் பெற்றுவிட்டது.

**சங்க நூல்கள் கூறுவன**

தமிழ் நாட்டிலுள்ள கோடிக்கரை (தனுஷ்கோடி) என்னும் கடற்கரையருகில், ஓர் ஆலமரத்தின்கீழ் இராமர் தங்கி, சீதையை மீட்கும் வழியை வானர வீரர்களுடன் கலந்து யோசித்தார் என்று கடுவன் மள்ளனார் என்னும் புலவர் கூறுகிறார். "வென்வேற் கவுரியர் தொன்முது கோடி, முழங்கிரும் பௌவம் இரங்கு முன்துறை, வெல்போரிராமன் அருமறைக் கவிந்த பல்வீழ் ஆலம்" (*அகநானூறு* 70).

இராமேசுவரத்தைத் தொடர்ந்து இலங்கைத் தீவின் வடபுறம் வரையில் கடலில் காணப்படும் கற்பாறைகளைச் சேது அல்லது அணை என்றும், இவ்வணையை வானரப் படைகள் அமைத்தன என்றும் கதை வழங்கப்படுகிறது. ஆனால், குமரி முனையிலிருந்து இலங்கைக்குக் குரங்குப் படைகள் அணை அமைத்தன என்று சீத்தலைச் சாத்தனார் *மணிமேகலையில்* கூறுகின்றார். "குரங்கு செய்கடற் குமரியம் பெருந்துறை" என்று கூறியிருப்பது காண்க.

**நச்சரின் கதை**

*பத்துப்பாட்டில்* உள்ள *மதுரைக் காஞ்சியில்,*

தென்னவற் பெயரிய துன்னருந் துப்பிற்
றொன்முது கடவுட் பின்னர் மேய
வரைத்தா ழருவிப் பொருப்பிற் பொருந

என வரும் அடிகட்கு, ஆசிரியர் நச்சினார்க்கினியர் பொருந்தாக் கதையொன்றைப் புனைந்துரைக்கிறார்:

"இராவணனைத் தமிழ் நாட்டை யாளாதபடி போக்கின கிட்டுதற்கரிய வலியினையுடைய பழமை முதிர்ந்த அகத்தியன் பின்னே எண்ணப்பட்டுச் சான்றோனா யிருத்தற்கு மேவின ஒப்பற்றவனே" என்று உரை எழுதுகிறார். தென்னாட்டை இராவணன் ஆண்டான் என்றும், அகத்தியர் அவனுடன் இசைப்போர் செய்து வெற்றி கொண்டு அவனைத் தமிழ் நாட்டிற்கு அப்புறம் துரத்திவிட்டார் என்றும் இவ்வுரையா சிரியரே தொல்காப்பிய உரையில் எழுதுகிறார். இவர் கொள்கைப்படி, இராவணன் முதலில் தென்னாட்டை (தமிழ் நாட்டை) அரசாண்டான் என்றும், பிறகு இலங்கைக்குப் போய்விட்டான் என்றும் கருத வேண்டியிருக்கிறது. ஆனால், இவர் கூற்றுக்கு இவர் சான்று காட்டினார் இல்லை. எனவே, இது பிற்காலத்தில் இட்டுக்கட்டி வழங்கப்பட்ட கட்டுக்கதை எனக் கருத வேண்டும்.

**வால்மீகி கூறுவது**

இராமாயணக் கதையே கட்டுக்கதை என்பது ஆராய்ச்சி யாளர் கருத்து. இராமாயணம் கட்டுக்கதையாயினும் ஆகுக; அன்றி, உண்மையில் நடைபெற்ற கதையாயினும் ஆகுக. இராமாயணத்தை முதன்முதல் வடமொழியில் இயற்றிய வால்மீகி முனிவர் கூறுகிற இலங்கை, அயோத்தி. கிஷ்கிந்தை முதலிய இடங்களெல்லாம் இந்தியாவில் ஒவ்வோரிடத்தில் இருந்த நிலப்பகுதிகள் என்பது மட்டும் உண்மையே. இதில் சிறிதும் ஐயமில்லை. நமது ஆராய்ச்சிக்கு இராமாயணத்தை உண்மைக் கதை என்றே கொள்வோம். அங்ஙனமாயின், சிங்களத் தீவு இராவணன் ஆண்ட இலங்கையா என்பது கேள்வி. இவ்வாராய்ச்சிக்குக் *கம்ப இராமாயணம், துளசி இராமாயணம்* முதலிய இராமாயணங்கள் பயன்படா. வால்மீகி முனிவர் இயற்றிய வடமொழி *இராமாயணம்* மட்டுந்தான் பயன்படும். வால்மீகி முனிவர் இலங்கையைப் பற்றிக் கூறும் குறிப்புகள் இரண்டு உள. அவை:

1. இராவணனுடைய இலங்கை திரிகூடமலையின் உச்சியில் இருந்தது.

2. சீதையைக் கவர்ந்து சென்ற இராவணன், சீதையைக் கழுதை பூட்டிய வண்டியில் ஏற்றிக்கொண்டு, திரிகூட மலையைச் சூழ்ந்திருந்த 'சாகரத்தை'க் கடந்து இலங்கைக்குச் சென்றான்.

**சாகரம் என்பது கடலன்று**

வால்மீகி முனிவர் கூறியுள்ள இந்த இரண்டு குறிப்புகளைக் கொண்டு, இராவணன் ஆண்ட இலங்கை, சிங்களத் தீவாகிய இலங்கை அன்று என்பது உள்ளங்கை நெல்லிக் கனியாம். என்னை? சிங்களத் தீவாகிய இலங்கை திரிகூட மலையின் உச்சியில் இல்லை; இது ஒரு தீவாக உள்ளது. கழுதை பூட்டிய வண்டியைச் செலுத்திக்கொண்டு போகக் கூடியபடி அவ்வளவு சிறிய கடல் (சாகரம்), அன்று சிங்கள இலங்கையைச் சூழ்ந்துள்ள கடல். மலையின் உச்சியில் இருந்த இராவணனுடைய இலங்கையைச் சூழ்ந்திருந்த 'சாகரம்' உண்மையில் கடல் அன்று; ஏரிபோன்ற சிறிய நீர்நிலையாகும். கிருஷ்ணராஜ சாகரம், இராம சாகரம், இலக்ஷ்மண சாகரம் என்று பெயருள்ள ஏரிகள் சில இப்போதும் உள்ளன. அவை போன்று சிறு நீர்நிலைதான் இராவணனுடைய இலங்கையைச் சூழ்ந்திருந்தது என்பது ஆராய்ச்சி வல்லார் துணிபு.

**பரமசிவ ஐயர் கூற்று**

இராவணன் ஆண்ட இலங்கையானது, மத்திய இந்தியாவில் உள்ள இந்த்ரனா மலையுச்சியில் இருந்ததென்றும், இம்மலையைச் சூழ்ந்து மூன்று புறத்திலும் ஹிரான் என்னும் ஆறு பாய்கிறதென்றும், மாரிக்காலத்தில் இவ்வாறு பெருகி மலை முழுவதும் (அகழிபோல்) சூழ்ந்து ஒரு பெரிய ஏரிபோல ஆகிறதென்றும், இதுவே வால்மீகி முனிவர் தமது இராமாயணத்தில் கூறிய 'சாகரம்' என்றும், மற்றும் பல சான்றுகளைத் தேசப்படத்துடன் காட்டுகிறார் திரு. டி. பரமசிவ ஐயர் அவர்கள். இவர் ஆங்கிலத்தில் இயற்றியுள்ள *இராமாயணமும் இலங்கையும்* (*Ramayana and Lanka*) என்னும் நூல் காண்க. இந்த இடம் விந்திய மலையை அடுத்து இருந்ததென்று கூறுகிறார்.

**பந்தர்கரின் முடிவு**

திரு. பந்தர்கர் என்பவர், தாம் எழுதிய 'தண்ட காரண்யம்' என்னும் கட்டுரையில், மகாராட்ர தேசந்தான் பண்டைக் காலத்தில் தண்டகாரண்யமாக இருந்தது என்றும், இலங்கை, கிஷ்கிந்தை முதலியன மத்திய இந்தியாவில் விந்திய மலைக்குத் தெற்கில் இருந்தன என்றும் கூறுகின்றார்.[1]

---

1. 'Dandakaranya' by Dr. D.R. Bhandarkar, *Jha Commemoration Volume*.

**ஹிராலால் ஆராய்ச்சி**

திரு. ஹிராலால் என்பவர், தாம் எழுதிய 'இராவணன் இலங்கை இருந்த இடம்' என்னும் கட்டுரையில் இச்செய்திகளைக் கூறுகிறார்: 'விந்தியமலையைச் சார்ந்த மேகலா மலைத்தொடரின் அமரகண்ட சிகரத்தில் இராவணன் இலங்கை இருந்தது; கொண்டர், ஓரானர், சபரர் முதலிய குறிஞ்சிநில மக்கள் அவ்விடங்களில் வாழ்கின்றனர். இவர்களில் கொண்டர் தம்மை இராவண வமிசத்தினர் என்று கூறிக்கொள்வதோடு, 1891இல் எடுத்த ஜனக்கணக்கில் தம்மை இராவணவம்சம் என்றே பதிவு செய்துள்ளனர். 400 ஆண்டுகளுக்கு முன் இருந்த இவர்களுடைய அரசன் ஒருவன், தனது பொன் நாணயத்தில், தன்னைப் 'புலத்திய வமிசன்' என்று பொறித்திருக்கிறான். இதனால், கொண்டர் இராவணகுலம் என்று சொல்லிக்கொள்வது உறுதிப்படுகிறது. ஓரானர் என்னும் இனத்தவர் பண்டைய வானரர் இனத்தைச் சேர்ந்தவர். கொண்டர்களுக்கும் சபரர்களுக்கும் பகை இருந்தபடியால், சபரர் இராமன் பக்கம் சேர்ந்தனர் (இராமனுக்கு விருந்திட்ட சபரி என்பவள் சபரர் குலத்தைச் சேர்ந்தவள். இது அவள் இயற்பெயர் அன்று; குலப்பெயர்). இராமன் இலங்கைக்குக் கடந்து சென்ற 'சாகரம்' கடல் அன்று; ஏரியாகும்." இவ்வாறு இவர் தம்முடைய கட்டுரையில் கூறுகிறார்.[1]

**கிபியின் கூற்று**

திரு. கிபி என்பவர் தாம் எழுதிய 'அமரகண்டக் மலையில் இருந்த இராவணனுடைய இலங்கைக்குச் சுற்றுப் புறத்திலிருந்த மக்கள்' என்னும் கட்டுரையில், இராவணனுடைய இலங்கை மத்திய இந்தியாவில் இருந்ததென்றும், அதற்கு அருகிலே தண்டகாரண்யம், சித்திரகூடம், அகத்திய ஆசிரமம், பஞ்சவடி, கிரௌஞ்சம், பம்பை, கிஷ்கிந்தை, அயோத்தி முதலியன இருந்தனவென்றும் தேசப்படத்துடன் விளக்குகிறார்.[2]

---

1. 'The Situation of Ravana's Lanka' by Dr. Hiralal, *Jha Commemoration Volume*.

2. 'Inhabitants of the Country around Ravana's Lanka in Amarakantak' by M.V. Kibe. *A Volume of Eastern and Indian Studies*, Presented to Professor F. W. Thomas. Edited by S. M. Katre and P.K. Gode.

   'Ravana's Lanka located in Central India' by Sardar M.V. Kibe. *Indian Historical Quarterly*, Vol. IV.

   'Cultural Descendants of Ravana' by M.V. Kibe pages 264-266. *A Volume of Studies in Indology.*

**இராமதாசர் கூற்று**

திரு. இராமதாஸ் என்பவர், இராவணன் இலங்கையும் அமர்தீபமும் ஒன்று என்றும், இது அமரகண்டக் மலையில் இருந்தது என்றும், நருமதை, மகாநதி என்னும் இரண்டு ஆறுகள் உண்டாகிற மேட்டுநிலப் பகுதியே இந்த இடம் என்றும் கூறுகிறார். அன்றியும், மத்திய இந்தியாவில் மத்திய மாகாணத்தில் உள்ள கூயி இனத்தார் இராவணன் மரபினர் என்றும், அமரகண்டக் மலைகள் உள்ள கொண்ட்வானா என்னும் இடத்தில் உள்ள கொண்டு, கூயி, கோய் என்னும் இனத்தார் இராவணன் மரபினர் என்றும் கூறுகிறார்.[1]

**தீட்சிதர் கூற்று**

திரு. தீட்சிதர் என்பவர், சிங்களத் தீவாகிய இலங்கையும் இராவணன் ஆண்ட இலங்கையும் வெவ்வேறு இடங்கள் என்று கூறுகிறார்.[2]

**மிஷ்ரா கூறுவது**

திரு. மிஷ்ரா என்பவர், இராவணன் இலங்கை, ஆந்திர தேசத்தில் கடற்கரையைச் சேர்ந்த ஓர் இடம் என்கிறார்.[3]

**வதர் கூறுவது**

திரு. வதர் என்பவர், இராவணன் இலங்கை பூமியின் மத்திய இடமாகிய உஷ்ணமண்டலத்தில் இருந்ததாகக் கூறுகிறார்.[4]

**இலங்கைகள் பல**

இதுகாறும் காட்டிய சான்றுகளால், சிங்களத் தீவாகிய இலங்கை, இராமாயணத்தில் கூறப்படும் இராவணன் ஆண்ட இலங்கை அன்று என்பதும், இரண்டும் வேறிடங்கள் என்பதும் விளங்குகின்றன. ஆனால், எக்காரணத்தினாலோ, சிங்களத் தீவை இராவணன் ஆண்ட இலங்கை என்று மக்கள் தவறாகக் கருதிவருகிறார்கள். இந்தத் தவறான எண்ணம் பல

---

1. 'Ravana's Lanka' by G.Ramadas. *The Indian Historical Quarterly*, Vol. IV, pages 339-346. 'Ravana and his Tribe' do do. Vol. V, Page 281; Vol. V, pages 284, 555.
2. 'Ceylon and Lanka are Different', *Quarterly Journal of Mythic Society*, Vol. XVIII.
3. 'The Search for Lanka' by Mishra. *Maha Kosala Historical Society's Paper*, Vol. I.
4. 'Situation of Ravana's Lanka on the Equator' by V. H. Vadar. *Quart. Jour., Mythic Society*. Vol. XVII.

நூற்றாண்டுகளாக இருந்து வருகிறது. இதற்குக் காரணம் இலங்கை என்னும் பெயர் ஒற்றுமையேயாகும். 'இலங்கை' என்னும் பெயருடைய ஊர்கள் பல உள்ளன என்பதைப் பலர் அறியார். இலங்கை என்னும் பெயருள்ள ஊர்களைக் கீழே தருகிறோம்.

கீழ்க்கோதாவரி மாவட்டம் சோடவரம் பிரிவில் பூசுலலங்கா, தேமுடு லங்கா என்னும் ஊர்களும், கிருஷ்ணா மாவட்டம் கைகலூரு தாலுகாவில் சொவ்வாட லங்கா என்னும் ஊரும் உள்ளன. தமிழ் நாட்டில், தென் ஆர்க்காடு, மாவட்டம், திண்டிவனம் தாலுகாவில் மாவிலங்கை (கீழ்மாவிலங்கை, மேல்மாவிலங்கை) என்னும் ஊர் இருக்கிறது. இவ்வூரைச் சங்க காலத்தில், ஓவியப் பெருமகன் நல்லியக் கோடன் என்னும் அரசன் ஆண்டான் என்பதைப் *பத்துப் பாட்டுச் சிறுபாணாற்றுப்படையினால்* அறிகிறோம்:

தொன்மா விலங்கைக் கருவொடு பெயரிய
நன்மா விலங்கை மன்ன ருள்ளும்
மறுவின்றி விளங்கிய வடுவில் வாய்வாள்
உறுபுலித் துப்பின் ஓவியர் பெருமகன்
(*சிறுபாண்.* அடி 119-122)

என்று வருதல் காண்க.

பெருமா விலங்கைத் தலைவன் சீறியாழ்
இல்லோர் சொன்மலை நல்லியக் கோடன் (*புறம்* 176)

என்றும்

நெல்லமல் புரவின் இலங்கை கிழவோன்
வில்லி யாதன்

என்றும் (*புறம்* 379) நன்னாகனார் என்னும் புலவர் தொண்டை நாட்டிலிருந்த இலங்கையைக் கூறுகிறார்.

இராமநாதபுரம் மாவட்டம் திருப்புத்தூர் தாலுகாவில் கீழ்திருவிலங்கை என்னும் ஊரும், முதுகுளத்தூர் தாலுகாவில் மாவிலங்கை என்னும் ஊரும், பரமகுடி தாலுகாவில் மற்றொரு மாவிலங்கை என்னும் ஊரும் உள்ளன. செங்கற்பட்டு மாவட்டம் திருவள்ளூர் தாலுகாவில் புதுமாவிலங்கை என்னும் ஊரும், திருச்சிராப்பள்ளி மாவட்டம் பெரம்பலூர் தாலுகாவில் மாவிலங்கை என்னும் இனாம் கிராமமும் உள்ளன. மேற்கூறிய இராமநாதபுரம் மாவட்டத்திலேயே, பரமகுடி தாலுகாவில் மாவிலங்கை என்னும் இனாம் கிராமமும், சிவகங்கை தாலுகாவில் மாவிலங்கை என்னும் ஜமீன்கிராமமும் திருவாடானை தாலுகாவில் மாவிலங்கை என்னும் பெயருள்ள ஜமீன், இனாம் ஆகிய இரண்டு கிராமங்களும் உள்ளன.

கேரள நாட்டில் பாதாள லங்கா என்னும் இடமும், தென் கன்னட மாவட்டமாகிய துளு நாட்டில் மூல்கி என்னும் ஊருக்கு அருகில் வள லங்கா என்னும் இடமும் இருந்தன என்று தெரிகின்றன. இவை யாவும் இலங்கை என்னும் பெயரால் முடிவது காண்க. அன்றியும், ஆறுகள் கடலுடன் கலக்கிற இடத்தில் பல கிளைகளாகப் பிரிந்து ஏற்படுகிற டெல்ட்டா (Delta) என்று சொல்லப்படுகிற தீவுகளுக்கு ஆந்திர நாட்டில் லங்கா என்று பெயர் கூறப்படுகிறதென்று தெரிகிறது.

ஆகவே, இராவணன் ஆண்ட ஊர் ஒன்றுக்கு மட்டுந்தான் இலங்கை என்று பெயர் உண்டு என்று கருதுவது தவறு. பண்டைக் காலத்தில், இலங்கை என்னும் பெயருள்ள பல ஊர்கள் இருந்தன என்பதற்கு மேலே சான்றுகள் காட்டப் பட்டன.

**முடிவுரை**

எனவே, தமிழ் நாட்டுக்கு அடுத்துள்ள சிங்களத் தீவாகிய இலங்கைக்கும் இராவணன் ஆண்ட இலங்கைக்கும் தொடர்பு இல்லை என்பதும், இத்தொடர்புடைய கதைகள் பிற் காலத்தில் கற்பிக்கப்பட்டவை என்பதும் தெளிவாகின்றன. இலங்கையின் புராதன நூலாகிய *மகாவம்சம்* என்னும் நூலில் இராவணன், இலங்கை என்னும் பெயர்களே கூறப்படவில்லை. இராவணன் ஆண்ட இலங்கை, இப்போது மராட்ட நாடு உள்ள பகுதியில், விந்தியமலையைச் சார்ந்த இடத்தில் இருந்தது என்பது ஆராய்ச்சியாளரின் முடிபு. அங்ஙனமாயின், மலையமலை, பாண்டியனுடைய கபாடபுரம் முதலியவை வால்மீகி இராமாயணத்தில் கூறப்படுகின்றனவே என்றால், இந்தச் சுலோகங்கள் இடைச்செருகல்களாகும். வடமொழி யிலே இராமாயணத்திலும், பாரதத்திலும், வேறு நூல்களிலும் பல இடைச்செருகல் சுலோகங்கள் காலந்தோறும் பிற்காலத்தவரால் சேர்க்கப்பட்டுள்ளன என்பதை மறக்கக் கூடாது.

*செந்தமிழ்ச் செல்வி*, சிலம்பு 23, 1948–49

## மணிபல்லவம் - ஜம்புகொல பட்டினம்

*சங்ககாலத்து* நூலாகிய *மணிமேகலையிலே*, இலங்கைத் தீவின் வடகோடியில் இருந்த மணிபல்லவம் என்னும் துறைமுகப்பட்டினம் கூறப்படுகிறது. பாலி மொழியில் எழுதப் பட்டுள்ள பழைய பௌத்த நூல்களிலேயும் இலங்கைத்தீவின் வடகோடியில் இருந்த ஜம்புகொல என்னும் துறைமுகப் பட்டினம் கூறப்படுகிறது. தமிழ் நூலில் கூறப்படும் குறிப்பு களைக் கொண்டும் பாலி மொழி நூல்களில் கூறப்படும் குறிப்புகளைக் கொண்டும் மணிபல்லவமும் ஜம்புகொல பட்டினமும் ஒரே இடம் என்று துணியலாம். பெயர் வேறுபடு வதிலிருந்து இரண்டும் வெவ்வேறிடங்கள் எனக் கருதும்படி இருந்தாலும், இவைகளைப்பற்றிக் கூறப்படும் செய்திகளை உற்றுநோக்கினால், இரண்டும் ஒன்றே என்பது ஐயமற விளங்குகிறது. இதனை ஈண்டு ஆராய்வோம்.

இலங்கைத் தீவின் வடபகுதி பல சிறு தீவுகளைக் கொண்டது. இத்தீவுகள் ஒன்றிலேதான் மணிபல்லவம் அல்லது ஜம்புகொல பட்டினம் இருந்தது. "தென்றிசை மருங்கிலோர் தீவு" (*மணி.* 9-வது காதை), "மணிபல்லவம் என்னும் தீவகம்" (*மணி.* 21-ஆம் காதை) என்று *மணிமேகலை* கூறுவது காண்க. சோழ நாட்டின் துறைமுகப்பட்டினமாகிய புகார்ப்பட்டினத்தில் இருந்து தெற்கே 30யோசனை தொலைவில் மணிபல்லவம் இருந்தது (*மணி.* 6-ஆம் காதை). மணிபல்லவம் கடற்கரைப் பட்டினம் என்பது, *மணிமேகலை* 8ஆம் காதையினால் அறியப்படுகிறது.

இது நாக நாட்டைச் சேர்ந்தது என்று *மணிமேகலை* 8ஆம் காதை கூறுகிறது. நாக நாடு என்பது இலங்கைத் தீவின் வட பகுதிக்குப் பண்டைக் காலத்தில் வழங்கப்பட்ட பெயர். *மகாவம்சம்* என்னும் நூலிலே, இந்தப் பகுதி நாக தீபம் என்று கூறப்படுகிறது. நாக தீபம் என்பது தீவு அன்று. *மணிமேகலை* நாக நாடு என்று கூறுகிற, இலங்கையின் வட பகுதியைத்தான் *மகாவம்சம்* என்னும் நூலும் நாக தீபம் என்று கூறுகிறது (*மகாவம்சம்* முதல் அத்தியாயம் 47). நாக நாடு என்றும் நாகத் தீவு என்றும் ஏன் பெயர் பெற்றது என்றால், இங்கு நாகர் என்னும் இனத்தவர் அக்காலத்தில் வாழ்ந்துவந்தனர். தமிழ்

நாட்டிலும் நாகர் என்னும் இனத்தர் இருந்தனர் என்பதைச் சங்க நூல்களினால் அறிகிறோம். 'நாகநாட்டு நாக அரசன் வலைவாணன் என்பவன் மகள் பீலிவளை என்பவளைச் சோழ நாட்டு மன்னன் வடிவேற்கிள்ளி காதல் மணம் புரிந்தான்' என்று *மணிமேகலை* நூல் கூறுகிறது.

சாவக நாடு (ஜாவா தீவு), காழக நாடு (பர்மா நாடு) முதலிய கீழ் நாடுகளுக்குத் தமிழ் நாட்டிலிருந்து வாணிகத்தின் பொருட்டு மரக்கலம் ஓட்டிச்சென்ற தமிழ் வணிகர், இடைவழியிலே மணிபல்லவத் துறைமுகத்தில் தங்கிச் செல்வது வழக்கம். இதனை, *மணிமேகலை* 14ஆம் காதையினால் அறியலாம். கம்பலச் செட்டி என்பவன் கடலில் சென்று வாணிகம் செய்து திரும்பி வருகிற வழியில் மணிபல்லவத்தில் தங்கினான் என்றும் சாவக நாட்டரசன், புத்தரது பாத பீடிகையை வணங்க மரக்கலம் ஏறி மணிபல்லவம் வந்தான் என்றும் *மணிமேகலை* கூறுகிறது. ஆபுத்திரனும் மணிமேகலையும் அங்குச் சென்றனர்.

இலங்கை அரசன் தேவனாம்பிய திஸ்ஸன், அரிட்டன் என்னும் பௌத்த தேரரை அசோகச் சக்கரவர்த்தியிடம் அனுப்பி, போதிமரத்தை இலங்கைக்குக் கொண்டுவரச் செய்த போது, அவர் மரக்கலம் ஏறிச் சென்றது இந்த ஜம்புகொல பட்டினத்திலேதான். மீண்டும் போதிமரத்துடன் திரும்பிவந்து இறங்கியதும் இந்த ஜம்புகொல பட்டினத்திலேதான் (*மகாவம்சம்* 19ஆம் அதிகாரம்). *சமந்தபாசாதிக* என்னும் பாலி நூலும் இதனைக் கூறுகிறது. அநுராதபுரத்தில் நடப்பட்ட போதி மரத்தினின்றும் உண்டான ஒரு போதி மரக்கன்றை பிற்காலத்தில் ஜம்புகொல துறைமுகத்தில் நட்டு வளர்த்ததாகவும், தேவனாம்பிய திஸ்ஸன் அங்குப் பௌத்த பிக்ஷுகளுக்காக ஒரு விகாரையைக் கட்டினான் என்றும், அவ்விகாரை ஜம்புகொல விகாரை என்று வழங்கப்பட்ட தென்றும் *மகாவம்சம்* என்னும் நூலினால் அறிகிறோம் (19ஆம் அதிகாரம்). அன்றியும் இங்கு ஒரு சேதியம் (புத்தபாத பீடிகை) அமைக்கப்பட்டிருந்ததாகவும் *சமந்தபாசாதிக* என்னும் பாலி நூலினால் தெரிகிறது. ஜம்புகொல பட்டினத்தில் விகாரை ஏற்பட்டிருந்ததும், புனிதமான போதிமரம் நட்டு வளர்க்கப் பட்டிருந்ததும், அதன் அருகில் பௌத்த சேதியம் இருந்ததும் ஆகிய இவை எல்லாம், அவ்விடம் பௌத்தர்களுக்குப் புண்ணிய இடமாக இருந்ததென்பதைத் தெரிவிக்கின்றன. இங்கிருந்த பாத பீடிகையை (சேதியம்) வணங்குவதற்காக வெளிநாடுகளில் இருந்தும் யாத்திரிகர் வந்தனர் என்றும், வெகுதூரத்திலிருந்த யோனரட்டலிலிருந்தும். (யவன தேசம்) யாத்திரிகர் வந்தனர் என்றும் *சமந்த பாசாதிக* என்னும் நூல்

கூறுகிறது. *மணிமேகலையும்*, இங்கிருந்த பாத பீடிகையை (சேதியத்தை)க் கூறுகிறது. ஆனால், இங்கிருந்த பௌத்த விகாரையைக் கூறவில்லை. 'மாதவி மகள் மணிமேகலையும், சாவக நாட்டரசனும் நாகநாட்டரசன் மகள் பீலிவளை என்பவளும் இந்தச் சேதியத்தை வணங்கினார்கள்' என்று *மணிமேகலை* கூறுகிறது (ஜம்புகொல பட்டினத்தை, யாழ்ப்பாணத்தில் உள்ள சம்பிளித்துறை என்று கூறுகிறார் *இலங்கை சரித்திரச் சுருக்கம்* என்னும் நூலை இயற்றிய காட்ரிங்டன் என்பவர்). 'பிராமண திஸ்ஸன் காலத்தில் இலங்கையில் உண்டான கொடிய பஞ்சகாலத்தில், இலங்கையில் இருந்த பௌத்த பிக்குகள் அந்நாட்டைவிட்டு இந்தியாவுக்கு வந்தபோது, இந்த ஜம்புகொலபட்டினத்திற்கு வந்து கப்பல் ஏறிச் சென்றார்கள்' என்று *சம்மோஹவினோதனீ* என்னும் பாலி நூல் கூறுகிறது. கி.மு. மூன்றாம் நூற்றாண்டில், தேவனாம்பிய திஸ்ஸன் என்னும் அரசனால் கட்டப்பட்ட பௌத்த விகாரையில் வசித்திருந்த பிக்குகளைத் தவிர, வேறு மக்கள் இங்கு வசித்திருந்ததாகப் பௌத்த நூல்கள் கூறவில்லை. மணிபல்லவம் மக்கள் வசிக்காத ஓர் ஒதுக்கிடம் என்று கூறுகிறது (14ஆம் காதை).

இலங்கையின் வடபகுதியாகிய நாகநாட்டிலே (நாகதீபம்) பேர்பெற்ற பௌத்த சேதியம் ஒன்று இருந்ததென்றும், அதனை இலங்கையிலிருந்த பௌத்தர்கள் பெரிதும் போற்றி வணங்கினார்கள் என்றும் பௌத்த நூல்கள் கூறுகின்றன. அந்தச் சேதியம் ஜம்புகொல பட்டினத்தில் (மணிபல்லவத்தில்) இருந்த சேதியந்தானா என்பது விளங்கவில்லை.

இந்தப் புத்தபீடிகையைப் பற்றி (சேதியத்தைப் பற்றி) ஒரு கதை வழங்குகிறது. மாமனும் மருகனும் ஆகிய இரண்டு நாக அரசர்கள் ஒரு மணி ஆசனத்தைப் பற்றித் தம்முள் போர் செய்ய, அதனை அறிந்த புத்தர் அவர்கள் முன்னிலையில் தோன்றி, "இஃது என்னுடைய ஆசனம், நீங்கள் இதன் பொருட்டுப் போர்செய்யவேண்டா" என்று கூறி அவர்களது போரை நிறுத்திப் பின்னர் அவ்வாசனத்தில் அமர்ந்து அவர்களுக்கு அறவுரை நிகழ்த்தினார் என்பது அக்கதை. இதனை *மணிமேகலை* இவ்வாறு கூறுகிறது:

கீழ்நிலை மருங்கில் நாகநா டாளும்
இருவர் மன்னவர் ஒருவழித் தோன்றி
எமதீ தென்றே எடுக்க லாற்றார்
தமபெரும் பற்று நீங்கலும் நீங்கார்
செங்கண் சிவந்து நெஞ்சுபுகை யுயிர்த்துத்
தம்பெருஞ் சேனையொடு வெஞ்சமம் புரிநாள்

இருஞ்செரு வொழிமின் எமதீ தென்றே
பெருந்தவ முனிவன் இருந்தறம் உரைக்கும்
பொருவறு சிறப்பில் புரையோ ரேத்தும்
தரும பீடிகை தோன்றிய தாங்கென் *(மணி. 8: 54 - 63)*

மேலும்,

வேக வெந்திறல் நாகநாட் டரசர்
சினமா சொழித்து மனமாசு தீர்த்தாங்(கு)
அறச்செவி திறந்து மறச்செவி யடைத்துப்
பிறவிப்பிணி மருத்துவன் இருந்தறம் உரைக்கும்
திருந்தொளி ஆசனம் சென்றுகை தொழுதி
*(மணி. 9: 58 - 62)*

என்றும் கூறுகிறது. இதே வரலாற்றினை *மகாவம்சம்* என்னும் பௌத்த நூலும் கூறுகிறது. அது வருமாறு:

மகோதரன் என்னும் நாகராசனுக்கு ஒரு தங்கை இருந்தாள். அவள், கண்ணாவத்தனமலைக்கு அரசனான ஒரு நாகராசனுக்கு மணம்செய்து கொடுக்கப்பட்டாள். அவளுக்கு ஒரு மகன் பிறந்தான். அவன் பெயர் சூலோதரன். சூலோதரனுடைய தாய்வழிப் பாட்டன் இறந்த பிறகு, அவனிடம் இருந்த ஒரு மணி ஆசனத்தின் பொருட்டு மருகனும் மாமனும் ஆகிய இவ்விருவரும் கடும்போர் செய்தார்கள். இதனை அறிந்த புத்தபகவான் ஆகாய வழியே வந்து அவர்களுடைய போரை நிறுத்தி ஆசனத்தில் அமர்ந்து உபதேசம் செய்தார். பிறகு, அந்த ஆசனத்தை நாக அரசர்களுக்குக் கொடுத்து, 'நான் இதில் அமர்ந்திருந்தபடியால் இந்த ஆசனம் உங்களுக்கு நன்மையையும் சந்தோஷத்தையும் உண்டாக்கும். இதை எனது ஞாபகார்த்தமாக வைத்துக் கொள்ளுங்கள்' என்று கூறிச் சென்றார். இக்கதை *மகாவம்சம்* முதல் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது.

இந்தக் கதையில் கூறப்பட்ட மணி ஆசனந்தான், மணி பல்லவத்தில் இருந்த புத்தபீடிகை (சேதியம்) என்று *மணிமேகலை* நூலினால் அறிகிறோம். இனி, மணிபல்லவம் என்னும் பெயர் வந்ததன் காரணத்தை ஆராய்வோம்.

மணிபல்லவம் என்பது மணிபல்லங்கம் என்பதன் திரிபு எனத் தோன்றுகிறது. *பல்லங்க* என்னும் பாலி மொழியின் பொருள், பலகை அல்லது ஆசனம் என்பது. *மணிபல்லங்க* என்றால் மணியாசனம் எனப் பொருள்படும். *மணிபல்லங்க* என்னும் சொல் தமிழில் மணிபல்லவம் என்று திரிந்து வழங்கியதுபோலும். இலங்கையிலேயுள்ள பௌத்தர்கள் பாராயணம் செய்யும் செய்யுள்களில் *ரத்னத்திரய வந்தனா காதா* என்பதும் ஒன்று. இத்தோத்திரச் செய்யுள்களில் ஒன்று இது:

*பஹினி ஸுத மாதுலேஹி தின்ன*
*மணிபல்லங்க வரே யஹிங் நிஸின்னோ*
*முனி தம்ம மதேஸயீ முனீனங்*
*ஸிரஸா தங் பணமாமி நாகதீபங்*

இந்தப் பாலிமொழிச் செய்யுளின் பொருள் வருமாறு:

*பாஹினி ஸுத* - தங்கையின் மகனும், *மாதுலேஹி* - மாமனும், *தின்ன* - கொடுத்த, *வரே* - உத்தமமான, *மணிபல்லங்க* - மணி ஆசனமானது, *யஹிங்* - எந்த இடத்தில் உள்ளதோ அங்கு, *நிஹின்னோ* - அமர்ந்து, *முனி* - புத்தபகவான், *முனீனம்* - பிக்ஷுக்களுக்கு, *தம்மம்* - தர்மத்தை, *அதேஸயீ* - போதித்த, *தம்நாகதீபம்* - அந்த நாகத் தீவை, *ஸிரஹா* - தலை வணங்கி, *பணமாமி* - வணங்குகிறேன்.

இச்செய்யுள், நாகத் தீவிலே (நாக நாட்டிலே) நாக அரசர்களால் புத்த பகவானுக்கு அளிக்கப்பட்ட மணி பல்லங்கத்திற்கு (மணி ஆசனத்திற்கு) வணக்கம் கூறுகிறது. இந்த மணியாசனம் மணிபல்லவத் துறைமுகப்பட்டினத்தில் இருந்ததாக *மணிமேகலை* நூல் கூறுவதை மேலே காட்டினோம். மணிபல்லங்கம் அல்லது தமிழ் வழக்குப்படி மணிபல்லவம் அமைந்திருந்த இடத்திற்கு அந்த ஆசனத்தின் பெயரையே அமைத்துத் தமிழர் வழங்கினார்கள் போலும். சென்னைக்குத் தெற்கேயுள்ள சிங்கப்பெருமாள்கோயில் என்னும் ஊர், அங்குள்ள சிங்கப்பெருமாள் கோயிலின் பெயரையே கொண்டிருப்பதுபோல, மணிபல்லங்க சேதியம் உள்ள இடமும் மணிபல்லங்கம் எனப் பெயர் வழங்கப்பட்டு பிற்காலத்தில் மணிபல்லவம் எனத் திரிந்து வழங்கியது போலும். பண்டைக் காலத்திலே தமிழ்நாட்டிலும் பௌத்தர்கள் இருந்தார்கள் என்பதும், அவர்கள் பாலி மொழியைத் தமது சமய மொழியாகக் கொண்டிருந்தார்கள் என்பதும், பௌத்த வேதமாகிய திரிபிடக நூல்களில் சிலவற்றிற்குத் தமிழ் நாட்டிலேயிருந்த தமிழ்ப் பௌத்தர்கள் உரை எழுதி யிருக்கிறார்கள் என்பதும் ஈண்டு நினைவு கூரற்பாலன.

இக்கட்டுரையினால், மணிபல்லவம் என்பதும் ஜம்புகொல பட்டினம் என்பதும் ஒரே இடத்தைக் குறிப்பன என்பதும், மணிபல்லங்கம் என்னும் பெயர் தமிழில் மணிபல்லவம் எனத் திரிந்து வழங்கப்பட்டதென்பதும் விளக்கப்பட்டன. வாசகர், இக்கருத்து பொருத்தமுடைத்தென்று கருதினால் கொள்க; இன்றேல் தள்ளுக.

*செந்தமிழ்ச்செல்வி,* சிலம்பு 23, பரல் 10, 1949

# எழுத்து ஆக்கம்

பல்லாயிர ஆண்டுகளுக்கு முன்னே மனிதன் பேசக் கற்றுக்கொண்டான். அஃதாவது, தன் எண்ணங்களைப் பேச்சின் மூலமாகப் பிறருக்குத் தெரிவிக்கக் கற்றுக் கொண்டான். மனிதன் கற்றுக்கொண்ட பேச்சு அவனை மிருகத் தன்மையிலிருந்து மனிதத் தன்மைக்கு உயர்த்திவிட்டது. பின்னும், பல காலம் சென்ற பிறகு மனிதன், தன் எண்ணங் களையும் கருத்துக்களையும், எழுத்து மூலமாகப் பிறருக்குத் தெரிவிக்க முயற்சி செய்தான்; முயற்சி செய்து அதில் வெற்றி அடைந்தான். எழுத்துக்களைக் கண்டுபிடித்து அதன் மூலமாகத் தன் கருத்துக்களை மற்றவர்களுக்குத் தெரிவிக்கக் கற்றுக்கொண்ட வித்தையானது, மனிதனை மிக உயர்ந்த நாகரிகத்தை அடையச் செய்துவிட்டது. எழுதப்படிக்கக் கற்றுக்கொள்ளாமல், வெறும் பேச்சோடு மட்டும் நின்று விட்டிருந்தால், இப்போது மனிதன் அடைந்திருக்கிற உயர்ந்த நாகரிக நிலையை அடைந்திருக்க முடியாது.

எழுத்தைக் கண்டுபிடித்த ஆதிகாலத்து மனிதர், இப்போது உலகத்திலே வழங்குகிற ஒலி எழுத்துக்களைக் கண்டுபிடிக்கவில்லை. அஃதாவது, தனித்தனியாக ஒவ்வொரு ஒலிக்கும் ஒவ்வொரு எழுத்தைக் கண்டுபிடிக்கவில்லை. உருவங்களைச் சித்திரம் வரைவதுபோல வரைந்து அவற்றின் மூலமாக அக்காலத்து மனிதர் தமது எண்ணங்களை மற்றவர்களுக்குத் தெரிவித்து வந்தார்கள். ஆதிகாலத்திலே சித்திர எழுத்துக்களைப் பல நாட்டினரும் எழுதிக் கொண்டிருந்தார்கள் என்பதற்கு ஆர்க்கியாலஜி, எபிகிராபி சான்றுகள் கிடைத்திருக்கின்றன. எகிப்து தேசத்திலும் சீன தேசத்திலும் அமெரிக்காக் கண்டத்து மெக்ஸிகோ நாட்டிலும் நமது இந்தியா தேசத்திலும் ஆதிகாலத்தில் ஓவிய எழுத்துகள் வழங்கி வந்தன.

நமது இந்தியா தேசத்திலே சிந்து நதிக்கரையிலே மொஹஞ்சதாரோ, ஹாரப்பா என்னும் பெயருள்ள இரண்டு நகரங்கள் சுமார் 6 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே சிறந்த நாகரிகம் உள்ள நகரங்களாக இருந்தன. இந்த நகரங்கள் சுமார் 4 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு மண்ணில் புதைந்து மறைந்து

விட்டன. அண்மைக் காலத்திலே இந்திய அரசாங்கத்து ஆர்க்கியாலஜி இலாகா அதிகாரிகள் இந்த இடங்களைத் தோண்டிக் கிளறிப் பார்த்தபோது அங்கே பலப்பல பொருள் களைக் கண்டெடுத்தார்கள். அப்படிக் கிடைத்த பொருள் களில், ஒருவகையான சித்திர எழுத்துக்கள் எழுதப்பட்ட முத்திரைகளும் ஏராளமாகக் கிடைத்தன. இதனால் 4 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே இந்தியாவில் சித்திர எழுத்துக்கள் வழங்கி வந்தன என்பது உறுதியாகத் தெரிகிறது.

மொஹெஞ்சதாரோவில் காணப்பட்ட சித்திர எழுத்துக் களைப் படித்து அதன் பொருளைக் கண்டுபிடிக்க முயற்சி செய்த, பூனா பல்கலைக்கழகத்துப் பேராசிரியர் ஹீராஸ் பாதிரியார் அவர்கள், இந்தச் சித்திர எழுத்துக்கள் திராவிட (தமிழ்) மொழியுடன் தொடர்புமுடையன என்று கூறுகிறார். சில சித்திர எழுத்துக்கள், குறள்வெண்பாவாக அமைந்திருக்கின்றன என்றும் கூறுகிறார். ஆனால், இவர் கருத்தைப் புராதன புதைபொருள் ஆராய்ச்சிக்காரர்கள் இன்னும் ஏற்றுக்கொள்ள வில்லை. மிகப் பழைய காலத்தில் தமிழ்நாட்டிலும் சித்திர எழுத்துக்கள் வழங்கிவந்தன என்றும், அந்த எழுத்துக்களுக்குக் கண் எழுத்து என்றும், ஓவிய எழுத்து என்றும், உரு எழுத்து என்றும் வேறு பெயர்கள் உண்டு என்றும் தமிழ் நூல்களிலிருந்து தெரிகிறது.

காணப் பட்ட உருவம் எல்லாம்
மாணக் காட்டும் வகைமை நாடி
வழுவில் ஓவியன் கைவினை போல
எழுதப் படுவது உருவெழுத் தாகும்.

என்று ஒரு பழைய இலக்கணச் சூத்திரம் கூறுகிறது.

சித்திர எழுத்துக்கள், எழுதுவதற்குச் சிரமமாக இருந்தது. ஓவிய எழுத்து என்றும், கோடு கருத்துக்களைத் தெளிவாகவும் முழுமையாகவும் தெரிவிக்க முடியாதனவாக இருந்தன. ஆகவே காலக்கிரமத்தில் புதுப்புது எழுத்துக்கள் கண்டுபிடிக்கப் பட்டுக் கடைசியாக இப்போது வழங்குகிற ஒலி எழுத்துக்கள் கண்டுபிடிக்கப்பட்டன. ஒலி எழுத்துக்கள் எழுதுவதற்குச் சிரமம் இல்லாமலும் கருத்துக்களை முழுவதும் தெரிவிக்கக் கூடியவைகளாகவும் இருக்கின்றன.

இந்தியா தேசத்தில் பழைய காலத்திலே சிறப்பாக வழங்கி வந்த ஒலி எழுத்துக்கள் இரண்டு. அவை, கரோஷ்டி, பிராமி என்பவை. கரோஷ்டி, இந்தியாவில் வடமேற்குப் பக்கத்தில் மட்டும் வழங்கி வந்தது. பிராமி எழுத்து வட இந்தியா முழுவதும் வழங்கி வந்தது. பிராமி எழுத்தின் உற்பத்தியைப் பற்றிச் சில கதைகள் கூறப்படுகின்றன. பிரமா கண்டுபிடித்தது

பிராமி எழுத்து என்பர் சிலர். ரிஷப தீர்த்தங்கரரின் மகளான பிராமி என்பவள் கண்டுபிடித்தது பிராமி எழுத்து என்பர் ஜைனர்கள். கௌதம புத்தர், சித்தார்த்த குமாரன் என்னும் பெயரையுடைய சிறுவராக இருந்தபோது பிராமி எழுத்தைக் கண்டுபிடித்தார் என்று க்ஷேமேந்திரர் என்பவர் தாம் இயற்றிய *புத்தஜனனம்* என்னும் நூலிலே கூறுகிறார். இந்தக் கதைகளை உண்மையான சான்றுகளாகக் கொள்ளாவிட்டாலும், இவற்றி லிருந்து ஒரு உண்மை தெரிகிறது. அஃது என்னவென்றால், வட இந்தியாவில் பண்டைக் காலத்தில் பெரிதும் வழக்காற்றில் இருந்து வந்த எழுத்து பிராமி எழுத்து என்பதே. பிராமி எழுத்து கி.மு. 5ஆம் நூற்றாண்டிற்கு முன்பிருந்து வழங்கப்பட்டது.

தமிழ்நாட்டிலே கி.மு. 3ஆம் நூற்றாண்டுக்கு முந்திய காலத்திலே வழங்கி வந்த தமிழ் எழுத்து இன்னது என்று இப்போது அறிய முடியவில்லை. ஆனால், ஏதோ ஒருவகை யான எழுத்து வழங்கி வந்தது என்பதை உறுதியாகக் கூறலாம். பாண்டிய நாட்டிலே தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என்று மூன்று சங்கங்கள் ஒன்றன்பின் ஒன்றாக ஏற்படுத்தப்பட்டு முத்தமிழ் நூல்கள் ஆராயப்பட்டன என்று வரலாறு கூறுகிறது. அந்தச் சங்கங்களிலே சிவபெருமான், முருகக் கடவுள், கிருஷ்ணன், குபேரன் முதலான கடவுள்கள் அங்கத்தினராக இருந்தார்கள் என்பதையும், அந்தச் சங்கங்கள் பல ஆயிரக்கணக்கான ஆண்டுகள் நடைபெற்று வந்தன என்பதையும் மிகைபடக்கூறல் என்று ஒதுக்கிவிடலாம். ஆனால், சங்கங்கள் இருந்தன என்பதையும் அவற்றில் முத்தமிழ் நூல்கள் ஆராயப்பட்டன என்பதையும் ஒதுக்கித் தள்ளிவிட முடியாது. அந்தச் சங்கங்களிலே தமிழ் நூல்கள் ஆராயப் பட்டன என்றால், அதற்கு ஏதோ ஒருவகையான எழுத்துக்கள் இருந்திருக்க வேண்டும் அல்லவா? அந்த எழுத்து இன்னது என்பது இதுவரையில் கண்டுபிடிக்கப்படவில்லை. ஆனால் கி.மு. 3ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 3ஆம் நூற்றாண்டு வரையில் தமிழ்நாட்டிலே வழங்கிவந்த எழுத்து பிராமி எழுத்துத்தான் என்பதற்குச் சிறிதும் ஐயம் இல்லை. ஏனென்றால், இதற்கு ஆர்க்கியாலஜி, எபிகிராபி சான்றுகள் கிடைத்திருக்கின்றன.

வட இந்தியாவில் வழங்கி வந்த பிராமி எழுத்து தமிழ்நாட்டிற்கு எப்படி வந்தது? பிராமி எழுத்தைத் தென் இந்தியாவிலே பரவச் செய்தவர்கள் பௌத்த பிக்ஷுக்கள் ஆவர். கி.மு. 3ஆம் நூற்றாண்டில் இந்தியாவை அரசாண்ட அசோக சக்கரவர்த்தி, பௌத்த மதத்தைப் பிரசாரம் செய்வதற்காகப் பல நாடுகளுக்கும் பௌத்த பிக்ஷுக்களை அனுப்பினார்.

அவ்வாறு அனுப்பப்பட்ட பிக்ஷுக்கள் இந்தியாவில் உள்ள பல நாடுகளுக்கும் சென்று பௌத்த மதப் பிரச்சாரம் செய்தார்கள். அவர்கள் தம் பௌத்த மதக் கொள்கைப்படி அந்தந்த நாட்டுத் தாய்மொழியிலே பௌத்த மதக் கொள்கைகளைப் பிரசாரம் செய்து வந்தார்கள் என்றாலும், அவர்கள் எல்லா நாடுகளிலும் ஒரேவிதமாகப் பிராமி எழுத்தே வழங்கி வந்தார்கள். இவ்விதமாகப் பௌத்த பிக்ஷுக்களால் முதன்முதல் இந்தியாவிலும் தமிழ்நாட்டிலும் பிராமி எழுத்து புகுத்தப்பட்டு வழக்காற்றில் வந்தது. அன்றியும் அசோகச் சக்கரவர்த்தி, தென் இந்தியா உட்பட இந்தியா முழுவதிலும் ஆங்காங்கே பல இடங்களில் அரச சாசனங்களைக் கல்வெட்டுகளில் எழுதி அமைத்திருக்கிறார். அந்தச் சாசனங்கள் இப்போதும் இருக்கின்றன. அந்தச் சாசனங்கள் பிராமி எழுத்தினால் எழுதப்பட்டிருக்கின்றன. இதனால், அசோக சக்கரவர்த்தி காலத்திலே, அதவர்து கி.மு. 3ஆம் நூற்றாண்டிலே பிராமி எழுத்து தென் இந்தியாவிலும் வழங்கப்பட்டது என்பது நன்கு விளங்குகின்றது.

கி.மு. 3ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 3ஆம் நூற்றாண்டு வரையில், சுமார் 600 ஆண்டுகளாகப் பிராமி எழுத்து தமிழ்நாட்டில் வழங்கி வந்தது. இதற்கு *எபிகிராபி* சான்றுகள் தமிழ்நாட்டிலே, முக்கியமாகப் பாண்டிய நாட்டிலே மலைக்குகைகளிலும் மலைப்பாறைகளிலும் காணப்படுகின்றன. அழகர்மலை, கழுகுமலை, நாகமலை, சித்தர்மலை, திருப்பரங்குன்றம், கொங்கர் புளியங்குளம், முத்துப்பட்டி, அரிட்டாபட்டி, குன்னக்குடி, மருகால்தலை, ஆறுநாட்டார் மலை முதலிய இடங்களில் காணப்படும் தமிழ்ச் சாசனங்கள் பிராமி எழுத்தினாலே எழுதப்பட்டவை. இவைகளைத் தவிர வேறு புதிய *எபிகிராபி* சான்று இப்போது கிடைத்திருக்கிறது. புதுச்சேரிக்குத் தெற்கே 2 மைல் தூரத்தில் கடற்கரையோரத்திலே அரிக்கமேடு என்னும் ஒரு மேடு இருந்தது. 5 ஆண்டுகளுக்கு முன்பு இந்திய ஆர்க்கியாலஜி இலாகா அதிகாரிகள் இந்த மேட்டைக் கிளறித் தோண்டிப் பார்த்தார்கள். இங்கிருந்து பல பொருள்கள் அகற்றப்பட்டன. அப்பொருள்களுடன், பிராமி எழுத்தில் எழுதப்பட்ட இவை தமிழ் மொழியாக இருக்கின்றன. அரிக்கமேடு, இற்றைக்கு 1800 ஆண்டுகளுக்கு முன்னே, அதாவது கி.பி. 2ஆம் நூற்றாண்டில் சிறந்த துறைமுகப்பட்டினமாக இருந்தது. என்று ஆர்க்கியாலஜி இலாகா ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். இந்தச் சான்றுகளினாலே, கி.மு. 3ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 3ஆம் நூற்றாண்டு வரையில் தமிழ்நாட்டிலே தமிழர் பிராமி எழுத்தை

வழங்கி வந்தார்கள் என்பது ஐயம் இல்லாமல் தெரிகிறது. தமிழர் பழைமையாக எழுதியிருந்த பழைய எழுத்தைக் கைவிட்டு புதிதாகப் பிராமி எழுத்தை எழுதத் தொடங்கியபோது, தமிழ் மொழிக்கே சிறப்பாக உள்ள ள,ழ,ற,ன என்னும் எழுத்துக்கள் பிராமி எழுத்தில் இல்லாத படியினால், இவ்வெழுத்துக்களைப் பழைமையாக வழங்கிவந்த எழுத்துக்களில் இருந்தபடியே வழங்கிவந்தார்கள் போலும்.

சுமார் கி.பி. 3ஆம் நூற்றாண்டிலே தமிழ்நாட்டிலே பிராமி எழுத்து மறைந்து வட்டெழுத்து என்னும் புதுவகையான எழுத்து வழங்கத் தொடங்கிற்று. வட்டெழுத்தும், பிராமி எழுத்திலிருந்து உண்டானதுதான். அந்தக் காலத்தில் பனை யோலையும் எழுத்தாணியும் எழுது கருவிகளாக இருந்தன. பிராமி எழுத்தைப் பனையோலையில் எழுத்தாணியால் எழுதும்போது, அவ்வெழுத்தின் உருவம் மாறுதல் அடைந்து கடைசியில் வட்டெழுத்தாக மாறிவிட்டது. பண்டைக் காலத்தில் சேர நாடு என்னும் பெயருடன் தமிழ்நாடாக இருந்து இப்போது மலையாள நாடாக மாறிப்போன கேரள நாட்டிலே முற்காலத்தில் வழங்கி வந்த கோலெழுத்து என்பதும் வட்டெழுத்தின் திரிபேயாகும். வட்டெழுத்து தமிழ் நாட்டில் கி.பி. 3ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 10ஆம் நூற்றாண்டு வரையில் வழங்கி வந்தது. பிறகு வட்டெழுத்து மறைந்து இப்போது வழக்காற்றில் இருந்து வருகிற கிரந்த எழுத்து வழங்கி வருகிறது.

கிரந்த எழுத்தை உண்டாக்கினவர்கள் தென்னாட்டில் இருந்த பௌத்தரும் ஜைனரும் ஆவர். பௌத்தரும் ஜைனரும் தங்கள் மத நூல்களை மாகதி, அர்த்தமாகதி என்னும் பிராகிருத மொழிகளில் எழுதியிருந்தார்கள். அவர்கள் தமிழிலே தனித் தமிழ் நூல்களை எழுதியதோடு, தமது மதச் சார்பான நூல்களைப் பிராகிருதம், சமஸ்கிருதம், தமிழ் என்னும் மொழியில் உள்ள சொற்களைக் கலந்து மணிப்பிரவாள நடையில் வசன நூல்களை எழுதினார்கள். மணிப்பிரவாள நூல்களை எழுதுவதற்கு, தமிழில் பி, ஜ, ஷ, ஹ, ஸ முதலான எழுத்துக்கள் இல்லாதபடியினாலே, இவ்வெழுத்துக்களை எல்லாம் அமைத்துக் கிரந்த எழுத்து என்னும் ஒருவகை எழுத்தைக் கண்டுபிடித்து, அந்த எழுத்தினாலே மணிப் பிரவாள நூல்களையும் பிராகிருத சமஸ்கிருத நூல்களையும் எழுதினார்கள். இந்தக் கிரந்த எழுத்தையும் அவர்கள் பிராமி எழுத்தில் இருந்துதான் உண்டாக்கினார்கள்.

இவ்வாறு பௌத்த ஜைனர்களாலே உண்டாக்கப்பட்ட கிரந்த எழுத்து முதலில் அந்த மதத்தினரால் பயிலப்பட்டு

வந்தது. பின்னர், பிற்காலத்துச் சோழ அரசர்கள் இந்தக் கிரந்த எழுத்தை ஆதரிக்கத் தொடங்கினார்கள். ஆகவே, கி.பி. 10ஆம் நூற்றாண்டில் சோழ நாட்டை அரசாண்ட ராஜராஜன் (முதலாவன்) பாண்டிய நாட்டை வென்று அந்த நாட்டிலும் கிரந்த எழுத்தை வழங்கத் தொடங்கினான் என்பதற்கு எபிகிராபி சான்று இருக்கிறது. ராஜராஜசோழன் காலத்திலே, பாண்டிய நாட்டில் வழங்கிவந்த வட்டெழுத்து மறைந்து கிரந்த எழுத்து வழங்கத் தொடங்கியது. இந்தக் கிரந்த எழுத்து கி. பி. 10ஆம் நூற்றாண்டு முதல் இப்போதும் தமிழ்நாட்டில் வழங்கி வருகின்றது.

கி. மு. 3ஆம் நூற்றாண்டில் இருந்து பிராமி எழுத்து தமிழ்நாட்டிலே வழங்கத் தொடங்கி, அதுவே காலக்கிரமத்தில் வட்டெழுத்தாகவும் கோலெழுத்தாகவும் கிரந்த எழுத்தாகவும் வெவ்வேறு உருவம் அடைந்து இன்றளவும் வழங்கி வருகிறது.

தமிழ் எழுத்து மட்டுந்தான் பிராமி எழுத்திலிருந்து உண்டாயிற்று என்று நினைக்கவேண்டாம். தெலுங்கு, மலையாளம், கன்னடம், இந்தி, மராட்டி, வங்காளி, தேவநாகிரி முதலிய எழுத்துக்கள் எல்லாம் பிராமி எழுத்திலிருந்தே உண்டானவை. ஐரோப்பாக் கண்டத்தில் உள்ள எல்லா மொழி எழுத்துக்களுக்கும் லத்தீன் எழுத்து எவ்வாறு தாய் எழுத்தாக இருந்ததோ அது போன்று, இந்திய மொழியில் உள்ள எழுத்துக்களுக்கெல்லாம் தாய் எழுத்தாக இருந்தது பிராமி எழுத்தேயாகும்.

*செந்தமிழ்ச் செல்வி,* சிலம்பு 25, பரல் 7, 1951

இது அகில இந்திய வானொலியின், சென்னை நிலையத்தில் ஒலிபரப்பப்பட்டது.

# அடிமை வாழ்வு

அடிமை வாழ்க்கை இரண்டு விதம். ஒன்று தனிப்பட்ட மனிதன், தனிப்பட்ட மற்றொருவனுக்கு அடிமைப்படுவது; மற்றொன்று, ஒரு அரசாட்சிக்கு மற்றொரு நாடு அடிமைப் படுவது. இந்தக் காலத்தில் மனிதனுக்கு மனிதன் அடிமைப் படுவது சட்டப்படி செல்லாது. ஆனால், ஒரு அன்னிய ஆட்சியின்கீழ் இன்னொரு நாடு அரசியல் அடிமையாக இருப்பதை இன்றும் காண்கிறோம். சமீப காலத்தில் பல நாடுகள், குறிப்பாகக் கிழக்கு தேசத்து நாடுகள் அயல் நாட்டு ஆட்சியினின்று விடுதலை பெற்றுள்ளன. அன்னிய ஆட்சியிலிருந்து விடுதலை பெற்ற பல நாடுகள், இப்போது அன்னிய நாடுகளுக்குப் பொருளாதார அடிமை நாடுகளாகிக் கொண்டு வருகின்றன. அதாவது, அரசியல் விடுதலை பெற்றுப் பொருளாதாரத்தில் அடிமைப்பட்டுக் கொண்டிருக்கின்றன. நாம் இங்கு எழுதப் புகுந்தது அரசியல் அடிமைத்தனத்தைப் பற்றியும் அல்ல; பொருளாதார அடிமைத்தனத்தைப் பற்றியும் அல்ல. தனிமனிதன் தனிமனிதனுக்கு ஆட்பட்டு அடிமை வாழ்வு வாழ்ந்த பழஞ்செய்தியைப் பற்றித்தான் இங்கு நாம் ஆராய்வது.

எகிப்து, கிரேக்கம், உரோமாபுரி முதலிய பழைய நாகரிக நாடுகளில் அடிமைகள் இருந்தார்கள் என்பதைச் சரித்திரத்தில் படிக்கிறோம். இடைக்காலத்திலும் உலகம் முழுவதிலும் அடிமைகள் இருந்ததையும், ஆடு மாடுகளைப் போல் மனிதர்கள் விற்கப்பட்டதையும் பற்றிப் படிக்கிறோம். ஆனால் பாரத தேசத்திலும் தமிழ்நாட்டிலும் மனித அடிமைகள் இருந்தார்கள் என்பதே நம்மவரில் பெரும்பாலருக்குத் தெரியாது. பாரத தேசத்தில் ஆதிகாலம் முதல் அடிமைகளே கிடையாது என்று எண்ணிக்கொண்டிருப்பவர் பலர் இருக்கிறார்கள். ஏன்? இந்திய சரித்திரம் எழுதியவர்கள்கூட, இந்தியாவில் பண்டைக் காலத்தில் மனித அடிமைகள் இருந்தார்கள் என்பது பற்றி எழுதவே இல்லை.

பண்டைக் காலத்தில் பாரத நாட்டிலும் தமிழ்நாட்டிலும் அடிமைகள் இருந்தனர். மனிதர் தங்களைத் தாங்களே அடிமைகளாக விற்றுக்கொண்டனர். அடிமைகளுக்குப் பிறந்த

சந்ததிகளும் அடிமைகளாகவே வாழ்ந்தனர்; அடிமைகளையுடையவர்கள், ஆடு மாடுகளை விற்பதுபோல, தங்களிடமிருந்த அடிமைகளை விலைக்கு விற்றனர்; ஆடு மாடுகளைப் போலவே அடிமைக் கூட்டமும் இருந்தது என்று கூறினால், பலருக்குப் புதுமையாக இருக்கும்; சிலர் நம்பவும் மாட்டார்கள். இந்தியாவிலும் தமிழ்நாட்டிலும் அடிமைகள் இருந்தார்களா? 'இது என்ன புதுமை!' என்று வாசகர்கள் வியப்படைவார்கள்.

பண்டைக் காலத்தில் தமிழ்நாட்டிலும் ஆயிரக்கணக்கான மனித அடிமைகள் வாழ்ந்து வந்தார்கள். செல்வம் உள்ளவர் அக்காலத்தில் காசு கொடுத்து ஆண்களையும் பெண்களையும் அடிமைகளாக வாங்கினார்கள். அடிமைகள் வேண்டாத போது அவர்களைக் காசுக்கு விற்றார்கள். சமீப காலத்தில், உலகம் முழுவதும் மனித அடிமை கூடாது என்று சட்டம் செய்யப்பட்ட பிறகு, ஏனைய நாடுகளில் அடிமைத்தன்மை விலக்கப்பட்டது போலவே, தமிழ்நாட்டிலும் அடிமை முறை விலக்கப்பட்டது.

இந்தியாவிலும் தமிழ்நாட்டிலும் பண்டைக் காலத்தில் அடிமைகள் இருந்தார்கள் என்பதற்குச் சாசனச் சான்றுகளும் ஆதாரங்களும் உள்ளன. ஆனால் இந்தியச் சரித்திரத்திலும் தமிழ்நாட்டுச் சரித்திரத்திலும் மனித அடிமைகளைப் பற்றிய செய்தி எழுதப்படவில்லை. இந்நாட்டில், மக்கள் சமூகத்தில் நடைமுறையில் இருந்த அடிமைத்தனத்தைப் பற்றிய செய்தி இந்தியச் சரித்திரத்திலும், தமிழ் நாட்டுச் சரித்திரத்திலும் ஏன் இடம்பெறவில்லை என்பது வியப்பாக இருக்கிறது.

திரிபுவன சக்கரவர்த்தி குலோத்துங்கசோழ தேவரின் ஆட்சியில் திருவாவடுதுறைக் கோவிலுக்கு ஒரு பெண் மகள் அடிமையாக விற்கப்பட்டாள் என்னும் செய்தியை அக்கோவிலில் உள்ள ஒரு சாசனம் கூறுகிறது.

ஜெயங்கொண்ட சோழவள நாட்டில், ஆக்கூர்நாட்டு கலைச்செங்காடு என்னும் ஊரில் உள்ள திருவளம்பூர் உடையார் கோவிலுக்கு எட்டு ஆட்கள் அடிமையாக விற்கப்பட்டனர். இவர்களை விற்றவன் பெயர் கவகாசி கலையன் குமரன் ஆன தம்பிரான் தோழன் என்பது. இச்செய்தி மேலப் பெரம்பலூர் தக்ஷிணபுரீஸ்வரர் கோவில் சாசனத்தில் காணப்படுகிறது.

திருச்செங்காட்டங்குடி கோவில் சாசனம் இராஜராஜன்-2 உடைய 13ஆம் ஆண்டில் எழுதப்பட்டது, நான்கு பெண்கள் அக்கோவிலுக்குத் தேவரடியாராக 700 காசுக்கு விற்கப்பட்டனர் என்று கூறுகிறது.

திருவாலங்காடு வீரட்டானேசுவரர் கோவில் சாசனம், அக்கோவிலில் அடிமை ஊழியர்கள் பற்றிக் கூறுகிறது. இவ்வடிமைகளில் சிலர் வயிராதராயராலும் அவர் மனைவி யாராலும் கோவிலுக்குக் கொடுக்கப்பட்டவர். வேறு சில அடிமைகள் காசு கொடுத்து வாங்கப்பட்டவர்.

திருச்சி மாவட்டம் திருச்சி தாலுகா திருப்பலத்துறை தாருகவனேசுவரர் கோவில் சாசனம் சக ஆண்டு 1326இல் எழுதப்பட்டது. கி.பி. 1374இல் எழுதப்பட்டது. மழவதரையர் என்பவர் தன்னிடமுள்ள அடிமைகளைப் பிரீதிதானமாகக் கொடுத்ததை இச்சாசனம் கூறுகிறது. இவருக்கு உள்ள நிலபுலங்களையும் வீடுமனைகளையும் பிரீதிதானமாகக் கொடுத்த இவர், தமது அடிமைகளையும் தானமாகக் கொடுத்தார். அந்த அடிமைகளின் பெயர்களும் கூறப்படு கின்றன. அப்பெயர்களாவன: தவஞ்செய்தாள் மகள் செங்கழுநீர்ப்பிள்ளை, நல்லாம் பிள்ளை மகன் தாயினும் நல்லான், வெள்ளாட்டி சிவந்தாள், பிறவி, அழகியாள், இவள் மகள் நம்பாள், இவன் தம்பி வளத்தான், இவன் தம்பி தாழி, இவன் தம்பி வளத்தான், இவன் தம்பி ஆண்டி. பிறவி முதல் ஆண்டி வரையில் உள்ள ஏழு பேரையும், மழவதரையர், கம்பண்ண உடையார் காரியப்பேர் சந்த்ரசன் என்பவரிட மிருந்து விலைக்கு வாங்கினார். மற்றவர்கள், இவரிடம் முன்னமே அடிமைகளாக இருந்தவர்.

புதுக்கோட்டை திருமய்யம் தாலுகா திருமய்யம் சத்திய மூர்த்தி கோவில் சாசனம் பராக்கிரம பாண்டிய தேவர் என்னும் அரசனுடைய 7ஆவது ஆண்டில் எழுதப்பட்டது. ஒரு பிரபு தன் மகனுக்குக் காணி மனை அடிமை கொடுத்ததை இச்சாசனம் கூறுகிறது. “சீராள தேவன் முனையதரையன் மக்கள் நாயனாரேன், என் மகன் சீராள தேவர்க்கு நான் குடுத்த காணியாட்சியும் மனையும் அடிமையும் பிரமாணம் பண்ணிக் குடுத்த பரிசாவது” என்று இந்தச் சாசனம் துவங்குகிறது. பிறகு காணி மனைகளைக் குறிப்பிடுகிறது; அடிமைகளின் பெயர் களையும் கூறுகிறது. அப்பெயர்களாவன: தேவி, அவள் மகள் சீராள், இவள் தம்பி மக்கனாயன், இவனுடைய சிறிய தாய் ஆவுடையாள், இவள் தம்பி சீராளதேவன், இவள் மருமகள் சீராள், பெரியநாச்சி மகன் திருமய்ய மலையாளன், சிவத்த மக்கள் நாயகன் ஆகப் பேர் எட்டு. “வளத்தி மகள் மன்றி, இவள் மகள் பொன்னி, கொள்ளி மகள் தொழுதி, உடப்பி மகன் பொன்னன், விளத்தி மகன் வில்லி இவ்வகைப்படி உள்ள அடிமையும் காணியாட்சியும் மனையும் மற்றும் எப்பேர்ப் பட்ட சமுத்த விருத்திகளும் தானாதான விக்கிரயங்களுக்கு உரித்தாவதாக” என்று முடிகிறது இந்தச் சாசனம்.

புத்த ஜாதகக் கதைகளில் அடிமைகள் விற்கப்பட்டதும் வாங்கப்பட்டதும் ஆன செய்திகள் கூறப்படுகின்றன.

நமது நாட்டு அடிமை வரலாற்றைப் பற்றி ஆராய்ந்து எழுதினால் அது ஒரு பெரிய புத்தகமாகும். *சிலப்பதி காரத்திலும் தொல்காப்பியத்திலும்*கூட அடிமைகளைப் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன. அடிமை முறை, தமிழர் சமுதாயத்தில் மிகப் பழைய வழக்கமாகக் காணப்படுகிறது. இது பற்றிப் பல்கலைக்கழக மாணவர் ஆராய்ச்சி செய்யலா மல்லவா?

*நண்பன்*, மலர் 8, செப்டம்பர் 1958

# தேனவரை நாயனார் சாசனம்

இலங்கையிலே கொளும்பு நகரத்துப் பொருட்காட்சி சாலையிலே ஒரு சாசனக்கல் இருக்கிறது. இந்தச் சாசனக்கல் இலங்கையின் தென்கோடியில் உள்ள காலி என்னும் ஊரிலிருந்து கொண்டு வரப்பட்டது. இந்தக் கல் 4 அடி 9 அங்குல நீளமும், 2 அடி 6 அங்குல அகலமும், 5 அங்குலக் கனமும் உள்ளது. இதிலே தமிழ், சீனம், பாரசீகம் என்னும் மூன்று மொழிகளில் சாசனம் எழுதப்பட்டுள்ளது.

(இந்தக் கல் கண்டெடுக்கப்பட்ட வரலாறு முதலியவற்றை *J.R.A.S.* (C.B), Vol. xxii, P.129ல் காண்க. இந்தச் சாசனத்தின் மொழிபெயர்ப்பு முதலிய செய்திகளைப் பற்றி The Galle Trilingual Stone, by Mr. E. W. Perera, *Spolia Zeylanica,* Vol. viii, pp. 122 ff. காண்க)

சீன தேசத்துச் சக்கரவர்த்தி யுவுங்லோவின் 7ஆம் ஆண்டில் இரண்டாம் மாதத்தில் இந்தச் சாசனங்கள் எழுதப்பட்டன. யுவுங்லோ அரசன் கி.பி. 1403 இல் ஆட்சிக்கு வந்தான்.

தேனவரை நாயனாரின் புகழைக் கேள்விப்பட்ட சீனத்து அரசன், தமது தூதர்களாகிய சிங்வோ, உவிங்சுவிங் என்பவர்களின் மூலமாகச் சில பொருள்களைக் காணிக்கை யாக அனுப்பியதையும் அப்பொருள்களின் விபரத்தையும் இந்தத் தமிழ்ச் சாசனம் கூறுகிறது. சீனமொழிச் சாசனத்தில் இந்தத் தூதர்களின் பெயர்கள் ச்சிங்ஹோ என்றும் வங்ச்சிங்லீன் என்றும் கூறப்படுகின்றன.

தமிழ்ச் சாசனம் தேனவரை நாயனாரைத் தேனவரை ஆழ்வார் என்றும் கூறுகிறது. தெய்வங்களை நாயனார் என்றும், ஆழ்வார் என்றும், பட்டாரகர் என்றும் கூறுவது தமிழ் மரபு. சீன மொழிச் சாசனம், மேற்படி சீனத்து அரசன் புத்தர் கோவிலுக்கு அளித்த காணிக்கைப் பொருள்களைக் கூறுகிறது. பாரசீக மொழிச் சாசனம் மிகவும் சிதைந்து, அழிந்து காணப்படுகிறபடியால் யாருக்குக் காணிக்கைப் பொருள் அளிக்கப்பட்டது என்பது தெரியவில்லை. முகம்மதியர் சம்பந்தமான நிலையத்துக்கு அளிக்கப்பட்ட காணிக்கைப் பொருள்களைக் கூறுகின்றது என்பதில் ஐயமில்லை. தமிழ்ச்

சாசனத்தில் கூறப்படுகிற காணிக்கைப் பொருள்களைப் போன்ற பொருள்களே மற்ற இரண்டு சாசனங்களிலும் குறிப்பிடப்படுகின்றன.

சிங்கள மொழியில் தேவுநுவர என்பது தேவநகரம் என்று பொருள்படும். இப்போதைய சிங்கள மொழியில் இந்நகரம் தேவுந்தர என்று வழங்கப்படுகிறது. தமிழில் தேனவரை என்று வழங்கப்படும். போர்ச்சுகீசியர் இப்பெயரை தனவரெ என்று வழங்கினார்கள். ஆங்கிலத்தில் இப்பெயரை தொண்ட்ரா என்று வழங்குவர். இந்த நகரம் இலங்கைத்தீவின் தென்கோடியில் இருக்கிறது. இது பண்டைக் காலத்தில் பேர்போன துறைமுகப் பட்டினமாக இருந்தது. 17ஆம் நூற்றாண்டில், போர்ச்சுகேசியர் கொளும்பு துறைமுகம் உண்டாக்கிய பிறகு, பழைய துறைமுகப்பட்டினமாகிய தேனவரை நாளடைவில் சிறப்புக் குன்றி, சாதாரண சிறு கிராமமாக மாறிப் போயிற்று.

தேனவரைத் துறைமுகப்பட்டினம் சிறப்புற்றிருந்த காலத்தில் அக்காலத்து வியாபாரக் கப்பல்கள் இங்கு வந்து தங்கின. மிகப் பழைய காலத்தில் யவனக் கப்பல்கள் (கிரேக்க கப்பல்கள்) இங்கு வந்தன. பிற்காலத்தில் அரபியர்களும் சீனர்களும் மற்றவர்களும் இந்தத் துறைமுகத்தில் தமது வியாபாரப் பொருள்களைக் கொண்டு வந்து இறக்கியும், இங்கிருந்து பொருள்களை ஏற்றிக்கொண்டும் வியாபாரம் செய்தார்கள். தொன்றுதொட்டு தமிழகக் கப்பல் வியாபாரி களும் இந்நகரத்தில் வியாபாரம் செய்தனர். அன்றியும், தமிழர் பலர் இந்நகரத்தில் தங்கிக் குடியிருந்தனர். அவர்கள் இந் நகரத்திலே வருணனுக்குக் கோயில் அமைத்து வழிபட்டனர்.

தேனவரை நகரத்தில் கோயில் கொண்டிருந்த வருணனைச் சிங்களவர் தமது மொழியில் உபுல்வன் (இது உதகபால வருணன் என்பதன் திரிபு) என்று வழங்கினார்கள். பிற்காலத்தில் உபுல்வன் என்னும் சொல் உப்பலவண்ணன், உத்பலவர்ணன் என்று பாலி மொழியிலும், வடமொழியிலும் கூறப்பட்டது. பின்னர், மாலிக்காபூர் முதலான முகம்மதியரின் படையெடுப்புக் காலத்தில், தமிழ்நாட்டுப் பார்ப்பனர் சிலர் சிங்கள அரசரிடம் அடைக்கலம் புகுந்தனர். அவர்களை ஆதரித்த சிங்கள அரசர் அவர்களைத் தேவாலயங்களில் (பௌத்த ஆலயங்கள் அல்ல - இந்து தேவாலயங்கள்) பூசை செய்ய நியமித்தார்கள். நாளடைவில், காலப் போக்கில், இவர்கள் உப்பலவண்ணனை விஷ்ணுவாக மாற்றிவிட்டனர். தேனவரை நகரத்திலும் பார்ப்பனர் குடியிருந்த செய்தி சாசனங் களினால் தெரிகிறது.

தேனவரையில் இருந்த (உபுல்வன்) உப்பலவண்ணனைப் பிற்காலத்தவர் தேனவரை ஆழ்வார் என்றும், தேனவரை நாயனார் என்றும் பெயரிட்டழைத்தனர். சிங்களவர் தேவுந்தர தேவியோ (தேவுந்தர நகரத்துத் தெய்வம்) என்று வழங்கினார்கள்.

கி.பி. 15ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலே தேனவரை நாயனார் கோயில் சீன நாடு வரையில் புகழ்பெற்றிருந்த தென்பதை இந்தச் சாசனத்தினால் அறிகிறோம். (இந்நகரத்தில் முற்காலத்தில் இருந்த வருணன் (உபுல்வன்) கோயிலைப் பற்றியும், வருணன் வழிபாட்டைப் பற்றியும் முன்னைய 'பொழில்' களில் கூறியுள்ளேன்*).

1. ஸ்வ(ஸ்தி)... ... ... ... ...
2. இரா சாதி ராச பரமேசுரன் பூர்ண சந்திரப் பிரகாசன் சீனத்தில்
3. மஹாஇராசா இலங்கா ராச்சியத்தில் நாயினார் தேநவரை
4. நாயினார்க்குத் திரு முன் காணிக்கையாக நாயினார் பிரகா
5. சங்கேட்டு தூதர் சிங்வோ உவிங்சுயிங்ங் கையி
6. லே வரக்காட்டினது இப்பாசிதம் கேட்ப்பது இ
7. ந்தப் புவனத்திலுண்டான பிராணிகளெல்லாம் நாயி
8. னார் கிருபையினாலே சுகமே பரிபாலியா நின்றது ஆங்கு வரு
9. கிற ரோங்கும் மனித்தரும் தேநவரை நாயினார் திரு அரு
10. ளத்தால் ஒழிந்தாண்டரையேயாள் நின்றது இப்படியை
11. த் தேனவரை ஆழ்வார்க்கு காணிக்கை ஆக காட்டினது
12. ஆகப்படி பொன் வெள்ளி துலுக்கி பட்டு சந்தனம்
13. எண்ணைக் காப்புப் பல காணிக்கைக்கு வகை பொன் ஆயிரம் க
14. ழஞ்சு வெள்ளி அய்ஞ்சாயிரக் கழஞ்சு பல நிறத் துலுக்கி அய்ம்பது பல
15. நிறப் பட்டு அய்ம்பது பொன் எழுத்து (காசதார)த் தூசஞ் சுவடு நாலு
16. ந்த சுவடு இரண்டு நீலத் தூசஞ் சுவடு இரண்டு பழஞ் செப்பு சிவ தூபம் இ
17. டுகிற செப்புப் பாத்திரம்அஞ்சு பூக்குத்துகிற செப்புக்
18. கெண்டி பத்து கறிக்கால் பத்து குத்து விளக்கிச் சாவான் அஞ்சு கறி
19. க்கால் அஞ்சு மரத்தாலே பொன் பூசின தாமரைப்பூ சுவடு ஆறு

---

* வருணன் வணக்கம், *தமிழ்ப்பொழில்*, துணர்-34, மலர்-4 & 5, 1958.

20. அகில் வைக்கிற பொன் பூசின செப்பு அஞ்சு மெழுகுதிரி சுவடு பத்து
21. எண்ணை இரண்டாய்ரத்து அஞ்னூறு கட்டி சந்தன முறி
22. பத்து ஆக இவ்விசைப் படியாலுள்ளது ..... நாயினார்
23. தேனவரை நாயினார்க்கு திரு முக்காணிக்கையாகக் குடுக்கவும்
24. யுங்லொக்கு யாண்டு ஏழா யிரண்டா (ம்ம) டி

*Epigraphia Zeylanica*, Vol. iii

குறிப்பு: 6 ஆம் வரி 'இப்பாசிதம் கேட்பது' என்பதில் பாசிதம் என்பது பாஷிதம் என்னும் சொல்லின் திரிபு. 8, 9ஆம் வரி 'வருகிற ரோங்கும்' என்பதை 'வருகிறவரோங்கும்' என்று வாசிக்கவும். 12, 14ஆம் வரிகளில் வருகிற 'துலுக்கி' என்பது பட்டுத்துணியைக் குறிக்கிறதுபோலும். 13, 21ஆம் வரிகளில் வரும் 'எண்ணை' என்பதை, 'எண்ணெய்' என்று வாசிக்கவும். 15ஆம் வரியில் 'தூசம்', என்பது துவசம் என்பதன் திரிபு போலும். துவசம் = கொடி. மேற்படி வரியில் 'சுவடு' என்பது இரட்டை எனப் பொருளுள்ள சோடி என்பதன் திரிபாக இருக்கலாம். 21ஆம் வரி இரண்டாயிரத்து அஞ்னூறு கட்டி என்று வாசிக்கவும். கட்டி என்பது முகத்தல் அளவை. சீன நாட்டுச் சொல்லாகிய 'சட்டிஸ்' என்பதன் திரிபுபோலும். சந்தன முறி = சந்தன மரத்துண்டு.

*தமிழ்ப் பொழில்*, துணர் 34, மலர் 11, பிப்ரவரி – மார்ச், 1959

# பாண்டியர் நிறுவிய தமிழ்ச் சங்கம்

சங்க காலத்திலே, மதுரை மாநகரத்திலே பாண்டிய மன்னர் மூன்று தமிழ்ச் சங்கங்களை நிறுவித் தமிழை ஆராய்ந்தார்கள் என்று *இறையனார் அகப்பொருள் உரை* முதலிய நூல்கள் கூறுகின்றன. அச்சங்கங்களில் இயல், இசை, நாடகம், என்னும் முத்தமிழ்கள் ஆராயப்பட்டன. *பத்துப் பாட்டு, எட்டுத் தொகை* முதலிய செய்யுள்கள் கடைச் சங்கப் புலவர்களால் பாடப்பட்டன. கடைச் சங்கம் கி.பி. 300க்கு முன்பு இருந்தது என்று சரித்திரம் கூறுகிறது.

ஆனால், இக்காலத்தில் சிலர், தமிழ் வரலாற்றினையும், நாட்டு வரலாற்றினையும் நேர்மையாகவும் சரியாகவும் ஆராய்ந்து பாராமல், தமிழ்ச் சங்கம் கி.பி. 5ஆம் நூற்றாண்டில் ஏற்பட்டது என்றும், அந்தத் தமிழ்ச் சங்கத்தில் *தொல்காப்பியம்* தோன்றியது என்றும் கூறுகின்றனர்; எழுதுகின்றனர். இவ்வாறு பிழைபட்ட ஆராய்ச்சியைக் கூறுகிறவர்களில் முதன்மை யானவர் அண்மையில் காலஞ்சென்ற திரு. எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள். வையாபுரிப் பிள்ளையவர்கள் சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழாராய்ச்சித் துறைத் தலைவராக இருந்தபடியால், அவர் கூறுவன எல்லாம் உண்மை என்று பாமர மக்கள் நினைக்கிறார்கள். பாமர மக்கள் மட்டும் அல்லாமல் படித்தவர்கள்கூட, ஆராய்ந்து பார்த்து உண்மை காணத் தெரியாமல், பிள்ளையவர்களின் தவறான முடிபுகளை உண்மையானவை எனக் கொண்டு மயங்குகிறார்கள். பிள்ளை யவர்கள் பதிப்பித்த நூல்கள் போற்றற்குரியவை. பழைய நூல்களைப் பதிப்பிப்பதில் அவர் வெற்றி பெற்றிருக்கிறார். ஆனால், சொந்தமாக அவர் எழுதிய நூல்களில் மெய்போலத் தோன்றுகிற பல தவறான செய்திகள் கூறப்படுகின்றன. பொறுப்பு வாய்ந்த உயர்ந்த பதவியிலிருந்துகொண்டு, அதிலும் சென்னைப் பல்கலைக்கழகம் போன்ற நிலையத்தில் தமிழ்ப் பகுதியின் தலைமைப் பீடத்தில் அமர்ந்துகொண்டு பிள்ளை யவர்கள் வெளியிட்ட தவறான ஆராய்ச்சி முடிபுகளை, அசைக்க முடியாத உண்மைகள் என்று இன்றும் பலர் கருதிக் கொண்டிருப்பதில் வியப்பில்லை. அவருடைய முடிபுகள் தவறானவை என்பதை இதுவரையில் யாரும் விளக்காமல் இருப்பதுதான் வியப்பைத் தருகிறது.

வையாபுரிப் பிள்ளை அவர்கள் காலஞ்சென்றவுடனே வெளிவந்த அவருடைய *தமிழ் மொழி, தமிழ் இலக்கிய வரலாறு* என்னும் ஆங்கில நூலிலே (*History of Tamil Language and Literature*, New Century Book House, Madras, 1956) பல பிழைபட்ட தவறான கருத்துக்கள் கூறப்படுகின்றன. இது ஆங்கில நூலாக இருப்பதனாலே, இதனைப் படிக்கிற தமிழ் அறியாத மற்றவர்கள், இவருடைய பிழையான கருத்துக்களை உண்மையானவையென்று நம்புகிறார்கள். இவருடைய தவறான கருத்துக்கள் மேலைநாடுகளிலும் பரவி, தமிழ் மொழியைப்பற்றியும் தமிழ் இலக்கியங்களைப்பற்றியும் பிழைபடக் கருதும்படி செய்கின்றன. ஏன்? நமது நாட்டிலும் இவருடைய தவறான முடிபுகளை நம்புகிறவர்களும் பலர் உள்ளனர்.

இங்கு, பாண்டியர் நிறுவிய தமிழ்ச் சங்கத்தைப் பற்றிப் பிள்ளையவர்கள் கூறும் கருத்தை ஆராய்வோம். இவர் ஆங்கிலத்தில் எழுதிய *தமிழ் மொழி, தமிழ் இலக்கிய வரலாறு* என்னும் நூலிலே இவ்வாறு எழுதிகிறார்:

> வச்சிரநந்தியின் பேர்போன சங்கம் கி.பி. 470இல் நிறுவப்பட்டது. *தொல்காப்பியம்* இச்சங்கத்தின் முதல் வெளியீடாக வெளிப்பட்டிருக்கக் கூடும் (பக்கம். 14). கி.பி. 470 இல் தமிழ் மொழியிலும் தமிழ் இலக்கியத்திலும் ஒரு முதன்மையான நிகழ்ச்சி ஏற்பட்டது. அந்நிகழ்ச்சி என்ன வென்றால், மதுரையிலே வச்சிரநந்தியின் மேற்பார்வையில் நிறுவப்பட்ட தமிழ்ச் சங்கமாகும் (பக்கம் 58).
>
> பழைய பாண்டியருக்குரிய சாசனங்களில், சின்னமனூர்ச் சிறிய செப்பேட்டுச் சாசனம் (கி.பி. 10ஆம் நூற்றாண்டு) மதுரையில் இருந்த சங்கத்தைக் கூறுகிறது. தலையாலங் கானத்துப் போர் வென்ற நெடுஞ்செழியனுக்குப் பிறகு இருந்த ஒரு பாண்டியனால் மதுரைத் தமிழ்ச் சங்கம் நிறுவப்பட்டதாக இச்சாசனம் கூறுகிறது. இச்சானம் கூறுகிற சங்கம் வச்சிரநந்தி ஏற்படுத்திய சங்கம் ஆகும். வச்சிரநந்தி ஏற்படுத்திய சங்கம் 25 ஆண்டுகள் நிலைபெற்றிருக்கக்கூடும் (பக்கம் 59).
>
> மதுரையில் இருந்த சங்கம் என்னும் பெயரால் அழைக்கப் பட்ட மூன்று கழகங்களும் சமணர்களால் உண்டாக்கப் பட்டவை. இவை சமண சமயத்தைச் சேர்ந்த ஆசிரியர் களின் முயற்சியால் உண்டாக்கப்பட்டவை என்பதைச் சங்கம் என்னும் பெயர் ஆதரிக்கிறது (பக்கம் 60).
>
> வச்சிரநந்தியின் சங்கத்தைப் பற்றிய தகவல்கள் கிடைக்க வில்லை. ஆனால் அச்சங்கம் ஏற்பட்ட பிறகு குறிப்பிடத் தக்க அளவு இலக்கண நூல்களும் அற நூல்களும் வெளிவந்தி ருப்பது அதனுடைய பெரிய வெற்றிக்குச் சான்றாக இருக்கிறது" (பக்கம். 161).

பிள்ளையவர்கள் இவ்வாறு தமது *தமிழ் மொழி, இலக்கிய வரலாறு* என்னும் ஆங்கில நூலிலே எழுதியிருக்கிறார். இதன் தெளிவான பொருள் என்னவென்றால் "வச்சிரந்தி என்னும் சமணர் கி.பி. 470 இல் மதுரையில் தமிழ்ச் சங்கத்தை நிறுவினார், சமணர்கள்தாம் தமிழ்ச் சங்கத்தை ஏற்படுத்தினார்கள், வச்சிரநந்தி ஏற்படுத்திய தமிழ்ச் சங்கத்தில் தான் *தொல்காப்பியம்* இயற்றப்பட்டது, *தொல்காப்பியமும்* தமிழ்ச் சங்கமும் கி.பி. 5ஆம் நூற்றாண்டில் தோன்றியவை என்பனவாம்".

இவற்றை நாம் ஆராய்வோம். சின்னமனூர்ச் செப்பேட்டை இவர் ஆதாரம் காட்டுகிறார். அச்செப்பேட்டின்* செய்தி இது:

தடம் பூதம் பணிகொண்டு
தடாகங்கள் பலதிருத்தியும்
அரும்பசி நோய் நாடகற்றி
அம்பொற்சித்ர முயரியும்
தலையாலங் கானத்திற்
றன்னொக்க லிருவேந்தரைக்
கொலைவாளிற் றலைதுமித்துக்
குறைத்தலையின் கூத்தொழித்தும்
மஹாபாரதந் தமிழ்ப் படுத்தும்
மதுராபுரிச் சங்கம் வைத்தும்
மஹாராஜரும் ஸார்வ பௌமரும்
தம்மகிமண்டலங் காத்திகந்தபின்

வையாபுரிப் பிள்ளையவர்கள் மேற்கோள் காட்டாத இன்னொரு பாண்டியனுடைய செப்பேட்டுச் சாசனமும் பாண்டிய மன்னர் மதுரையில் தமிழ்ச் சங்கம் நிறுவிய செய்தியைக் கூறுகிறது. பாண்டியன் பராந்தகன் வீரநாராயணன் எழுதிய அச்செப்பேட்டுச் சாசனத்தின் பகுதி இது:

மண்ணதிரா வகைவென்று
தென்மதுரா புரஞ்செய்தும்
அங்கதனில் லருந்தமிழ்நற்
சங்கம்இரீஇத் தமிழ்வளர்த்தும்
ஆலங்கானத் தமர்வென்று
ஞாலங்காவல் நன்கெய்தியும்
கடிநாறு கவினலங்கற்
களப்பாழர் குலங்களைந்தும்

---

* *S.I.I.*, Vol. iii, P. 454.

முடிசூடி முரண்மன்னர்
எனைப்பலரு முனிகுந்தபின்

(*சாசனச் செய்யுள் மஞ்சரி*, பக். 149)

இந்த இரண்டு செப்பேட்டுச் சாசனங்களும் பாண்டிய அரசர்களின் காலத்தில் எழுதப்பட்டவை. இச்சாசனங்கள் இரண்டும் பாண்டிய அரசர் மதுரை மாநகரத்தில் தமிழ்ச் சங்கம் வைத்து நடத்தியதைக் கூறுகின்றன. பட்டம் பகல் வெட்ட வெளிச்சம்போல் தெரிகிற இந்தச் செய்தியைப் பிள்ளையவர்கள் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் அறிந்திருக்க வேண்டும். ஆனால், தெரிந்தோ, தெரியாமலோ மதுரைத் தமிழ்ச் சங்கத்தை நிறுவியவர் சமணர் என்று கூறுகிறார். இந்தச் சாசனங்களிலே, வச்சிரநந்தியோ வேறு சமணர்களோ தமிழ்ச் சங்கம் வைத்ததாகக் கூறவில்லை; பாண்டிய மன்னர் தமிழ்ச் சங்கம் வைத்து நடத்தியதாகத்தான் கூறுகின்றன. பிள்ளையவர்கள், பாண்டியரின் தமிழ்ச் சங்கத்தோடு, வச்சிரநந்தியின் திராவிட சங்கத்தை இணைத்துப் பிணைத்து முடிபோடுகிறார். சாசனங்களிலும் பழைய நூல்களிலும் கூறப்படுகிறபடி பாண்டியர்கள் சங்கம் வைத்துத் தமிழாராய்ந்தார்கள் என்னும் செய்தியை அடியோடு மறைத்துவிடுகிறார். வச்சிரநந்தியின் திராவிட சங்கம் வேறு, பாண்டியரின் தமிழ்ச் சங்கம் வேறு என்பதை அறியாமல் இரண்டும் ஒரே சங்கம் என்று காரணம் கூறாமல், சான்று காட்டாமல் எழுதுகிறார். இது பிள்ளையவர்கள் செய்த முதல் தவறு. இனி, மேலே செல்வோம்.

வச்சிரநந்தி என்பவர் விக்கிரம ஆண்டு 526இல் (கி.பி. 470) மதுரையில் திரமிள சங்கத்தை ஏற்படுத்தினார் என்று தேவசேனர் என்னும் சமண ஆசிரியர் தமது *தர்சனசாரம்* என்னும் நூலில் எழுதியிருக்கிறார். இந்தச் சான்றைக் காட்டி வையாபுரிப் பிள்ளையவர்கள் வச்சிரநந்தியின் திரமிள சங்கந்தான் பாண்டியரின் தமிழ்ச் சங்கம் என்று கூறுகிறார். இந்தச் செய்தியில், பாண்டியரின் தமிழ்ச் சங்கமும் வச்சிர நந்தியின் திரமிள சங்கமும் ஒன்று என்று கூறப்படவில்லை. பிள்ளையவர்கள் தாமாகவே இட்டுக்கட்டிக் கூறுகிறார். இனி, வச்சிரநந்தியின் திரமிள சங்கம் என்பது யாது என்பதை ஆராய்வோம்.

வச்சிரநந்தி சமண சமயத்தைச் சேர்ந்த முனிவர். இவர் மதுரையிலே திரமிள சங்கத்தை ஏற்படுத்தினார். திரமிளம் என்றாலும் திராவிடம் என்றாலும் ஒன்றே. இவற்றின் பொருள் தமிழ் என்பது. திரமிள சங்கம் என்றால் தமிழ்ச் சங்கம் என்பது பொருள். ஆனால், வச்சிரநந்தி ஏற்படுத்திய தமிழ்ச் சங்கம்

தமிழ் மொழியை ஆராயும் சங்கம் அன்று; தமிழ்ச் சங்கம் அன்று; தமிழ்ச் சங்கம், சமண சமய சம்பந்தமான சங்கம். அதாவது, சமண சமயத்தைப் பரப்புவதற்காக ஏற்படுத்தப் பட்ட சங்கம்.

சமணத் துறவிகள் அந்தக் காலத்தில் பெருங்கூட்டமாக இருந்தனர். சமண முனிவர்களின் கூட்டத்திற்குச் சங்கம் என்பது பெயர். பௌத்த பிட்சுக்களின் கூட்டத்திற்கும் சங்கம் என்பது பெயர். சமண முனிவரின் சங்கங்கள் (கூட்டங்கள்) நான்கு பெரும் பிரிவுகளாகவும், பல உட்பிரிவுகளாகவும் அக்காலத்தில் பிரிக்கப்பட்டிருந்தன. நான்கு பெரும் பிரிவுகள் நந்தி கணம், சேன கணம், சிம்ம கணம், தேவ கணம் என்பன (கணம் - சங்கம்). இந்நான்கு கணங்களில் நந்தி கணம் பேர்போனது. திரமிள சங்கத்தை ஏற்படுத்திய வச்சிரநந்தியும் நந்தி கணத்தைச் சேர்ந்தவரே. நந்தி கணத்தில் சமண முனிவர் கூட்டம் அதிகமாகப் பெருகிவிட்டபடியினாலே, வச்சிரநந்தி ஆசாரியர், அந்தக் கணத்தை இரண்டாகப் பிரித்து ஒரு பிரிவுக்குப் பழைய நந்திச் சங்கம் என்றும், மற்றொரு பிரிவுக்குத் திரமிள சங்கம் என்றும் பெயர் கொடுத்தார் என்பது சமண சமய வரலாறு. தமிழ் முனிவர்கள் அதிகமாக இருந்த படியினாலே திரமிள சங்கம் என்று பெயர் சூட்டினார்.

நந்தி சங்கத்தின் பிரிவுதான் திரமிள சங்கம் என்பதற்குக் கன்னட தேசத்தில் உள்ள ஒரு சாசனச் செய்யுள் சான்றாக இருக்கிறது. அச் செய்யுள் இது:

*ஸ்ரீமத் திரமிள ஸங்கேஸ்மிம் நந்தி*
*ஸங்கேஸ்தி அருங்களா*
*அன்வயோ பாதி நிஸ்ஸேஷ ஸாஸ்த்ர*
*வராஹி பாரஹைஹி ||*

இந்தச் சுலோகத்திலே நந்தி சங்கத்தோடுகூடிய திரமிள சங்கத்து அருங்கலான்வயம் என்னும் பிரிவு கூறப்படுதல் காண்க.

எனவே, சமண முனிவராகிய, வச்சிரநந்தி மதுரையில் திரமிள சங்கத்தை நிறுவினார் என்றால், சமண முனிவரின் திராவிட சங்கத்தை நிறுவினார் என்பது பொருளாகும். அதாவது மத சம்பந்தமாக சமண முனிவரின் தமிழ்ச் சங்கத்தை ஏற்படுத்தினார் என்பது பொருள். வச்சிரநந்தி ஏற்படுத்திய தமிழ்ச் சங்கம் தமிழ் மொழியை ஆராய்வதற்காக ஏற்பட்ட சங்கம் அன்று. சமண சமயத்தைப் பரப்புவதற்காக ஏற்படுத்தப் பட்ட சங்கம் ஆகும்.

இதை அறியாமல் வையாபுரிப் பிள்ளையவர்கள், வச்சிரநந்தியின் தமிழ்ச் சங்கமும் பாண்டியரின் தமிழ்ச்

சங்கமும் ஒன்றே என்று கூறுகிறார். முதற் கோணல் முற்றுங் கோணல் என்பது பழமொழி. வச்சிரநந்தியின் சமண முனிவர் சங்கமும், பாண்டியரின் தமிழ் ஆராய்ச்சி சங்கமும் ஒன்றே என்று தவறான முடிவு கொண்ட பிள்ளையவர்கள், கி. பி. 470இல்தான் தமிழ்ச் சங்கம் ஏற்பட்டது என்றும் இந்தச் சங்கத்தில்தான் *தொல்காப்பியம்* தோன்றியது என்றும் கூறி மற்றும் பல தவறான முடிவுகளைக் கூறுகிறார்.

கடுந் துறவிகளாகிய சமண முனிவர்கள் - சிற்றின்பத்தையும், கொலைகளையும் கடுமையாக வெறுக்கிற சமண முனிவர்கள் - தமிழ்ச் சங்கம் வைத்துக்கொண்டு காதற்செய்திகளையும், போர்ச்செய்திகளையும் கூறுகிற *அகநானூறு, நற்றிணை நானூறு, புறநானூறு* முதலிய செய்யுள்களை ஆராய்ந்தனர், இயற்றினர் என்று கூறுவது எவ்வளவு அசம்பாவிதம்! முற்றத் துறந்த சமண முனிவர்கள் இசையையும் நாடகத்தையும் ஆராய்ந்தனர் என்று கூறுவது எவ்வளவு முரண்பட்ட செய்தி! சங்கம் என்னும் சொல்லை வைத்துக்கொண்டு அவற்றின் உண்மைப் பொருளை ஆராயாமல் வெவ்வேறு காலத்திலிருந்த வெவ்வேறு நோக்கமுடைய சங்கங்களை ஒன்றாக இணைத்து முடிபோடுவது என்ன ஆராய்ச்சியோ!

வச்சிரநந்தி மதுரையில் ஏற்படுத்திய திரமிள சங்கம் (சமண முனிவர் சங்கம்) மதுரையைச் சூழ்ந்துள்ள எட்டுக் குன்றங்களில் நிலைத்து, "எண்பெருங் குன்றத்து எண்ணாயிரம் சமணர்க"ளாகப் பெருகியது. அந்தச் சமண சங்கம் பாண்டி நாட்டில் சமண சமயத்தைச் செழிக்கச் செய்தது. அதனால் பிற்காலத்திலே சைவ நாயன்மார்களும், வைணவ ஆழ்வார் களும் தோன்றி, சமண சமயத்துடன் சமயப் போர் நிகழ்த்தினர். இச்செய்தியைப் *பெரியபுராணம்* முதலிய நூல்களில் காண்கிறோம். எனவே, வையாபுரிப் பிள்ளை கூறுகிறபடி, வச்சிரநந்தி உண்டாக்கிய திரமிள சங்கமும் பாண்டியர் நிறுவிய தமிழ்ச் சங்கமும் ஒன்றல்ல, வெவ்வேறு சங்கங்கள் ஆகும். அவை வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு நோக்கத்துடன் வெவ்வேறு ஆட்களால் உண்டாக்கப்பட்டவை. இரண்டையும் ஒன்றாகப் பொருத்திக் கூறுவது தவறாகும்.

பாண்டியர் ஏற்படுத்திய தமிழ்ச் சங்கம் கி. பி. 300க்குப் பிறகு இருந்திருக்க முடியாது. கி.பி. 300க்கு முன்புதான் பாண்டியரின் தமிழ்ச் சங்கங்கள் இருந்திருக்க வேண்டும். இதனைத் தமிழ்நாட்டு அரசியல் வரலாற்றைக் கொண்டு அறியலாம். ஏறக்குறைய கி. பி. 300இல் களபரர் என்னும் அரசர் தமிழ் நாட்டிற்கு வந்து சேர, சோழ, பாண்டியர் ஆகிய தமிழ்நாடு முழுவதையும் கைப்பற்றிக் கொண்டார்கள். இந்தக்

களபரர் தமிழகத்திற்கு அப்பாலிருந்து வந்தவர்கள். களபரர் தமிழகத்தைக் கைப்பற்றிய பிறகு சேர, சோழ, பாண்டிய மன்னர் களபரருக்குக் கீழ் அடங்கியிருந்தார்கள். களபரரின் ஆட்சி ஏறக்குறைய 300 ஆண்டுகள் தமிழகத்தில் இருந்தது. பிறகு ஏறக்குறையக் கி.பி. 600இல், கடுங்கோன் என்னும் பாண்டியன் களபரரை வென்று பாண்டிய நாட்டை மீட்டுக் கொண்டான். ஏறக்குறைய அதே காலத்தில், தொண்டை நாட்டிலிருந்த சிம்ம விஷ்ணு என்னும் பல்லவ அரசன் களபரரை வென்று சோழ நாட்டைக் கைப்பற்றிக் கொண்டான். அப்போது, களபரருக்குக்கீழ் அடங்கியிருந்த சோழர், பல்லவர்களுக்குக்கீழ் அடங்கவேண்டியதாயிற்று. ஏறக்குறைய அதே காலத்தில் சேர நாடும் களபரர் ஆட்சியிலிருந்து சுயேச்சை யடைந்தது. களபரர் ஆட்சிக் காலத்தில்தான் வச்சிரநந்தி கி.பி. 470இல் திராவிட சங்கத்தை ஏற்படுத்தினார். களபரர்கள் சமண, பௌத்தச் சமயங்களை ஆதரித்தவர்கள். அவர்கள் தமிழ்மொழியை ஆதரித்ததாகத் தெரியவில்லை. கி. பி. 470இல் அரசாண்ட களபர அரசன் அச்சுத விக்கந்தன் என்பவன். எனவே, பாண்டியரின் தமிழ்ச் சங்கம் கி. பி. 300க்கும் 600க்கும் இடைப்பட்டகாலத்தில் ஏற்பட்டிருக்க முடியாது. கி.பி. 300க்கு முற்பட்ட காலத்திலேதான் ஏற்பட்டிருக்க முடியும். கி. பி. 600க்குப் பிறகு பாண்டியர் தமிழ்ச் சங்கத்தை ஏற்படுத்தி யிருக்க முடியாது. ஏனென்றால் கி. பி. 630இல் வாழ்ந்திருந்த திருநாவுக்கரசு சுவாமிகள் தமது தேவாரப் பதிகத்திலே தமிழ்ச் சங்கம் நீண்ட காலத்துக்கு முன்பு இருந்ததாகக் கூறுகிறார். எனவே, கி. பி. 470இல் களபரர் ஆட்சிக் காலத்தில் வச்சிரநந்தி ஏற்படுத்திய சங்கம், தமிழ் ஆராய்ச்சிச் சங்கம் அன்று. அது சமண சமயம் பற்றிய சமண முனிவர்களின் சங்கமாகும். இந்த விதத்திலும் வையாபுரிப் பிள்ளையின் கருத்துத் தவறாகிறது.

இதுகாறும் ஆராய்ந்ததிலிருந்து தெரிகிறது என்ன வென்றால், வையாபுரிப் பிள்ளையவர்கள், பொருளைத் தவறாகக் கருதிக்கொண்டு பொருந்தாத காரணங்களைப் பொருத்திக் காட்டியிருக்கிறார் என்பதும், அவருடைய முடிபுகள் தவறானவை என்பதும் ஆகும். வச்சிரநந்தியின் திராவிட சங்கம் வேறு; பாண்டியரின் தமிழ்ச் சங்கம் வேறு என்பது இங்கு நன்கு விளக்கப்பட்டது. பாண்டியரின் சங்கம் கி. பி. 300க்கு முன்பு இருந்திருக்க வேண்டும் என்பதும் விளக்கப்பட்டது.

வையாபுரிப் பிள்ளை பாண்டியரின் தமிழ்ச் சங்கத்தைப் பற்றிக் கூறுகிற இன்னொரு செய்தியையும் ஆராய்வோம். தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்

செழியனுடைய காலத்துக்குப் பிறகுதான் மதுரையில் தமிழ்ச் சங்கம் ஒரு பாண்டியனால் நிறுவப்பட்டது என்று சின்னமனூர்ச் செப்பேட்டுச் சாசனம் கூறுகிறது என்பதைப் பிள்ளை அவர்கள் எடுத்துக்காட்டுகிறார்கள் (பக். 59). உண்மைதான். மேலே நாம் காட்டியுள்ள சின்னமனூர்ச் சாசனப் பகுதி, பிள்ளையவர்கள் சுட்டிக் காட்டியதுபோல, பாண்டியன் நெடுஞ்செழியனுக்குப் பிறகுதான் தமிழ்ச் சங்கம் நிறுவப்பட்டதாகக் கூறுகிறது. அச்சாசனப் பகுதிக்குக் கீழே நாம் காட்டியுள்ள பாண்டியனுடைய மற்றொரு செப்பேட்டுச் சாசனப் பகுதி அதற்கு மாறாகக் கூறுகிறது. தமிழ்ச் சங்கம் ஏற்பட்ட காலத்திற்குப் பிறகு பாண்டியன் நெடுஞ்செழியன் இருந்ததாக இச்சாசனம் கூறுகிறது. ஆகவே, பிள்ளையவர்கள் கூறுவதுபோல நெடுஞ்செழியனுக்குப் பிறகுதான் பாண்டியரின் தமிழ்ச் சங்கம் ஏற்பட்டதென்பது தவறாகிறது. இதுபற்றி விளக்கமாக எழுதினால் இக்கட்டுரை பெருகி விரியும். ஆகையினாலே, இதுபற்றித் தனியாக எழுதுவோம். ஒன்றை மட்டும் கூறுவோம். பாண்டியன் நெடுஞ்செழியன், கடைச்சங்க காலத்திலே, தமிழ்ச் சங்கம் நடைபெற்றுக் கொண்டிருந்த காலத்திலே இருந்தவன் என்பது உறுதி. நெடுஞ்செழியன் காலத்துக்குப் பிறகுதான் தமிழ்ச் சங்கம் ஏற்பட்டது என்று கூறுவது தவறு என்பதைக் கூறிக்கொண்டு இதனை முடிக் கிறேன். பிள்ளையவர்களின் ஏனைய ஆராய்ச்சிகளைப் பற்றிப் பின்னர் எழுதுவோம்.

*கலைக்கதிர் (பொங்கல் மலர்)*, மலர் 11, இதழ் 6, ஜூன், 1959

# பொத்தகுட்டன்

அக்காலத்தில் இலங்கையின் தலைநகரமான அநுராத புரத்தில் அரசாட்சி செய்தவன் கசபன் என்பவன். இவனைக் கசபன் - இரண்டாவன் என்று வரலாற்று நூல் கூறுகிறது. இவன் காலத்தில் இலங்கையில் அரசியல் குழப்பமும் கலகமுமாக இருந்தது. அரச பதவிக்காக அரச குலத்தைச் சேர்ந்த சிலர் கலகம் உண்டாக்கினார்கள். அவர்களில் சிலர் தமிழ்நாட்டுக்கு வந்து தமிழ் வீரர்களை அழைத்துக்கொண்டு போய் அவர்கள் உதவியினால் ஆட்சியைக் கைப்பற்றி அரசாண்டார்கள். அழைத்துப் போகப்பட்ட தமிழ் வீரர்களில் பெரும்பாலோர் அநுராதபுரத்திலேயே தங்கிவிட்டார்கள். பெருவாரியாகத் தங்கிவிட்ட காரணத்தினால் தலைநகரில் தமிழரின் ஆதிக்கம் அதிகமாயிற்று. இலங்கை மன்னர்கள் தங்கள் தலைநகரிலே தமிழரின் ஆதிக்கத்தையும் செல் வாக்கையும் கண்டு அஞ்சினார்கள். அக்காலத்தில் அநுராத புரத்தில் தமிழர்களின் தலைவனாக இருந்தவன் பொத்த குட்டன் என்பவன்.

இந்தச் சூழ்நிலையில் இலங்கை அரசன் கசபன்-II நோயுற்றுப் படுக்கையில் கிடந்தான். அவனுடைய மக்கள் வயது நிரம்பாத சின்னஞ் சிறுவராக இருந்தனர். மூத்த மகனான மானா என்னும் மகனுக்கு அப்போது வயது பன்னிரண்டு தானிருக்கும். ஆட்சியைக் கைப்பற்றுவதற்கு ஆயத்தமாக ஹத்த தாட்டன் என்பவன் தமிழ்நாடு சென்று, காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். அநுரையில் இருந்த தமிழர்கள் ஹத்த தாட்டனை அரசனாக்க எண்ணங் கொண் டிருந்தார்கள். இந்தச் சூழ்நிலையிலே மரணப் படுக்கையில் கிடந்த கசபன் என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்தான். கடைசியில், இலங்கையின் தென்பகுதியிலே, உரோகண நாட்டை அரசாள்கிற தன் மைத்துனன் – தன் தங்கையின் கணவன் – தப்புலனை எண்ணினான். ஆனால், தப்புலனோ வயது முதிர்ந்த கிழவன். அரசியல் பொறுப்பை ஏற்று நடத்தும் வயதைக் கடந்தவன். நற்காலமாக அவனுக்கு மானா என்னும் மகன் ஒருத்தன் இருந்தான். மானா நடுத்தர வயதுள்ளவன், நற்குணம் உள்ளவன். கசப மன்னன், தன் தங்கையின் மகனும்,

தனது மருமகனுமாகிய மானாவை வரவழைத்தான். வரவழைத்து அவனிடம் இவ்வாறு கூறினான்:

"மானா! நான் நோய்கண்டு இறக்குந் தறுவாயில் இருக்கிறேன். என் மகனாகிய மானா சின்னஞ் சிறியவன். இப் போதுள்ள குழப்பமான சூழ்நிலையில், அவன் அரசாட்சியை ஏற்று நடத்த முடியாதவன். ஆகவே, மானா! என் ஆட்சி யையும், என் மகன் மானாவையும் உன் பொறுப்பில் விடுகிறேன். அரசாட்சியையும் அவனையும் நீ காப்பாற்றி, அவன் வயதடைந்த பிறகு ஆட்சியை அவனிடம் கொடுக்க வேண்டும். இதுவே என் கடைசி வேண்டுகோள்" என்று கூறினான். பிறகு கசபன் கண்மூடினான்.

மானா, இலங்கை ஆட்சியையும் கசப அரசன் மகனான மானா என்பவனையும் தன் பொறுப்பில் ஏற்றுக்கொண்டான். மானா வயதடைகிற வரையில் தன் தந்தையாகிய தப்புலன் இலங்கையை ஆட்சி செலுத்தவேண்டும் என்று எண்ணினான். உரோகண நாட்டில் இருந்த தன் தந்தையாகிய தப்புலனை அநுரைக்கு அழைத்து அவனுக்கு முடிசூட்டினான்.

ஆனால், அநுரையில் செல்வாக்குள்ள தமிழர்கள் தப்புலனை அரசனாக ஏற்றுக் கொள்ள மறுத்தனர். அரச பரம்பரையைச் சேர்ந்த ஹத்த தாட்டன் என்பவன் தமிழ்நாட்டில் அடைக்கலம் புகுந்திருந்தான் அல்லவா? அவனை அழைத்துவந்து அவனுக்கு முடிசூட்ட எண்ணி னார்கள். தமிழர் தலைவனான பொத்தகுட்டன் உடனே புறப்பட்டு இலங்கைக்கு வருமாறு ஹத்த தாட்டனுக்குச் செய்தி அனுப்பினான்.

தப்புலன் ஆட்சியை ஏற்ற ஆறாம் நாள், ஹத்த தாட்டன் தமிழ்நாட்டிலிருந்து சேனையோடு இலங்கைக்கு வந்து சேர்ந்தான். அநுரையில் இருந்த தமிழர்களும் அவர்கள் தலைவனாகிய பொத்தகுட்டனும் ஹத்த தாட்டனை ஆதரித்தார்கள். மானாவும் தப்புலனும் அநுரையில் தங்க முடியாத நிலை ஏற்பட்டது. அவர்கள் தலைநகரைவிட்டுப் போய்விட்டார்கள். தப்புலன் பொன்னையும் பொருளையும் வாரிக்கொண்டு உரோகண நாட்டுக்குப் போய்விட்டான். மானா, கிழக்குப் பக்கமுள்ள நாட்டுக்குச் சென்று சேனை திரட்டிப் போருக்கு ஆயத்தமானான்.

தலைநகரமான அநுராதபுரத்தைக் கைப்பற்றிய ஹத்த தாட்டன், மானாவுடன் போர் செய்து வெற்றி பெற்றான். மானா போர்க்களத்தில் உயிர் விட்டான். மகன் இறந்த செய்தி கேட்டு, தப்புலன் வருத்தத்தினால் மாண்டான்.

ஹத்த தாட்டன் தமிழரின் உதவியினால் இலங்கைக்கு அரசனானான். அநுரையில் முடிசூடிய இவன் தாட்டோப திஸ்ஸன் என்னும் பட்டப் பெயர் சூடி அரசாண்டான். இவனை தாட்டோப திஸ்ஸன் இரண்டாவன் என்று சரித்திரம் கூறும். இவன் காலத்தில் அநுரையில் தமிழர்களின் செல்வாக்கு மிகுந்தது. தமிழர் தலைவனான பொத்தகுட்டன் முடிசூடா மன்னனாக விளங்கினான்.

பொத்தகுட்டன் தமிழர் தலைவன் மட்டுமல்லன்; சிங்களவரின் நன்மதிப்பையும் பெற்றவன். செல்வம் படைத்த சீமான். அரசியல் அறிஞன். பௌத்த சமயத்தைச் சேர்ந்தவன். பௌத்த ஆலயங்களுக்கும் பௌத்த விகாரைகளுக்கும் பொன்னையும் பொருளையும் கொடுத்ததல்லாமல் சில கிராமங்களையும் தானமாக வழங்கிய வள்ளல்.

## II

மானாவிடம் ஒப்படைக்கப்பட்ட, கசபன் மகன் மானா என்னும் ஒரு சிறுவன் இருந்தானல்லவா? மானாவும் தப்புலனும் இறந்த பிறகு அச்சிறுவன் மலய நாட்டில் மறைந்திருந்தான். தான் உயிருடன் இருப்பதை அரசனாகிய தாட்டோப திஸ்ஸன் அறிந்தால், தன்னைக் கொன்றுவிடுவான் என்று அறிந்து அவன் தலைமறைவாக இருந்தான்; அவன் வயதடைந்து, மலய நாட்டு அரச குடும்பத்தில் பிறந்த சங்கமானா என்னும் அரச குமாரத்தியை மணந்தான். பிறகு, யாழ்ப்பாணப் பகுதிக்கு வந்து ஒருவரும் அறியாமல் தங்கினான். ஆனால், அரசனாகிய தாட்டோப திஸ்ஸன் இவன்மேல் கண் வைத்திருந்தான். மானா, தன் மனைவியுடன் யாழ்ப்பாணம் சென்றிருப்பதை அரசன் ஒற்றர் மூலமாக அறிந்தான்.

தன்னை அவன் அறிந்துகொண்டான் என்பதை மானா உணர்ந்தான். இனி, இலங்கையில் இருந்தால் தனக்கு ஆபத்து என்பதை அறிந்தான். உடனே, ஏதேனும் அயல் நாட்டுக்குப் போய்விடவேண்டும் என்று எண்ணினான். அக்காலத்தில் பல்லவ இராச்சியம் தென் இந்தியாவில் பேர்பெற்றிருந்தது. பல்லவ அரசனான நரசிம்மவர்மன் (மாமல்லன்), காஞ்சீ புரத்திலே ஆட்சி செலுத்தினான். மானா நரசிம்மவர்மனிடம் தஞ்சம் அடைய எண்ணினான். ஒருவரும் அறியாதபடி தன் மனைவியுடன் புறப்பட்டுக் கப்பல் ஏறி மாமல்லபுரத்தில் வந்து இறங்கினான். அங்கிருந்து காஞ்சீபுரம் சென்று, பல்லவ மன்னன் நரசிம்மவர்மனைக் கண்டு தன் செய்தியைக் கூறிப் புகலிடம் தரவேண்டும் என்று வேண்டினான்.

நரசிம்மவர்மன் மானாவை அன்புடன் வரவேற்று அவனுக்கு அடைக்கலம் கொடுத்தான். மானாவுக்குரிய இலங்கை ஆட்சியை மீட்டுக்கொடுப்பதாக உறுதி கூறினான். அது முதல் மானா, நரசிம்மவர்மனுக்கு உற்ற நண்பனானான். பல்லவ அரசர் மரபுப்படி மானாவும், 'மானவர்மன்' என்று பெயர் பெற்றான்.

நரசிம்மவர்மன் உடனே மானாவுக்கு உதவிசெய்ய முடியவில்லை. ஏனென்றால் சளுக்கிய அரசனான புலிகேசி, பல்லவ இராச்சியத்தின்மேல் அடிக்கடி படையெடுத்து வந்து போர்செய்தான். சளுக்கியருடன் பல்லவர் பலமுறை போர் செய்ய நேரிட்டது. ஆகவே, உடனடியாக மானவர்மனுக்கு உதவிசெய்து இலங்கையாட்சியை மீட்டுக் கொடுக்க நரசிம்மவர்மனால் இயலவில்லை. சில ஆண்டுகளுக்குப் பிறகு, நரசிம்மவர்மன் தன்னுடைய பெரிய சேனையை மானாவுக்குக் கொடுத்து இலங்கை ஆட்சியை மீட்டுக்கொள்ளுமாறு கூறினான். சளுக்கியரின் போர் காரணமாக நரசிம்மவர்மன் நேரில் இலங்கைக்குச் செல்லமுடியவில்லை.

மானவர்மன், பல்லவச் சேனையை அழைத்துக் கொண்டு மாமல்லபுரத்திலிருந்து புறப்பட்டு இலங்கை சென்றான். சென்று, தாட்டோப திஸ்ஸனுடன் போர் செய்யப் பாசறையில் தங்கினான். பல்லவச் சேனையுடன் மானா வந்திருப்பதைத் தாட்டோப திஸ்ஸன் அறிந்தான். பேர்பெற்ற பல்லவ அரசனுடைய உதவி மானாவுக்கு இருப்பதைக் கண்டு அச்சங் கொண்டான். அநுரையில் இருந்த தமிழர் தலைவனாகிய பொத்தகுட்டனையும் அமைச்சர்களையும் அழைத்து மந்திராலோசனை செய்தான்.

அப்போது பொத்தகுட்டன், தாட்டோப திஸ்ஸனுக்கு இவ்வாறு உறுதி கூறினான்: "பல்லவ அரசனுடைய வலிமையுள்ள பெரிய சேனை மானாவுக்கு உதவியாக வந்திருக்கிறது உண்மைதான். நாமும் நமது சேனையைப் போருக்கு ஆயத்தம் செய்வோம். ஆனால், வெற்றி நமதே என்பதை எழுதிவைத்துக் கொள்ளுங்கள். மானா போர்க் களத்தில் உயிர்விடுவான் அல்லது போர்க்களத்தை விட்டு ஓடிப் போவான். இது உறுதி." இதைக் கேட்டு எல்லோரும் வியப்படைந்தார்கள்.

அடுத்த நாள் போர்க்களத்திலே இரு தரத்துச் சேனை களும் போர் செய்ய ஆயத்தமாக நின்றன. முரசுகள் முழங்கின. போர் தொடங்கிற்று. ஆச்சரியம்! அதிசயம்! சற்று நேரத்திற் கெல்லாம் மானாவின் பல்லவச் சேனைகள் அணிஅணியாகப் பின்வாங்கிப் போய்விட்டன. பல்லவச் சேனைத் தலைவர்கள்

தங்கள்தங்கள் சேனைகளை அழைத்துக்கொண்டு பாசறைக்குச் சென்றுவிட்டனர். சிறு சேனைமட்டும் மானாவுடன் இருந்தது. மானாவுக்கு ஒன்றும் விளங்கவில்லை. மானாவுக்காகப் போர் செய்ய வந்த சேனை போர்க்களத்திலே அவனைக் கைவிட்டு விட்டதென்றால், அதிசயம் அல்லவா?

மானவர்மன், இந்த நிலையில் இலங்கைச் சேனையுடன் போர்செய்வது ஆபத்தானது என்பதை அறிந்தான். 'கண்மூடித் தனமாகப் போரில் புகுந்து உயிர்விடுவது முட்டாள்தனம். உயிர் இருந்தால் பிறகு ஒரு முறை வந்து ஆட்சியைக் கைப்பற்றலாம் என்று எண்ணினான். பிறகு தானும் தன் சிறு சேனையுடன் பாசறைக்குத் திரும்பிப் போனான். அன்று இரவே பல்லவச் சேனைகளும் மானவர்மனும் கப்பல் ஏறி இலங்கையை விட்டுப் போய்விட்டார்கள்.

பல்லவச் சேனை போர் செய்யாமல் திரும்பிப் போய் விட்ட காரணம், பொத்தகுட்டனின் சூழ்ச்சிதான். பொத்த குட்டன் சில ஆட்களை அனுப்பி, 'சளுக்கிய அரசன் புலிகேசி காஞ்சீபுரத்தின்மேல் படையெடுத்து வந்துவிட்டான்' என்னும் வதந்தியைப் பல்லவச் சேனைகளிடம் பரவச் செய்தான். இந்த வதந்தியைப் பல்லவச் சேனை உண்மையென்று நம்பித் தங்கள் அரசனுக்கும் நாட்டுக்கும் ஆபத்து வந்துவிட்டதென்று கருதி உடனே போர்க்களத்தைவிட்டுத் தங்கள் நாட்டுக்குப் போய்விட்டார்கள். அவர்களைத் தொடர்ந்து மானவர்மனும் போய்விட்டான்.

பொத்தகுட்டன் சூழ்ச்சியினால் இலங்கை அரசன் வெற்றியடைந்தான். ஆள் நட்டம் பொருள் நட்டம் இல்லாமல், இரத்தம் சிந்தாமல் வெற்றி பெற்றதாக எல்லோரும் மகிழ்ச்சி யடைந்தார்கள். பொத்தகுட்டனை வாழ்த்திக் கொண்டாடி னார்கள். பொத்தகுட்டனின் செல்வாக்கு முன்னைவிடப் பன்மடங்கு அதிகமாயிற்று.

தாட்டோப திஸ்ஸன் ஒன்பது ஆண்டு அரசாண்டான். அவனுக்குப் பிறகு அவன் தம்பி அக்கபோதி (IV) என்பவன் பதினாறு ஆண்டு அரசாண்டான். இவன் காலத்திலும் பொத்தகுட்டன் இலங்கையின் முடிசூடா மன்னனாக விளங்கினான். அக்கபோதிக்குப் பிறகு, உபராசனாக இருந்த தாட்டா சிவன் என்பவன் அரசனாக வருவதைப் பொத்தகுட்டன் விரும்பவில்லை. தாட்டா சிவனைச் சிறையில் அடைத்துவிட்டு, பொத்தகுட்டன், தத்தன் என்பவனுக்கு முடிசூட்டினான். தத்தன் இரண்டு ஆண்டு ஆட்சிசெய்த பிறகு காலமானான். பிறகு, பொத்தகுட்டன் உணா நகரத்தில் இருந்த ஹத்த தாட்டன் என்பவனை அழைத்து வந்து முடிசூட்டி

அவனுக்கு இலங்கை ஆட்சியைக் கொடுத்தான். இவ்வாறு பொத்தகுட்டன் என்னும் தமிழன், மக்கள் செல்வாக்கைப் பெற்றுத் தன் விருப்பம்போல இலங்கையின் அரசர்களை அமைத்துக் கொண்டிருந்தான்.

## III

இலங்கைக்கு வந்து போர் செய்யாமல் திரும்பிப்போன மானவர்மனுக்கு மீண்டும் இலங்கைமேல் படையெடுத்து வந்து ஆட்சியைக் கைப்பற்ற முடியவில்லை. இலங்கை ஆட்சியைக் கைப்பற்றி மானவர்மனுக்குக் கொடுக்க நரசிம்மவர்மனால் முடியவில்லை. காரணம், சளுக்கிய அரசனான புலிகேசி பல்லவ இராச்சியத்தின்மேல் பல தடவை படையெடுத்து வந்து நரசிம்மவர்மனுடன் போர் செய்ததுதான். இதனால் நரசிம்ம வர்மன், மானவர்மனுக்கு உதவிசெய்ய இயலாமற் போயிற்று. கடைசியாக கி.பி. 642இல் புள்ளலூர், மணிமங்கலம் முதலிய இடங்களில் நடந்த போரிலே புலிகேசி போர்க்களத்தில் கொல்லப்பட்டான். இந்தப் போரிலே நரசிம்மவர்மனுக்கு உதவியாக இருந்தவர்கள் மானவர்மனும் கொடும்பாலூர் அரசனாகிய பரதுர்க்கமர்த்தனனும் ஆவர். புலிகேசியைப் புள்ளலூர்ப் போர்க்களத்தில் கொன்ற பிறகு, நரசிம்மவர்மன் தன் சேனாதிபதியாகிய பரஞ்சோதியை (பிற்காலத்தில் சிறுத்தொண்ட நாயனார்) அனுப்பிப் புலிகேசியின் வாதாபி நகரத்தைக் கைப்பற்றினான். அதனால் அவன் வாதாபி கொண்ட நரசிம்மவர்மன் என்று பெயர் பெற்றான்.

மானா, இலங்கையைவிட்டு வந்து இப்போது இருபத்தேழு ஆண்டுகள் கடந்துவிட்டன. சளுக்கிய-பல்லவர் போர் ஒருவாறு முற்றுப்பெற்றபடியால், நரசிம்மவர்மன், தன் பெரிய சேனையை மானாவுக்குக் கொடுத்து இலங்கை ஆட்சியைக் கைப்பற்றும்படி அனுப்பினான். புகழ்பெற்ற பல்லவச் சேனையுடன் இலங்கைக்கு வந்த மானவர்மன், ஹத்த தாட்டனுடன் போர் செய்தான். பொத்தகுட்டன் முன்போலச் சூழ்ச்சி செய்யமுடியவில்லை. ஹத்த தாட்டன் சேனையும் பொத்தகுட்டன் சேனையும் ஒன்றுசேராதபடி மானா தடுத்து, ஹத்த தாட்டனுடன் போர் செய்தான். ஹத்த தாட்டன் போரில் உயிர் துறந்தான். ஹத்த தாட்டன் இறந்தசெய்தியறிந்த பொத்தகுட்டன் இனிப் போர் செய்வதில் பயனில்லை என்று அறிந்து தனியே மலயநாட்டுக்குப் போய்விட்டான். மானவர்மன் இலங்கையாட்சியைக் கைப்பற்றி அரசனானான்.

மானவர்மன், பொத்தகுட்டனைப் பிடித்து வரும்படி வீரர்களை அனுப்பினான். பொத்தகுட்டனை ஆதரிப்பவர்கள்

இராஜத் துரோகிகள் என்று நாடெங்கும் பறையறைவித்தான். மலயநாட்டுக்குச் சென்ற பொத்தகுட்டன், மேருகுண்டரம் என்னும் ஊரில் இருக்கும் திஸ்ஸன் என்னும் தன் நண்பனிடம் சென்றான். திஸ்ஸன் ஒரு சிற்றரசன், சிங்களவன். இருவரும் நெடுநாளைய நண்பர்கள்; உற்ற உயிர்த் தோழர்கள். திஸ்ஸன், பொத்தகுட்டனை அன்புடன் வரவேற்று இல்லத்தில் இடம் அளித்தான்.

மானவர்மனுடைய ஆட்கள் நாடெங்கும் பொத்த குட்டனைத் தேடுகிறார்கள். திஸ்ஸன் தர்ம சங்கடத்தில் அகப்பட்டான். பொத்தகுட்டனை இல்லத்தில் வைத்திருப்பது இராஜத்துரோகக் குற்றம். நண்பனான பொத்தகுட்டனை ஆபத்துக் காலத்தில் ஆதரிக்காவிட்டால் நண்பனுக்குத் துரோகம் செய்வதாகும். இத்தர்மசங்கடத்துக்கு என்ன செய்வது?

அடுத்த நாள் காலையில் திஸ்ஸன் தன்னந்தனியே அப்பம் அருந்தினான். கிண்ணத்தில் இருந்த தேங்காய்ப் பாலில் ஏதோ மருந்தைக் கொட்டிக் கலக்கினான். அதில் அப்பத்தைத் தொட்டுத் தொட்டு அருந்தினான். பிறகு அருகிலிருந்த படுக்கையில் படுத்தான். சற்று நேரத்திற்குள் பெருந்தூக்கம் தூங்கிவிட்டான்.

பொத்தகுட்டன் நிகழ்ந்த செய்தியை அறிந்தான். விஷயத்தை உணர்ந்தான். திஸ்ஸன் அருந்தி மிகுதி இருந்த தேங்காய்ப் பாலும் அப்பமும் அங்கேயே இருந்தன. அப்பத்தைப் பிட்டுத் தேங்காய்ப் பாலில் தோய்த்து அருந்தினான். அருந்திய பிறகு தன் நண்பன் அருகிலேயே படுத்தான். சற்று நேரத்திற்குள் தன் நண்பனைப் போலவே பெருந்தூக்கம் தூங்கிவிட்டான். முப்பது ஆண்டுகளாக இலங்கை அரசியலில் ஆதிக்கம் செலுத்திய பொத்தகுட்டன் இவ்வாறு முடிவு எய்தினான்.

*கலைக்கதிர்*, மலர் 12, இதழ் 1, 1960

# கொங்கு நாட்டில் பிராஃமி எழுத்துக்கள்

பிலவ ஆண்டு வைகாசித் திங்கள் 13ம் நாள் வெள்ளிக்கிழமை (26-5-1961) பகல் இரண்டு மணிக்கு நாங்கள் கொங்குநாட்டு அரசலூரையடைந்தோம். நாங்கள் என்றால் இக்கட்டுரையாளரும், சீவபந்து ஸ்ரீபால், வித்துவான் செ. இராசு, வித்துவான் பச்சையப்பன், வித்துவான் சென்னியப்பன் அவர்களும் ஆகும். அரசலூர் ஈரோட்டிலிருந்து பழைய கோட்டை வழியாக 12ஆவது கல்லில் இருக்கிறது. வெயில் எரிக்கும் பகல் வேளையில் அவ்வூர் மலையடிவாரத்தை ஒட்டிய காட்டுவழியாக ஒரு மைல் தூரம் நடந்தோம். பாதை இல்லாத காட்டுவழியாகையால் முட்செடி கொடிகளால் இடர்ப்பாடுகள் விளைந்தன. எப்படியோ தட்டித்தடுமாறி மலையின் மற்றொரு புறத்திலிருக்கிற ஆண்டிப்பாறை என்னும் இடத்துக்கு வந்து சேர்ந்தோம். ஆண்டிப்பாறை என்னும் இடம், மலையின் மேலே உள்ள ஒரு பாழி. அதாவது, பொடவு என்று கூறப்படுகிற இயற்கையாக அமைந்த குகை.

இந்தக் குகையிலே மேடுபள்ளமாக இருக்கிற பாறையிலே ஐந்து கற்படுக்கைகளும், மூன்று பிராஃமி எழுத்துச் சாசனங்களும் இருப்பதைக் கண்டோம். கற்படுக்கைகள், இக்குகையிலே முனிவர்கள் வசித்திருந்தார்கள் என்பதைத் தெரிவிக்கின்றன. அந்த முனிவர்கள் பௌத்த முனிவர்களா கவோ, ஜைன முனிவர்களாகவோ இருக்கவேண்டும்.

இந்தக் கற்படுக்கைகளிலே மூன்று சாசனங்கள் பிராஃமி எழுத்தினால் எழுதப்பட்டுள்ளன. சாசனங்கள் சுருக்கமாக இரண்டு வரி, மூன்று வரிகளில் எழுதப்பட்டுள்ளன. இரண்டு சாசனங்களில் எழுத்துக்கள் சிதைந்து காணப்படுகின்றன. ஒரு சாசனம் சிதையாமல் நல்ல நிலையில் இருக்கின்றது. இதிலும் மூன்று நான்கு எழுத்துக்கள் சிறிது சிதைந்துள்ளன. சாசன எழுத்துக்கள் பிராஃமி எழுத்தினால் எழுதப்பட்டிருப்பதனால், ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இந்தச் சாசனங்கள் எழுதப்பட்டிருக்க வேண்டும். பிராஃமி எழுத்துக்கள் தமிழ்நாட்டிலே வழங்கப்பட்டது அசோக

சக்கரவர்த்தி காலத்தில் ஆகும். கி.மு. மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்திலே அசோக சக்கரவர்த்தி காலத்திலே பௌத்த பிக்ஷுக்கள் தமிழ்நாட்டுக்கு வந்தார்கள். அவர்கள் பிராஃமி எழுத்துக்களைத் தமிழ்நாட்டில் புகுத்தினார்கள். பிராஃமி எழுத்துக்கள் தமிழ்நாட்டிலே கி.மு. 2ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. முதல் நூற்றாண்டு வரையில் வழங்கிவந்தன. எனவே, இந்தக் குகையில் பிராஃமி எழுத்துக்கள் காணப்படுவதனாலே, ஏறக்குறைய 2000 ஆண்டுகளுக்கு முன்பு இவ்வெழுத்துக்கள் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்று கருதலாம். படுக்கைகளில் ஓரிடத்தில், ஓர் ஆள் நின்றுகொண்டு கைகளை மார்பில் வைத்து வணங்குவதுபோலக் கோட்டுச் சித்திரம் வரையப் பட்டிருக்கிறது. இன்னோர் இடத்தில் சூலம் போன்ற வடிவம் செதுக்கப்பட்டிருக்கிறது. குகைக்கு வெளியேயுள்ள பெரிய பாறைக் கல்லில் கமண்டலம் போன்ற ஓர் உருவம் செதுக்கப் பட்டிருக்கிறது. அரசாங்க சாசன இலாகாவும் பழம்பொருள் ஆராய்ச்சி இலாகாவும் (எபிகிராபி, ஆர்க்கியாலஜி இலாகாக்கள்) இதுவரையில் இந்த இடத்தைக் கண்டு பிடிக்கவும் இல்லை; எழுத்துக்களைப் படி எடுக்கவும் இல்லை.

இந்த இடத்துக்குப் போக நல்ல பாதை அமைத்து, இந்தக் குகையையும் இதிலுள்ள எழுத்துக்களையும் பாதுகாப்புப் பழம்பொருள்கள் என்று அரசாங்கத்தார் தெரிவிக்கவேண்டும். இந்தப் பிராஃமி எழுத்துக்களில் என்ன சொல்லப்பட்டிருக்கிறது என்பது இன்னும் படிக்கப்படவில்லை. இத்துறையில் வல்லவர்கள் இதனைச் செய்வார்கள் என்று நம்புகிறோம்.

இந்த ஆண்டிப்பாறைக்குச் சற்றுத் தூரத்தில் இதே மலையில் இன்னொரு குகையும் அதில் எழுத்துக்களும் இருக்கின்றனவாம். அந்தக் குகை மிகவும் ஆபத்தான இடத்தில் இருப்பதனால் நாங்கள் அங்குப் போகவில்லை. சமயம் வாய்க்கும்போது மற்றொரு சமயம் போகக்கூடும்.

பாண்டி நாட்டு மலைகளிலே பிராஃமி எழுத்துச் சாசனங்கள் சில முன்னமே கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. ஆனால், கொங்குநாட்டிலே பிராஃமி எழுத்துச் சாசனம் இப்போதுதான் முதன்முதலாகக் கண்டுபிடிக்கப்பட்டது. இந்தச் சாசன எழுத்தையும் குகையையும் பாதுகாப்புச் சட்டத்தின்படி அரசாங்கத்தார் பாதுகாக்கும்படி கேட்டுக்கொள்கிறோம்.

அடுத்த நாள் (27-5-61) நாங்கள் ஈரோடு நகரத்தில் ஒரு பழைய கோவிலைக் கண்டுபிடித்தோம். இந்தக் கோவில் பல்லவ அரசர் காலத்துக் கட்டட அமைப்புப்படி கட்டப் பட்டிருக்கிறது. மண்மூடிப் புதைந்துகிடந்த இந்தக் கோவில் சில காலத்துக்கு முன்பு தோண்டி எடுக்கப்பட்டதாம்.

மகிமாலீசுவரர் கோவில் என்பது இதற்குப் பெயர். இந்தக் கோவில் இருப்பது இதற்கு முன் பலர் அறிந்திருந்தாலும், இக்கோவில் பல்லவ அரசர் காலச் சிற்ப முறைப்படி அமைந்த பழைய கட்டடம் என்பதை ஒருவரும் இதுவரையில் அறியவில்லை.

நாங்கள் சென்று பார்த்தபோது, பல்லவர் காலத்துச் சிற்ப முறைப்படி அமைந்த பழைய கோவில் என்பதைத் தெளிவாக அறிந்தோம். மகாபலிபுரத்துத் 'தர்மராச இரதம்' என்னும் கோவிலின் விமானம் போன்றது இந்தக் கோவிலின் விமானம். இது எட்டுப்பட்டை விமானம். விமானத்தில் அமைந்துள்ள சாலை, பஞ்சரம், கர்ணகூடு முதலிய உறுப்புகளும் பல்லவர் காலத்துச் சிற்ப முறைப்படி அமைந்துள்ளன. துவாரபாலகர் திருவுருவங்களும் பல்லவர் காலத்துச் சிற்ப முறைப்படி அமைந் துள்ளன. பல்லவர் காலத்துக் கோவில்களைப் போலவே இந்தக் கோவில் சுவர்களும் நான்கு அடி அகலமுள்ளவையாக உள்ளன. திருவுண்ணாழிகையில் (கர்ப்பக்கிருகத்தில்) உள்ள சிவலிங்கத் திருவுருவம் மகேந்திரவர்மப் பல்லவ அரசன் காலத்துச் சிவலிங்கம் போன்றும் பெரியதாகவும் இருக்கின்றது.

இந்தக் கோவில் கர்ப்பக்கிருகமும் (திருவுண்ணாழிகையும்) விமானமும் பல்லவர் காலத்துக் கட்டடமாகும். இப்போதுள்ள மகாமண்டபம், முகமண்டபம், அம்மன் கோவில் ஆகியவை பிற்காலத்தில் அமைக்கப்பட்டவை. சுவாமியுள்ள திருவுண்ணாழிகையின் வெளிப்புறத்தில் இருந்த துவாரபாலகர் உருவங்களைப் பிற்காலத்தில் மகாமண்டபத்து வாயில் பக்கத்தில் வைத்திருக்கிறார்கள். கொங்கு நாட்டிலே பல்லவ அரசர் ஆட்சி பரவியதாகத் தெரியவில்லை. ஆனால், பல்லவ சிற்பக்கலை அங்கும் பரவியிருந்தது என்பது இந்தக் கட்டடத் தினால் தெரிகிறது.

ஈரோட்டிலுள்ள இந்த மகிமாலீசுவரர் கோவிலையும் பழம்பொருள் பாதுகாப்புச் சட்டத்தின்படி அரசாங்கத்தார் பாதுகாக்கவேண்டுகிறோம்.

*செந்தமிழ்ச் செல்வி*, சிலம்பு 35, பரல் 10, 1961

# சிறுபாணன் சென்ற பெருவழி

*சிறுபாணாற்றுப்படை* என்பது *பத்துப்பாட்டில்* ஒரு பாட்டு. நல்லூர் நத்தத்தனார் என்னும் புலவர், நல்லியக் கோடன் என்னும் வள்ளலைப் பாடியது *சிறுபாணாற்றுப் படை*. இதில் நல்லியக்கோடனிடம் சென்று பரிசு பெறும்படி நத்தத்தனார் ஒரு பாணனை ஆற்றுப்படுத்துகிறார் (ஆறு - வழி; ஆற்றுப்படுத்தல் - வழிகூறுதல்).

*சிறுபாணாற்றுப்படையின்* பாட்டுடைத் தலைவனாகிய நல்லியக்கோடன், ஓய்மா நாட்டின் அரசன். எயிற்பட்டினம், மாவிலங்கை, கிடங்கில் முதலிய ஊர்கள் இவனுக்கு உரியன. ஆகவே, எயிற்பட்டின நாடன், மாவிலங்கை மன்னன், கிடங்கிற்கோமான் என்று போற்றப்படுகிறான். ஓவியர் குலத்தில் பிறந்தவனாகலின் ஓவியர் பெருமகன் என்றும் கூறப்படுகிறான்.

> தொன்மா விலங்கைக் கருவொடு பெயரிய
> நன்மா விலங்கை மன்னருள்ளும்
> மறுவின்றி விளங்கிய வடுவில் வாய்வாள்
> உறுபுலித் துப்பின் ஓவியர் பெருமகன்
>
> *(சிறுபாண்.* 120 - 122)

என்றும்

> இழுமென ஒலிக்கும் புனலம் புதவிற்
> பெருமா விலங்கைத் தலைவன் சீறியாழ்
> இல்லோர் சொன்மலை நல்லியக் கோடனை *(புறம்* 176)

என்றும் புகழப்படுகிறான்.

நல்லூர் நத்தத்தனார், நல்லியக்கோடனுடைய தலை நகரமான கிடங்கில் என்னும் ஊருக்குச் சிறுபாணனை ஆற்றுப்படுத்திய வழியை ஆராய்ந்து படம் வரைந்து காட்டுவதே இக்கட்டுரையின் நோக்கம். சிறுபாணன், கிடங்கிலை நோக்கிச் சென்ற பெருவழியின் இடையிலே எயிற்பட்டினம், வேலூர், ஆமூர் என்னும் ஊர்கள் இருந்தன.

எயிற்பட்டினம் என்பது கிழக்குக் கடற்கரை ஓரமாக இருந்த ஓர் துறைமுகப் பட்டினம். எயிற்பட்டினத்தைச் சூழ்ந்து மதிற்சுவர் கோட்டையாக அமைந்திருந்தது. ஆகவே, இது

எயிற்பட்டினம் என்றும் சோபட்டினம் என்றும் பெயர் பெற்றிருந்தது (எயில் என்றாலும் சோ என்றாலும் மதில் என்பது பொருள்).

பாடல் சான்ற நெய்தல் நெடுவழி
மணிநீர் வைப்பு மதிலொடு பெயரிய
பனிநீர்ப் படுவிற் பட்டினம் *(சிறுபாண்.* 151-153)

என்று இப்பட்டினம் கூறப்படுகிறது.

கடல் ஓரமாக நெய்தல் நிலத்திலே இருந்த எயிற் பட்டினத்துக்கு மேற்கே குறிஞ்சி நிலத்திலே, நல்லியக் கோடனுடைய தலைநகரமான கிடங்கில் என்னும் ஊர் இருந்தது. இதனை,

குறிஞ்சிக் கோமான் கொய்தளிர்க் கண்ணிச்
செல்லிசை நிலைஇய பண்பின்
நல்லியக் கோடன்

*(சிறுபாண்.* 267 - 269)

என்று *ஆற்றுப்படை* கூறுகிறது.

நெய்தல் நிலத்து எயிற்பட்டினத்துக்கும் குறிஞ்சி நிலத்துக் கிடங்கிலுக்கும் இடையிலே வேலூர், ஆமூர் என்னும் ஊர்கள் இருந்தன. இவ்வூர்கள் எல்லாம் ஓய்மா நாட்டில் அடங்கி யிருந்தன. ஓய்மா நாடு என்பது இப்போதைய தென் ஆர்க்காடு மாவட்டத்தில் திண்டிவனம் தாலுகாவில் இருந்தது.

சிறுபாணன் சென்ற பெருவழியைப் பார்ப்பதற்கு முன்னர் நத்தத்தனார் இருந்த ஊரை அறிய வேண்டும். இவர் நல்லூர் நத்தத்தனார் என்று கூறப்படுகிறார். தமிழ்நாட்டிலே நல்லூர் என்னும் பெயருள்ள ஊர்கள் பல உள்ளன. நத்தத்தனர்ர் இருந்த நல்லூர் எது என்று இடர்ப்படாதபடி, இடைகழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் என்று கூறப்படுகிறார்.

இடைகழி நாடு என்பது எது? இடைகழி நாடு இப்போது எடக்கு நாடு என்று வழங்கப்படுகிறது. எடக்கு நாடு என்பது இடைகழி நாடு என்பதன் திரிபு. இடைகழி நாடாகிய எடக்கு நாடு, செங்கற்பட்டு மாவட்டத்தில் மதுராந்தகம் தாலுகாவில் இருக்கிறது. இந்த எடக்கு (இடைகழி) நாட்டிலே இப்போதும் ஒரு நல்லூர் என்னும் சிற்றூர் இருக்கிறது. இந்த இடைகழி நாட்டு நல்லூரிலே நத்தத்தனார் என்னும் புலவர் வாழ்ந்த வராதல் வேண்டும். இடைகழி நாட்டுக்கு அண்மையிலே, தெற்குப் பக்கத்திலே நல்லியக்கோடனுடைய ஓய்மா நாடு இருந்தது.

இனி, நத்தத்தனார் சிறுபாணனை ஆற்றுப்படுத்திய பெருவழியைக் காண்போம். இடைகழி நாட்டு நல்லூரிலிருந்து

தெற்கே சென்றால், ஓய்மா நாட்டின் கிழக்குப் பகுதியாகிய பட்டின நாட்டை அடையலாம். பட்டின நாடு கடற்கரையைச் சார்ந்த நாடு. பட்டின நாட்டிலே கடற்கரை ஓரமாக எயில் (சோ) பட்டினமும் துறைமுகமும் இருந்தன. ஓய்மா நாட்டின் கடற்கரைப் பகுதியாகிய பட்டின நாடு, பெரும்பான்மையும் நீரும் நிலமுமாக அமைந்திருந்தபடியினாலே, அது மாவிலங்கை என்று பெயர் பெற்றது.

கடற்கரை ஓரமாக நீரும் நிலமும் ஆக அமைந்த இடம் இலங்கை என்று பெயர் பெறும். ஆறுகள் கடலில் கலக்கிற இடத்தில் கிளைகளாகப் பிரிந்து இடையிடையே நீரும் திடலுமாக அமைவது உண்டு. அன்றியும் காயல் என்னும் பெயருள்ள நீர்த்தேக்கமும் கடற்கரை ஓரமாக அமைவதும் உண்டு. இவ்வாறு நீரும் திடலுமாக அமைந்த இடத்தை லங்கா (இலங்கை) என்று ஆந்திர நாட்டவர் இன்றும் வழங்குவர். நீரும் திடலுமாக அமைந்திருந்த பட்டின நாடு, மாவிலங்கை என்றும் பெயர் பெற்றிருந்தது. (லங்கா அல்லது இலங்கை என்பது பழைய திராவிட மொழிச் சொல் எனத் தோன்று கிறது). இப்போதும் ஓய்மா நாட்டு மாவிலங்கைப் பகுதியில் ஏரிகளும் ஓடைகளும் உப்பளங்களும் காணப்படுகின்றன.

ஓய்மா நாட்டின் கடற்கரைப் பகுதியாகிய பட்டின நாட்டிலே (மாவிலங்கையிலே), கடற்கரை ஓரத்தில் எயில் (சோ) பட்டினம் இருந்ததென்று கூறினோம். பண்டைக் காலத்தில் இருந்த எயிற்பட்டினம் இப்போது மறைந்து விட்டது. அந்த இடத்தில் இப்போது மரக்காணம் என்னும் ஊர் இருக்கிறது. இவ்வூரில் பிற்காலச் சோழர்களின் சாசன எழுத்துக்கள் காணப்படுகின்றன. இந்தச் சாசனங்களிலே, 'ஓய்மா நாட்டுப் பட்டின நாட்டு மரக்காணம்' என்றும் 'ஓய்மா நாட்டுப் பட்டின நாட்டு பட்டினம்' என்றும் 'பட்டின நாட்டு எயிற்பட்டினம்' என்றும் இவ்வூர் கூறப்படுகிறது. எனவே, பழைய எயிற்பட்டினந்தான் பிற்காலத்தில் மரக்காணம் என்று பெயர் பெற்றது என்று கருதலாம். இலக்கண விளக்கப் பரம்பரை சோமசுந்தர தேசிகர் அவர்கள் இப்போதைய கூடலூர்தான் பழைய எயிற்பட்டினம் என்று கருதுகிறார் (Identification of Sopatama by S. S. Desikar, pp. 129-140, *Quarterly Journal of the Mythic Society,* Vol. XXI). அது தவறு. கூடலூர் துறைமுகம் பிற்காலத்திலே, ஐரோப்பிய வர்த்தகர்களால் அமைக்கப்பட்ட துறைமுகமாகும். ஆகவே, கூடலூரைப் பழைய எயிற்பட்டினம் என்று கூறுவது தவறாகும்.

இடைகழி நாட்டு நல்லூரிலிருந்து புறப்பட்டுச் சென்ற சிறுபாண்ன், ஓய்மா நாட்டுத் துறைமுகப் பட்டினமாகிய எயிற்

பட்டினத்துக்குச் சென்றான்; சென்றவன் அங்குத் தங்கினான். பிறகு அங்கிருந்து புறப்பட்டுத் தென்மேற்கே நெடுவழியே நடந்தான். நெடுந்தூரம் நடந்து வேலூர் என்னும் ஊரை யடைந்தான். இது முல்லை நிலத்தில் இருந்த ஊர்.

திறல்வேல் நுதியின் பூத்த கேணி
விறல்வேல் வென்றி வேலூர் எய்தின்
உறுவெயிற் குலைஇய வுருப்பவிர் குரம்பை
எயிற்றியர் அட்ட இன்புளி வெஞ்சோறு
தேமா மேனிச் சில்வளை ஆயமொடு
ஆமான் சூட்டின அமைவரப் பெறுகுவிர்.

*(சிறுபாண். 172-179)*

என்று நத்தத்தனார் இந்த வேலூரைப் பாணனுக்கு அறிமுகப் படுத்துகிறார்.

இந்த வேலூரை, வட ஆர்க்காடு மாவட்டத்தில், காட்பாடி ரயில் நிலயத்துக்கு அருகில் உள்ள வேலூர் என்று இலக்கண விளக்கப் பரம்பரை சோமசுந்தர தேசிகர் அவர்கள் கருதுகிறார் (Identification of Sopatama by S. S. Desikar, pp. 129 - 140, *Quarterly Journal of the Mythic Society,* Vol. XXI). இது தவறு. நத்தத்தனார் கூறுகிற வேலூர், தென் ஆர்க்காடு மாவட்டத்தில் ஓய்மா நாட்டில் இருக்கிறது. தேசிகர் கூறும் வேலூர், வட ஆர்க்காடு மாவட்டத்தில் வேறோர் இடத்தில் இருக்கிறது. இரண்டு ஊர்களும் வெவ்வேறிடங்களில் உள்ள வெவ்வேறு ஊர்கள். நத்தத்தனார் கூறும் வேலூர் அக்காலத்தில் சிறப் புற்றிருந்தது. இப்போது குக்கிராமமாக இருக்கிறது. இப்போது வட ஆர்க்காடு மாவட்டத்தில் புகழ் பெற்று விளங்கும் வேலூர் அக்காலத்தில் இருந்ததா என்பது ஐயத்துக்கிடமாக இருக்கிறது. சிறுபாணன் சென்ற வேலூர், தென் ஆர்க்காடு மாவட்டத்தில் திண்டிவனம் தாலுகாவில், கிடங்கிலுக்கும் எயிற்பட்டினத் திற்கும் இடைவழியில் இப்போது குக்கிராமமாக இருக்கிற வேலூரே என்பதில் சிறிதும் ஐயம் இல்லை. இந்த வேலூர்* ஓய்மா நாட்டு வேலூர் என்று பெயர் பெற்றிருந்தது. இந்த வேலூரின் தலைவன் 'ஓய்மா நாட்டு வேலூருடையான்' என்று ஒரு சாசனத்தில் கூறப்படுகிறான் (No. 25, *S. I. I.* Vol. XIII).

---

* இந்த ஊர் தற்போது, உப்பு வேலூர் என்ற பெயரில் திண்டிவனத்திலிருந்து 23 கிமீ. தென்கிழக்கே அமைந்துள்ளது. கிபி. 15ஆம் நூற்றாண்டிலிருந்தே சமண சமய முக்கியத்துவம் வாய்ந்த ஊர் இது. தமிழ்நாட்டின் ஒரே சமண மடமான மேல் சித்தாமூர் மடத்தைத் தோற்றுவித்த வீரசேனாச்சாரியார் இவ்வூரைச் சேர்ந்தவர் என்பது குறிப்பிடத்தக்கது. (ப-ர்)

வேலூரில் தங்கிய சிறுபாணன், அவ்வூரிலிருந்து புறப்பட்டு வடமேற்காகச் செல்லும் பெருவழியே சென்றான். சென்று மருத நிலத்தில் உள்ள ஆமூர் என்னும் ஊரை யடைந்தான்.

மருதஞ் சான்ற மருதத் தண்பணை
அந்தணர் அருகா அருங்கடி வியநகர்
அந்தண் கிடங்கின் அவனாமூ ரெய்தின்
வலம்பட நடக்கும் வலிபுணர் எருத்தின்
உரன்கெழு நோன்பகட் டுழவர் தங்கை
பிடிக்கை யன்ன பின்னுவீழ் சிறுபுறத்துத்
தொடிக்கை மகடூஉ மகமுறை தடுப்ப
விருங்கா முலக்கை யிருப்புமுகந் தேய்த்த
வவைப்பு மாணரிசி யமலைவெண் சோறு
கவைத்தாள் அலவன் கலவையொடு பெருகுவிர்.

(*சிறுபாண்.* 186-195)

என்று சிறுபாணனுக்கு ஆமூரில் கிடைக்கக்கூடிய உணவைக் கூறுகிறார் நத்தத்தனார்.

இந்த ஆமூர் எது என்பது தெரியவில்லை. நல்லாமூர் என்று பெயருள்ள ஊர் ஒன்று இருக்கிறது. இந்த நல்லாமூர் சிறுபாணாற்றுப்படை கூறுகிற ஆமூராக இருக்கக்கூடும். பழைய ஆமூரும் இப்போதைய நல்லாமூரும் ஒரே ஊராக இருக்கக்கூடும். ஏனென்றால் இந்த நல்லாமூர் கிடங்கிலுக்கு அருகில் இருக்கிறது.

ஆமூரிலிருந்து புறப்பட்டு மேற்கே நெடுவழியே சென்றால், கடைசியில் நல்லியக்கோடனுடைய கிடங்கில் என்னும் ஊரையடையலாம் என்று *சிறுபாணாற்றுப்படை* கூறுகிறது.

எனவே, கிடங்கிலுக்குச் சிறுபாணன் சென்ற பெருவழி அல்லது நத்தத்தனார் சென்ற பெருவழி இது: இடைகழிநாட்டு நல்லூரிலிருந்து புறப்பட்டு, இப்போதைய மரக்காணமாகிய எயிற்பட்டினத்துக்குப் போய் அங்கிருந்து வேலூருக்குச் சென்று, அங்கிருந்து புறப்பட்டு ஆமூரை அடைந்து, ஆமூரிலிருந்து கிடங்கிலையடைந்தார் என்பது தெரிகிறது (படம் காண்க).

கிரேக்க ஆசிரியரின் குறிப்புகள்: யவனராகிய கிரேக்கர் கி. மு. முதல் நூற்றாண்டிலிருந்து கி. பி. 2ஆம் நூற்றாண்டு வரையில் தமிழகத்துடன் வாணிபம் செய்தனர். கிரேக்க நூலாசிரியர்கள், தமிழ் நாட்டிலிருந்த அக்காலத்துத் துறைமுகப் பட்டினங்களைப் பற்றியும் எழுதி இருக்கிறார்கள். அவற்றுள் சோ பட்டினமாகிய எயிற்பட்டினமும் குறிக்கப் பட்டிருக்கிறது.

பெரிப்ளஸ் என்னும் நூலாசிரியர், தமிழகத்தின் கிழக்குக் கடற்கரையில் கமரா (Camara), பொடுகா (Poduca), சோபட்மா (Sopatma) என்னும் துறைமுகப் பட்டினங்களைக் குறிப்பிடு கிறார்.

செங்கல்பட்டு மாவட்டம்

மதுராந்தகம் தாலுகா

இடைவழி நாடு

தென் ஆர்க்காடு மாவட்டம்

பெரிபுளூஸ் சென்ற பெருவழி

டாலமி என்னும் கிரேக்க நூலாசிரியரும் காமரா (Kamara), போடுகே (Poduke), மேலங்கே (Melenge) என்னும் துறைமுகப் பட்டினங்களைக் கூறுகிறார்.

பெரிப்ளசும், டாலமியும் கூறுகிற கமரா என்னும் பட்டினம் சோழநாட்டில் பேர்பெற்றிருந்த காவிரிப்பூம் பட்டினம் (பூம்புகார்ப் பட்டினம்) ஆகும்.

பொடுகா என்றும் பொடுகே என்றும் அவர்கள் குறிப்பிடுகிற துறைமுகத்தைச் சிலர், இப்போதுள்ள புதுச்சேரி என்று கருதுகிறார்கள். இது தவறு எனத் தோன்றுகிறது. புதுச்சேரி பழைய துறைமுகப்பட்டினம் அல்ல. கி. பி. 17ஆம் நூற்றாண்டில் பிரெஞ்சுக்காரரால் புதுச்சேரி துறைமுகப் பட்டினமாக்கப்பட்டது. எனவே, புதுச்சேரி பழைய துறைமுகம் அல்ல. பொடுகா அல்லது பொடுகே என்று கிரேக்க நூலாசிரியர் குறிப்பிட்ட இடம், புதுச்சேரிக்கு அருகிலே, தெற்குப்பக்கத்தில் கடற்கரை ஓரமாக உள்ள அரிக்கமேடு என்னும் இடமாக இருக்கவேண்டும். அரிக்கமேட்டை அண்மைக் காலத்தில் அகழ்ந்து பார்த்தபோது, அது கி.பி. முதல் நூற்றாண்டில் இருந்த துறைமுகப்பட்டினம் என்பது தெரிந்தது. அங்கிருந்து கண்டெடுக்கப்பட்ட பொருள்கள், அங்கு யவன வாணிகர் தங்கியிருந்ததையும் அது துறைமுகப்பட்டினமாக இருந்தது என்பதையும் தெளிவாகக் காட்டுகின்றன. இது பற்றி *பண்டைய இந்தியா* என்னும் ஆங்கில வெளியீட்டில் விபரமாக அறியலாம் (Arikamedu: An Indo-Roman Trading Station on the East Coast of India By R. E. M. Wheeler, A. Ghosh, and Krishna Deva, pp. 17-124, *Ancient India,* No. 2, 1946).

இதற்கு வடக்கே இருந்தது சோபட்மா என்னும் துறைமுகப்பட்டினம் என்று பெரிப்ளஸ் நூலாசிரியர் குறிப்பிடுகிறார். சோபட்மா என்பது சோபட்னா என்பதன் திரிபு. சோபட்னா என்பது சோபட்டினம் ஆகும். அதாவது எயிற்பட்டினம். சோ என்றாலும் எயில் என்றாலும் மதில் என்பது பொருள். மதில் சூழ்ந்த கோட்டைக்குள் அமைந் திருந்தபடியால் எயிற்பட்டினம் என்றும் சோபட்டினம் என்றும் பெயர் பெற்றிருந்தது.

எயிற்பட்டினமாகிய சோபட்டினத்தை டாலமி என்பவர் மேலங்கே என்று கூறுகிறார். மேலங்கே என்பது *சிறுபாணாற்றுப்படை* கூறுகிற மாவிலங்கை ஆகும். ஓய்மா நாட்டின் கடற்கரைப் பகுதிக்குப் பட்டினநாடு என்பது பெயர். பட்டின நாட்டில் நீரும் திடலும் அதிகமாகக் காணப்பட்ட படியால் அப்பகுதி மாவிலங்கை என்று பெயர் பெற்றிருந்தது

என்று மேலே கூறினோம். டாலமி ஆசிரியர் மேலங்கே என்று கூறுகின்ற மாவிலங்கை, மாவிலங்கையில் இருந்த எயில் (சோ) பட்டினந்தான் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

கி.பி. 7ஆம் நூற்றாண்டில் தமிழ்நாட்டுக்கு வந்த யுவாங்சுவாங் என்னும் சீன நாட்டு யாத்திரிகர், பல்லவ அரசர்களின் துறைமுகப் பட்டினமாகிய மாமல்லபுரத்தைக் கூறும்போது, அது காஞ்சிபுரத்தைச் சேர்ந்திருந்தபடியால், காஞ்சிபுரத் துறைமுகம் என்று கூறியிருப்பது இங்குக் கருதத் தக்கது. அதுபோலவே மாவிலங்கையிலிருந்த எயிற்பட்டினம் என்னும் துறைமுகத்தை டாலமி, மேலங்கே என்று குறிப்பிட்டுள்ளார்.

பெரிப்ளஸ் கூறுகிற சோபட்மா என்பதும், டாலமி கூறுகிற மேலங்கே என்பது ஐயமில்லாமல் சோபட்டினமாகிய எயிற்பட்டினம் என்பது தெளிவாகிறது. எயிற்பட்டினம் இப்போது மரக்காணம் என்று பெயர் பெற்றிருக்கிறது என்பதை மேலே கூறியுள்ளேன்.

குறிப்பு: கிடங்கில் என்னும் ஊரிலிருந்து மரக்காணத்திற்கு (எயில் பட்டினத்துக்கு)ச் செல்லும் நேர்வழி ஒன்று இப்போது இருக்கிறது. இப்பெருவழியைப் புள்ளிக் கோட்டினால் படத்தில் காட்டியுள்ளேன். இந்தப் பெருவழி *சிறுபாணாற்றுப் படை* காலத்தில் இருந்ததாகத் தெரிய வில்லை. இது பிற்காலத்தில் அமைந்த வழியாக இருக்கலாம். பழைய சாலைகள் மறைந்து போவதும் புதிய சாலைகள் புதிதாகத் தோன்றுவதும் இயற்கையே. உதாரணமாக மாமல்லபுரத்தி லிருந்து நேரே காஞ்சிபுரத்திற்குச் சென்ற பழைய பல்லவர் காலத்துப் பெருவழி, இக்காலத்தில் முழுவதும் மறைந்து போய், புதிய சாலைகள் தோன்றி யிருப்பதைக் காண்கிறோம்.

*சிறுபாணாற்றுப்படையில்* கூறப்படுகிற ஊர்களைக் கொண்டும் நாட்டுப் படத்தில் காணப்படுகிற அவ்வூர்களின் அமைப்பைக் கொண்டும், இந்தப் படமும் கட்டுரையும் எழுதப்பட்டன. இதனை ஆராய்ந்து பார்த்து இது சரியா தவறா என்பதை முடிவுசெய்வது வாசகர் கடமையாகும்.

*Tamil Culture*, Vol. IX, No.1, Jan - Mar, 1961

# தமிழ் நாட்டில் யவனர்

ஐரோப்பாக் கண்டத்தின் தென்பகுதியில், மத்திய தரைக்கடல் ஓரத்தில் கிரேக்க நாடு இருக்கிறது. கிரேக்க நாட்டுக் கிரேக்கர்கள் பண்டைக் காலத்திலே வீரத்திலும் பண்பாட்டிலும் கல்வியிலும் கலையிலும் சிறப்படைந் திருந்தார்கள். அவர்கள் வளர்த்த சிற்பக் கலைகள் (கட்டடக் கலையும் உருவங்களை அமைக்கும் கலையும்) உலகப் புகழ் பெற்றவை. அது போலவே அவர்கள் மரக்கலம் அமைப் பதிலும் அவற்றைக் கடலில் ஓட்டிக் கப்பல் பிரயாணம் செய்வதிலும் பேர் பெற்றிருந்தார்கள்.

கிரேக்க நாட்டின் ஒரு பகுதிக்கு அயோனியா (Ionia) என்று பெயர். அயோனிய கிரேக்கருக்கு அயோனியர் என்று பெயர். அயோனியர், தமிழில் யவனர் என்று அழைக்கப்பட்டனர். ஆகவே யவனர் என்றால், கிரேக்கர் என்பது பொருளாகும். சுதந்தரமாக நல்வாழ்வு வாழ்ந்திருந்த யவனர்களாகிய கிரேக்கர்கள், பிற்காலத்தில், அவர்களுக்குப் பக்கத்து நாடாகிய இத்தாலி நாட்டுக்குக் கீழடங்கியிருந்தார்கள். இத்தாலி நாட்டின் உரோம சாம்ராச்சியம் ஒரு காலத்தில் ஐரோப்பாக் கண்டத்தில் மிகப் புகழ் பெற்றிருந்தது. கிரேக்கராகிய யவனர், உரோம சாம்ராச்சியத்திற்குக் கீழடங்கியபோதிலும், கல்வி, பண்பாடு, கலை முதலியவற்றில் முன்போலவே மேம்பட்டிருந்தார்கள். உரோமர்கள், கப்பல் படைகளை வைத்திருந்தது உண்மைதான். ஆனாலும், அவர்கள் கிரேக்கர்களாகிய யவனர்களைப் போலச் சிறந்த நாவிகர்கள் அல்லர். உரோம சாம்ராச்சிய காலத்திலும் யவனர்கள்தாம் கப்பல் வாணிகராகவும் நாவிகர்களாகவும் திகழ்ந்தார்கள்.

கி.மு. 4ஆம் நூற்றாண்டில் கிரேக்க மன்னனான மகா அலக்சாந்தர் என்பவன் கிழக்கே சிந்து நதிக்கரை வரையில் உள்ள நாடுகளை வென்றான். அவன், எகிப்து தேசத்திலே நீலநதி மத்தியதரைக் கடலில் கலக்கிற இடத்திலே அலக்சாந்திரியம் என்னும் துறைமுகத்தை அமைத்தான். அந்தத் துறைமுகப்பட்டினம் பிற்காலத்தில் உலகப் புகழ் பெற்று விளங்கிற்று. கிரேக்கராகிய யவனர்கள், அலக் சாந்திரியத் துறைமுகப்பட்டினத்திலே குடியேறியிருந்தார்கள்.

உரோம சாம்ராச்சிய காலத்தில், அராபியர்கள் செங்கடல் வழியாக எகிப்து, கிழக்கு ஆப்பிரிக்கா நாடுகளில் வாணிகம் செய்தார்கள். ஆனால், பெரிய சாம்ராச்சியத்தை வைத்திருந்த உரோமர்கள் அராபியரின் வாணிகத்தைத் தடுத்துச் செங்கடல் துறைமுகங்களைக் கைப்பற்றித் தங்கள் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டு வந்தார்கள். அதன் காரணமாக, உரோம சாம்ராச்சியத்திற்குக் கீழடங்கிய துறைமுகப் பட்டினங்களின் மேற்பார்வைக்காரரர்களாகச் சில அலுவலாளர்களை நியமித் தார்கள். அவ் அலுவலாளர்கள் பெரும்பாலும் கிரேக்கராகிய யவனர்களாக இருந்தார்கள்.

யவனர்கள் ஆப்பிரிக்காக் கண்டத்திற்கும் அரபி தேசத்துக்கும் இடையில் உள்ள கடலை எரித்ரை கடல் (Maris Erythraci) என்று பெயரிட்டனர். எரித்ரை கடல் என்றால் செங்கடல் என்பது பொருள். பிறகு, யவனர்கள் அரபி நாட்டின் கடற்கரை ஓரமாகவும் பாரசீக வளைகுடாவின் கடற்கரை ஓரமாகவும் வந்தார்கள். பிறகு, இந்தியா தேசத்தின் மேற்குக் கரை ஓரமாக உள்ள துறைமுகப் பட்டினங்களுக்கு வந்தார்கள். அவர்கள் பாரசீக வளைகுடாவிற்கும், மேற்குக் கடலுக்கும் (அரபிக் கடல்) எரித்ரை கடல் (செங்கடல்) என்றே பெயரிட்டார்கள். அரபிக் கடலைக் கடந்து குமரிக் கடலுக்கும் (இந்துமகா சமுத்திரம்), கீழ்க்கடலுக்கும் (வங்காள விரிகுடா) வந்தார்கள். யவனர்கள் இந்தக் கடல்களுக்கும் எரித்ரை கடல் (செங்கடல்) என்றே பெயரிட்டழைத்தார்கள்.

அக்காலத்தில் யவனர்கள் கப்பல்களை நடுக்கடலில் ஓட்டிப் பிரயாணம் செய்யவில்லை; கரை ஓரமாகவே பிரயாணம் செய்தார்கள். கரை ஓரமாகக் கப்பல் பிரயாணம் செய்வது உயிருக்கும் பொருளுக்கும் பாதுகாப்பாக இருந்தது. எனினும் கப்பல் பிரயாணம் செய்துமுடிக்க நெடுங்காலம் ஆயிற்று.

ஆனால், இந்தியர்களும் அராபியரும் நடுக்கடலில் பாய் விரித்துக் கப்பல் ஓட்டிப் பிரயாணம் செய்தார்கள். இவர்கள் பருவக் காற்றைப் பயன்படுத்திக் கொண்டார்கள். பருவக் காற்றைப் பயன்படுத்திக் கப்பல்களை நடுக்கடலில் ஓட்டிப் பிரயாணத்தை விரைவாக முடித்துக்கொள்ளும் இரகசியத்தை யவனர்கள் ஆதிகாலத்தில் அறியவில்லை. ஆனால், கி. பி. முதல் நூற்றாண்டின் தொடக்கத்தில் இப்பலஸ் (Hippalus) என்னும் பெயருள்ள யவனக் கப்பல் நாவிகன், தென்மேற்குப் பருவக் காற்றின் உதவியினால் அரபிக் கடலின் நடுவில் பிரயாணம் செய்து வெகுவிரைவில் சேரநாட்டுத் துறைமுகத்துக்கு வந்தான். அது முதல், யவனர்களும் நடுக்கடலில் கப்பல் பிரயாணம்

செய்யத் தொடங்கினார்கள். அவர்கள் பருவக் காற்றுக்கு இப்பலஸ் என்பவன் பெயரையே பெயராக வழங்கினார்கள். இப்பலஸ் பருவக்காற்று கண்டுபிடிக்கப்பட்ட பிறகு யவன வியாபாரம் தமிழ்நாட்டுடன் அதிகமாகவும் விரைவாகவும் நடைபெற்றது.

யவனர்கள் தமிழ்நாட்டுடன் கப்பல் வாணிகத் தொடர்பு கொண்டது கி. மு. முதல் நூற்றாண்டில். இந்த வியாபாரத் தொடர்பு கி.பி. மூன்றாம் நூற்றாண்டு வரையில் நீடித்திருந்தது. அதாவது, கடைச் சங்க காலத்தில், கிரேக்கராகிய யவனர் தமிழ்நாட்டுடன் வாணிகத் தொடர்பு கொண்டிருந்தனர். அவர்கள் சேர, சோழ, பாண்டிய நாடுகளில் அக்காலத்தில் இருந்த முக்கியமான துறைமுகப் பட்டினங்களில் வந்து வியாபாரம் செய்தார்கள். அக்காலத்தில், மேற்குக் கரை யோரமாக இருந்த சேர நாட்டில் மலையாள மொழி தோன்ற வில்லை; தமிழ் மொழி வழங்கிற்று. சேர நாட்டின் தலைநகர மாயிருந்த வஞ்சிப்பட்டினத்துக்கு அருகில் இருந்த முசிறிப் பட்டினம், தொண்டி, வக்கரை முதலிய துறைமுகங்களிலும், பாண்டி நாட்டிலிருந்த குமரித் துறைமுகம் கொற்கைத் துறைமுகம் முதலிய துறைமுகங்களிலும், சோழநாட்டுக் காவிரிப்பூம்பட்டினம் முதலிய துறைமுகங்களிலும், தொண்டை நாட்டுச் சேரபட்டினம் (மாவிலங்கை) முதலிய துறைமுகங் களிலும் யவனர்கள் கப்பலில் வந்து வியாபாரம் செய்தார்கள். தமிழ்நாட்டுக்கு அருகில் உள்ள இலங்கையுடனும் வியாபாரம் செய்தார்கள்.

தமிழரின் கப்பல்களும், பாரதநாட்டு ஏனையோரின் கப்பல்களும், அராபியரின் கப்பல்களும் அக்காலத்தில் நடுக்கடலிலும் செல்லத்தக்க தரமுடையனவாக இருந்த போதிலும், அவை யவனருடைய கப்பல்களைப் போலச் சிறந்த வேலைப்பாடுடையவையல்ல. யவனக் கப்பல்கள் நல்ல வேலைப்பாடும் உறுதியும் அழகும் உள்ளனவாக இருந்தன. யவனரின் நல்ல கப்பல்களைக் கண்ட சங்கப் புலவராகிய தாயங்கண்ணனார் என்னும் புலவர் “யவனர் தந்த வினைமாண் நன்கலம்” (*புறம்* 149) என்று புகழ்ந்திருக்கிறார். மற்றொரு சங்கப் புலவராகிய நக்கீரர் என்னும் புலவரும் “யவனர் நன்கலம்” என்று புகழ்ந்திருக்கிறார் (நெடுநல்வாடை).

யவனர்கள் தமிழ்நாட்டிலிருந்து முக்கியமாக மிளகு, முத்து, நவமணிகள், அகில், சந்தனக்கட்டை முதலிய பொருள் களையும், இலங்கையிலிருந்து இலவங்கம், இலவங்கப்பட்டை, ஜாதிக்காய் முதலிய பொருள்களையும் வாங்கிக்கொண்டு போனார்கள். அவர்கள் பண்டமாற்று வியாபாரம் செய்ய

வில்லை. பொன்னைக் கொடுத்துப் பொருள்களை வாங்கிக் கொண்டு போனார்கள். இதனால் உரோமாபுரியிலிருந்து நாணயங்கள் நமது நாட்டில் குவிந்தன. உரோமாபுரியிலிருந்த அறிஞர்கள், தங்கள் நாட்டிலிருந்து வாணிகத்தின் மூலமாகத் தமது நாட்டுப் பொன் அயல் நாடுகளுக்குச் செல்வதைப் பற்றி அக்காலத்தில் முறையிட்டிருக்கிறார்கள். யவனர்கள் வியா பாரத்தின் பொருட்டுக் கொண்டுவந்த உரோம நாட்டு நாணயக் குவியல்கள், சமீப காலத்தில் தமிழ்நாட்டின் பல இடங்களிலும் இலங்கையிலும் பூமியிலிருந்து தோண்டி எடுக்கப்பட்டுள்ளன.

தமிழ்நாட்டுத் துறைமுகப்பட்டினங்களிலே யவன வியாபாரிகள் தங்கியிருக்க விடுதிகள் இருந்தன. அன்றியும் யவன வீரர்கள் பாண்டியனுடைய மதுரைக் கோட்டை வாயில்களைக் காவல் காத்தனர் என்னும் செய்தியைச் *சிலப்பதிகாரம்*, *நெடுநல்வாடை* முதலிய நூல்களிலிருந்து அறிகிறோம். சங்கச் செய்யுளில் காணப்படாத செய்தியொன்று அண்மைக் காலத்தில் தெரியவந்தது. அது, புதுச்சேரிக்கு அருகில் உள்ள அரிக்கமேடு என்னும் இடத்தில் யவனர்களின் பண்டகசாலை இருந்தது என்பதாகும். பிரெஞ்சு நாட்டுத் தொல்பொருள் ஆராய்ச்சியாளர் ஒருவர் தற்செயலாக அரிக்கமேட்டில் யவனர்களின் பண்டகசாலை இருந்ததைக் கண்டுபிடித்தார். பிறகு தொல்பொருள் துறை அதிகாரிகள் அந்த இடத்தை நன்கு தோண்டிப் பார்த்தனர். அங்கு யவனர்கள் வைத்திருந்த பீங்கான்களும் மட்கலங்களும் பிராமி எழுத்து எழுதப்பட்ட பானை ஓடுகளும் பிற பொருள்களும் காணப்பட்டன. இந்த ஆதாரங்களைக் கொண்டு கி. பி. முதல் நூற்றாண்டிலே, புதுச்சேரிக்கு அருகில் உள்ள கடற்கரையோரத்திலே யவனர் களின் பண்டகசாலை இருந்த செய்தி அறியப்பட்டது (Arikamedu: An Indo - Roman Trading Station on the East Coast of India, pp. 17-24, *Ancient India*, No. 2).

அகஸ்தஸ் ஸீஸர் என்னும் உரோமச் சக்கரவர்த்தியின் பேரால், முசிறித் துறைமுகத்தின் அருகில் யவனர்கள் ஒரு கோயிலை அமைத்திருந்தார்கள். அந்தக் கோயிலும் முசிறித் துறைமுகமும், பெரியாற்று வெள்ளப்பெருக்கினால் அழிந்து விட்டன. யவனர்களின் ஓதிம விளக்குகளும் பாவை விளக்கு களும் தமிழ்நாட்டுச் சீமான்களின் மாளிகைகளில் அக் காலத்தில் உபயோகப்படுத்தப்பட்ட செய்தியைத் தமிழ் இலக்கியங்களிலிருந்து அறிகிறோம்.

ஏறக்குறைய கி. பி. மூன்றாம் நூற்றாண்டில் யவனரின் தமிழ்நாட்டு வாணிகத் தொடர்பு நின்று விட்டது. கி. மு. முதல்

நூற்றாண்டிலிருந்து கி.பி. மூன்றாம் நூற்றாண்டு வரையில், ஏறக்குறைய முந்நூறு ஆண்டுகளாக யவனர் தமிழ்நாட்டுடன் வாணிகத் தொடர்பு கொண்டிருந்த காரணத்தினாலே, யவன (கிரேக்க) மொழிச் சொற்கள் சில தமிழில் கலந்திருக்க வேண்டும். ஏனென்றால், ஒரு நாட்டார் மற்ற நாட்டாருடன் தொடர்பு கொள்ளும்போது, அவர்களின் மொழிச் சொற்கள் மற்ற மொழியுடன் கலப்பது இயற்கை. இந்த இயற்கை, இறந்துபோய் வழக்கிலில்லாத மொழியைவிட, பேச்சு வழக்கில் உள்ள மொழிகளுக்கு மிகவும் பொருத்தமாகும், தமிழ் மொழியில் கலந்துள்ள கிரேக்க மொழிச் சொற்கள் எவை என்று இன்னும் நன்கு ஆராயப்படவில்லை. தமிழ் மொழியில் பேச்சு வழக்கில் கலந்த கிரேக்க மொழிச் சொற்கள் பல இருந்திருக்க வேண்டும். தமிழ் இலக்கியத்தில் கலந்துள்ள கிரேக்க மொழிச் சொற்கள் முழுவதும் ஆராயப்படவில்லை. இப்போது தெரிந்தவரையில், தமிழில் கலந்துள்ள கிரேக்க மொழிச் சொற்கள் இரண்டே. அவை மத்திகை, சுருங்கை என்பன. மத்திகை என்பது குதிரை ஓட்டும் சம்மட்டி (சவுக்கு) என்னும் பொருள் உள்ள யவன மொழிச் சொல். சுருங்கை என்பது நகரத்துக் கழிவுநீர் (சாக்கடை நீர்) போவதற்காகப் பூமியில் அமைக்கப்படுகிற கால்வாய் என்னும் பொருள் உள்ள யவன மொழிச் சொல். இவ்விரண்டு சொற்களும் சங்க காலத்துத் தமிழ் நூல்களிலும் பிற்காலத்துத் தமிழ் நூல்களிலும் வழங்கப்பட்டுள்ளன.

ஓரை என்னும் சொல்லும், *ஹோரா* என்னும் கிரேக்கச் சொல்லிலிருந்து தமிழ் மொழியில் புகுந்தது என்று சிலர் கருதுகிறார்கள். இது பற்றிக் கருத்து வேற்றுமை உண்டு. ஓரை என்னும் சொல், வடமொழியில் உள்ள *யவனிகா* என்னும் சொல்லைப் போல ஓசையினால் கிரேக்க மொழி போல மயங்கச் செய்கிற ஒரு சொல்லாகும். நாடக மேடைகளில் கட்டப்படுகிற திரைச்சீலைக்கு வடமொழியில் *யவனிகா* என்று பெயர். யவன நாட்டிலிருந்து வந்த திரைச்சீலை யாகையால் இதற்கு *யவனிகா* என்று பெயர் வந்தது என்று வடமொழி யாளர் கூறுவர். பண்டைக் காலத்தில் யவனர்கள் (கிரேக்கர்கள்) தமது நாடக மேடைகளில் திரைச்சீலை உபயோகப் படுத்தவில்லை. திரைச்சீலை உபயோகப்படுத்தப் படாத நாட்டிலிருந்து திரைச்சீலை வடமொழியாளருக்கு வந்தது என்றால் அதை எப்படி நம்புவது? தமிழர் நாடக மேடைகளில் உபயோகித்துவந்த திரைச்சீலைக்கு எழினி என்பது பெயர். எழினி என்னும் சொல்லை வடமொழியாளர் உச்சரிக்க முடியாமல் அதை *யவனிகா* என்று உச்சரித்தனர்

என்று தோன்றுகிறது. யவனர் என்னும் சொல்லும் *யவனிகா* என்னும் சொல்லும் ஓசையினால் ஒத்திருப்பதனால், *யவனிகா* என்பது கிரேக்க மொழிச் சொல் என்று மயங்குவதற்கு இடமாயிருப்பது போலவே, ஓரை என்னும் தமிழ்ச் சொல்லும் *ஹோரா* என்னும் கிரேக்க மொழிச் சொல்லுடன் ஓசையால் ஒத்திருப்பது கொண்டு அதனைச் சிலர் கிரேக்க மொழிச் சொல் என்று கருதுகிறார்கள். இதுபற்றி இப்போது ஆராய்ந்தால் இடம் பெருகும் என்னும் அச்சத்தினால் ஆராயாது விடுகிறோம்.

கடைச் சங்க காலத்தின் பிற்பகுதியிலே, ஏறக்குறைய முன்னூறு ஆண்டுகளாக யவனர்கள் தமிழ் நாட்டுடன் வாணிகத் தொடர்பு கொண்டிருந்தனர் என்பதும், அவ் வாணிகத்தைக் கடல் வழியாகச் செய்தனர் என்பதும் இக்கட்டுரையினால் ஒருவாறு விளக்கப்பட்டன.

*கலைக்கதிர்*, பிப்ரவரி 1961

# கருமாறி பாய்ச்சல்

நாற்பது அடி உயரத்திலிருந்து குளத்து நீரில் குதிப்பது ஆண்பிள்ளைகளுக்கு வீரச் செயல்தான். ஆனால், இரண்டு கூர்மையான கழுமரங்களை நீரில் நட்டு வைத்து அவைகளின் மத்தியில் உயரத்திலிருந்து குதிக்க வேண்டும் என்று சொன்னால், எப்படிப்பட்ட தைரியசாலியும் பின்னடைவான் என்பதில் ஐயமில்லை. அதற்கும் அஞ்சாமல் கழுமரங்களின் நடுவில் குதிக்க யாரேனும் துணிந்து வந்தாலும், நடுவில் குதிக்காமல் இடது பக்கமோ விலகிக் குதித்தால் அவருடைய கதி என்னவாகும்! கழுவில் குத்துண்டு வேதனைப்பட்டு இறக்க வேண்டியதுதான். பண்டைக் காலத்தில் கொலைத் தண்டனை அடைந்தவர்களைக் கழுமரத்தில் ஏற்றிச் சித்திரவதை செய்தார்கள் என்பதை நாம் அறிவோம். குளத்து நீரில் இரண்டு கூர்மையான கழுமரங்களை நட்டு, அவற்றின் நடுவே நாற்பது அடி உயரத்திலிருந்து குதிப்பது வீரத்தனமான விளையாட்டு என்றாலும் அவ்விளையாட்டு வினையாகவும் முடியுமே.

ஆண் மகன் குதிப்பது இருக்கட்டும். ஒரு பெண்மகள் அவ்வாறு குதிப்பது என்றால் அது எவ்வளவு துணிச்சலான செயல்! நாற்பது அடி உயரம்; கூர்மையான இரும்புக் கழுமரம்; இவற்றின் நடுவிலே அவ்வளவு உயரத்திலிருந்து ஒரு பெண் குதிப்பது ! ஓ! நினைக்கும் போதே உடல் நடங்குகிறது. மயிர்க் கூச்சிடுகிறது. அதிலும் பூரண கர்ப்பமுள்ள ஒரு பெண் உயரத்திலிருந்து கழுமரங்களின் இடையிலே குதிப்பது என்றால் அதைப் பற்றி என்ன நினைப்பது! இது நம்பக் கூடியதாக இல்லை. இது வெறும் கற்பனைக் கதை என்று நீங்கள் நினைக்கிறீர்கள். கற்பனை அல்ல, கதையும் அல்ல. உண்மைச் செய்தியே. சுமார் ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு தமிழ் நாட்டிலே நிகழ்ந்த உண்மை நிகழ்ச்சி; ஆணும் பெண்ணுமாக ஆயிரக்கணக்கான மக்கள் குளத்தைச் சூழ்ந்து நின்று கொண்டு வேடிக்கைப் பார்க்க, பூரணக் கர்ப்பமுள்ள பெண் ஒருத்தி நாற்பதடி உயரத்திலிருந்து கழுமரங்களுக்கு மத்தியில் குதித்தது உண்மைச் செய்தியே.

ஆம். இந்த நிகழ்ச்சி தமிழ் நாட்டிலே ஒரு கோயிலிலே, ஆண்டுதோறும் நடைபெற்றது உண்மையே. இந்த 'புண்ணிய

கரமான' நிகழ்ச்சி மதத்தின் பேரால் நமது நாட்டிலே நிகழ்ந்து வந்தது. இதற்குக் கருமாறிப் பாய்ச்சல் என்பது பெயர்.

கருமாறிப் பாய்ச்சல் என்றால் பொருள் என்ன? கருமாறிப் பாய்ச்சல் என்று ஏன் பெயர் வந்தது?

பூரணக் கர்ப்பம் உள்ள ஒரு பெண்மணி மிக உயரமான இடத்திலிருந்து குதித்து நீரில் கழுமரங்களுக்கு மத்தியில் குதிப்பாள். குதித்தவுடன் அந்த அதிர்ச்சியினால் வயிற்றி லிருக்கும் கரு (குழந்தை) வெளிப்பட்டுக் கரையேறுமாம்! ஆனால் அந்தப் பெண்மணி உயிர் நீங்கி 'மோட்சம்' அடைவாள்! ஆகவே, கருமாறிப் பாய்ச்சல் என்று இதற்குப் பெயருண்டாயிற்று. இந்த அற்புதமான 'புண்ணியக் காட்சியைக்' காண்கின்ற மக்கள் பூதம், பேய் பிசாசுகளின் துன்பம் இல்லாமல் வாழ்வார்களாம்! இவ்விதமாக ஒரு நம்பிக்கை இருந்தது அக்காலத்தில்.

இந்தக் கருமாறிப் பாய்ச்சல் எங்கே நிகழ்ந்தது என்று கேட்கிறீர்களா? நமது புகழ்பெற்ற பாரத நாட்டிலே, ஏழு புண்ணிய நகரங்களில் ஒன்றான காஞ்சீபுரத்திலே, காமாட்சியம்மன் கோவிலிலே இந்த அற்புதமான நிகழ்ச்சி நடந்தது. இந்தக் கருமாறிப் பாய்ச்சலைத் தரிசித்துப் 'புண்ணியம்' பெறுவதற்காக ஏராளமான மக்கள் கூட்டங் கூட்டமாகக் கூடுவது வழக்கம்.

காஞ்சீபுரத்துக் காமாட்சியம்மன் கோயிலில் திருக்குளமும் அக்குளக்கரையைச் சார்ந்து மூன்று நிலையுள்ள கட்டடமும் இருக்கின்றன. இந்த மூன்று அடுக்குக் கட்டடத்தில் இப்போது நின்றான், இருந்தான், கிடந்தான் என்று பெயருள்ள மூன்று பெருமாள் கோயில் கொண்டிருக்கிறார்கள். இந்தக் கட்டடத்தின் மேல் மாடியிலிருந்துதான் பூரண கர்ப்பமுள்ள ஒரு பெண்மகள் குளத்தில் குதித்தாள். இக்குளத்தைச் சூழ்ந்து நின்று கொண்டு பக்த கோடிகள் இத் 'தெய்வீகப் புண்ணிய காட்சி'யைத் தரிசித்தார்கள்!

நல்ல காலமாக இந்தக் கருமாறிப் பாய்ச்சல் பல ஆண்டுகளுக்கு முன்னே நின்றுவிட்டது. இப்போது அச்செய்தி முழுவதும் மறைந்து மறக்கப்பட்டுவிட்டது. இலக்கியங்களை ஆராய்ந்தால் மட்டும் இச்செய்தி நன்கு விளங்கும். தனிப் பாடல் திரட்டிலுள்ள காளமேகப் புலவரின் தனிச் செய்யுளும், *நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தின்* வியாக்கி யானமும், *காமாட்சி லீலாப் பிரபாவம்* என்னும் நூலும் கருமாறிப் பாய்ச்சலைக் கூறுகின்றன.

இந்தச் சான்றுகளையும் செய்யுள்களையும் மேற்கோள் காட்டி ஆராய்ச்சி செய்ய நான் முற்படவில்லை. ஆராய்ச்சியில் இறங்கினால் வாசகர்களுக்குத் தலைவலி ஏற்படும் அல்லவா? ஆனால் கருமாறிப் பாய்ச்சல் என்னும் நிகழ்ச்சி, ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு சமயத்தின் பேரால் காஞ்சீபுரத்துக் கோயில் ஒன்றில் நிகழ்ந்த நிகழ்ச்சி என்பது மறுக்க முடியாத உண்மை. முற்காலத்தில் நிகழ்ந்து இக்காலத்தில் மறைந்து போன பல பழக்க வழக்கங்களில் கருமாறிப் பாய்ச்சலும் ஒன்று.

*முழுமதி*, பொங்கல் மலர், 1961

# சேரநாட்டு முத்து

இக்காலத்தில் மலையாள நாடாக மாறிப்போன சேரநாடு, பண்டைக் காலத்திலே தமிழ் நாடாக இருந்தது. தமிழ் நாடாக இருந்த சேரநாட்டைச் சேர மன்னர்கள் அரசாண்டார்கள். சேரநாட்டின் பழைய வரலாற்றுக் குறிப்புகள் பழைய தமிழ் நூல்களிலே காணப்படுகின்றன. பழைய சங்க நூல்களிலே காணப்படுகின்ற செய்திகளில் சேர நாட்டு முத்தைப் பற்றிய செய்தியும் ஒன்றாகும். இச்செய்தியைக் கேட்பவர் வியப்படைவார்கள். 'இது என்ன புதுமை! பாண்டிநாடுதானே முத்துக்குப் பேர்போனது. சேரநாட்டிலும் முத்து உண்டா யிற்றா' என்று கேட்பர்.

ஆம். பாண்டிய நாட்டுக் கொற்கைக் கடலிலே உண்டான முத்துகள் உலகப் புகழ் பெற்றவைதாம். தமிழ் நூல்களும் வடமொழி நூல்களும் பாண்டிநாட்டு முத்துகளைப் புகழ்ந்து பேசுகின்றன. பாரத தேசத்தில் மட்டும் அல்லாமல், எகிப்து தேசத்திலும் உரோமாபுரியிலும் பண்டைக் காலத்தில் பாண்டிநாட்டு முத்துகள் புகழ்பெற்றிருந்தன. உரோமாபுரிச் சீமாட்டிகள் தங்கள் நாட்டுப் பொன்னைக் கொடுத்துத் தமிழ் நாட்டு முத்துகளைப் பெற்றுக்கொண்டார்கள். மேல்நாட்டு யவனக் கப்பல்கள் தமிழ் நாட்டுத் துறைமுகங்களுக்கு வந்து ஏனைய பொருள்களோடு முத்துகளையும் எடுத்துக்கொண்டு போயின.

பேர்போன பாண்டிநாட்டு முத்துகள் உண்டான அதே காலத்தில், மேற்குக் கடற்கரையிலே, சேரநாட்டிலேயும் முத்துகள் உண்டாயின. பாண்டியநாட்டு முத்துகளுக்கு அடுத்தபடியாகச் சேரநாட்டு முத்துகள் உள் நாட்டிலும் வெளிநாட்டிலும் சிறப்பும் மதிப்பும் பெற்றிருந்தன. இதற்குத் தமிழ் நூலில் மட்டுமல்லாமல் வடமொழி நூலிலும் சான்று கிடைகின்றது.

சேர அரசர்களைப் பற்றிக் கூறுகிற *பதிற்றுப்பத்து* என்னும் சங்கத் தமிழ் நூலிலே சேரநாட்டில் முத்து உண்டான செய்தி கூறப்படுகிறது. *பதிற்றுப்பத்தின்* ஏழாம் பத்தில், கபிலர் என்னும் புலவர், செல்வக் கடுங்கோ வாழியாதன் என்னும்

சேரமன்னனைப் புகழ்ந்து பாடுகிறார். அதில், சேரநாட்டுப் பந்தர் என்னும் ஊர் முத்துக்களுக்கும், கொடுமணம் என்னும் ஊர் .பொன் நகைகளுக்கும் பேர் பெற்றிருந்தது என்று கூறுகிறார்:

கொடுமணம் பட்ட நெடுமொழி ஒக்கலொடு
பந்தர்ப் பெயரிய பேரிசை மூதூர்க்
கடனறி மரபில் கைவல் பாண!
தெண்கடல் முத்த மொடுநன்கலம் பெறுகுவை

என்று (7ஆம் பத்து, 7ஆம் செய்யுள்) பாடுகிறார்.

இதற்கு உரை எழுதிய பழைய உரையாசிரியர் இவ்வாறு விளக்கம் கூறுகிறார்: "கொடுமணம் என்பது ஓரூர். பந்தர்ப் பெயரிய - பந்தர் என்று பெயர்பெற்ற. கைவல் பாண! நெடு மொழி யொக்கலொடு நீ சான்றோர் பெருமகன் நேரிப் பொருநனாகிய செல்வக் கோமானைப் பாடிச் செல்லின், பந்தர்ப் பெயரிய மூதூர்த் தெண்கடல் முத்தமொடு கொடு மணம்பட்ட நன்கலம் பெறுகுவை எனமாறிக் கூட்டி வினை முடிவு செய்க." இவ்வாறு கூறுகிறபடியினாலே, சங்க காலத்திலே பந்தர் என்னும் ஊர் சேர நாட்டுக் கடற்கரையில் இருந்ததென்பதும், அவ்வூர்க் கடலில் முத்துக் குளிக்கப் பட்டதென்பதும் தெரிகின்றன.

இதே செய்தியை அரிசில் கிழார் என்னும் புலவரும் கூறுகிறார். *பதிற்றுப்பத்து* எட்டாம் பத்தில், பெருஞ் சேர லிரும்பொறை என்னும் சேரமன்னனை அரிசில் கிழார் பாடுகிறார். அதில் கொடுமணம், பந்தர் என்னும் ஊர்களைக் கூறுகிறார்:

கொடுமணம் பட்ட வினைமாண் அருங்கலம்
பந்தர்ப் பயந்த பலர்புகழ் முத்தம்

என்று (8ஆம் பத்து, 4ஆம் செய்யுள்) கூறுகிறார். இதில் கொடுமணம் என்னும் ஊர் பொன் நகைகளுக்குப் பேர் பெற்றிருந்ததும், பந்தர் என்னும் ஊர் முத்துகளுக்குப் புகழ் பெற்றிருந்ததும் கூறப்படுகின்றன.

வடமொழியில் *அர்த்த சாஸ்திரம்* என்னும் பொருளியல் நூலை எழுதிய கவுடல்லியர், அந்நூலில் சேரநாட்டு முத்து களைப் பற்றியும் கூறுகிறார். புகழ்பெற்ற *அர்த்த சாஸ்திரத்தை* எழுதிய கவுடல்லியர், கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலே மகதநாட்டை அரசாண்ட சந்திரகுப்த மௌரியரின் (அசோக சக்கரவர்த்தியின் பாட்டன்) அமைச்சராக இருந்தார் என்பது

யாவரும் அறிந்ததொன்றே. *அர்த்த சாஸ்திரத்தின்* மூன்றாம் பகுதி, பதினோராம் அதிகாரத்தில், பல தேசத்து முத்துகளைப் பற்றி அவர் கூறுகிறார். முதலில் தாம்பரபர்ணிகம், பாண்டிய கவாடகம் என்னும் முத்துகளைக் கூறுகிறார். இப்பெயர்களி லிருந்தே இவை பாண்டிய நாட்டில் உண்டான முத்துகள் என்பதை அறிகிறோம். பிறகு பாஸிக்கியம் என்னும் முத்தைக் கூறுகிறார். பாஸிக்கியம் என்பது மகத நாட்டில் பாடலி புரத்துக்கு அருகில் உண்டான முத்து. பின்னர் கௌலேயம் என்னும் முத்தைக் கூறுகிறார். கௌலேயம் என்பது இலங்கையில் ஈழநாட்டில் உண்டான முத்து. அதன் பிறகு கௌர்ணேயம் என்னும் முத்தைக் கூறுகிறார். கௌர்ணேயம் என்பது சேரநாட்டிலே மேற்குக் கடலிலே உண்டான முத்து.

கவுடலிய அர்தத *சாஸ்திரத்துக்குத்* தமிழ் மலையாளத்தில் பழைய உரை எழுதிய ஒருவர் இதைப் பற்றி நன்றாக விளக்கி எழுதியுள்ளார். பெயர் அறியப்படாத இந்த உரையாசிரியர், தமிழிலிருந்து மலையாள மொழி தோன்றிக் கொண்டிருந்த காலத்தில் இருந்தவர். ஆகவே, இவருடைய உரையில் தமிழ் - மலையாளச் சொற்கள் அதிகமாகக் கலந்துள்ளன. இந்த உரையாசிரியர் 'கௌர்ணேயம்' என்னும் சொல்லை இவ்வாறு விளக்குகிறார்: "கௌர்ணேயமாவிது மலநாட்டில் முரசி ஆகின்ற பட்டினத்தினரிகே சூர்ண்ணி யாற்றிலுளவாமவு" என்று விளக்கம் கூறியுள்ளார். இதைத் தமிழில் சொல்ல வேண்டுமானால், 'கௌர்ணேயம் ஆவது மலைநாட்டில் முரசி ஆகிய பட்டினத்தின் அருகே சூர்ணி ஆற்றில் உண்டாவது' என்று கூறவேண்டும்.

இந்த உரையில் முரசி பட்டினமும் சூர்ணியாறும் கூறப்படுகின்றன. இவற்றை விளக்கவேண்டும். முரசி என்பது முசிறி. *புறநானூறு* முதலிய சங்க நூல்களிலே கூறப்படுகிற முசிறிப் பட்டினம் இதுவே. யவன வாணிகர் மரக்கலங்களில் வந்து வாணிகம் செய்த துறைமுகங்களில் இதுவும் ஒன்று. யவனராகிய கிரேக்கர் முசிறியை MUZIRIS என்று கூறினர். முசிறியை வடமொழியாளர் 'முரசி' என்றும், 'மரிசி' என்றும் வழங்கினார்கள். பிற்காலத்தில் மலையாளிகள் முசிறியை 'முயிரி' என்று வழங்கினார்கள்; முயிரி, முயிரிக்கோடு என்றும் கூறப்பட்டது (முசிறிக்கு அருகிலே சேரமன்னனின் தலைநகர மான வஞ்சி மாநகர் இருந்தது. வஞ்சி, வஞ்சிக்களம் என்றும் பெயர் பெற்றிருந்தது. பிற்காலத்தில் திருவஞ்சிக்களம் என்று மருவிற்று). முசிறி பிற்காலத்தில் கொடுங்கோளூர் என்றும்,

மலையாள மொழியில் கொடுங்கல்லூர் என்றும் பெயர் பெற்றது.

சூர்ணியாறு என்பது பெரியாற்றின் வடமொழிப் பெயர். 'மருத்விருத நதி' என்றும் இதற்குப் பெயர் உண்டு. பெரியாற்றைப் பேரியாறு என்று சங்க நூல்கள் கூறுகின்றன. இந்தப் பேரியாற்றின் கரையிலே சேரன் செங்குட்டுவன், தன் சுற்றத்துடன் தங்கி இயற்கைக் காட்சிகளைக் கண்ட செய்தியைச் *சிலப்பதிகாரம்* கூறுகின்றது:

நெடியோன் மார்பில் ஆரம் போன்று
பெருமலை விலங்கிய பேரியாற் றடைகரை
இருமணல் எக்கர் இயைந்தொருங் கிருப்ப

என்பது *சிலப்பதிகாரம்* (காட்சிக் காதை. 21-23).

எனவே, கவுடல்லிய *அர்த்த சாஸ்திரத்து*க்குத் தமிழ் - மலையாள உரை எழுதிய இவ்வுரையாசிரியர் கூறுகிற முரசி, முசிறித் துறைமுகம் என்பதும், சூர்ணியாறு பெரியாறு என்பதும் ஐயமற விளங்குகின்றன. பேரியாறு கடலில் கலக்கிற இடத்துக்கு அருகிலே சேரனுடைய தலைநகரமான வஞ்சியும், அதற்கு அருகில் முசிறியும் இருந்தன. வஞ்சி மாநகரத்துக்கு அருகில் இருந்தவை கொடுமணம், பந்தர் என்னும் ஊர்கள். பந்தர் என்னும் ஊரிலேதான் முத்துக் குளிக்கும் சலாபம் இருந்தது போலும்.

பந்தர் என்னும் பெயர் அரபு மொழி. பந்தர் என்னும் அரபுச் சொல்லுக்கு அங்காடி அல்லது கடைத்தெரு என்பது பொருள். கி.மு. முதல் நூற்றாண்டிலே யவனராகிய கிரேக்கர் தமிழ் நாட்டுடன் வாணிகம் செய்ய வந்தார்கள். யவனர் வருவதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே அராபியர் தமிழகத்துடன் வாணிகத் தொடர்பு கொண்டிருந்தனர். அவர்கள் அந்த இடத்துக்குத் தமது அரபு மொழியில் பந்தர் என்று பெயர் சூட்டியிருக்கலாம்.

சேரநாட்டில் உண்டான முத்துக்குக் கௌர்ணேயம் என்று ஏன் பெயர் வந்தது? இது பற்றி ஒருவரும் ஆராய்ச்சி செய்யவில்லை. கௌர்ணேயம் என்பது சௌர்ணேயம் என்னும் சொல்லின் திரிபு என்று தெரிகிறது. சௌர்ணேயம் என்றால், சூர்ணியாற்றில் தோன்றியது என்பது பொருள். சூர்ணியாறு (பெரியாறு) கடலில் கலக்கிற இடத்தில் உண்டானபடியினால், அந்த முத்துகளுக்குச் சூர்ணேயம் என்று பெயர் ஏற்பட்டிருக்கலாம். வடமொழி இலக்கணப்படி

சூர்ணேயம், சௌர்ணேயம் ஆயிற்று; பிறகு சகரம் ககரமாக மாறிற்று. சேரம் கேரம் என்றும், செவி (தமிழ்) கிவி (கன்னடம்) என்றும் ஆனதுபோல, தாமிரபரணி ஆறு கடலில் கலக்கிற புகர் முகத்தில் கடலில் உண்டாகிற முத்துக்குத் தாம்ரபர்ணிகம் என்று பெயர் ஏற்பட்டதுபோல, சூர்ணி ஆறு கடலில் கலக்கிற புகர்முகத்தில் உண்டான முத்துக்குச் சௌர்ணேயம் என்று பெயர் உண்டாயிற்று என்று கருதலாம். பிறகு சௌர்ணேயம் கௌர்ணேயமாயிற்று.

கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் இருந்தவராகக் கருதப் படுகிற கவுடல்யர் தமது *அர்த்த சாஸ்திரத்திலே*, சேர நாட்டில் முத்து உண்டானதைக் கூறியுள்ளார். கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் இருந்தவராகக் கருதப்படுகிற கபிலரும், அரிசில் கிழாரும் சேர நாட்டில் பந்தர் என்னும் பட்டினத்தில் முத்துக் குளிக்கும் இடம் இருந்ததைப் *பதிற்றுப் பத்தில்* கூறியுள்ளனர். இவற்றிலிருந்து இற்றைக்கு இரண்டா யிரம் ஆண்டுகளுக்கு முன்பே சேரநாட்டில் முத்துச் சலாபம் இருந்த செய்தி தெரிகிறது.

சேரநாட்டின் தலைநகரமாயிருந்த வஞ்சி மாநகரமும் (இதற்குக் கருவூர் என்றும், கரூர்ப்பட்டணம் என்றும் வேறு பெயர்கள் உண்டு. திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் இப்போது இருக்கின்ற கருவூர் (கரூர்) அன்று கருவூர்ப் பட்டினமாகிய வஞ்சி மாநகரம்) சேரநாட்டின் துறைமுகப் பட்டினமாக இருந்த முசிறியும், கொடுமணம், பந்தர் என்னும் ஊர்களும் அடுத்தடுத்துக் கடற்கரை ஓரமாக இருந்தன. கொடுமணம், பந்தர் என்னும் ஊர்கள் வஞ்சிமா நகரத்துடன் இணைந்திருந்த ஊர்கள் என்று தெரிகின்றன. இந்தப் பட்டினங்களும் ஊர்களும் பிற்காலத்தில் மறைந்து விட்டன. ஐந்நூறு ஆண்டு களுக்கு முன்னே, கி.பி. 1341இல் பெய்த பெருமழையினாலே, பெரியாறு வெள்ளம் தாங்கமாட்டாமல் கரை வழிந்தோடிப் பல இடங்களை அழித்து விட்டது. அதனால், பழைய நில அமைப்புகள் மாறியும் அழிந்தும் போகப் புதிய காயல்களும் கழிகளும் தோன்றிவிட்டன.

சேரநாட்டின் தலைநகரமான பழைய வஞ்சி மூதூர் (கருவூர்), இப்போது கொடுங்கலூர் (ஆங்கிலத்தில் Cranganur) என்னும் பெயருடன் ஒரு சிறு கிராமமாகக் காட்சியளிக்கிறது. பழைய துறைமுகமாகிய முசிறி மறைந்துபோயிற்று. பிற் காலத்தில் கடற்கரை ஓரமாகப் புதிதாக அமைந்த நீர்நிலைப்

பகுதியில் இப்போது கொச்சித் துறைமுகம் காட்சியளிக்கிறது. பழையன கழிந்து புதியன புகுந்தன. ஆனால், பழைய தமிழ் இலக்கியங்கள் பழைய சிறப்புகளை நினைவுறுத்திக் கொண்டிருக்கின்றன. இந்தப் பழைய செய்திகளையெல்லாம் அண்மைக் காலத்தில் தோன்றிய மலையாள இலக்கியங்களில் காணமுடியாது.

*தெ.பொ.மீ. மணிவிழா மலர்*, கோவை, 1961

# திருப்பாலைவனம்

இந்த ஊருக்கு 4, 5 ஆண்டுகளுக்கு முன்பு வந்திருக்கிறேன். இந்த ஊர்க் கோயிலை (கோயில் கட்டடத்தைப்) பார்ப்பதற்காகவே வந்தேன். பகலில் வந்து கோயிலைப் பார்த்துவிட்டு உடனே திரும்பிவிட்டேன், பஸ் வசதி இல்லாத காரணத்தினால். கோயில் கட்டட அமைப்புகளில் ஏழு விதமான விமானங்கள் சொல்லப்படுகின்றன. அந்த விமான அமைப்புகள் சிலவற்றை அப்பர் சுவாமிகளும் தமது *தேவாரத்*தில் கூறுகிறார். அவ்விதமான அமைப்புகளில் ஆலக் கோயில் அல்லது யானைக்கோயில் என்பதும் ஒன்று.

ஆலக்கோயில் என்றால் ஆனைக் கோயில். ஆனைக் கோயில் கட்டடங்களைக் கஜபிருஷ்ட விமானம் என்று சிற்பசாஸ்திரங்களில் பெயர் கூறப்படுகிறது. கஜபிருஷ்ட விமானக் கோயில்களாகிய ஆனைக் கோயில் கட்டடங்கள் தொண்டை நாட்டில் (தொண்டை மண்டலத்தில்) தான் அதிகமாக இருக்கின்றன. சோழநாட்டில் சில யானைக் கோயில்கள் மட்டும் இருக்கின்றன. பாண்டிநாட்டிலும் சேரநாட்டிலும் கஜபிருஷ்ட விமானக் கோயில்கள் நானறிந்த வரையில் இல்லை. தென் கன்னட மாவட்டத்தில் சில கோயில்கள் கஜபிருஷ்ட அமைப்பாக அமைந்திருக்கின்றன.

தொண்டை மண்டலத்தில் இருக்கிற ஆனைக் கோயில் கட்டடங்கள் பலவற்றை நேரில் போய்ப் பார்த்திருக்கிறேன். ஆனைக் கோயில் கட்டடங்களில் அடிப்படையான அமைப்பில் மாறுதல் இல்லை. ஆனால், அந்தக் கட்டடங்களின் சிறப்பு அமைப்புக்கள் (உறுப்புகளின் அமைப்புக்களில்) ஒவ்வொரு கோயிலிலும் வெவ்வேறு வகையான புதுமைகள் அமைந் திருக்கின்றன. இந்தத் திருப்பாலைவனத்து ஆனைக் கோயிலின் அமைப்பு தனிப்பட்ட அமைப்புடன் அழகும் உடையது. மற்ற ஆனைக் கோயில்களின் அமைப்பைப் பார்த்துவிட்டு இந்தக் கோயிலின் அமைப்பைப் பார்த்தால்தான் இதனுடைய புதுமையான சிறப்பு நன்றாகத் தெரியும். மற்ற ஆனைக் கோயில்களின் அமைப்பைப் பாராதவர்கள் இந்தக் கோயில் கட்டட அமைப்பை மட்டும் பார்ப்பார்களானால் இதனுடைய அருமையும் பெருமையும் நன்கு அறிய

மாட்டார்கள். இந்தத் திருப்பாலைவனத்து யானைக் கோயிலைப்போல அமைந்திருக்கிற இன்னொரு கோயில் (நான் கண்ட வரையில்) காஞ்சிபுரத்துக்குத் தெற்கே மாகறல் என்னும் ஊரில் இருக்கிற சிவன் கோயில் கட்டடம் ஆகும். ஆனால், மாகறல் ஆனைக் கோயிலைவிட திருப்பாலை வனத்து யானைக்கோயிலில் அழகான சிறப்புகள் இருக்கின்றன. இந்தக் கோயில், பிற்காலச் சோழர் ஆட்சியில் ஏறக்குறைய கி. பி. 12ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டது. திருப்பாலைவனம் என்னும் ஊரின் பெயரைப் பார்க்கும்போது இவ்வூரில் பண்டைக் காலத்தில் பாலை மரங்கள் அதிகமாக இருந்தன என்பதை அறிகிறோம். பாலை மரம் இந்தக் கோவிலின் ஸ்தல விருக்ஷமாக இருக்கிறது.

இவ்வளவு அழகான கட்டடம் உள்ள இந்தக் கோவிலைப் பற்றி ஒரு நல்ல அழகான புத்தகம் ஒன்றை இக்கோயில் அதிகாரிகள் வெளியிடுவார்களானால் நலமாக இருக்கும். யாரும் இல்லாத காட்டிலே ரோஜாவும், மல்லிகையும், தாமரையும் அழகாகப் பூத்திருக்குமானால் அவற்றின் அழகு ஒருவருக்கும் தெரியாமலே போகும். அப்படித்தான் இருக்கிறது இந்தக் கோயிலின் செய்தி. இதன் அருகில் உள்ளது பழவேற்காடு என்னும் ஊர். பழவேற்காட்டைப் பற்றிச் சில செய்திகள் சொல்ல விரும்புகிறேன். பாலைமரங்கள் இருந்த இடம் பாலைவனம் (திருப்பாலைவனம்) என்று பெயர் பெற்றதுபோல, வேல்காடு (வேல மரக்காடு) இருந்த இடம் வேற்காடு என்று பெயர் பெற்றது. பழவேற்காடு என்றால், பழைமையான வேல் காடு என்பது பொருள். பூந்தமல்லிக்கு அருகில் திருவேற்காடு என்னும் ஊர் உண்டு. அந்த ஊரிலும் ஒரு கஜபிருஷ்ட விமானக் கோயில் (ஆனைக் கோயில்) உண்டு. மரங்கள் நிறைந்த காடுகள் பிற்காலத்திலே ஊர்களாக மாறியபோது, அந்தந்தக் காடுகளின் பெயரே அந்தந்த ஊர்களுக்குப் பெயராக அமைந்துவிட்டன. ஆர்க்காடு, வேற்காடு, ஆலங்காடு, காய்க்காடு, மாங்காடு, தில்லைவனம், பாலைவனம், கடம்பவனம் முதலிய பெயர்கள் எல்லாம் அவை ஆதிகாலத்தில் அந்தந்த மரங்களையுடைய காடுகளாக இருந்தன என்பதைத் தெரிவிக்கின்றன.

பழவேற்காட்டிலே, 350 ஆண்டுகளுக்கு முன்னே ஐரோப்பாக் கண்டத்திலிருந்து டச்சுக்காரர்கள் வந்தார்கள். வந்து 1610இல் ஒரு கோட்டையைக் கட்டி அதில் இருந்து வியாபாரம் செய்தார்கள். அந்த வாணிகம் முக்கியமாக மலாக்கா, மலேயா நாடுகளுடன் நடைபெற்றது. ஆகவே பழவேற்காடு ஒரு நல்ல துறைமுகப்பட்டினமாக அமைந்தது.

டச்சுக்காரர்கள் ஹாலண்டு தேசத்திலிருந்து வந்தவர்கள். இவர்களுக்குத் தமிழில் உல்லாந்தர் என்றும் ஒல்லாந்தர் என்றும் பெயர் வழங்கிற்று. ஒல்லாந்தர் இருந்த பழவேற்காட்டுக் கோட்டையை கி.பி. 1781இல் ஆங்கிலேயர் கைப்பற்றி அரசாண்டார்கள். ஆங்கிலேயர் பழவேற்காட்டைப் புலிக்காட் என்றனர். புலிகள் உள்ள காடு அல்ல. பழவேற்காடு என்னும் சொல் ஆங்கிலேயன் வாயில் நுழையாமல் புலிக்காட் ஆயிற்று.

பழவேற்காட்டுக்குத் தெற்கே கடற்கரையோரமாக இருப்பது சிந்தாமணிகோயில் என்பது. சிந்தாமணி கோயிலுக்குக் கீழைக்கோகர்ணம் என்னும் பெயரும் உண்டு. ஏனென்றால், மேற்குக் கடற்கரை ஓரமாக, தென் கன்னடம் மாவட்டத்தில் கோகர்ணம் என்னும் ஒரு க்ஷேத்திரம் இருக்கிறது. அதற்கு நேர்கிழக்கில் இந்தச் சிந்தாமணி கோயில் இருப்பதனால் இதற்குக் கீழைக்கோகர்ணம் என்று பெயர். இந்த இடத்தில், சோழர் காலத்தில் ஒரு துறைமுகம் இருந்ததென்று அங்குள்ள சாசனத்தினால் தெரிகிறது.

சிந்தாமணி கோயிலுக்குத் தெற்கே திருக்காட்டுப்பள்ளி என்னும் ஊர் இருக்கிறது. சாதாரணமாகக் காட்டுப்பள்ளி என்று கூறுவார்கள். திருக்காட்டுப்பள்ளியில் யஜ்ஞபட்டன் என்பார் யஜ்ஞேஸ்வரம் என்னும் கோயிலைக் கட்டினான். இந்த யஜ்ஞபட்டன், நந்திவர்மனுடைய புரோகிதன் மூன்றாம் நந்திவர்மன் என்றும் தெள்ளாறெறிந்த நந்திவர்மன் என்றும் கூறப்படுகிற *நந்திக்கலம்பகத்தின்* தலைவனாகிய நந்திவர்மனுடைய புரோகிதன். திருக்காட்டுப்பள்ளிக் கோயிலுக்கு தெள்ளாறெறிந்த நந்திவர்மன் நிலங்களைத் தானம் செய்திருக்கிறான் என்பதை அவனுடைய செப்பேட்டுச் சாசனத்தினால் அறிகிறோம்.

கடைசியாகப் பழவேற்காட்டு ஏரியைப்பற்றிச் சொல்ல வேண்டும். இந்த ஏரி இப்போது கடலுடன் சேர்ந்து கடலின் ஒருபகுதியாக ஆகிவிட்டது. முற்காலத்தில் இது காயல் ஆக இருந்தது என்றும் கூறுவர். கடற்கரை ஓரமாக இருந்த காயல்களின் இடையிடையே அந்தக் காலத்தில் ஊர்களும் இருந்தன. பிறகு கடல் பெருக்கெடுத்து காயலில் புகுந்து பெரியதோர் ஏரியாக மாறிவிட்டது. பழவேற்காட்டு ஏரியின் நீளம் ஏறக்குறைய 37 மைல். அகலம் சில இடங்களில் 11 மைல். சில இடங்களில் 3 மைல். சென்னைப் பட்டிணத்துக்கு வடக்கே 14 மைல் தூரத்தில் எண்ணூர் என்னும் ஒரு ஊரில் ஒரு காயல் இருக்கிறது. சென்னை சாக்ரின் பேசினிலிருந்து ஒரு கால்வாய் 1802இல் வெட்டி இதனுடன் இணைக்கப்பட்டது. பிறகு

எண்ணூர் காயலிலிருந்து 154 ஆண்டுகளுக்கு முன்பு 1806இல் கந்தப்பிள்ளை கால்வாய் என்னும் ஒரு கால்வாய் வெட்டி பழவேற்காட்டு ஏரியுடன் இணைக்கப்பட்டது, படகு போக்குவரத்துக்காக.

பழவேற்காட்டு ஏரியைக் 'கடல் கொண்ட சகாகதிநாடு' என்று ஒரு சாசனம் கூறுகிறது (காகந்தி - காவிரிப் பூம்பட்டினம், பூம்புகார்).

திருப்பாலைவனம், பழவேற்காடு இரண்டும் செங்கற்பட்டு மாவட்டத்தின் பொன்னேரி தாலுகாவில் உள்ளன. இந்த மாவட்டத்தின் பழைய பெயர் பையூர்க் கோட்டம் என்று கூறப்படுகிறது. பையூர்க் கோட்டத்தின் வடக்கே பையூர் இளம் கோட்டம் என்னும் ஒரு கோட்டம் கூறப்படுகிறது சாசனங் களில். பையூர்க் கோட்டமும் பையூர் இளங்கோட்டமும் ஒரே கோட்டந்தானா அல்லது வெவ்வேறு கோட்டங்களா என்பது ஆராய்ச்சிக்கு உரியது.

பண்டைக் காலத்திலே தொண்டை மண்டலம் 24 கோட்டங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. சோழ, பாண்டி, சேர நாடுகளில் கூற்றங்கள் இருந்தன. கோட்டமும் கூற்றமும் ஒன்றே. ஒவ்வொரு கோட்டமும் இரு நாடுகளாகவும் பிரிக்கப்பட்டிருந்தன. அதாவது பல கிராமங்கள் சேர்ந்தது நாடு. சில நாடுகள் சேர்ந்தது கோட்டம் அல்லது கூற்றம். இவ்வாறு இருந்த பழைய நிலப்பிரிவு ஆங்கிலேயர் காலத்தில் வேறு பெயர் பெற்றது. ஆங்கிலேயர் இந்நாட்டைக் கைப்பற்றி அரசாளத் தொடங்கியபோது, கர்நாடக நவாப்பு குடும்பத்தைச் சேர்ந்த ஒருவரை, ஆட்சி செய்வதற்கு எளிதாக நாட்டைப் பிரித்துத் தரும்படி கேட்டுக்கொண்டார்கள். கேட்டுக் கொள்ளப்பட்ட அந்த முஸ்லீம் உத்தியோகஸ்தர், பிர்க்கா, தாலுகா, ஜில்லா என்று பிரித்துக் கொடுத்தார். அதன்படியே ஆங்கிலேயர் பெயரிட்டு ஏற்றுக் கொண்டார்கள். அக்காலம் முதல் பழைய கோட்டம், நாடு என்னும் பிரிவுகள் மறக்கப்பட்டுவிட்டன. அவை இப்போது சாசனங்களில் மட்டும் காணப்படுகின்றன.

*செங்கற்பட்டு மாவட்டத் தமிழ் எழுத்தாளர் சங்கம்,*
*முதலாவது மாநாட்டு விழாமலர்,* ஏப்ரல் 1963

# ஆரியப்படையும் யௌத்தேய கணமும்

சங்க நூல்களிலே ஆரியப்படை என்னும் பெயர் கூறப்படுகிறது. வட இந்தியாவிலிருந்து ஆரியர் படை தமிழ்நாட்டுக்கு வந்து போர் செய்ததைச் சங்க நூல்கள் கூறுகின்றன. ஆனால் அந்த ஆரியப்படை எந்த அரசனுடைய சேனை என்பது கூறப்படவில்லை. ஆரியப்படை, எந்த அரசனுடைய ஊழியத்திலும் இல்லாமல், சுயேச்சையாகவும் சுதந்தரமாகவும் இருந்து கொண்டு, போர்த் தொழிலைச் செய்துவந்த சேனைக் கூட்டம் என்று கருதவேண்டியிருக்கிறது. சங்க காலத்திலே வட இந்தியாவிலே யௌத்தேய கணம் என்னும் பெயருள்ள ஒரு சேனைக் கூட்டம் இருந்தது என்பதும் அந்தக் கூட்டத்தாரின் தொழில் யுத்தம் (போர்) செய்வது என்பதும், யுத்தம் செய்வதையே தங்கள் குலத்தொழிலாகக் கொண்டிருந்த படியால் அவர்களுக்கு யௌத்தேய கணம் என்னும் பெயர் இருந்தது என்பதும் சரித்திர ஆராய்ச்சியினால் அறிகிறோம். அந்த யௌத்தேய கணத்தைத்தான் சங்க நூல்கள் ஆரியப் படை என்று கூறுகின்றன. இதுபற்றி இங்கு ஆராய்வோம்.

யௌத்தேய கணம் என்னும் யுத்தவீரர் கூட்டத்தைத்தான் ஆரியப்படை என்று சங்க நூல்கள் கூறுகின்றன என்பதை விளக்கிக் கூறுவோம். அவ்வாறு விளக்கிக் கூறுவதற்கு முன்பு ஆரியப் படையைப் பற்றிச் சங்க நூல்கள் கூறுவதைப் பார்ப்போம்.

**சங்க இலக்கியத்தில் ஆரியப்படை**

சோழநாட்டிலிருந்த வல்லம் என்னும் ஊர்க் கோட்டையின் மேல் ஆரியப்படை படையெடுத்துவந்து முற்றுகையிட்டபோது, சோழ அரசன் அந்த ஆரியப் படையுடன் போர் செய்து வென்று அதைத் துரத்தினான் என்று *அகநானூறு* 336ஆம் செய்யுள் கூறுகிறது.

..................................வென்வேல்
மாரியம்பின் மழைத்தோல் சோழர்
வில்லீண்டு இறும்பின் வல்லத்துப் புறமிளை
ஆரியர் படையின் உடைக. *(அகம்* 336: 19-22)

முள்ளூர் நாட்டின் தலைநகரமான முள்ளூர்க் கோட்டை மேல் இன்னொரு ஆரியப்படை வந்து முற்றுகையிட்டபோது அந்நாட்டு மன்னனாகிய மலையமான் அந்தப் படையை வென்று ஓட்டினான் என்று *நற்றிணை* 170ஆம் செய்யுள் கூறுகிறது.

ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப்
பலருடன் கழித்த ஒள்வாள் மலையனது
ஒருவேற்கு ஓடி யாங்கு (*நற்றிணை* 170 : 6 - 8)

செங்குட்டுவனுடைய தந்தையாகிய நெடுஞ்சேரலாதன் ஆரியரை வணங்கினான் என்று *பதிற்றுப்பத்து* இரண்டாம் பத்துப் பதிகங் கூறுகிறது. "பேரிசை மரபின் ஆரியர் வணக்கி" என்பது அதன் வாசகம்.

இச்செய்தியையே *அகநானூறு* 396ஆம் செய்யுளுங் கூறுகிறது!

ஆரியர் அலறத் தாக்கிப் பேரிசைத்
தொன்றுமுதிர் வடவரை வணங்கு விற்பொறித்து
(*அகம்* 396: 16-17)

இங்குக் குறிக்கப்பட்ட ஆரியர் என்பது ஆரியப் படையாகும்; வென்ற அரசன் பெயரைக் கூறாமல் ஆரியர் என்று பொதுவாகக் கூறப்படுகிறதாதலின்.

ஆரியப்படையைச் சேர்ந்த ஆரியப் பொருநன் (மல்லன்) ஒருவன், வட ஆர்க்காடு மாவட்டத்தை அக்காலத்தில் அரசாண்டிருந்த பாணன் என்னும் வாண அரசனுடன் மற்போர் (குஸ்தி) செய்தான் என்றும், அந்த மற்போரில் வாணன் ஆரியப் பொருநனுடைய இரண்டு கைகளையுந் தன்னுடைய கைகளில் இறுகப் பிடித்துக் கொண்டான் என்றும், அப்பிடியிலிருந்து விடுவித்துக்கொள்ள ஆரியப் பொருநன் முயன்றபோது அவனுடைய கைகள் முறிந்து போயின என்றும், அதனைக் கண்ட ஆரியப் பொருநனுடைய நண்பனான கணையன் என்பவன் நாணங்கொண்டு வெட்கமடைந்தான் என்றும் *அகநானூறு* 386ஆம் செய்யுள் கூறுகிறது.

..............................................பாணன்
மல்ல டுமார்பின் வலியுற வருந்தி
எதிர்தலைக் கொண்ட ஆரியப் பொருநன்
நிறைத்திரள் முழவுத்தோள் கையகத் தொழிந்த
திறன்வேறு கிடக்கை நோக்கி நற்போர்க்
கணையன் நாணி யாங்கு (*அகம்* 386: 3-8)

பாண்டி நாட்டின் தலைநகரமான மதுரையின்மேல் ஒரு ஆரியப்படை வந்து போர் செய்தபோது பாண்டியன் நெடுஞ்செழியன் அப்படையுடன் போர்செய்து வென்றான் என்றும் அதனால் அப்பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் என்று பெயர் பெற்றான் என்றும் சங்க நூல்களினால் அறிகிறோம் (இப்பாண்டியனுக்கு அரசு கட்டிலில் (சிம்மாசனத்தில்) துஞ்சிய நெடுஞ்செழியன் என்னும் பெயரும் உண்டு).

வடவாரியர் படை கடந்து
தென்றமிழ் நாடொருங்கு காணப்
புரைதீர் கற்பிற் றேவி தன்னுடன்
அரைசு கட்டிலில் துஞ்சிய பாண்டியன்
நெடுஞ்செழியன்...

என்று *சிலப்பதிகாரம்* மதுரைக் காண்டம் கட்டுரை இப்பாண்டியனைக் கூறுகிறது.

*புறநானூறு* 183ஆம் செய்யுளின் அடிக்குறிப்பும் இவ்வரசனை, ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் என்று கூறுகின்றது.

இவ்வாறு சங்கச் செய்யுள்கள், ஆரியப்படை தமிழ் நாட்டுக்கு வந்து போர் செய்ததைக் கூறுகின்றன. வட நாட்டிலிருந்து தமிழ்நாட்டின்மேல் யாரேனும் அரசர் படை யெடுத்து வந்திருந்தால் அவ்வரசன் பெயரைக் குறிப்பிட்டு இன்ன அரசன் படையெடுத்து வந்தான் என்று கூறுவது வழக்கம். அப்படி அரசன் பெயரைக் கூறாமல் ஆரியப்படை என்று சேனையின் பெயர் மட்டுங் கூறப்படுகிறபடியால், இந்த ஆரியப்படை எந்த அரசனையும் சேராமல் சுதந்தரமாக இருந்த சேனை என்பது தெரிகின்றது.

சங்க காலத்திலே, வட இந்தியாவிலே எந்த அரசனுக்குங் கட்டுப்படாமல் சுதந்தரமாக ஒரு கூட்டத்தார் இருந்தார்கள் என்றும் அவர்கள் யுத்தம் (போர்) செய்வதையே தங்கள் குலத்தொழிலாகக் கொண்டிருந்தார்கள் என்றும் அவர்களுக்கு யௌத்தெய கணம் (யுத்தம் செய்கிற கூட்டம்) என்பது பெயர் என்றும் அந்த யௌத்தெய கணத்தைச் சங்கச் செய்யுள்கள் ஆரியப்படை என்று பெயர் கூறின என்றும் முன்னமே கூறினோம். யௌத்தெய கணத்தைப் பற்றிய வரலாற்றை இனி ஆராய்வோம்.

எந்த அரசனுடைய ஊழியத்திலும் அமராமல் சுதந்தரமாக வாழ்ந்துவந்த போர்வீரர் கூட்டம் அக்காலத்தில் வட இந்தியாவில் இருந்தது. இதற்கு இலக்கியச் சான்றும் சாசன

எழுத்துச் சான்றும் பழங்காசுச் (நியூமிஸ்மேட்டிக்ஸ்) சான்றும் கிடைத்துள்ளன. அந்தப் போர்வீரர் கூட்டத்துக்கு யௌத்தெய கணம் என்னும் பெயர் வழங்கிவந்தது. யௌத்தெய கணத்தாராகிய போர் வீரர்களுக்கு அரசன் கிடையாது. ஆனால் அவர்கள் தங்களுக்கு ஒரு தலைவனை ஏற்படுத்திக் கொண்டிருந்தார்கள். அவர்கள், ஒருவிதக் குடியாட்சியை அமைத்துக்கொண்டு தங்களுக்கென செப்புக் காசுகளையும் வெள்ளிக் காசுகளையும் வெளியிட்டு வழங்கினார்கள். அவர்கள் வழங்கிவந்த காசுகள் சமீப காலத்தில் பூமியிலிருந்து அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ளன. அந்தப் பழங்காசுகளிலே பிராமி எழுத்தினால் எழுதப்பட்ட *யௌத்தெய கணஸ்ய ஜய* என்னும் வாசகம் எழுதப்பட்டிருக்கிறது *யௌத்தெய கணஸ்ய ஜய* என்றால் யௌத்தெய கணத்துக்கு வெற்றி என்பது பொருள். அந்தக் காசுகளில் பிராமி எழுத்து பொறிக்கப்பட்டிருக்கிற தனாலேயே அவை மிகப் பழங்காலத்துக் காசுகள் என்பது தெரிகின்றது.

(யௌத்தெய கணத்தாரின் பழங்காசுகளிலே எழுதப் பட்டுள்ள பிராமி எழுத்துக்கள். 'யௌத்தெய கணஸ்ய ஜய' என்பது இதன் வாசகம்)*

யௌத்தெய கணத்தாரின் பெயர் பாணினியின் *அஷ்டாத்யாயி* என்னும் இலக்கண நூலிலும் காணப்படுகிறது.

இப்பெயர் வடமொழி *மகாபாரதத்தில்* கூறப்படுகிறது. இந்த யௌத்தெயரும் அர்ச்சுனீயர் முதலிய குழுவினரும் ஆயுதஜீவி க்ஷத்திரியர் என்று கூறப்படுகின்றனர். ஆயுதஜீவி க்ஷத்திரியர் என்றால் ஆயுதங்களினால் போர் செய்து வாழ்க்கையை நடத்துகிறவர்கள் என்பது பொருள். இவர்கள் கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து கி.பி. மூன்றாம் நூற்றாண்டு வரையில் சிறப்பாக வாழ்ந்து வந்தனர் என்பது இவர்கள் அந்த நூற்றாண்டுகளில் தங்கள் பெயரினால் வழங்கிவந்த காசு களிலிருந்து தெரிகின்றது.

ஆயுதஜீவி க்ஷத்திரியர்களான யௌத்தெய கணத்தார் ஆதிகாலத்தில் கிழக்குப் பஞ்சாபு நாட்டில் வசித்து வந்தார்கள். பிற்காலத்தில் இவர்கள் தெற்கே உத்தரப் பிரதேசத்திலும் இராஜபுதனத்திலும் மேற்கு இந்தியாவிலும் பரவி இருந்தார் கள். இவர்கள் மூன்று பிரிவினராகப் பிரிந்து இருந்தனர். இவர்களுடைய சந்ததியார் இக்காலத்திலும் வாழ்ந்து வருகின்றனர். இராஜபுதனத்தில் சத்லஜ் நதிக்கரையில் உள்ள

---

* இந்த இடத்தில் பிராமி எழுத்துக்களின் வரிவடிவம் இருந்திருக்க வேண்டும். ஆனால், இக்கட்டுரை அச்சிடப்பட்ட நூலில் இது இடம் பெறவில்லை. அதற்கான விளக்கம் மட்டுமே உள்ளது. (ப-ர்)

ஜோஹியபார் என்னும் இடத்திலே இவர்கள் ஜோஹிய ராஜபுத்திரர் என்னும் பெயர்கொண்டு வாழ்ந்து வருகிறார்கள். இவர்களும் மூன்று பிரிவினராகக் காணப்படுகின்றனர்.

பண்டைக் காலத்தில் இந்த ஆயுதஜீவி க்ஷத்திரியர்களான யௌத்தெய கணத்தார் சில காலங்களில் சிறப்பாகவும் சில காலங்களில் சிறப்புக் குன்றியும் இருந்தார்கள். உயர்வும் தாழ்வும் வாழ்க்கையில் உள்ளதுதானே.

கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் மேற்கு இந்தியாவை யரசாண்ட சாக அரசனாகிய ருத்திரத்தாமன் என்னும் அரசன் யௌத்தெய கணத்தை வென்று அடக்கினான் என்று அவ்வரசன் கி.பி. 150இல் எழுதி வைத்துள்ள ஜுனாகர் சாசனம் கூறுகிறது. கி.பி. மூன்றாம் நூற்றாண்டில் குப்த அரசர் யௌத்தெய கணத்தை வென்று அடக்கினர் என்று குப்த அரசர் சாசன எழுத்து கூறுகிறது.

இதுகாறும் கூறியவற்றால் யௌத்தெய கணம் என்னும் பெயருள்ள போர்வீரர் கூட்டம் ஒன்று இருந்தது என்றும் அந்தக் கூட்டம் எந்த அரசருக்கும் அடங்காமல் சுதந்தரமாக வாழ்ந்து வந்தது என்றும் இலக்கியச் சான்று, கல்வெட்டு எழுத்துச் சான்று, பழங்காசுச் சான்றுகளினால் அறிந்தோம்.

**ஆரியப்படையும் யௌத்தெயரும்**

ஆயுதஜீவி க்ஷத்திரியர்களாகிய யௌத்தெய கணத்தாரைச் சங்கச் செய்யுள்கள் ஆரியப்படை என்னும் பெயர்கொடுத்துக் கூறுகின்றன. யௌத்தெயராகிய ஆரியப்படை அடிக்கடி தமிழகத்தின்மேல் படையெடுத்துவந்து போர் செய்தது என்பது சங்கச் செய்யுள்களினால் அறிகிறோம். வடநாட்டிலிருந்து வந்த அரசன் பெயரைக் கூறாமல் போர்வீரர் கூட்டத்தை மட்டும் கூறுகிறபடியால், சங்கச் செய்யுள்கள் கூறுகிற ஆரியப்படை என்பது ஆயுதஜீவி க்ஷத்திரியராகிய யௌத்தெய கணம்தான் என்று துணிந்து கூறலாம். ஆரிய அரசன் பிரகத்தன் என்று ஒரு அரசன் சங்க இலக்கியத்தில் கூறப்படுகிறான். அவ்வாறு ஆரிய அரசன் பெயரைக் கூறாமல் ஆரியப்படையின் பெயரை மட்டும் கூறுகிறப்டியால் ஆரியப் படை என்பது யௌத்தெய கணத்தைத்தான் என்பது நன்கு தெரிகின்றது.

பிற்காலத்திலே தமிழ்நாட்டின்மேல் படையெடுத்துவந்த களபரர், பல்லவர், சாளுக்கியர், குப்தர் முதலிய அரச பரம்பரையினர் பெயரைச் சரித்திரத்தில் படிக்கிறோம். சங்க காலத்தில் ஆரிய அரசர்கள் தமிழகத்தின்மேல் படையெடுத்து வந்திருந்தால் அவ்வரசர்களின் பெயரைச் சங்கச் செய்யுளில்

கூறியிருக்கும். அப்படி அரசர் பெயரைக் கூறாமல் போர்வீரர் கூட்டத்தின் பெயரைக் கூறுகிறபடியால் சங்கச் செய்யுள்கள் கூறுகிற ஆரியப்படை என்பது ஆயுதஜீவி க்ஷத்திரியராகிய யௌத்தெய கணத்தார் என்பது நன்கு விளங்குகிறது. எனவே ஆரியப்படையும் யௌத்தெய கணமும் ஒன்றே என்று துணிந்து கூறலாம்.

ஒரு சரித்திர ஆசிரியர், ஆரியப்படை என்பது பல்லவ அரசருடைய சேனை என்று எழுதியிருக்கிறார். ஆரியப்படையொன்று மலையமானுடைய முள்ளூரின்மேல் படையெடுத்து வந்த செய்தியை *நற்றிணை* 170ஆம் செய்யுள் கூறுவதை முன்னமே காட்டினோம். இந்த ஆரியப்படை பல்லவ அரசருடைய சேனையாக இருக்கக்கூடும் என்று திரு. பி. டி. ஸ்ரீநிவாச அய்யங்கார் யூகிக்கிறார். அவர் தாம் எழுதிய *தமிழர் சரித்திரம்* என்னும் ஆங்கில நூலில் 509ஆம் பக்கத்தில் இவ்வாறு எழுதுகிறார்: முள்ளூர் மன்னனுக்குத் தோற்றுப் போன ஆரியப்படை பல்லவ அரசனுடைய சேனையாக இருக்கக்கூடும் என்றும் பல்லவ அரசன் கி.பி. 6ஆம் நூற்றாண்டில் களபர அரசனை வென்ற பிறகு தன்னுடைய இராச்சியத்தை விரிவுபடுத்த எண்ணித் தன்னுடைய சேனையை முள்ளூரின்மேல் போர்செய்ய அனுப்பியிருக்கக்கூடும் என்றும் அய்யங்கார் எழுதுகிறார் (*The History of Tamils*, P.T.Srinivasa Iyangar, p. 509).

இவர் கூறுவது ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று. ஏனென்றால், சங்க காலத்தில் (கி.பி. 2ஆம் நூற்றாண்டில்) பல்லவர் ஆட்சி தமிழ்நாட்டில் ஏற்படவில்லை. சங்கச் செய்யுள்களில் பல்லவரைப் பற்றி ஓரிடத்திலாவது கூறப்படவில்லை. மேலும், பல்லவ அரசன் முள்ளூரின்மேல் படையெடுத்துச் சென்றிருந் தால் அதைத் தெளிவாகப் பல்லவர் சேனை என்று கூறப்பட்டிருக்கும். அப்படிக் கூறாமல் ஆரியப்படை வந்தது என்று கூறியிருப்பதனால் அது பல்லவர் சேனை என்று கருதமுடியாது. பல்லவ அரசர் 'ஆரியப்படை' என்னும் பெயருள்ள படையை வைத்திருந்ததாக எந்தக் கல்வெட்டுச் சாசனத்திலும் காணப்படவில்லை. பல்லவ அரசர் ஆரிய ப்படை என்னும் பெயருள்ள சேனையை வைத்திருக்கவில்லை. எனவே ஸ்ரீநிவாச அய்யங்கார் யூகிக்கிற யூகம் தவறாகும்.

ஆரியப்படை என்று சங்க இலக்கியங்கள் கூறுவது அக்காலத்தில் வட இந்தியாவில் இருந்த பேர்போன யௌத் தெய கணம் என்னும் கூட்டத்தையே குறிக்கிறது என்பதில் சற்றும் ஐயமில்லை.

**முருகனும் கார்த்திகேயனும்**

இதுகாறும், ஆரியப்படையும் யௌத்தெய கணமும் ஒன்றே என்பதையும், ஆரியப்படையினராகிய யௌத்தெய கணத்தார் சங்க காலத்தில் அடிக்கடி தமிழ்நாட்டின்மேல் படையெடுத்து வந்தனர் என்பதையும் கூறினோம். வாணிகம், சமயம், அரசியல், போர் முதலிய காரணங்களினால் அடிக்கடி இருவேறு சமூகத்தாருக்குத் தொடர்பு அடிக்கடி ஏற்படு மானால், அவ்விரு சமூகங்களின் நாகரிகம், பண்பாடு, கலை முதலியவைகளில் ஏதேனும் சில இரு சாராரிடமும் புகுந்து விடுவது வழக்கம். இதன்படி ஆரியப்படையினரின் பண்பாடு ஏதேனும் தமிழரிடம் புகுந்ததா என்பதை ஆராய்வோம்.

தமிழரிடமிருந்து யௌத்தெய ஆரியப்படையினர் எதைக் கற்றுக் கொண்டார்கள் என்பதை ஆராய்வதற்குச் சான்றுகள் ஒன்றும் இல்லை. ஆனால், யௌத்தெயரிடமிருந்து தமிழர் சமயத்துறையில் கார்த்திகேயன் (சுப்பிரமணியன்) வணக்கத்தைப் பெற்றுக்கொண்டனர் என்பது தெரிகின்றது. இதனை விளக்கிக் கூறுவோம்.

தமிழர் முருகன் என்னும் தெய்வத்தை இக்காலத்திலும் வணங்கி வருவதுபோலவே அக்காலத்திலும் வணங்கி வந்தார்கள். முருகன் வழிபாடு தொன்றுதொட்டுத் தமிழ் நாட்டில் இருந்துவருகிறது. சங்க இலக்கியங்களிலே முருகனைப்பற்றிப் பல இடங்களில் கூறப்படுகிறது. குறிஞ்சி நிலக் கடவுளாகிய முருகன் வேலன் என்றும் சேவற் கொடியோன் என்றும் 'பெரும் பெயர் முருகன்' கூறப்படு கின்றார். முருகன், போர்த்தெய்வமாகவும் இளமையும் அழகும் வாய்ந்தவராகவும் கருதப்பட்டு வருகிறார்.

போர் செய்வதையே தங்கள் குலத்தொழிலாகக் கொண்டிருந்த யௌத்தெய கணத்தாராகிய ஆரியப் படையினரும் தங்களுக்கென்று போர்த்தெய்வம் ஒன்றை வணங்கினார்கள். அவர்கள் அந்தத் தெய்வத்திற்குக் கார்த்தி கேயன் என்றும் ப்ரமண்யன் (சுப்பிரமணியன்) என்றும் சண்முகன் என்றும் ஸ்கந்தன் என்றும் பெயர் வழங்கினார்கள். யௌத்தெய கணத்தார் தங்கள் பெயரினால் செம்பு நாணயங் களையும் வெள்ளி நாணயங்களையும் வழங்கினார்கள் என்றும் அந்நாணயங்களிலே 'யௌத்தெய கணஸ்ய ஜய' என்று பிராமி எழுத்தினால் பொறித்திருந்தார்கள் என்றும் முன்னமே கூறினோம். அவர்களுடைய சில நாணயங்களிலே சுப்பிரமணியன் உருவத்தைப் பொறித்து வைத்ததோடு அமையாமல் பிராமி

எழுத்தினாலே *பகவத ஸ்வாமினோ ப்ரஸ்மண்ய தேவஸ்ய யௌத்தெயனாம்* என்பது முதலிய வாசகங்கள் பொறிக்கப் பட்டுள்ளன. இதனால் அவர்கள் குமரக்கடவுளைத் தங்கள் குலதெய்வமாகக் கொண்டிருந்தார்கள் என்பது தெரிகின்றது.

(யௌத்தெய கணத்தாரின் காசுகளிலே எழுதப்பட்டுள்ள பிராமி எழுத்துகள். *'பகவத ஸ்வாமிணோ ப்ரஹ்மண்ய குமாரஸ்ய'* என்பது இதன் வாசகம்.)*

தமிழரின் பழந்தெய்வம் முருகன் என்று கூறினோம். முருகனாகிய வேலனுக்கு அக்காலத்தில் சுப்பிரமணியன், கார்த்திகேயன், சண்முகன், ஸ்கந்தன் முதலிய வேறு பெயர்கள் இல்லை. இப்பெயர்கள் பிற்காலத்திலே முருகன் பெயருடன் இணைக்கப்பட்டன. தமிழருக்கும் யௌத்தெயராகிய ஆரியப்படையினருக்கும் போர் காரணமாக அடிக்கடி தொடர்பு ஏற்பட்டிருந்தபடியினாலே தமிழருடைய முருகனுக்கும் யௌத்தெயருடைய சுப்பிரமணியனுக்கும் தொடர்பு ஏற்பட்டிருக்கக்கூடும்.

இந்தத் தொடர்பு காரணமாக சுப்பிரமணியனும் முருகனும் ஒருவனே எனக் கொண்டார்கள். ஆகவே, கார்த்திகேயன், குமரன், சுப்பிரமணியன், ஸ்கந்தன் முதலிய பெயர்கள் முருகன் பெயராக இணைக்கப்பட்டன. சரவணப் பொய்கையில் ஆறுபேருக்குச் சண்முகன் பிறந்தான் என்பது போன்ற வடநாட்டுப் புராணக் கதைகள் முருகனுக்குக் கற்பிக்கப்பட்டன. ஆரிய-திராவிடக் கலாசார, பண்பாடுகள் ஒன்றாகக் கலந்த காலத்திலே திராவிடச் சிவனுடன் ஆரிய ருத்திரன் இணைக்கப்பட்டது போலவும் திருமாலாகிய மாயோனுடன் விஷ்ணு இணைக்கப்பட்டது போலவும் முருகனுடன் சுப்பிரமணியன் இணைக்கப்பட்டான்.

இந்த முருக - சுப்பிரமணிய இணைப்பு யௌத்தெய கணத்தாரான ஆரியப்படையின் தொடர்பினாலே ஏற்பட்டிருக்க வேண்டும். இந்தத் தொடர்பு கடைச்சங்க காலத்தின் இறுதியிலே அதாவது கி.பி. முதல் நூற்றாண்டு அல்லது இரண்டாம் நூற்றாண்டிலே ஏற்பட்டிருக்கக்கூடும். *திருமுருகாற்றுப்படை, பரிபாடல்* முதலிய சங்க நூல்களிலே முருக - சுப்பிரமணியக் கலப்பு காணப்படுகிறபடியினாலே, கடைச்சங்க காலத்து இறுதியில் இந்த உறவு ஏற்பட்டிருக்க வேண்டும் என்று துணிந்து கூறலாம்.

---

* இந்த இடத்தில் பிராமி எழுத்துக்களின் வரிவடிவம் இருந்திருக்க வேண்டும். ஆனால், இக்கட்டுரை அச்சிடப்பட்ட நூலில் இது இடம் பெறவில்லை. அதற்கான விளக்கம் மட்டுமே உள்ளது. (ப-ர்)

(குறிப்பு: தமிழரின் முருக வழிபாட்டுடன் யௌத்தெயரின் கார்த்திகேய சண்முக வழிபாடு கலந்ததென்று கூறினோம். இந்தக் குமார கார்த்திகேய வழிபாட்டுக் கலப்பு இன்னொரு வழியாகவும் நேர்ந்திருக்கக்கூடும். உஞ்சை என்னும் உஜ்ஜனி நாட்டிலும் குமார - சண்முக - கார்த்திகேய வழிபாடு அக்காலத்தில் சிறப்பாக நடந்துவந்தது. இதற்குச் சான்று, அக்காலத்து உஜ்ஜனி நாட்டுக் காசுகளிலே சண்முகன் உருவம் பொறிக்கப்பட்ட நாணயங்கள் வழங்கியிருந்ததேயாகும். ஆறுமுகமுடைய சண்முகனின் உருவங்கள் அக்காலத்து நாணயங்களில் பொறிக்கப்பட்டுள்ளன. அந்த உருவத்தின் காலடியில் சண்முகன் வாகனமாகிய சேவல் உருவமும் பொறிக்கப்பட்டுள்ளது. பேர்பெற்ற காளிதாசன் உஜ்ஜனியிலிருந்த போதுதான் அவன் *குமாரசம்பவம்* என்னும் நூலை இயற்றினான். குமாரக் கடவுள் வழிபாடு சிறப்பாக இருந்த உஜ்ஜனி நாட்டில் இருந்த காளிதாசன் *குமாரசம்பவம்* என்னும் நூலை இயற்றியது பொருத்தமாகும். எனவே, தமிழ்நாட்டு முருகனுடன் குமார - கார்த்திகேய - சண்முக - சுப்பிரமணிய வழிபாடு இணைக்கப்பட்டது, யௌத்தெயர் மூலமாகவும் உஜ்ஜனி நாட்டு மக்கள் மூலமாகவும் இருக்கக்கூடும். சேர அரசர்களும் சோழ அரசர்களும் சங்க காலத்தில் உஜ்ஜனியுடன் தொடர்பு கொண்டிருந்ததைச் சரித்திர வாயிலாக அறிகிறோம்.)

*கல்வெட்டுக் கருத்தரங்கு (Seminar on Inscriptions),*
இரா. நாகசாமி (ப–ஆ.), 1966

# சங்க காலத்துச் சேர அரசரின் பிராமி எழுத்துச் சாசனம்

சங்க காலத்து வரலாற்றைப் பற்றிப் *புறநானூறு, பதிற்றுப்பத்து, அகநானூறு* முதலான இலக்கியங்களிலிருந்து அறிகிறோம். ஆனால், சங்க காலத்துச் சரித்திரம் இன்னும் முறையாக எழுதப்படவில்லை. இக்காலத்துச் சரித்திர ஆசிரியர்களில் ஒரு சிலர் சங்க காலத்தைப் பற்றிச் சந்தேகப் படவும் செய்கின்றனர். சங்க காலத்துச் சரித்திரத்தைப் பற்றிச் சங்க இலக்கியங்களைத் தவிர வேறு சான்றுகள் ஏன் கிடைக்கவில்லை? சங்க காலத்து அரசர்களின் சாசன எழுத்துக்கள் ஏன் கிடைக்கவில்லை? என்று கூறிச் சங்க கால அரசர்களைப் பற்றிச் சந்தேகப்படுகின்றனர்.

சங்க காலத்தைப் பற்றிய சான்றுகள், அதாவது ஆர்க்கியாலஜி, எஃபிகிராபி சான்றுகள், கிடைக்காததற்குக் காரணம் என்னவென்றால் இவ்விரண்டு இலாகாக்களும் தமிழ்நாட்டிலுள்ள பழைய சாசனங்களையும் இடங்களையும் இன்னும் சரியாக ஆராய்ச்சி செய்யவில்லை; கிடைத்துள்ள சில சான்றுகளையும் வெளிப்படுத்தாமல் இருட்டறையில் மூடிவைத்துள்ளன.

சில ஆண்டுகளுக்கு முன்பு தமிழ்நாட்டில் சில இடங் களிலிருந்து கிடைத்த உரோம நாட்டு நாணயப் புதையல் களும், புதுச்சேரிக்கு அருகில் உள்ள அரிக்கமேடு என்னும் கடற்கரையூரில் அகழ்ந்தெடுக்கப்பட்ட கிரேக்க உரோமப் பொருள்களும் சங்க நூல்கள் கூறுகிற யவன - தமிழர் வாணிகத் தொடர்பைச் சான்று காட்டி வலியுறுத்தின. அதன் பிறகு, சரித்திர ஆசிரியர்கள், கி.பி. முதல் இரண்டு நூற்றாண்டுகளில் யவன - தமிழர் வாணிகத் தொடர்பு இருந்ததை ஒப்புக் கொண்டு சரித்திர நூல்களில் எழுதிவருகிறார்கள். இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன்பு காவிரிப்பூம்பட்டினத்தில் அகழ்ந்தெடுக்கப்பட்ட பழம்பொருள்கள் *சிலப்பதிகாரமும், மனிமேகலையுங்* கூறுகிற காவிரிப்பூம்பட்டினத்துச் செய்தி

களை வலியுறுத்தி மெய்ப்பித்தன. காவிரிப்பூம்பட்டினத்தின் ஆராய்ச்சி இன்னும் முற்றுப் பெறவில்லை, தமிழ்நாட்டிலும் பொதுவாகத் தென் இந்தியாவிலும் *ஆர்க்கியாலஜி, எஃபிகிராபி* இலாகாக்கள் சரிவர வேலை செய்யாமலே இருக்கிற படியால், பழைய சான்றுகள் கிடைக்கவில்லை.

ஆனால், கிடைத்துள்ள சில சான்றுகளையாவது சரியான முறையில் வெளிப்படுத்தி உலகத்துக்குக் காட்டிற்றா என்றால், அதுவும் செய்யவில்லை. உதாரணமாகக் கொங்கு நாட்டுப் புகழூருக்கு அருகில் கண்டுபிடிக்கப்பட்ட பிராமி எழுத்துச் சாசனத்தைக் கூறலாம்.

புகழூருக்கு அருகில் உள்ள ஆறுநாட்டார்மலை என்னும் மலையில் இயற்கையாக அமைந்த குகையிலே இந்தப் பிராமி கல்வெட்டெழுத்து 1927இல் கண்டுபிடிக்கப்பட்டது. இந்தச் சாசன எழுத்தைப் பற்றிய செய்தி, *எஃபிகிராபி* இலாகாவின் 1927-28 ஆம் ஆண்டு அறிக்கையில் வெளியிடப்பட்டிருக்கிறது. ஆனால் அதில் எழுதப்பட்டிருக்கிற வாசகம் என்ன என்பதைப் படித்து வெளியிடாமல் இதுவரையில் இருந்து விட்டனர். ஏறத்தாழ 30ஆண்டுகள் ஆகியும் அந்தச் சாசனத்தைப் படித்து அதன் வாசகத்தை வெளியிடாமலே இருந்துவிட்டனர்!

சென்ற ஆண்டிலே திரு. ஐராவதம் மகாதேவன் அவர்கள் இந்தப் பிராமி எழுத்துச் சாசனத்தை முதன் முதலாக வாசித்து வெளிப்படுத்தினார். திரு. ஐ. மகாதேவன் அவர்கள் *எஃபிகிராபி* (சாசன) இலாகா உத்தியோகஸ்தர் அல்லர். அவர் வேறு துறையில் உத்தியோகஸ்தராக இருக்கிறார். ஆனாலும், தனிப்பட்ட முறையில் ஓய்வு நேரத்தில் தமிழ்நாட்டுப் பிராமி எழுத்துச் சாசனங்களைப் படித்து ஆராய்ச்சி செய்து வருகிறார். மேலே கூறியபடி புகழூர் பிராமி எழுத்துச் சாசனத்தையும் அவர் படித்து வெளியிட்டுள்ளார். அந்தச் சாசனத்திலிருந்து சங்க காலத்துச் சேர அரசர் சிலரைப்பற்றி யறிய முடிகிறது. அவரே பாண்டி நாட்டிலுள்ள இன்னொரு பிராமி எழுத்துச் சாசனத்தையும் படித்தறிந்து வெளியிட்டிருக்கிறார் அது சங்க காலத்துப் பாண்டிய அரசனைப் பற்றியது. அவ்விரண்டு சாசனங்களும் சங்க காலத்துப் பாண்டிய, சேர அரசர்களைப் பற்றிக் கூறுகின்றன. சங்ககாலத்து அரசர்களைப் பற்றிய சாசனங்கள் ஏன் கிடைக்கவில்லை என்று ஐயப்படுகிற சந்தேகப் பேர்வழிகளுக்கு இந்தச் சாசனங்கள் தகுந்த விடை கூறுவது போல முன் நிற்கின்றன.

முப்பத்தொன்பது ஆண்டுகளாகப் படிக்கப்படாமல் *எஃபிகிராபி* இலாகாவில் அஞ்ஞாதவாசம் செய்து கொண்டிருந்த புகழூர் பிராமி எழுத்துச் சாசனத்தை முதன் முதலாகப் படித்து அதன் வாசகத்தை வெளியிட்டவர் திரு. ஐ. மகாதேவன் அவர்கள் சான்று கூறினோம். அந்தச் சாசனத்தின் எழுத்தையும் அதன் வாசகத்தையும் கீழே தருகிறோம்.

**உதவி: ஐ. மகாதேவன்**

**இச்சானத்தின் வாசகம்:**

1. தி அமண்ணன் யாற்றூர் செங்காயபன் உறைய
2. கோ ஆதன் சேல்லிரும் பொறை மகன்
3. பெருங்கடுங்கோன் மகனிளங்
4. கடுங்கோ ளங்கோ ஆக அறுத்த கல்.

**இதன் கருத்து:**

இளவரசனாகிய இளங்கடுங்கோ அமண முனிவனாகிய ஆற்றூர் செங்காயபன் வசிக்க அமைத்துக் கொடுத்த மலை அல்லது குகை.

**விளக்கம்:**

அமணர்கள் (பௌத்த ஜைன மத முனிவர்கள்) ஊருக்கப் பால் மலைகளில் தங்கி வசிப்பது பழங்காலத்து வழக்கம்.

அவர்கள் மலைகளில் இயற்கையாக அமைந்துள்ள குகை போன்ற பொடவுகளில் தங்கி வசிப்பார்கள். அவர்கள் பாயில் படுக்கமாட்டார்கள். தரையில்தான் படுப்பார்கள். ஆகவே, அமணத் துறவிகள் படுப்பதற்காகப் பாறைக் கல்லைக் கரடுமுரடு இல்லாமல் மழமழவென்று பாயும் தலையணையும் போன்று அமைத்து, அரசர்களும் பிரபுக்களும் அவர்களுக்குக் கொடுப்பது வழக்கம். அந்த வழக்கப்படி, சேர இளவரசனாகிய இளங்கடுங்கோ ஆறு நாட்டார் மலைக்குகையில் கற்படுக்கை களை அமைத்து அவற்றை ஆற்றூர் செங்காயபன் என்னும் முனிவனும் அவனைச் சேர்ந்த துறவிகளும் தங்குவதற்காகத் தானஞ் செய்ததை இச்சாசனம் கூறுகிறது.

இச்சாசனத்திலிருந்து சரித்திர ஆதாரமாக நமக்குக் கிடைக்கின்ற சான்று என்னவென்றால், சேர நாட்டு அரச பரம்பரையில் மூன்று அரசர்களின் பெயர் கிடைத்திருப்பது தான். அதாவது கோ ஆதன் சேரல் இரும்பொறை என்னும் பாட்டனும், அவன் மகனான பெருங்கடுங்கோன் என்பவனும், அவன் மகன் இளவரசனான இளங்கடுங்கோ என்பவனும் இச்சாசனத்தில் கூறப்படுகின்றனர். இந்தச் சாசனம் எழுதப் பட்ட ஆண்டு கூறப்படவில்லை. எந்த ஆண்டு என்று அறுதியிட்டுக் கூற முடியாவிட்டாலும், பொதுவாக இந்தச் சாசனத்தின் காலத்தை இதன் எழுத்திலிருந்தும், அரசர் பெயரிலிருந்தும் அறிந்துகொள்ளலாம்.

இந்தச் சாசனம் பிராமி எழுத்தினால் எழுதப்பட்டிருப் பதைக் காண்கிறோம். பிராமி எழுத்து அசோகச் சக்கரவர்த்தி காலத்தில் வட இந்தியாவிலிருந்து வந்து தென் இந்தியாவிலும் இலங்கையிலும் வழங்கப்பட்டது. அஃது ஏறத்தாழ கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து கி.பி. இரண்டாம் நூற்றாண்டு வரையில் வழங்கி வந்தது (அதன் பிறகு வட்டெழுத்து வழங்கலாயிற்று). இந்தப் பிராமி எழுத்தைக் கொண்டும் இதில் கூறப்படுகின்ற அரசர்களின் பெயரைக் கொண்டும் இந்தச் சாசனம், ஏறத்தாழ கி. பி. 150 இல் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்று கொள்வதில் தவறு இல்லை. ஆகவே, இது கி. பி. இரண்டாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் எழுதப்பட்ட சாசனம் என்று கொள்ளலாம்.

இந்தச் சாசனத்தைப் பற்றிச் சில விளக்கங்கள் கூற வேண்டியிருக்கின்றன. அவை:

1. சாசனத்தின் முதல் வரியில் முதல் எழுத்து தி என்றிருக்கிறது. இதற்கு திரு. ஐ. மகாதேவன் அவர்கள்

விளக்கங் கூறவில்லை. இந்தத் தி என்னும் எழுத்து திரு என்பதைக் குறிக்கிறதாகத் தோன்றுகிறது (இந்தச் சாசனம் எழுதப்பட்ட ஏறத்தாழ அதே காலத்தில் வட இந்தியாவில் வழங்கப்பட்ட காசுகள் சிலவற்றில் பிராமி எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளன. அப்பிராமி எழுத்துக்களில் தி என்னும் எழுத்து த்ரி (ஸ்ரீ) என்னும் பொருளில் எழுதப்பட்டுள்ளது. அந்த எழுத்தைப் பற்றி இங்கு விளக்கங் கூறுவதற்கு இட மின்மையால் எழுத விரும்பவில்லை). ஸ்ரீ என்னும் பொரு ளுள்ள திரி என்னும் எழுத்தே இந்தச் சாசனத்தின் முதலில் உள்ள தி என்னும் எழுத்து என்று கருதலாம்.

2. முதல் வரியில் இரண்டாவது சொல் அமணன் என்று இருக்க வேண்டியது அமண்ணன் என்று ணகர ஒற்று மிகுந்திருக்கிறது, இச்சாசனத்தில். அமணன் என்பது சமணன் என்பதன் திரிபு. சமணன் என்பது சிரமணன் என்னும் பாலி மொழிச் சொல்லின் திரிபு. அமணன், சமணன், சிரமணன் என்னும் பெயர்கள் பௌத்த மத அல்லது ஜைன மதத் துறவிகளைக் குறிக்கின்றன. ஆகவே, இதில் கூறப்பட்டுள்ள யாற்றூர் செங்காயப்பன் (செங்காசிபன்) பௌத்த மதத் துறவியாகவோ ஜைன மதத் துறவியாகவோ இருக்க வேண்டும்.

3. இரண்டாவது வரியில், 'கோ ஆதன் செல்லிரும் பொறை' என்று திரு. ஐ. மகாதேவன் அவர்கள் படிக்கிறார். இவ்வரசனை அவர் *பதிற்றுப்பத்து* 7 ஆம் பத்தின் தலைவனான செல்வக் கடுங்கோ வாழியாதனுடன் பொருத்திக் கூறுகிறார். ஆனால், செல்லிரும்பொறை என்று படிப்பதைவிட சேல்லிரும் பொறை என்று படிக்கலாம் என்பது என்னுடைய கருத்து. சேரல்லிரும் பொறை என்று எழுத வேண்டியதைக் கல்தச்சன் தவறுதலாக ரகரத்தை விட்டு விட்டான்போலும். இப்படி 'கோ ஆதன் சேரல்லிரும்பொறை' என்று வாசிக்க வேண்டும். சாசன எழுத்துக்களில் எகரத்தையும் ஏகாரத்தையும் ஒரே விதமாக எழுதுவர். எனவே, செல்லிரும் பொறை என்பதைவிட சேரல்லிரும் பொறை என்று படிப்பதே பொருத்தமானது.

4. நான்காவது வரியில் 'கடுங்கோ ளங்கோ ஆக' என்று எழுதப்பட்டிருக்கிறது. இங்கும் கல்தச்சன் தவறு செய்திருக்கி றான் என்பது வெளிப்படையாகத் தெரிகிறது. எழுத்துகள் விடுபட்டிருக்கின்றன. 'கடுங்கோ விளங்கோ ஆக' என்று எழுதப்படவேண்டியதில் வி என்னும் எழுத்து விடுபட்டுள்ளது. எனவே, விடுபட்டுள்ள எழுத்தைச் சேர்த்துப் படித்தால், இந்தச் சாசன வாசகம் இவ்வாறு அமையும்:

1. திரு அமண்ணன் யாற்றூர் செங்காயபன் உறைய
2. கோ ஆதன் சேரல்லிரும் பொறை மகன்
3. பெருங்கடுங்கோன் மகனிளங்
4. கடுங்கோ விளங்கோ ஆக அறுத்த கல்.

இனி, இந்த அரசர்கள் யார் என்பதை ஆராய்வோம். திரு. ஐ. மகாதேவன் அவர்களின் கருத்து இது: "கோ ஆதன் செல்லிரும் பொறை என்று சாசனத்தில் கூறப்படுகிறவன் *பதிற்றுப்பத்து* 7ஆம் பத்தின் தலைவனாகிய செல்வக் கடுங்கோ வாழியாதன். அவன் மகன் கடுங்கோன் என்று சாசனத்தில் கூறப்படுகிறவன் *பதிற்றுப்பத்து* 8 ஆம் பத்தின் தலைவனாகிய தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை. அவன் மகன் இளங்கோவாகிய இளங்கடுங்கோ என்று சாசனத்தில் கூறப்படுகிறவன் *பதிற்றுப்பத்து* 9 ஆம் பத்தின் தலைவனாகிய இளஞ்சேரலிரும்பொறை."

இதில் இரும்பொறை என்பதும் கடுங்கோன் என்பதும் சேர அரச பரம்பரையில் இளைய வழியைச் சேர்ந்தவரும் கொங்கு நாட்டை அரசாண்டவருமாகிய சேரர் பரம்பரையினர் என்று கூறப்படுகின்றனர் என்பதில் சற்றும் ஐயமில்லை. இந்தச் சாசனம், அக்காலத்தில் சேர இராச்சியத்துடன் இணைந்திருந்த கொங்கு நாட்டில் காணப்படுவதும் இதனை வலியுறுத்துகிறது. ஆனால், இந்த அரசர்கள் *பதிற்றுப்பத்து* 7, 8, 9 ஆம் பத்துகளின் தலைவர்கள் என்று திரு. ஐ. மகாதேவன் கூறுவதை ஏற்றுக்கொள்ளச் சில தடைகள் உள்ளன. அவற்றை விளக்குவோம்.

சாசனம் கூறுகிற கோ ஆதன் சேல்லிரும் பொறை அல்லது கோ ஆதன் சேரல்லிரும் பொறை 7 ஆம் பத்தின் தலைவனாகிய செல்வக் கடுங்கோ வாழியாதனாக இருக்க முடியாது என்பதை இப்பெயர்களே நன்கு தெரிவிக்கின்றன. எனவே, இருவரும் வெவ்வேறு அரசர்கள் ஆவர்.

சாசனங் கூறுகிற பெருங்கடுங்கோன் 8 ஆம் பத்தின் தலைவனாகிய (தகடூர் எறிந்த) பெருஞ்சேரல் இரும்பொறையாக இருக்க முடியாது. ஏனென்றால், பெருஞ்சேரல் இரும்பொறைக்குப் பெருங்கடுங்கோ என்னும் பெயர் சங்க இலக்கியத்தில் எங்கும் கூறப்படவில்லை. எனவே, இருவரும் வெவ்வேறு அரசர்கள் ஆவர்.

சாசனத்தில் கூறப்படுகிற இளங்கடுங்கோ, 9 ஆம் பத்தின் தலைவனாகிய இளஞ்சேரல் இரும்பொறையாக இருக்க முடியாது. இளஞ்சேரல் இரும்பொறைக்கு இளங்கடுங்கோ என்று பெயர் கூறப்படவில்லை. அன்றியும் 8 ஆம் பத்துக்குரிய

பெருஞ்சேரலிரும்பொறையின் மகன் அல்லன், 9 ஆம் பத்துக்குரிய இளஞ்சேரல் இரும்பொறை. அவன் பெருஞ்சேர லிரும்பொறையின் தம்பியான குட்டுவன் இரும்பொறையின் மகன். இதனைக் கீழ்க்கண்ட வழி முறையில் காண்க:

(7 ஆம் பத்து) செல்வக்கடுங்கோ வாழியாதன்
இவனுக்கு 2 பிள்ளைகள் (துணைப் புதல்வர்
7 ஆம் பத்து 10: 21) இருந்தனர். அவர்கள்:




*பதிற்றுப்பத்தில்* கூறப்படுகிற சேர அரசர்களின் இளையவழிப் பரம்பரை இது. ஆனால் சாசனம் கூறுகிற பரம்பரை, கோ ஆதன் சேரலிரும்பொறை, அவன் மகன் பெருங்கடுங்கோ, அவன் மகன் இளங்கடுங்கோ என்று திட்ட வட்டமாகக் கூறுகிறது. எனவே இம்மூவரை 7, 8, 9 ஆம் பத்தின் தலைவர் எனக் கூற இயலாது. அப்படியானால் சாசனங் கூறுகிற அரசர் யாவர்?

பாலை பாடிய பெருங்கடுங்கோ, மருதம் பாடிய இளங் கடுங்கோ என்று இரண்டு சேர அரசர் சங்கத் தொகை நூல்களில் கூறப்படுகின்றனர். ஆனால் அவர்களின் உறவுமுறை கூறப்படவில்லை. சாசனங் கூறுகிற பெருங்கடுங்கோவும் அவன் மகன் இளங்கடுங்கோவும் அவர்களாக இருக்கக்கூடும். அகப்பொருளில் பாலைத்திணையைப் பாடியவர் பெருங் கடுங்கோ. அவர் *அகநானூற்றில்* 1 செய்யுளையும், *கலித் தொகையில்* 35 செய்யுளையும் *குறுந்தொகையில்* 10 செய்யுளையும், *நற்றிணையில்* 10 செய்யுளையும், *புறநானூற்றில்* ஒரு செய்யுளையும் (282) இயற்றியுள்ளார். புறப்பாட்டைத் தவிர ஏனைய 67 செய்யுளும் பாலைத்திணையைப் பற்றியன. எனவே, இவர் பாலை பாடிய பெருங்கடுங்கோ எனப் பெயர் பெற்றார். அகப்பொருளில் மருதத்திணையைப் பாடிய இளங்கடுங்கோ

இவர் *அகநானூற்றில்* 2 செய்யுளும் *நற்றிணையில்* ஒரு செய்யுளும் மருதத்திணையைப் பற்றிப் பாடியுள்ளார். ஆகவே, மருதம் பாடிய இளங்கடுங்கோ எனப் பெயர் பெற்றார்.

பாலை பாடிய பெருங்கடுங்கோவும் மருதம் பாடிய இளங்கடுங்கோவும், சாசனத்தில் காணப்படுகிற பெருங் கடுங்கோ, இளங்கடுங்கோவாக இருக்கக்கூடும். அப்படி யானால் பாலை பாடிய பெருங்கடுங்கோவும் மருதம் பாடிய இளங்கடுங்கோவும் முறையே தகப்பன் மகன் முறையினர் ஆவர். இந்தச் சாசனம் இவர்களின் முன்னோனாகிய கோ ஆதன் சேரல் இரும்பொறையைக் கூறுகிறது. இந்த மூன்று அரசர்களும் சேர மன்னரின் இளைய கால்வழியில் வந்த கொங்கு நாட்டை ஆண்ட சேர அரசர் பரம்பரையைச் சேர்ந்தவர்கள். சங்கச் செய்யுள்களில் கூறப்படுகிற இவர்களைப் பற்றி இந்தச் சாசனத்தில் அறிகிறோம்.

சங்க காலச் சேர அரசர்களைப் பற்றித் தெரிவிக்கிற பழமையான பிராமி எழுத்துச் சாசனம் இதுவே.

சங்க காலத்து அரசர்களைப் பற்றிய சாசனங்கள் கிடைக்கவில்லையே என்று குறை கூறியவர்களுக்கு ஒரு சான்றாக இந்தச் சாசனம் இருக்கிறது. இது போன்று சங்க காலத்துப் பாண்டிய அரசனான நெடுஞ்செழியனைப் பற்றிய பிராமி எழுத்துச் சாசனம் ஒன்றும் கிடைத்திருக்கிறது. அது பற்றி அடுத்த இதழில் எழுதுவோம்.

முப்பத்தொன்பது ஆண்டுகள் ஆகியும் படிக்கப்படாமல் கிடந்த இந்தச் சாசனத்தை முதன் முதலாகப் படித்து வெளியிட்ட திரு. ஐ. மகாதேவன் அவர்களுக்கு எமது பாராட்டு உரியதாகும்.

*கல்வி*, மலர் 1, நவம்பர் 1966

# சங்க காலத்துப் பாண்டிய அரசனின் பிராமி எழுத்துச் சாசனம்

கடைச்சங்க காலத்துச் சேர அரசர்களைக் கூறுகிற பிராமி எழுத்துச் சாசனத்தைப் பற்றிச் சென்ற இதழில் எழுதினோம். இந்த இதழிலே கடைச்சங்க காலத்துப் பாண்டியனைக் கூறுகிற பிராமி எழுத்துச் சாசனத்தைப் பற்றிக் கூறுவோம்.

பாண்டி நாட்டிலே மதுரை மாவட்டத்து மதுரைத் தாலுகாவிலே மதுரை நகரத்துக்கு அருகிலே உள்ள மாங்குளம் என்னும் ஊரிலேயுள்ள மலைப்பாறை யொன்றிலே இந்தப் பிராமி எழுத்துச் சாசனம் செதுக்கியமைக்கப்பட்டிருக்கிறது. இந்தச் சாசனம் வேறு சாசனங்களுடன் *எபிஃகிராபி* (சாசன) இலாகாவின் 1906ஆம் ஆண்டு அறிக்கையில் வெளியிடப் பட்டிருக்கிறது (460 - 465 of 1906, 242 of 1963-64). இந்தச் சாசனம் கண்டுபிடிக்கப்பட்டு அறுபது ஆண்டுகளாகியும், இந்தச் சாசனத்தைச் சாசன இலாகா வாசித்து வெளியிடாமலே இருந்திருக்கிறது! சமீப காலத்தில்தான் இச்சாசனம் முதன் முதலாகத் திரு. ஐ. மகாதேவன் அவர்களால் படித்து வெளியிடப்பட்டது.

மேலே கூறிய இடத்தில், இயற்கையாக அமைந்துள்ள குகைவாயிலின் மேற்புறத்துப் பாறையின் மேலே முன் பக்கத்தில் இந்தச் சாசனம் பெரிய எழுத்துக்களால் ஒரே வரிசையாக எழுதப்பட்டிருக்கிறது. இக்குகையிலே அக் காலத்தில் வசித்திருந்த பௌத்த அல்லது ஜைன (சமண) முனிவர் படுப்பதற்கு ஏற்றதாக இக்குகையின் கற்றரை மழமழவென்று அமைக்கப்பட்டிருக்கிறது. அக்காலத்துப் பௌத்த ஜைன முனிவர்கள் ஊரில் தங்கி வசிக்காமல், ஊருக்கப்பால் மலைக்குகைகளிலே தங்கி வசிப்பது வழக்கம். அவர்களுக்கு வசதியாக இருக்கும்படி கற்படுக்கைகளை மழமழப்பாக அமைத்துக் கொடுப்பது ஊரார் கடமை. அந்த முறைப்படி ஒருவர் இந்தக் குகையிலே கற்படுக்கைகளை அமைத்துக் கொடுத்து அக்குகை வாயிலின் மேற்புறத்தில் இந்தப் பிராமி எழுத்துச் சாசனத்தை எழுதிவைத்தார். இந்தச் சாசனம் கி: மு. இரண்டாம் நூற்றாண்டில் அல்லது கி.மு. முதல்

நூற்றாண்டில் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்பது இந்தச் சாசன எழுத்தின் உருவ அமைப்பைக் கொண்டு கருதப் படுகிறது. ஒருவேளை இது கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் அசோகச் சக்கரவர்த்தி அரசாண்ட காலத்தில் எழுதப் பட்டிருக்கலாம். அசோக சக்கரவர்த்தி, தமது ஆட்சிக்கு உட்படாத தமிழகத்தில் (சேர, சோழ, பாண்டிய, சத்திய புத்திர நாடுகளில்) பௌத்த முனிவர்களை அனுப்பியதாக அவருடைய சாசனங்களில் இரண்டு சாசனங்கள் கூறுகின்றன.

நமது ஆராய்ச்சிக்குரிய இந்தச் சாசனத்திலே அந்தக் குகையில் வசித்த முனிவரின் பெயரும், அக்குகையில் கற் படுக்கைகளை அமைத்தவர் பெயரும், அக்காலத்தில் அரசாண்டிருந்த பாண்டியன் பெயரும் கூறப்படுகின்றன.

சங்க காலத்துச் சாசனங்கள் கிடைக்கவில்லை என்று இதுவரை குறை கூறப்பட்டு வந்தது. இந்தச் சாசனம் அந்தக் குறையை நீக்கிவிட்டது.

இனி, இந்தச் சாசனம் என்ன கூறுகிறது என்பதை ஆராய்வோம்: கணியன் நந்தி என்னும் முனிவர் பெயரும் நெடுஞ்செழியன் என்னும் பாண்டியன் பெயரும் குகையைச் செப்பஞ் செய்து கொடுத்த கடலன் வழுதி என்பான் பெயரும் இந்தச் சாசனத்தில் கூறப்படுகின்றன. நெடுஞ்செழியன் என்னும் பெயர்கள் சங்க இலக்கியங்களிலே காணப்படுகின்றன. *மதுரைக்காஞ்சியின்* தலைவனாகிய தலையாலங்கானத்துப் போரை வென்ற பாண்டியன் நெடுஞ்செழியனையும் அவனுக்கு முன்பு இருந்த ஆரியப்படை கடந்த அரசு கட்டிலில் துஞ்சிய பாண்டியன் நெடுஞ்செழியனையும் (இவன் கோவலனைத் தவறாகக் கொன்றவன்) அறிவோம். அந்நெடுஞ்செழியர்கள் கி. பி. முதல் நூற்றாண்டின் இறுதியிலும் கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் இருந்தவர்கள். ஆனால், இந்தச் சாசனத்தில் கூறப்படுகிற நெடுஞ்செழியன் அவர்கள் காலத்துக்கு இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு இருந்தவன். இது இந்தச் சாசன எழுத்தைக் கொண்டு யூகிக்கப்படுகிறது. எனவே இந்தப் பாண்டியன் நெடுஞ்செழியன் கடைச்சங்க காலத்தில் இருந்தவன் என்பது தெரிகின்றது.

இந்தச் சாசனம், குகையின் முன்புறத்தில் பெரிய எழுத்து களால் ஒரே வரியாக எழுதப்பட்டிருக்கிறது என்று கூறினோம். ஒரே வரியாக எழுதப்பட்டுள்ள இந்தச் சாசனத்தை ஐந்து வரியில் அமைத்துக் கீழே காட்டியுள்ளோம்.

பிராமி எழுத்தினால் எழுதப்பட்டுள்ள இந்தத் தமிழ் மொழிச் சாசனத்திலே தம்மம் (தர்மம்) என்றும் பிராகிருத மொழிச் சொல் காணப்படுகிறது. இச்சொல் பாலி என்னும்

ம்ாகதி மொழி அல்லது சூரசேனி என்னும் அர்த்தமாகதி மொழியிலிருந்து வந்திருக்கவேண்டும். ஏனென்றால் பௌத்தரும் ஜைனரும் இந்த மொழிகளைத் தங்கள் தெய்வ பாஷையாக அக்காலத்தில் வழங்கி வந்தார்கள். எனவே இந்தக் குகையில் வசித்த முனிவர் பௌத்த சமயத்தவராகவோ, ஜைன் சமயத்தவராகவோ இருந்திருக்க வேண்டும் என்பதில் சற்றும் ஐயமில்லை.

இந்தச் சாசனத்திலிருத்து, கணியன் நந்தி என்னும் முனிவரின் பெயரும் அவருக்காக இக்குகையில் கற்படுக்கை களை அமைத்த கடலன் வழுதி என்பவரின் பெயரும் இவர்கள் காலத்தில் பாண்டிய நாட்டையரசாண்ட நெடுஞ்செழியன் அரசன் பெயரும் கூறப்படுகின்றன.

இந்தச் சாசனத்தின் வாசகம் இது:

கணிய் நந்தி அஸிரிய் ஈ
குவ்அ னிகெ தம்மம் ஈ
த்தஅ நெடுஞ்ச ழியன் ப
ணஅன் கடல்அன் வழுத்தி
ய் கொட்டுபித்தஅ பளிஈய்.

இந்தச் சாசனத்தின் கருத்தை விளக்கிக் கூறுவதற்கு முன்பு இவ்வெழுத்துக்களைப் பற்றிச் சில கூறவேண்டும். இப்பிராமி எழுத்துச் சாசனத்தில் உயிர்மெய் அகர எழுத்துக்கள் ஆகாரக்

குறியீடு கொடுக்கப்பட்டுள்ளன. (முதல் வரியில் க, ந, இரண்டாம் வரியில் ம, மூன்றாம் வரியில் த, ச, ய, ப, நான்காம் வரியில் ண, க, ட, வ, ஐந்தாம் வரியில் த, ப, ஆகிய இவ்வெழுத்துக்கள் ஆகாரக் குறி கொடுக்கப்பட்டுள்ளன.) இவற்றை உயிர்மெய் அகரவெழுத்துகளாகப் படிக்க வேண்டும். மேலும், முதல் பிராகிருத மொழி எழுத்தாகிய ஸி என்பது வடமொழி அல்லது பிராகிருத மொழி எழுத்தாக எழுதப்பட்டுள்ளது. இரண்டாவது வரியில் உள்ள 6, 7, 8, 9ஆம் எழுத்துகளும் தம்மம் என்று வடமொழி அல்லது பிராகிருத மொழி எழுத்துகளெல்லாம் தமிழ் பிராமி எழுத்துகளே.

மேலும், இச்சாசனத்தில் றன்னகரம் தந்நகரம் போல எழுதப்பட்டு முடி வளைந்து காணப்படுகின்றது (இரண்டாம் வரி நான்காம் எழுத்தும், மூன்றாம் வரி பத்தாம் எழுத்தும், நான்காம் வரி மூன்றாம் எழுத்தும் எட்டாம் எழுத்தும், றன்னகர எழுத்துக்களே). இவை கோடு பெறாதபடியால் இவற்றை ன் என்று மெய்யெழுத்தாகவே வாசிக்க வேண்டும்.

**விளக்கம்:**

கணிய் = கணி; அஸிரிய்ஈ = ஆசிரியர்; குவ் அனிகெ = குவவனிகெ (குவவனுக்கு). தம்மம் = தர்மம். ஈத்தஅ நெடுஞ் = ஈத்தவன் + னெடுஞ்; நெடுஞ்சழியன் = நெடுஞ்செழியன்; பணஅன் = பணவன் (பணயன்). வழுத்திய் = வழுதி. கொட்டு பித்தஅ = கொத்து பித்த. (கொத்துவித்த); பளிஈய் = பள்ளி.

மிகை எழுத்துகளைத் தள்ளி, சந்திகளைப் புணர்த்தி, தவறுகளைச் சரிப்படுத்தினால் இச்சாசனத்தின் வாசகம் இவ்வாறு அமையும்:

கணி நந்தி ஆசிரியர் குவவனுக்குத் தர்மம், ஈத்தவன் நெடுஞ்செழியன். பணயன் கடலன் வழுதி கொத்துவித்த பள்ளி.

திரு. ஐராவதம் மகாதேவன் அவர்கள் இந்தச் சாசனத்துக்கு இவ்வாறு பொருள் கூறுகிறார்:

"உவ்விடம் (உவன்) வசிக்கிற முனிவன் (ஆசிரியன்) கணிய நந்திக்குத் தர்மம் நெடுஞ்செழியன் பண(வ)ன் (பஞ்சவன்) கடலன் வழுதி இந்தப் பள்ளியைக் கொடுப்பித்தான்" (*Corpus of the Tamil-Brahmi Inscriptions* by Iravatham Mahadevan, 1966, Page.1).

குவவன் என்பதை உவன் என்று திரு. ஐ. மகாதேவன் வாசிக்கிறார்.

ஆனால், இந்தச் சாசனத்தின் வாசகத்தைக் கீழ்க்கண்டபடி அமைப்பது பொருத்தம் என்று தோன்றுகிறது.

"கணியனந்தி ஆசிரிய குவவனுக்கு (கொடுத்த) தருமம். (இதை) ஈத்தவன் நெடுஞ்செழியன். பணயன் (ஆகிய) கடலன் வழுதி கொட்டுபித்த (கொத்துவித்த) பள்ளி."

(கொட்டுவித்த என்பதன் கருத்து பாறையைக் கொத்திச் செப்பம் செய்து கற்படுக்கையை யமைத்த என்று இருக்கலாம்).

இந்தத் தருமத்தை யளித்தவன், அதாவது, முனிவர் வசிப்பதற்குக் குகையைத் தானமாகக் கொடுத்தவன் நெடுஞ்செழியன் என்னும் பாண்டிய அரசன் என்பதும், அந்தக் குகையைச் செப்பஞ்செய்து முனிவர் வசிப்பதற்கு ஏற்றதாகப் பள்ளியாகச் செய்வித்தவன் அப்பாண்டியனுடைய பணயன் ஆகிய (தச்சனாகிய) கடலன் வழுதி என்பதும், இந்தப் பள்ளியைத் தானமாகப் பெற்ற முனிவன் கணியன் நந்தி குவவன் என்பதும் இச்சாசனத்திலிருந்து அறியப்படுகின்றன.

திரு. ஐ. மகாதேவன் அவர்கள், இந்தச் சாசனத்தையளித்த பாண்டியனின் பெயர் நெடுஞ்செழியன் பஞ்சவன் கடலன் வழுதி என்று படிக்கிறார். இச்சாசனத்தில் வருகிற பணவன் என்னும் சொல் பிராகிருத மொழி என்றும், அது பஞ்சவன் என்று பொருள்படும் என்றும் அது பஞ்சவனாகிய பாண்டியனைக் குறிக்கிறது என்றும் அவர் கூறுகிறார்.

அவர் கூற்று தவறு என்று தோன்றுகிறது. பணயன் என்பதே சரியான சொல். அது கற்றச்சன், கருமான் என்னும் பொருள் உள்ளது. அரசனுடைய தச்சனுக்குப் பணயன் என்று அக்காலத்தில் பெயர் வழங்கி வந்தது. பிற்காலத்தில், பணயன் என்னுஞ் சொல் பணயகாரன் என்று வழங்கப்பட்டதைச் சாசனங்களில் காணலாம். வேள்விக்குடிச் செப்பேடு, சின்ன மனூர்ச் செப்பேடு, சீவரமங்கலச் செப்பேடு முதலிய பிற்காலத்துப் பாண்டியரின் செப்பேட்டுச் சாசனங்களை எழுதியமைத்தவரின் பெயர்கள் அச்சாசனங்களில் கூறப்படு கின்றன. அவர்கள் அச்சாசனங்களில் பணயகாரன் என்றே கூறப்படுகின்றனர். எனவே, பணயன் அல்லது பணயகாரன் என்பது அரசரின் கீழ் பணிபுரிந்த தச்சர்களைக் குறிப்பன வாகும் என்பது ஐயமறத் தெரிகின்றது. இந்தச் சாசனத்தில் வருகிற பணயன் என்பதற்குக் கல்தச்சன் என்பதே பொருளாகும். அது பணவன் என்னும் பிராகிருதச் சொல்லின் திரிபு என்று கருதுவது தவறு ஆகும்.

அந்தப் பணயனாகிய கற்றச்சனின் பெயர் கடலன் வழுதி என்று சாசனம் கூறுகிறது. கடலன் என்பது தச்சனுடைய சிறப்புப் பெயர். வழுதி என்பது பாண்டி மன்னரின் சிறப்புப் பெயர். அரசரின் கீழ் அலுவல் புரியும் உத்தியோகஸ்தர்கள் தங்கள் அரசரின் பெயரையே தாங்களும் சூட்டிக்கொள்வது அக்காலத்து மரபு. இதனைப் பழைய சாசனங்களில் காண லாம். அந்த வழக்கப்படி இந்தக் கல்தச்சனாகிய பணயனும்

வழுதி என்னும் பாண்டியன் பெயரைச் சூட்டிக் கொண்டிருக்கிறான்.

இந்தச் சாசனத்துக்கு இதுவே சரியான பொருள் என்பது தெரிகின்றது. ஈத்தவன் நெடுஞ்செழியன். கொட்டுபித்தவன் (கொத்துவித்தவன் என்று இருக்க வேண்டும்; எழுதுவோர் பிழையால் கொட்டுபித்தவன் என்று எழுதப்பட்டிருக்கிறது) பெயர் பணயன் கடலன் வழுதி (வழுதி என்பது வழுத்தி என்று தவறாக எழுதப்பட்டிருக்கிறது).

கொட்டுபித்த என்பதைக் கொடுப்பித்த என்று திரு. ஐ. மகாதேவன் கருதுகிறார். அப்படியானால் ஈத்தவன், கொடுப்பித்தவன் என்று இரண்டு சொற்கள் மிகையாக உள்ளன காண்க.

சங்க காலத்துப் பிராமி எழுத்துத் தமிழ்ச் சாசனங்களில் தமிழ் அரசரின் பெயர் காணப்படவில்லை என்றும் அக்காலத்தில் அரசர்கள் இருந்திருந்தால் அவர்களுடைய பெயர்கள் சாசனங்களில் கூறப்படாமல் இருக்குமா என்றும் ஆகவே, சங்க காலம் என்பது பொய்க்கதை என்றும் சில போலி ஆராய்ச்சிக்காரர் விதண்டாவாதம் செய்து வந்தனர். அவர்களுக்கு இந்தச் சாசனமும் முன் இதழில் வெளியிட்ட சாசனமும் தகுந்த விடையளிக்கின்றன. இனியேனும் அவர்கள் சங்க காலத்தைப் பற்றி ஐயப்படமாட்டார்கள் என்று கருதுகிறோம்.

அறுபது ஆண்டுகளுக்கு முன்பு கண்டுபிடிக்கப்பட்ட இந்தச் சாசனத்தைச் சாசன இலாகா படித்து வெளியிடாமல் மறைத்து வைத்திருந்த இரகசியம் புரியவில்லை. இப்படிப் பட்ட முக்கியமான சாசனங்களை வெளியிடாமல் இருட்டில் வைத்திருக்கும் காரணம் என்ன? வெளியிடாத சாசனங்களை இனியேனும் வெளியிட்டுத் தமிழ்நாட்டு வரலாறு எழுதுவதற்குத் துணைபுரிவார்களா? இதுகாறும் தூங்கிக் கொண்டிருந்ததுபோலத் தூங்கப் போகிறார்களா?

இந்தச் சாசனத்தை முதன்முதலாக வெளியிட்ட திரு. ஐ. மகாதேவன் அவர்களுக்கு எமது நன்றி.

*கல்வி,* மலர் 2, டிசம்பர் 1966

# கல்லாடனார்

கடைச் சங்க காலத்தின் இறுதியில் இருந்தவர் கல்லாடனார் என்னும் புலவர். இவர் பரணர் கபிலர்களுக்குப் பிறகு இருந்தவர். இவரும் இவருடைய குடும்பத்தினரும் வேங்கடமலைக்கு அப்பால் வேங்கடநாட்டில் இருந்தவர்கள் என்பது இவருடைய செய்யுளினால் அறிகிறோம். பொறை யாற்றுக்கிழான் என்னும் குறுநில மன்னனைப் பாடிய இப்புலவர் தமது ஊரில் வற்கடம் நேர்ந்து பசி கூர்ந்த படியினால் தமது சுற்றத்துடன் தெற்கே வந்ததாகக் கூறுகிறார்.

வேங்கட வரைப்பின் வடபுலம் பசித்தென
ஈங்குவந் திறுத்தவென் இரும்பே ரொக்கல்

(*புறம்* 391: 7-8)

என்று இவர் கூறுகிறார்.

இவர் தமது செய்யுட்களில் வேங்கட நாட்டையாண்ட புல்லி என்னும் அரசனைக் கூறுகிறார். புல்லியினுடைய போர் வீரர்கள் யானைக் கன்றுகளைப் பிடித்து வந்து தங்கள் ஊர்க் கள்ளுக்கடையில் கொடுத்து அதற்கு விலையாகக் கள்ளைக் குடித்து மகிழ்ந்த செய்தியைக் கூறுகிறார்.

வலஞ்சுரி மராஅத்துச் சுரங்கமழ் புதுவீச்
சுரியா ருளைத்தலை பொலியச் சூடிக்
கறையடி மடப்பிடி கானத் தலறக்
களிற்றுக்கன் றொழித்த உவகையர் கலிசிறந்து
கருங்கால் மராஅத்துக் கொழுங்கொம்பு பிளந்து
பெரும்பொளி வெண்ணார் அழுந்துபடப் பூட்டி
நெடுங்கொடி நுடங்கு நியம மூதூர்
நறவுநொடை நல்லிற் புதவுமுதற் பிணிக்கும்
கல்லா இளையர் பெருமகன் புல்லி
வியல்தலை நன்னாட்டு வேங்கடம்... (*அகம்* 83: 1-10)

பொருள் சேர்ப்பதற்காக வெளிநாடு சென்ற ஒருவன் வேங்கடமலையைக் கடந்து அப்பால் உள்ள நாட்டுக்குச் சென்றதைக் கூறுகிறார். அவ்வாறு கூறுகிறவர் புல்லியையும் கூறுகிறார்.

மாஅல் யானை மறப்போர்ப் புல்லி
காம்புடை நெடுவரை வேங்கடத்து உம்பர்
அறையிறந் தகன்றனர் *(அகம்* 209: 8-10)

இப்புலவர், சோழநாட்டுக் காவிரிக் கரையிலிருந்த அம்பர் என்னும் ஊரின் அரசனான அருவந்தையிடஞ் சென்றார். அவ்வள்ளல் இவரை ஆதரித்து விருந்தளித்தான். அவனைப் புகழ்ந்து வாழ்த்தினார் இப்புலவர். வேங்கடநாட்டு அரசன் புல்லியினுடைய வேங்கடமலையில் பொழியும் மழைத்துளி களைவிட அதிக காலம் வாழ்வாயாக என்று வாழ்த்தித் தன்னுடைய நாட்டையும் தன்னுடைய அரசனையும் நினைவு கூர்கிறார். இதனால் இவருடைய நாட்டுப் பற்றும் அரச பக்தியும் விளங்குகின்றன. இவர், அம்பர் கிழான் அருவந்தையைப் பாடிய செய்யுட்பகுதி இது:

வறன்யான் நீங்கல் வேண்டி என்னரை
நீனிறச் சிதாஅர் களைந்து
வெள்ளிய துடீஇயென் பசிகளைத் தோனே
காவிரி யணையுந் தாழ்நீர்ப் படப்பை
நெல்விளை கழனி யம்பர் கிழவோன்
நல்லரு வந்தை வாழியர் புல்லிய
வேங்கட விறல்வரைப் பட்ட
ஓங்கல் வானத்து உறையினும் பலவே! *(புறம்* 385: 5-12)

*தொல்காப்பிய* இலக்கண நூலில், வேங்கடமலை தமிழகத்தின் வட எல்லையாகக் கூறப்பட்டுள்ளது. ஆனால், சரியான வட எல்லை, வேங்கடத்துக்கு அப்பால் உள்ள வடபெண்ணையாற்றின் தென்கரையாகும். வடபெண்ணை யாற்றிலிருந்து அக்காலத்துத் தமிழ்நாடு தொடங்கியது. இதற்குச் சில சான்றுகள் உள்ளன. கல்லாடனார் வேங்கட மலைக்கு வடக்கில் ஓர் ஊரில் இருந்தவர் என்பதே இதற்குரிய சான்றுகளில் ஒன்றாகும். இதுபற்றி இங்கு விரிவாகக் கூறவேண்டியதில்லை.

கல்லாடனார் என்னும் இப்புலவர் பெயரை நோக்கும் போது இப்பெயர் இவருடைய இயற்பெயராகத் தோன்ற வில்லை; ஊர்ப்பெயரர்கத் தோன்றுகிறது. கல்லாடம் என்பது இவர் இருந்த ஊரின் பெயராக இருக்கலாம் என்று தோன்று கிறது. இதுபற்றி உறுதியாகக் கூறமுடியவில்லை. ஆராய்ந்து முடிவு செய்யவேண்டும்.

தலையாலங்கானம் என்னும் இடத்தில் நிகழ்ந்த போரிலே சோழனையும் சேரனையும் அவர்களுக்குத் துணையாக வந்த வேளிர்களையும் வென்று புகழ்பெற்ற பாண்டியன் நெடுஞ் செழியனைக் கல்லாடனார் நேரில் சென்று பாடினார்.

ஞாலம் நெளிய ஈண்டிய வியன்படை
ஆலங் கானத் தமர்கடந் தட்ட
கால முன்பநிற் கண்டனென் வருவல் *(புறம்* 23: 15-17) .

என்று முன்னிலையில் நிகழ்காலத்தில் வைத்து இவர் கூறுவது காண்க. இச்செய்யுளின் கீழ்க்குறிப்பு, 'பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பாடியது' என்று கூறுகிறது.

உடலருந் துப்பின் ஒன்றுமொழி வேந்தரை
அணங்கரும் பறந்தலை யுணங்கப் பண்ணிப்
பிணியுறு முரசங் கொண்ட காலை
நிலைதிரி பெறியத் திண்மடை கலங்கிச்
சிதைதலுய்ந் தன்றோ நின்வேல், செழிய! *(புறம்* 25: 5-9)

என்று மேலும் இப்புலவர் அப்பாண்டியனை விளித்துக் கூறுகிறார். மீண்டும் *புறம்* 371ஆம் செய்யுளிலும் இவர் அப்பாண்டியனைப் பாடியுள்ளார்.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், வெற்றிவேற்செழியனுக்குப் பின்னர் பாண்டி நாட்டை யரசாண்டவன். கோவலனைக் கொலை செய்வித்துக் கண்ணகி யிடம் வழக்குத் தோற்ற அரசுகட்டிலிற் (சிம்மாசனத்தில்) றுஞ்சியவனும் ஆரியப்படை கடந்தவனுமாகிய நெடுஞ் செழியனுக்குப் பிறகு, கொற்கையிலிருந்த வெற்றிவேற்செழியன் பாண்டிநாட்டை யரசாண்டான். வெற்றி வேற்செழியனுக்குப் பிறகு முடிசூடியவன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன். சேரன் செங்குட்டுவனுக்குப் பிறகு இப் பாண்டியன் இருந்தான் என்பது தெளிவாகிறது. தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைக் கல்லாடனார் நேரிலே முன்னிலைப்படுத்திப் பாடியிருப் பதனாலே இப்புலவர் அப்பாண்டியன் காலத்தவர் ஆவார். அதாவது ஏறக்குறைய கி. பி. 200இல் இவன் இருந்திருக்க வேண்டும் என்று கொள்ளலாம்.

எனவே அப்பாண்டியனால் போற்றப்பட்டவரும், அப் பாண்டியன்மீது *மதுரைக் காஞ்சி* பாடியவருமாகிய மாங்குடி மருதனாரும், கல்லாடனாரும் சமகாலத்தவர் ஆவர்.

கல்லாடனார் தம் காலத்துக்கு முன்பு நிகழ்ந்த நிகழ்ச்சி களையும் தமக்கு முன்பு இருந்த அரசர்களையும் தமது செய்யுட்களில் குறிப்பிடுகிறார். இதனால், இவர் அவர்கள் காலத்திலிருந்தவர் என்று கருதக்கூடாது. இவர் குறிப்பிடுகிற பழைய அரசர்கள் யாவர் என்பதைப் பார்ப்போம்.

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல், துளுநாட்டு நன்னனுடன் போர் செய்து அவன் கைப்பற்றியிருந்த பூழி நாட்டை மீட்டுக்கொண்ட செய்தியைக் கல்லாடனார் கூறுகிறார்:

..................................................................குடாஅது
இரும்பொன் வாகைப் பெருந்துறைச் செருவில்
பொலம்பூண் நன்னன் பொருதுகளத் தொழிய
வலம்படு கொற்றந் தந்த வாய்வாள்
களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்
இழந்த நாடுதந் தன்ன
வளம்

(*அகம்* 199: 18-24)

இந்தக் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல், இமய வரம்பன் நெடுஞ்சேரலாதனின் மகன் ஆவான். சேரன் செங்குட்டுவனுக்கும் பல்யானைச் செல்கெழுகுட்டுவனுக்கும் இளங்கோவடிகளுக்கும் தமயன் ஆவன். இவன் கல்லாடனார் காலத்துக்கு ஏறத்தாழ ஒரு தலைமுறைக்கு முன்பு இருந்தவன்.

முள்ளூர் மன்னனாகிய மலையமான் திருமுடிக்காரி (இவன் ஒரு வள்ளல்) என்னும் சிற்றரசன் கொங்கு நாட்டிலிருந்த ஓரி என்பவனுடன் (இவனும் ஒரு வள்ளல்) போர்செய்து அவனுடைய கொல்லிப் பாவையிருந்த கொல்லி மலையையும் கொல்லிக்கூற்றம் என்னும் நாட்டினையும் வென்று அந்நாட்டைச் சேரனுக்குக் கொடுத்த செய்தியைக் கல்லாடனார் கூறுகிறார்.

......................................................செவ்வேல்
முள்ளூர் மன்னன் கழல்தொடிக் காரி
செல்லா நல்லிசை நிறுத்த வல்வில்
ஓரிக் கொன்று சேரலர்க் கீத்த
செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி
நிலைபெறு கடவு ளாக்கிய
பலர்புகழ் பாவை (*அகம்* 209: 11-17)

இதில் காரி, ஓரியினுடைய கொல்லிநாட்டை வென்று சேரலனுக்குக் கொடுத்தான் என்று கூறுகிறார். இந்தச் சேரலன், (களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலினுடையவும் சேரன் செங்குட்டுவனுடையவும் தந்தையாகிய) இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் காலத்தில் சேரநாட்டின் ஒரு பகுதியை யரசாண்ட பொறையன் என்னும் அரசன் ஆவான். இதுவும் கல்லாடனார் காலத்துக்கு முன்பு நிகழ்ந்த நிகழ்ச்சியாகும்.

எனவே இந்நிகழ்ச்சிகள் கல்லாடனார் இருந்த காலத்துக்குச் சற்று முன்பு நிகழ்ந்தவையாம்.

இப்புலவர், தமிழ்நாட்டின் வடக்கே எல்லைப்புற நாடாக இருந்த பாணன் நன்னாட்டைக் கூறுகிறார் (*அகம்* 113: 17). பாணன் நாடு என்பது வாணாதியரையர் ஆண்ட நாடு. இந்நாட்டுக்கப்பால் வடுகநாடு இருந்தது. அஃதை என்பவனுக்குரியதும் கோசர் இருந்ததுமான 'நெய்தலஞ்செறு' என்னும் ஊரைக் கூறுகிறார் (*அகம்* 113: 3-6). இந்த 'நெய்தலஞ்செறு' துளு நாட்டில் கடற்கரையோரமாக இருந்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. தொண்டை யோர் வாழ்ந்த தொண்டை நாட்டைக் கூறுகிறார் (*குறுந்* 60: 5-6). வேங்கடமலையைத் திருமாலுக்கு ஒப்பிடுகிறார். 'விண்டு வனைய விண்தோய் பிறங்கல்' (*புறம்* 3: 1-2). எனவே இவர் காலத்திலே வேங்கடமலையில் விண்டு (விஷ்ணு - திருமால்) இருந்தார் என்பது தெரிகிறது.

கல்லாடனார் இயற்றிய செய்யுட்கள், *அகநானூற்றில்* (*அகம்* 9, 83, 113, 171, 199, 29, 333) ஏழும், *குறுந்தொகையில்* (*குறுந்* 260, 269) இரண்டும், *புறநானூற்றில்* (*புறம்* 23, 25, 371, 385, 39) ஐந்தும் ஆகப் பதினான்கு செய்யுட்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

*கல்வி,* மலர் 3, ஜனவரி 1967

# முதுகுடுமிப் பெருவழுதி

பாண்டிய நாட்டை அரசாண்ட பழைய அரசர்களில் இவன் ஒருவன். 'குடுமிக் கோமான்' (*புறம்.* 64:6) என்றும் இவனுக்குப் பெயர் உண்டு. சேர சோழ அரசர்களை வென்று அவர்களுடைய நாடுகளில் சிலவற்றைக் கைக்கொண்டான். 'ஆர் எயில் பல' (*புறம்.* 6:14) கொண்டான் என்றும் 'பிறர் மண் கொண்டான்' (*புறம்.* 12:4) என்றும் இவன் கூறப்படுகின்றான். தான் வென்ற வெற்றியைப் பல களவேள்விகள் செய்தும் யாகங்கள் செய்தும் கொண்டாடினான். ஆகவே, இவன் 'பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி' என்று கூறப் பட்டான். இவன் வென்ற வெற்றிகளுக்கும் இவன் செய்த யாகங்களுக்கும் கணக்கில்லை. இவனைப் பாடிய நெட்டிமையார் என்னும் புலவர் இவன் வென்ற அரசர்களின் எண்ணிக்கை அதிகமா அல்லது இவன் செய்த யாகங்களில் நாட்டிய யூபத்தூண்களின் எண்ணிக்கை அதிகமா என்று வியப்படைகிறார்.

நற்பனுவல் நால் வேதத்து
அருஞ் சீர்த்திப் பெருங் கண்ணுறை
நெய்ம்மலி யாவுதி பொங்கப் பன்மாண்
வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி
யூபம் நட்ட வியன்களம் பலகொல் (*புறம்* 15: 17-21)

*மதுரைக் காஞ்சி* என்னும் நூலிலும் முதுகுடுமிப் பெருவழுதி கூறப்படுகிறான். முதுகுடுமிக்குப் பின்னால் சில தலைமுறைக்குப் பின் இருந்தவன் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன். நெடுஞ்செழியன் மேல் மாங்குடி மருதனார் பாடியது *மதுரைக் காஞ்சி*. நெடுஞ்செழியனை *மதுரைக் காஞ்சியில்* வாழ்த்துகிற மாங்குடி மருதனார், பாண்டியன் முதுகுடுமிப் பெருவழுதி வாழ்ந்தது போல நீயும் வாழ்வாயாக என்று வாழ்த்துகிறார்.

பல்சாலை முது குடுமியின்
நல்வேள்வித் துறை போகிய
தொல் லானை நல்லாசிரியர்

புணர் கூட்டுண்ட புகழ்சால் சிறப்பின்
நிலந்தரு திருவின் நெடியோன் போல
(*மதுரைக் காஞ்சி. அடி:* 759- 763)

பல சிறப்புகளைப் பெற்று வாழ்வாயாக என்று அவர் வாழ்த்துகிறார்.

பகைவருடைய கோட்டையை வென்ற அரசர், அக்கோட்டையை இடித்து அழித்து அந்த இடத்தைக் கழுதையினால் உழுது, கொள்ளும் வரகும் விதைப்பது அக்காலத்து வழக்கம். அந்த வழக்கப்படி முதுகுடுமிப் பெருவழுதியும் தான்வென்ற கோட்டையைக் கழுதை பூட்டிய ஏரினால் உழுதான்.

கடுந்தேர் குழித்த ஞெள்ளல் ஆங்கண்
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப்
பாழ்செய்தனை யவர் நனந்தலை நல்லெயில்
(*புறம்* 15: 1-3)

அக்காலத்தில் இவ்வாறு செய்வது தமிழ்நாட்டு வழக்கம் மட்டும் அன்று, ஆந்திர நாட்டிலும் இவ்வழக்கம் இருந்தது. கி.மு. 2 ஆம் நூற்றாண்டில் இருந்த கலிங்கதேசத்தை யரசாண்ட காரவேலன் என்னும் அரசனும் தான்வென்ற நகரம் ஒன்றை இவ்வாறு கழுதையினால் ஏர் உழுதான் என்று அவனுடைய ஹத்திகும்ப குகைச் சாசனம் கூறுகிறது (*Epigraphia Indica*, Vol. XX).

**வேள்விக்குடி தானம்**

பகைவரை வென்று பல நாடுகளைக் கைப்பற்றிப் பல யாகங்களைச் செய்து பேரரசனாக விளங்கிய பாண்டியன் முதுகுடுமிப் பெருவழுதி, தன்னுடைய யாகங்களைச் செய்து வைத்த தன் புரோகிதனாகிய கொற்கைக்கிழான் கொற்றன் என்னும் பிராமணனுக்கு வேள்விக்குடி என்னும் ஊரைத் தானங் கொடுத்தான். இச்செய்தியை வேள்விக்குடி செப்பேட்டுச் சாசனத்தில் அறிகிறோம். அந்தச் சாசனத்தில் இந்தச் செய்தியைக் கூறுகிற வாசகம் இது:

'கொல் யானை பல ஓட்டிக் கூடா மன்னர் குழாத் தவிர்த்த பல் யானை முதுகுடுமிப் பெருவழுதி என்னும் பாண்டிய திராசனாக மா மலர்ச் சோலை நளிர் சினைமிசை வண்டலம்பும் பாகனூர்க் கூற்ற மென்னும் பழனக் கிடக்கை நீர் நாட்டுச் சொற்கணாளர் சொல்லப்பட்ட ஸ்மிருதி மார்க்கம் பிழையாத கொற்கைகிழா னற் கொற்றன் கொண்ட வேள்வி முற்றுவிக்க கேள்வி அந்தணர் முன்பு கேட்க என்றெடுத் துரைத்து வேள்வி சாலை முன்பு நின்று வேள்விகுடி என்றப் படியைச் சீரோடு திருவளரச் செய்தார். வேந்தனப் பொழுதேய்

நீ ரோடட்டிக் கொடுத்தமையாணீடு புக்தி துய்த்தபின்' (*Epigraphia Indica*, Vol. XVII, pp. 291 - 309).

பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி, கொற்கைக் கிழான் நற்கொற்றனுக்குத் தானஞ் செய்த வேள்விக்குடியை அந்தப் புரோகிதனுடைய சந்ததியார் நெடுங்காலம் அனுபவித்து வந்தார்கள். பிறகு கி. பி. 3ஆம் நூற்றாண்டில் களபரர் என்னும் அரசர் தமிழகத்துக்கு வெளியிலிருந்து வந்து சேர சோழ பாண்டிய நாடுகளைக் கைப்பற்றி யரசாண்டார்கள். களபரர் ஆட்சிக்காலத்தில் வேள்விக்குடியை அவ்வரசர் கைப்பற்றிக் கொண்டார்கள். பின்னர், கி.பி. 6ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில், கடுங்கோன் என்னும் பாண்டியன் களபரரை வென்று பாண்டிய இராச்சியத்தை மீட்டுக்கொண்டான். இந்தக் கடுங்கோனுக்கு ஏழாவது தலைமுறையில் வந்தவன் ஜடிலன் பராந்தகன் நெடுஞ்சடையன் என்பவன். இந்த நெடுஞ்சடையன் வேள்விக்குடியை மறுபடியும் புரோகிதச் சந்ததியாருக்குத் தானஞ்செய்து இச்செப்பேட்டை எழுதிக் கொடுத்தான். இதுதான் வேள்விக்குடி சாசனம் என்பது.

முதுகுடுமிப் பெருவழுதியைப் பற்றி வேறு செய்திகள் தெரியவில்லை.

**காலம்**

பல்யாகசாலை முதுகுடுமி இருந்த காலத்தைத் திட்ட மாகக் கூற இயலவில்லை. நெட்டிமையார் என்னும் புலவர் இவ்வரசனை நேரில் வாழ்த்தியிருக்கிறார். வாழ்த்தியவர் 'பஃறுளி யாற்று மணலை விட அதிக நாட்கள் வாழ்வாயாக' என்று வாழ்த்தியிருக்கிறார்.

எங்கோ வாழிய குடுமி! தங்கோச்
செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த
முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே (*புறம்* 9: 8-11)

என்று அவர் வாழ்த்தியிருக்கிறார்.

பஃறுளியாறு பாண்டிய நாட்டின் தெற்கே, கன்னியா குமரிக்குத் தெற்கே இருந்த ஒரு ஆறு. அது கி.பி. 2ஆம் நூற்றாண்டுக்கு (சிலப்பதிகாரக் காலத்துக்கு) முன்னரே அந்த ஆறும் அந்த நிலப்பகுதியும் கடலில் முழுகிப் போயிற்று. இதைச் *சிலப்பதிகாரத்திலிருந்து* அறிகிறோம்.

பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள
(மதுரைக் காண்டம். காடுகாண் காதை, அடி: 19-20)

என்று *சிலப்பதிகாரம்* கூறுகிறது.

குமரிக்குத் தெற்கே இருந்த பஃறுளியாறும் அதனைச் சேர்ந்த நாடுகளும் பிற்காலத்தில் நிகழ்ந்த கடற்கோளினால் கடலில் முழுகிப் போயின என்று மேலே காட்டியபடி *சிலப்பதிகாரம்* கூறுகிறது. நெட்டிமையார் முதுகுடுமிப் பெருவழுதியைப் பஃறுளியாற்று மணலின் எண்ணிக்கையை விட நெடுங்காலம் வாழ்க என்று வாழ்த்தியபடியால், அவ் யாறு இருந்த காலத்தில் இவ்வரசனும் இப்புலவரும் இருந்தனர் என்பது நன்கு தெரிகிறது. பஃறுளியாறு கி.மு. மூன்றாம் நூற்றாண்டுக்கும் கி.பி. முதல் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் மறைந்திருக்க வேண்டும். எனவே, இக்கால எல்லைக்குள் இப்பாண்டியன் இருந்திருக்கவேண்டும்.

பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை மூன்று புலவர்கள் பாடியிருக்கிறார்கள். அவர்கள்: காரிகிழார் (*புறம்* 6), நெட்டிமையார் (*புறம்* 9, 12, 15), நெடும்பல்லியத்தனார் (*புறம்* 64). இவர்கள் எல்லோரும் சம காலத்தவர்.

**_கல்வி_, மலர் 4, பிப்ரவரி 1967**

# மதுரை ஆசிரியர் நல்லந்துவனார்

நல்லந்துவனார் சங்க காலத்திலிருந்த புலவர். இவருடைய பெயர் அந்துவன் என்றும் நல்லந்துவன் என்றும் மதுரை யாசிரியர் நல்லந்துவன் என்றும் ஏடுகளில் எழுதப்பட்டுள்ளன. இப்பெயர்கள் ஒருவரையே குறிக்கின்றன. 'ந' என்பது சங்க காலத்தில் தமிழ்ப் புலவருக்கு இட்டு வழங்கப்பட்ட சிறப்புச் சொல். அந்துவன் என்பது இவருடைய பெயர்.

நல்லந்துவனார் இயற்றிய இரண்டு செய்யுள்கள் *அகநானூற்*றில் 43-ஆம் செய்யுளாகவும், *நற்றிணை*யில் 88ஆம் செய்யுளாகவும் தொகுக்கப்பட்டுள்ளன. கலிப்பாக்களினால் ஆகிய *கலித்தொகை* என்னும் நூலை இவர் தொகுத்தார். அந்தக் *கலித்தொகை*யில், நெய்தற்கலியைப் பற்றி இவர் பாடிய 33 செய்யுள்களையும் தொகுத்திருக்கிறார். இவர் தொகுத்த *கலித்தொகை*க்குக் கடவுள் வாழ்த்தையும் இவரே பாடி யுள்ளார். *கலித்தொகை*யில் பெருங்கடுங்கோன் பாடிய பாலைக்கலிச் செய்யுட்களையும், கபிலர் இயற்றிய குறிஞ்சிக் கலிச் செய்யுட்களையும், மருதன் இளநாகனார் இயற்றிய மருதக்கலிச் செய்யுட்களையும், சோழன் நல்லுருத்திரனார் இயற்றிய முல்லைக்கலிச் செய்யுட்களையும் இவர் தொகுத்துள்ளார். இதனை,

> பெருங்கடுங்கோ பாலை, கபிலன் குறிஞ்சி,
> மருதனிள நாகன் மருதம் - அருஞ்சோழன்
> நல்லுருத் திரன்முல்லை, நல்லந் துவனெய்தல்
> கல்விவல்லார் கண்ட கலி

என்னும் செய்யுளினால் அறியலாம்.

*கலித்தொகை*யின் இறுதியில் "தொகுத்தார் - நல்லந்து வனார்" என்று எழுதப்பட்டிருப்பது, இதனைத் தொகுத்தவர் இவரே என்பதை உறுதிப்படுத்துகின்றது.

மதுரையில் இருந்த இவர், மதுரைக்கும் அருகில் உள்ள திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளியிருந்த முருகப்பெருமான் மீது (8ஆம் *பரிபாடலைப்*) பாடினார். அதில் திருப்பரங் குன்றத்தை மிகப் பாராட்டியுள்ளார். "பரங்குன்று இமயக் குன்றம் தகர்க்கும்" என்று கூறியுள்ளார். முருகனுக்குத்

திருப்பரங்குன்றம் என்றென்றும் நிலைபெறுவதாக என்று வாழ்த்துகிறார்.

> மணிமிடற் றண்ணற்கு மாசிலோள் தந்த
> நெறிநீர் அருவி யசும்புறு செல்வ!
> மண்பரிய வானம் வறப்பினும் மன்னுகமா
> தண்பரங் குன்றம்! நினக்கு (*பரிபாடல்* 8: 127 - 30)

என்று வாழ்த்துகிறார்.

வையையாற்றையும் இவர் *பரிபாடலில்* பாடியுள்ளார். (*பரிபாடல்* 6, 11, 20). இவர் இசைக்கலையில் வல்லவர் என்பது, இவர் இயற்றியுள்ள *பரிபாடல்களினால்* அறியலாம். ஏனென்றால் *பரிபாடல்* இசைப் பாவைச் சேர்ந்தது. இதனை இவர், "இன்னியல்மாண் தேர்ச்சி இசை பரிபாடல்" (*பரிபாடல்* 11:137) என்று கூறியிருப்பது காண்க.

நல்லந்துவனார் முருகபக்தர் என்றும் அவர் முருகப் பெருமான் எழுந்தருளியுள்ள பேர்போன திருப்பரங் குன்றத்தைப் *பரிபாடலில்* பாடியுள்ளார் என்றும் கூறினோம். இச்செய்தியை இப்புலவர்கள் காலத்தில் இருந்த மருதன் இளநாகனார் என்னும் புலவரும் தாம் பாடிய அகப்பாட்டு ஒன்றில் பாடியுள்ளார்.

> சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்
> சினமிகு முருகன் தண்பரங் குன்றத்து
> அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை
> (*அகநானூறு* 59:10-12)

என்று அவர் கூறியுள்ளது காண்க.

நல்லந்துவனாரும் மருதன் இளநாகனாரும் சமகாலத்தில் இருந்தவர் என்பது நன்கு தெரிகின்றது. மருதன் இளநாகனார் இயற்றிய மருதக்கலிச் செய்யுட்களை நல்லந்துவனார் தாம் தொகுத்த *கலித்தொகையில்* தொகுத்து இருக்கிறார். தனக்குச் சமகாலத்தில் இருந்த புலவர் செய்யுட்களை அல்லது தமக்கு முன்பு இருந்த புலவர்களின் செய்யுட்களை மட்டும் தொகுக்க முடியுமேயல்லாமல் தமக்குப் பிற்காலத்தில் இருந்த புலவர் களின் பாடல்களை ஒருவர் தொகுக்க முடியாதல்லவா? எனவே, நல்லந்துவனாரும் மருதன் இளநாகனாரும் சமகாலத்தவர் என்பது தெரிகின்றது. மருதன் இளநாகனார், நல்லந்துவனாருக்கு முன்பு இருந்திருக்கக்கூடாதோ என்றால், மருதன் இளநாகனார், நல்லந்துவனார் பாடிய திருப்பரங் குன்றத்தை

> சினமிகு முருகன் தண்பரங் குன்றத்து
> அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை
> (*அகம்* 59:11-12)

என்னும் பாடல் கூறுகிறபடியால் மருதன் இளநாகனார் நல்லந்துவனாருக்கு முன்பு வாழ்ந்திருத்தல் முடியாது. எனவே நல்லந்துவனாரும் மருதம் பாடிய இளநாகனாரும் சம காலத்தவர் என்பது ஐயமறத் தெரிகின்றது.

மதுரையாசிரியர் நல்லந்துவனார், திருப்பரங்குன்றத்து மலையில் இருந்த இயற்கைக் குகையொன்றைச் செப்பனிட்டு அதைத் திருப்பரங்குன்றத்து மலையில் தவம் செய்து கொண்டிருந்த முனிவருக்குத் தானமாக வழங்கினார் என்னும் அரிய செய்தி ஒன்றும் தெரிகின்றது. திருப்பரங்குன்றத்தையும் அதில் எழுந்தருளியுள்ள முருகப்பெருமானையும் பக்தியுடன் பாடிய ஆசிரியர் நல்லந்துவனார் அந்த மலையில் தவம் செய்துகொண்டிருந்த முனிவருக்குக் குகையைச் செப்பனிட்டுக் கொடுத்தது மிகப் பொருத்தமேயாகும். திருப்பரங்குன்றத்து மலையில் உள்ள இயற்கைக் குகைகள் சிலவற்றில் ஒரு குகையில் கீழ்க்கண்ட எழுத்துக்கள் எழுதப்பட்டிருக்கின்றன. இவ்வெழுத்து அக்காலத்தில் வழங்கி வந்த பிராமி எழுத்தாகும்:

அந்துவான் கொடுபிதாவான் என்பது இதன் வாசகம்.

அந்துவன் என்பதை அந்துவான் என்றும் கொடுப் பித்தவன் என்பதைக் கொடுபிதாவான் என்றும் படிப்பில்லாத கல்தச்சன் இவ்வெழுத்துகளைப் பாறையில் செதுக்கி யிருக்கிறான். இதன் சரியான வாசகம் 'அந்துவன் கொடுப் பித்தவன்' என்றிருக்க வேண்டும்.

முருக பக்தரும் திருப்பரங்குன்றத்து முருகனைப் பரிபாடலில் பாடினவரும் சங்கப் புலவருமாயிருந்த அந்துவரே இந்தத் தானத்தைச் செய்திருக்கவேண்டும் என்பதில் ஐய முண்டோ?

*கல்வி*, மலர் 9, ஜூலை 1967

# வரகுண பாண்டியனின் கல்வெட்டு

இரண்டாம் வரகுண பாண்டியன் கி. பி. 862ஆம் ஆண்டில் முடிசூடிப் பாண்டிய நாட்டை அரசாண்டான். ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இருந்த இவன், மிக்க சிவபக்தியுள்ளவன். இவன் காலத்துக்கு முன்னே (ஏறத்தாழ ஒரு நூற்றாண்டுக்கு முன்புதான்), அப்பர் சுவாமிகளும் திருஞானசம்பந்த சுவாமிகளும், தமிழ்நாடெங்கும் பக்தி இயக்கத்தைப் பரப்பிச் சைவ சமயத்தை வளர்த்துச் சென்றனர். இந்தப் பாண்டியனின் காலத்திலே பக்தி இயக்கம் மறைந்துவிடவில்லை. இவன் காலத்திலே சுந்தரமூர்த்தி சுவாமிகள் வாழ்ந்திருந்து, சமயப் பிரசாரம் செய்தனர். இவனுடைய காலத்தில் அரசியல் குழப்பங்கள் அதிகமாக இருந்தன. இவன் பகையரசருடன் பல போர்களைச் செய்ய வேண்டியவனாக இருந்தான். ஆனால், அந்தப் போர்களுக்கு இடையேயும், சிவ பக்தனான இவன் சைவத் தொண்டுகளைச் செய்துகொண்டிருந்தான். வரகுணனுக்குச் சிவலோகம் காட்டிய திருவிளையாடல் போன்ற சில திருவிளையாடல்கள், இவன் காலத்தில் நிகழ்ந்ததாகத் தெரிகின்றது.

திருச்செந்தூரில் உள்ள முருகப் பெருமான் திருக் கோயிலில், வரகுணபாண்டியனுடைய நீண்ட கல்வெட்டுச் சாசனம் ஒன்று காணப்படுகின்றது. இவன் திருச்செந்தூர் முருகப்பெருமானுக்கு நித்தியக் கட்டளை அமைத்ததை, இந்தச் சாசனம் கூறுகிறது. 1400 பொற்காசுகளை, இவன் இந்தக் கோயிலுக்குத் தானம் செய்து, அக்காசு முதல் கெடாமல் அதன் வட்டிப் பணத்திலிருந்து நித்திய பூசை நடைபெற ஏற்பாடு செய்ததை, இச்சாசனத்திலிருந்து அறிகிறோம். இந்தப் பாண்டியனிடத்தில் அலுவலர்களாக இருந்த இருப்பைக் குடித்தேவன், அளற்று நாட்டுக்கோன், சாத்தம் பெருமான் என்பவர்களிடம் இந்தப் பொற்காசுகளைக் கொடுத்தனுப்பி, நித்திய பூசைகள் நடைபெறுவதற்கு இவ்வரசன் ஏற்பாடு செய்தான். இதிலிருந்து அந்தக் காலத்தில் (1100 ஆண்டுகளுக்கு முன்னரே), திருச்செந்தூர் முருகப் பெருமான் கோயிலில் நடைபெற்ற நித்திய பூசைகளின் விவரம் நன்கு தெரிகின்றது. அதனைக் கீழே தருகிறோம்:

சுப்பிரமணிய படாரர் கோயில், திருமூலத்தானத்துப் படாரர்க்கு உரிய நித்தியப்படி விவரம் பின்வருமாறு:

திருவமுது: அரிசி, செந்நெற்றீட்டல் ஒரு வேளைக்கு நானாழியாக, நான்கு வேளைக்கு அரிசி பதினாறு நாழி.

நெய்யமுது: திருவமுதுக்குப் பசுவின் நறுநெய், ஒரு வேளைக்கு உழக்கு, "கறி துமிக்கவும் பொரிக்கவும் ஒரு வேளைக்கு ஆழாக்காக நான்கு வேளைக்கு நெய்யமுது நாழி உரி.

தயிரமுது: நிவேதிக்கத் தயிரமுது ஒரு வேளைக்கு நாழி. கட்டுத்தயிர் அமுது ஒரு வேளைக்கு உரி. ஆக நான்கு வேளைக்குப் பசுவின் தோய் தயிர் ஆறு நாழி.

வாழைப்பழ அமுது: ஒரு வேளைக்கு நான்கு பழமாக நான்கு வேளைக்கு வாழைப்பழம் பதினாறு.

சர்க்கரை அமுது: ஒரு வேளைக்கு ஒரு பலமாக நான்கு வேளைக்கு நான்கு பலம்.

கறிஅமுது: காய்கறி ஒன்று, புளிங்கறி ஒன்று, புழுக்குக்கறி ஒன்று, பொரிக்கறி ஒன்று, ஆகக் கறி அமுது நான்கினுக்கு ஒருவேளைக்குப் பத்துப் பலமாக நான்கு வேளைக்குக் கறி அமுது நாற்பது பலம்.

காயம்: மிளகு அமுது, மஞ்சளமுது, சீரக அமுது, சிறுகடுகு அமுது, கொத்தம்பரி அமுது ஆகக் காயம் ஐந்து. இவை ஒரு வேளைக்கு முச்செவிடாக நான்கு வேளைக்குக் காயம் உழக்கே இரு செவிடு.

கும்மாயம்: (கும்மாயம் என்பது சிறுபயற்று அவியலுடன் வெல்லமும் நெய்யும் கலந்து செய்வது). இதற்குச் சிறுபயற்றுப் பருப்பு ஒரு வேளைக்கு உரியாக நான்கு வேளைக்கு இருநாழி சிறுபயிறு.

இலை அமுது: (இது இலையமுது என்றும் வெற்றிலை அமுது என்றும் கூறப்படும்) ஒருவேளைக்கு மூவடுக்காக நான்கு வேளைக்கு வெற்றிலை அமுது மூன்று பற்று.

அடைக்காயமுது: (பாக்கு அமுது) ஒரு வேளைக்குப் பதினான்கு. நான்கு வேளைக்கு அடைக்காயமுது ஐம்பத்தாறு.

திருநந்தா விளக்கு: விளக்கு ஒன்றுக்கு உரி நெய், ஐந்து திருவிளக்குப் பசுவின் நறுநெய் நியதி இரு நாழி உரி.

திருமஞ்சனம்: (அபிஷேகம்) பசுவின் பால் நியதி (நாள் ஒன்றுக்கு) நானாழி, பசுவின் தயிர் நானாழி, இளநீர் வழுவை உட்பட நாழி இளநீருக்கு நான்கு இளநீராக நியதி இளநீர் எட்டு.

திருப்பள்ளித்தாமம்: பூமாலை, நாள் தோறும் அளக்கக் கடவ நறும்பூ பத்து நாழி.

பயற்றுப்பொரி: சிறுபயற்றுப் பொரிக்காக நாழி உழக்கு.

பற்றுமஞ்சள்: திருமேனிபூசி அருள மேற்றோல் சிதைத்த பற்று மஞ்சள் நியதி உழக்கு.

வெண்கூறை: (கூறை - ஆடை). மூன்று மாதத்துக்கு நான்கு இணை (ஜோடி) யாக ஓராண்டு நான்கு முறைக்கு வெண்கூறை பதினாறு இணை.

மேற்கட்டிப் புடவை: திருமடைப்பள்ளிக்கு மேற்கட்டி யாகப் புடவை (துணி) இரண்டு. ஆறு திங்களுக்கு ஈரிணை; ஓராண்டு இரண்டு முறைக்குப் புடவை நால் இணை.

தூபம்: ஸ்ரீ தூபம் சீதாரியினுக்கு வேண்டும் உறுப்பு அகில் உட்படக் கற்பூரமும் தேனும் நியதி அரைக்காணம் விலைபெற இடுவது.

மேற்கட்டு வெண்கூறை: கர்ப்பக்கிருகத்துக்கு மேற்கட்டி வெண்கூறை (துணி) இரண்டு. ஆறு திங்களுக்கு நாலு இணையாக ஓராண்டு இரண்டு முறைக்கு வெண்கூறை எட்டு இணை.

திருப்பலி: திருப்பலிக்குப் பசுவின் தோய் தயிர் நாள் ஒன்றுக்கு நாழி.

கொற்று: தட்டளி கொட்டிகளுக்கு (வாத்தியம் வாசிப் போருக்கு), கொற்று (சோறு), திங்கள் ஒன்றுக்கு நாலு கலம் பத்துக் குறுணி நாழி உரியாக, பன்னிரண்டு திங்களுக்கு நெல்லுநிறைமதி நாராயத்தால் ஐம்பத்தேழு கலம்.

ஸ்ரீ உடையாடை: மூன்று திங்களுக்கு ஓர் இணையாக நான்கு முறைக்கு ஸ்ரீ உடையாடை நாலிணை இன்னொரு ஸ்ரீ உடையாடை ஆண்டுக்கு நாலிணை.

திருமஞ்சன நெய்: திருமஞ்சனம் ஆடி அருளப் பசுவின் நறுநெய் நியதி நான்கு நாழி.

சந்தனக் குழம்பு: திருமேனி பூசும் சந்தனக் குழம்புச் சந்தனம் நியதி முப்பலம்.

கற்பூரம்: திருமேனி பூசும் திருச்சந்தனத்தோடு கட்டி அரைக்கும் கற்பூரம் நியதி ஏழரைக் காணம்.

திருமஞ்சன இளநீர்: திருமஞ்சனம் ஆடி அருள இளநீர் வழுவை (வழுக்கை) உட்பட, நியதி இரு நாழியினுக்கு நாழி. இளநீருக்கு நாலிளநீராக, நியதி இடும் இளநீர் எட்டு.

(குறிப்பு: கற்பூர தீபம் இதில் குறிப்பிடவில்லை. அக்காலத்தில் கற்பூரத்தீபம் கோயில்களில் வழக்கத்தில் இல்லைபோலும். அது பிற்காலத்தில் ஏற்பட்ட வழக்கமாக இருக்கலாம். தேங்காய் உடைப்பதும் குறிப்பிடப்படவில்லை. இதுவும் பிற்காலத்து ஏற்பட்ட வழக்கம்போலும்! தேவாரப் பாடல்களிலும் கற்பூர தீபாராதனை குறிப்பிடப்பெறவில்லை)."

சிவபக்தனான வரகுண பாண்டியனுடைய பக்தி, இந்தக் கட்டளையிலிருந்து நன்கு தெரிகிறது. இது சுந்தரமூர்த்தி சுவாமிகள் வாழ்ந்திருந்த 9ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட சாசனம் என்பதும் கருதத்தக்கது.

*திருக்கோயில்*, மாலை 10, மணி 12, செப்டம்பர் 1968

# வரகுண பாண்டியனின் திருத்தொண்டுகள்

வரகுண பாண்டியனுக்குக் கோமாறஞ் சடையன் என்னும் பட்டப்பெயர் உண்டு. இந்தப் பாண்டியன், அந்தக் காலத்தில் பல்லவ இராச்சியத்தோடு இணைந்திருந்த சோழ நாட்டின் மேல் படையெடுத்துச் சென்று போர் புரிந்தான். சோழ நாட்டிலே வேம்பில் என்னும் ஊர்க்கோட்டையை முற்றுகையிட்டுக் கைப்பற்றினான். பிறகு, நியமம் என்னும் ஊரில் தங்கியிருந்தபோது, திருச்சிராப்பள்ளியில் மலையின் மத்தியில் உள்ள குகைக்கோயிலுக்கு 125 கழஞ்சு பொன்னைத் தானஞ் செய்தான். திருச்சிராப்பள்ளிக் குகைக்கோயில் மகேந்திரவர்மன் என்னும் பல்லவ அரசனால் அமைக்கப் பட்டது. அந்தக் குகைக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுக்கே, வரகுண பாண்டியன் மேற்சொன்னபடி 125 கழஞ்சு பொன்னைத் தானம் செய்தான். அந்தப் பொன்னின் வட்டியைக் கொண்டு நாள் ஒன்றுக்கு நான்கு திருவிளக்குகளை ஏற்றும்படி அவன் கட்டளையிட்டிருந்தான். அந்தப் பொன்னைச் சிற்றம்பர் என்னும் நகரத்தார் பெற்றுக்கொண்டு, நாள்தோறும் திருக்கோயிலில் நந்தாவிளக்கு எரிக்கப் பொறுப்பேற்றுக்கொண்டனர். அந்தச் சாசனத்தின் வாசகப் பகுதி இது:

கோமாறஞ் சடையற்கு
யாண்டு நான்கு
நாள் ஈராயிரத்தைந்
நூற்றுஒன்று
வேம்பில் மதிள் அழித்துப்
போந்து நியமித்திருந்தருளிச்
சோமசூர்யான்வயத் துவய
திலகாலங்கார ராயின
பாண்டியாதி ராசர் வரகுணதேவர்
திருமலை படாரர்க்குக்
கொடுத்த பொன் பாடிக்கல்லால்
125 கழஞ்சு

திருச்சிராப்பள்ளி மாவட்டம், லால்குடி வட்டம் திருவெள்ளறை என்னும் ஊரில் உள்ள ஜம்புநாதசுவாமி கோயில், பாறையைக் குடைந்தமைத்த குகைக்கோயிலாகும். இந்தக் கோயிலில் சிவலிங்க உருவமாக எழுந்தருளியுள்ள சிவபெருமானுக்குத் 'திருவெள்ளறைத் திருவானைக்கல் பெருமானடிகள்' என்பது பழைய பெயர் (வெள்ளறை - வெள்ளைக் கல்; அறை - கல், மலை. ஆனைக்கல் என்பது அந்த மலையின் பெயர்). இந்தத் திருக்கோயிலில் இரண்டு திருவிளக்குகளை எரிப்பதற்காக வரகுண மகாராசன் 120 கழஞ்சு பொன்னைத் தானஞ் செய்தான். இந்தப் பொன்னின் முதல் கெடாமல், இதன் வட்டித்தொகையிலிருந்து இரண்டு விளக்குகளை எரிப்பதற்கு இவன் நிபந்தம் செய்தான். இந்தச் சாசனத்தின் வாசகப்பகுதி இது:

கோமாறஞ் சடையற்கு
யாண்டு நாலாவதற்கு
எதிர் ஒன்பதாவது விருச்சிக
ஞாயிற்றுத் திங்கட்கிழமை
பெற்ற அஸ்வதி முதலாக
தேவதானந் திருவெள்ளறைத்
திருவானைக்கற் பெருமானடிகளுக்கு
பாண்டி மாராசர் ஆயின
கோமாறஞ் சடையன் இரண்டு
நொந்தாவிளக்கு இரவும் பகலும்
எரிக்க அண்ட நாட்டு வேளான்
கையில் விடுத்த பொன்
120 கழஞ்சு.

இந்தச் சாசனத்தில் கூறப்பட்டுள்ள 'விருச்சிக ஞாயிற்றுத் திங்கட்கிழமை பெற்ற அஸ்வதி' என்னும் குறிப்பைக் கொண்டு கணித்தால், அந்த ஆண்டு கி.பி. 824, நவம்பர் மாதம் 7ஆம் தேதி திங்கட்கிழமை என்று தெரிகிறது. இந்தக் குறிப்புப்படி கணித்தால் கி.பி. 874ஆம் ஆண்டு நவம்பர் 22க்கும் பொருந்து கிறது. அண்ட நாட்டுவேளான், இரண்டாம் வரகுண பாண்டியனின் காலத்தில் இருந்தவன் ஆகையால், இந்தச் சாசனம் கி.பி. 874ஆம் ஆண்டில் எழுதப்பட்டதாகும்.

திருச்சிராப்பள்ளி மாவட்டம், லால்குடி வட்டம் சப்தரிஷீசுவரர் கோயில் சாசனங்களில் ஒன்று, கோமாறஞ் சடையனான வரகுண பாண்டியனின் சாசனமாகும். இந்தச் சாசனத்தில் இந்தப் பாண்டியன் இந்தக் கோயிலுக்கு இரண்டு நந்தா விளக்கு எரிக்க 120 பொன் (பழங்காசு) தானஞ்

செய்ததைக் கூறுகிறது. லால்குடி என்பது, கர்நாடக நவாபு காலத்தில் (பிற்காலத்தில்) உண்டான பெயர். லால்குடி என்பதற்குச் சிவந்த நிறக் கோயில் என்பது பொருள். இவ்வூரின் பழைய பெயர் திருத்தவத்துறை என்பது. திருத்தவத்துறைக் கோயிலை வடமொழியாளர் சப்தரிஷீசுவரர் கோயில் என்பர். இந்தச் சாசனத்தின் பகுதி இது:

கோமாறஞ் சடையற்கு யாண்டு
4ஆவதின் எதிர் 9ஆம் ஆண்டு
தனு ஞாயிற்றுச் செவ்வாய்க்
கிழமை பெற்ற சதயத்து நாள்
இடையாற்று நாட்டுத் திருத்தவத்துறை
மகாதேவர்க்கு இரவும் பகலும்
சந்திராதித்தவல் இரண்டு
நொந்தாத் திருவிளக்கு எரிப்பதாக
கோமாறஞ் சடையனாயின பாண்டிய
குலபதி வரகுண மகாராயர் அண்ட
நாட்டு வேளான் கையில்
கொடுத்த பழங்காசு 120

திருநெல்வேலி மாவட்டம், அம்பாசமுத்திரம் வட்டம், அம்பாசமுத்திரத்தில் உள்ள எறிச்சாவுடையார் கோயிலிலும், பாண்டியன் வரகுண மகாராசன் கட்டளைகள் அமைத்தான். இச்செய்தியை இங்குள்ள சாசனம் கூறுகிறது. எறிச்சாவுடையார் கோயிலுக்கு அக்காலத்தில் வழங்கின பெயர் திருப் போத்துடையார் கோயில் என்பது.

வரகுண மகாராசன், தொண்டை நாட்டில் போர் செய்து பெண்ணையாற்றங்கரையில் உள்ள அரசூரில் தங்கியிருந்த போது இந்தக் கட்டளையை ஏற்படுத்தினான்.

ஸ்ரீபடாரர் அனுக்கிரகத்தினால்
முள்ளி நாட்டு
இளங்கோய்க்குடி திருப்போத்துடையார்
ஸ்ரீகோயில் படாரர்க்கு
முதல் கெடமை பொலி
கொண்டு நான்கு காலமும்
திருவமுது செலுத்துவதாக வரகுண
மகாராசர் தொண்டை நாட்டுப்
பெண்ணைக்கரை அரைசூர்
வீற்றிருந்து இளங்கோய்க்குடிச்
சபையார் கையில்
கொடுத்த காசு 290

என்று இந்தச் சாசன வாசகம் தொடங்குகிறது (படரார் - கடவுள்; பொலி - வட்டி).

இந்த 290 பொற்காசின் வட்டியிலிருந்து நாள்தோறும், நான்கு பொழுது திருவமுது நிவேதிக்க வரகுண பாண்டியன் கட்டளை ஏற்படுத்தினான். அதன் விபரம் வருமாறு:

திருவமுது: ஒரு வேளைக்குச் செந்நெல் தீட்டல் அரிசி நானாழி.

கும்மாயம்: (கும்மாயம் என்பது பயற்றுப்பருப்புப் புழுக்கலுடன் சர்க்கரையும் நெய்யும் கலந்து செய்யப்படும் சிற்றுண்டி) இதற்குப் பயற்றுப்பருப்பு இரு நாழி.

பசுவின் நறுநெய்: உழக்கு.

தயிர்: பசுவின் தோய் தயிர் உரி.

வாழைப்பழம்: கருவாழைப்பழம் நான்கு. சர்க்கரை ஒரு பலம்.

கறியமுது: காய்கறி ஒன்று, புளிங்கறி இரண்டு, புழுக்குக்கறி ஒன்று, பொரிக்கறி ஒன்று ஆகக் கறி ஐந்தினுக்குக் கறி பத்துப் பலம்.

பசுவின் நறுநெய்: கறி துமிக்கவும் பொரிக்கவும் பசுவின் நறுநெய் ஆழாக்கு.

காயம்: இரு செவிடு.

இலையமுது: (வெற்றிலை) வெள்ளிலை ஈரடுக்கு.

அடைக்காய்: (பாக்கு) பத்து.

சர்க்கரை: நாற்பலம் (கும்மாயத்துக்கு).

"இப்பரிசு நியதிப்படி முட்டாமை நெடுங்காலமுஞ் செலுத்துவதாக வைத்தார் ஸ்ரீ வரகுண மகாராசர்" என்று முடிகிறது இந்தச் சாசனம்.

தஞ்சாவூர் மாவட்டம், கும்பகோணம் வட்டம், திருக் கோடிக்காவல் திருக்கோடீச்சுவரர் கோயிலுக்கும் வரகுண மகாராசர் 180 கழஞ்சு பொன் தானம் செய்திருக்கிறார். இந்தப் பொன்னின் வட்டியைக் கொண்டு மூன்று 'நொந்தா விளக்கு' எரிப்பதற்கு இவர் கட்டளை அமைத்தார். இந்தக் கோயில் சரசுவதி, கணபதி ஆகிய இரண்டு தெய்வங்களுக்கு விளக் கெரிக்க வேண்டுமென்பது கட்டளை.

திருக்கோடிகாவில் ஸ்ரீசரஸ்வதி கணபதிகளுக்கு
மூன்று நொந்தாவிளக்கெரிப்பதற்கு
வரகுண மகாராசர் கொடுத்த பொன்
நூற்றெண்பதின் கழஞ்சு

என்று கூறுகிறது இந்தச் சாசன வாசகம்.

சம்பந்த சுவாமிகள் காலத்தில் கணபதி ஈச்சுரம் என்னும் கோயில் இருந்தமை, தேவாரத்தினால் தெரிகின்றது. கலை மகளுக்கும் விநாயகருக்கும் கோயில் இருந்த செய்தி, கல்வெட்டுகளில் முதல் முதலில் காணப்படுவது இந்தக் கல்வெட்டிலேதான்.

*திருக்கோயில்*, மாலை 11, மணி 1, அக்டோபர் 1968.

# மறைந்துபோன மருங்கூர்ப் பட்டினம்

## (சங்க காலத்துத் துறைமுகம்)

மருங்கூர்ப் பட்டினம் என்னும் பெயருள்ள ஒரு துறைமுகப்பட்டினம் பாண்டி நாட்டின் கிழக்குக் கடற்கரையோரத்தில் இருந்தது என்பதை இதுவரையில் ஒருவரும் அறியவில்லை. பேர்போன கொற்கைத் துறைமுகம் பாண்டி நாட்டில் இருந்ததும் பிற்காலத்தில் அது மறைந்துபோய் புன்னைக்காயல் துறைமுகம் ஏற்பட்டதும் பின்னர் அதுவும் மறைந்துபோய் இப்போது தூத்துக்குடி துறைமுகம் ஏற்பட்டிருப்பதும் தெரிந்ததேயாகும். கொற்கைத் துறைமுகத்தைத் தவிர மருங்கூர்ப் பட்டினம் என்னும் இன்னொரு துறைமுகப்பட்டினம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் இருந்ததைச் சங்க இலக்கியத்திலிருந்து அறிகிறோம்.

*பெரிப்ளஸ்* என்னும் கிரேக்க நூலும் தாலமி என்பவர் எழுதிய கிரேக்க நூலும் அக்காலத்திலிருந்த தமிழ்நாட்டின் துறைமுகப் பட்டினங்களின் பெயர்களைக் கூறுகின்றன. ஆனால், மருங்கூர்த் துறைமுகப்பட்டினத்தின் பெயர் அந்நூல்களிற் காணப்படவில்லை. பரணர், நக்கீரர், மருதன் இளநாகனார் என்னும் மூன்று சங்க காலப் புலவர்களின் செய்யுள்களிலிருந்து இந்தத் துறைமுகப்பட்டினத்தைப் பற்றி அறிகிறோம். இந்தச் செய்யுள்களிலும் இந்தப் பட்டினத்தின் முழு வரலாறு கூறப்படவில்லை. மருங்கூர்ப் பட்டினம் ஒரு துறைமுகப்பட்டினம் என்பது மட்டும் இச்செய்யுள் களிலிருந்து தெரிகிறது. சங்கச் செய்யுள்களைப் படித்து ஆராய்ந்த ஆராய்ச்சிக்காரர்களுக்கு இந்தத் துறைமுகப் பட்டினம் தெரியாமற் போனது ஆச்சரியமாக இருக் கிறது. கிடைத்துள்ள சான்றுகளை ஆதாரமாகக்கொண்டு இந்தப் பழைய துறைமுகப்பட்டினத்தைப் பற்றி விளக்கிக் கூறுவோம்.

சோழ நாட்டிலிருந்த பேர்போன காவிரிப்பூம்பட்டினம் அக்காலத்தில் மருவூர்ப்பாக்கம், பட்டினப்பாக்கம் என்று இரண்டு பகுதியாகப் பிரிந்திருந்தது போலவே இந்தத் துறைமுகப்பட்டினமும் மருங்கூர்ப் பட்டினம் என்றும்

ஊணூர் என்றும் இரண்டு பகுதிகளைக் கொண்டிருந்தது. காவிரிப்பூம்பட்டினத்துப் பட்டினப்பாக்கத்தைச் சூழ்ந்து மதில் அரணாக இருந்தது போலவே, மருங்கூர்ப் பட்டினத்தைச் சேர்ந்த ஊணூரைச் சூழ்ந்து மதில்அரண் இருந்தது. இந்தத் துறைமுகப்பட்டினத்தைப் பற்றிச் சங்கச் செய்யுள்கள் கூறுவதைப் பார்ப்போம்.

மருங்கூர்ப் பட்டினம் செல்வம் கொழித்த நகரம் என்றும் அது கடற்கரையில் இருந்ததென்றும் அங்குக் காயல்களும் (உப்பங்கழிகள்) தோட்டங்களும் இருந்தன என்றும் அவ்வூர்க் கடைத்தெரு சிறந்திருந்தது என்றும் நக்கீரர் கூறுகிறார்.

விழுநிதி துஞ்சும் வீறுபெறு திருநகர்
இருங்கழிப் படப்பை மருங்கூர்ப் பட்டினத்து
எல்லுமிழ் ஆவணத்து அன்ன (*அகம்* 227: 19-21)

காக்கைகள் வீட்டில் வந்து கரைந்தால் அவ்வீட்டுக்கு விருந்தினர் வருவார்கள் என்பது அக்காலத்து நம்பிக்கை. மருங்கூர்ப் பட்டினத்து மகளிரும் தங்கள் வீட்டுக்கு விருந்தினர் வரவேண்டுமென்று விரும்பிக் காக்கைகளுக்குச் சோறு (பலி) இட்டனர். சோற்றுப் பலியை உண்ட காக்கைகள், அவ்வூர்க் கடைத்தெருவில் ஓரிடத்தில் குவித்து வைத்திருந்த இறால் மீன்களைக் கவர்ந்து கொண்டுபோய்த் துறைமுகத்தில் தங்கியிருந்த வங்கங்களின் (கப்பல்களில்) பாய்மரத்தின் மேல் அமர்ந்து இறால்களைத் தின்றன என்று நக்கீரர் கூறுகிறார்.

கதிர்கால் வெம்பக் கல்காய் ஞாயிற்றுத்
திருவுடை வியனகர் வருவிருந் தயர்மார்
பொற்றொடி மகளிர் புறங்கடை உகுத்த
கொக்குகிர் நிமிரல் மாந்தி எற்பட
அகலங் காடி யசைநிழற் குவித்த
பச்சிறாக் கவர்ந்த பசுங்கண் காக்கை
தூங்கல் வங்கத்துக் கூம்பில் சேக்கும்
மருங்கூர்ப் பட்டினத் தன்ன இவள்

(*நற்றிணை* 258: 3-10)

மருங்கூர்ப் பட்டினம் சுருக்கமாக மருங்கை என்றும் கூறப்பட்டது. மருங்கை, பசும்பூண் வழுதி என்னும் பாண்டியனுக்கு உரியது என்று நக்கீரர் கூறுகிறார். இதனால் இத்துறைமுகப்பட்டினம் பாண்டி நாட்டில் இருந்தது என்பது தெரிகின்றது.

பெருஞ்சே யிறவின் துய்த்தலை முடங்கல்
சிறுவெண் காக்கை நாளிரை பெறூஉம்
பசும்பூண் வழுதி மருங்கை அன்னயென்

(*நற்றிணை* 358: 8-10)

மருங்கூர்ப் பட்டினத்தை அடுத்து (மேற்கே) ஊணூர் என்னும் ஊர் இருந்தது. இவை இரண்டும் ஒன்றையொன்று அடுத்து ஒரே நகரம் போல் இருந்தன. ஊணூரின் தலைவன் பெயர் தழும்பன் என்பது. ஊணூரைச் சூழ்ந்து மதிற்சுவர் அரணாக அமைந்திருந்தது. ஊணூர்த் தலைவனாகிய தழும்பனைத் தூங்கல் என்னும் புலவர் பாடினார். இச் செய்திகளை நக்கீரர் கூறுகிறார்.

........................................... வாய்வாள்
தமிழகப் படுத்த இமிழிசை முரசின்
வருநர் வரையாப் பெருநாள் இருக்கைத்
தூங்கல் பாடிய ஓங்குபெரு நல்லிசைப்
பிடிமிதி வழுதுணைப் பெரும்பெயர்த் தழும்பன்
கடிமதில் வரைப்பின் ஊணூர் உம்பர்
விழுநிதி துஞ்சும் வீறுபெறு திருநகர்
இருங்கழிப் படப்பை மருங்கூர்ப் பட்டினத்து

(*அகம்* 227: 13-20)

இச்செய்யுளில், ஊணூர்த் தழும்பனைத் தூங்கல் என்னும் புலவர் பாடினார் என்று நக்கீரர் கூறுகிறார். தூங்கல் என்பது தூங்கல் ஓரியார் என்னும் புலவனைச் சுட்டுகிறது. தூங்கல் ஓரியார் பாடிய செய்யுட்கள் *குறுந்தொகையில்* இரண்டும் (151, 295), *நற்றிணையில்* ஒன்றும் (60) ஆக மூன்று செய்யுட்கள் கிடைத்திருக்கின்றன. ஆனால் அவர் ஊணூர்த் தழும்பனைப் பாடிய பாடல்கள் கிடைக்கவில்லை. அப்பாடல் அல்லது பாடல்கள் தொகைநூல்களில் தொகுக்கப்படாமல் விடுபட்டன போலும்.

ஊணூர், கடற்கரைக்கு அருகில் மருங்கூர்ப் பட்டினத்தைச் சார்ந்து இருந்தது. ஊணூரைச் சூழ்ந்து நெல் வயல்கள் இருந்தன என்று மருதன் இளநாகனார் கூறுகிறார்.

முழங்குகடல் ஓதம் காலைக் கொட்கும்
பழம்பல் நெல்லின் ஊணூர் ஆங்கண்

(*அகம்* 220: 12-13)

ஊணூர்க் கழனிகளில் உழவர் நெற்கதிரை அரியும்போது தண்ணுமை (மத்தளம்) வாசிக்கப்பட்டது (அக்காலத்தில் உழவர்கள் பாட்டுப் பாடிக்கொண்டும் தண்ணுமை ஒலியைக் கேட்டுக்கொண்டும் பயிர்த்தொழில் செய்வது வழக்கம்). தண்ணுமையின் ஓசையைக் கேட்டுத் தேனீக்கள் சிதறிப் பறந்தன. ஊணூரிலிருந்த பாணர்கள் மதுக் காய்ச்சினார்கள், மீனைச் சமைத்து உண்டனர் என்று பரணர் கூறுகிறார்.

வெண்ணெல் அரிஞர் தண்ணுமை வெரீஇ
கண்மடற் கொண்ட தீந்தேன் இரியக்
கள்ளரிக்கும் குயம் சிறுசில்
மீன்சீவும் பாண் சேரி
வாய்மொழித் தழும்பன் ஊணூர் அன்ன *(புறம்* 348: 1-5*)*

இசைப்பாடல்களிலும் யாழ் முதலிய இசைக்கருவிகளை வாசிப்பதிலும் நாடகக்கலையிலும் வல்லவர்களான பாணர் களுக்குத் தலைவன் ஊணூர்த் தழும்பன். தழும்பனுடைய உடம்பில் புண் தழும்புகள் இருந்தன. அந்தத் தழும்புகள் போர்க்களத்தில் ஏற்பட்டன போலும். ஊணூரில் யானையை அழைத்துக்கொண்டு யானைப்பாகன் வீடுதோறும் சென்று பிச்சை வாங்கினான் என்று பரணர் கூறுகிறார்.

நெய்வார்ந் தன்ன துய்யடங்கு நரம்பின்
இரும்பாண் ஒக்கல் தலைவன்! பெரும்புண்
ஏஎர் தழும்பன் ஊணூர் ஆங்கண்
பிச்சை சூழ் பெருங்களிறு போலெம்
*(நற்றிணை* 300: 8-11*)*

ஊணூர்த் தழும்பன் பாண்டியனுக்குக் கீழடங்கி யிருந்தவன். இவ்வாறு ஊணூரும் அதனைச் சார்ந்த மருங்கூர்ப் பட்டினமும் சங்கச் செய்யுள்களில் கூறப்படுகின்றன. இனி, மேலே கூறப்பட்ட விளக்கத்திலிருந்து இவ்வூர்களின் அமைப்பு எவ்வாறு அமைந்திருக்கக்கூடும் என்பதை ஊகித்துப் படம் வரைந்து காட்டுவேன்.

இந்த ஊணூர் - மருங்கூர்ப் பட்டினம் பாண்டி நாட்டிலே எங்கிருந்தது என்பது தெரியவில்லை. இதை அறிவதற்கு வேண்டிய சான்றுகளோ குறிப்புக்களோ இப்போது கிடைக்கவில்லை. இது பாண்டி நாட்டுக் கிழக்குக்கரை ஓரத்தில் இருந்திருக்கவேண்டும். சங்கச் செய்யுள்களும் யவன நூல்களும் குறிப்பிடுகிற பேர்போன கொற்கைத் துறைமுகப் பட்டினத்துக்கு வடக்கே இது இருந்திருக்க வேண்டும்.




**மருங்கூர்ப் பட்டினமும் சாலியூரும் ஒன்றா?**

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்மேல் பாடப்பட்ட *மதுரைக் காஞ்சியிலே* (வரி: 75-88) ஒரு துறைமுகப்பட்டினம் கூறப்படுகிறது. மாங்குடி மருதனார் அந்தப் பட்டினத்தின் பெயரை நேராகக் கூறாமல் குறிப்பாகச் சுட்டிக்காட்டுகிறார். 'நெல்லின் ஊர்' என்று அதைக் குறிப்பிடுகிறார். இதற்கு உரை எழுதிய மிகப் பிற்காலத்தவரான நச்சினார்க்கினியர், "நெல்லின் பெயரைக் கொண்ட சாலியூர்" என்று எழுதுகிறார். மேலும், "இன்னை அசையாக்கி நெல்லூர் என்பாரும் உளர்" என்றும் கூறுகிறார். எனவே சாலியூர் அல்லது நெல்லூர் என்னும் துறைமுகப் பட்டினம் பாண்டி நாட்டில் இருந்தது என்பது தெரிகிறது. செல்வம் கொழித்த அந்தத் துறைமுகப்பட்டினத்திலே பெருநாவாய்கள் (பெரிய பாய்க்கப்பல்கள்) வந்து இறக்குமதி ஏற்றுமதி செய்தன என்று *மதுரைக் காஞ்சி* கூறுகிறது. அதன் வாசகம் இது:

வான் இயைந்த இருமுந்நீர்ப்
பேஎம் நிலைஇய பெரும் பெளவத்துக்
கொடும் புணரி விலங்கு போழக்
கடுங் காலொடு கரைசேர
நெடுங் கொடிமிசை இதை எடுத்து
இன்னிசைய முரச முழங்கப்
பொன்மலிந்த விழுப் பண்டம்
நாடார நன்கிழி தரும்
ஆடியற் பெரு நாவாய்
மழைமுற்றிய மலை புரையத்
துறை முற்றிய துளங்கிருக்கைத்
தெண் கடற் குண்டகழிச்
சீர்சான்ற உயர் நெல்லின்
ஊர்கொண்ட உயர் கொற்றவ

*(மதுரைக் காஞ்சி அடி 75-88)*

இதன் கருத்து: தொடுவானம் பொருந்திய பெரிய கடலாகிய அச்சந் தருகின்ற பெளவத்திலே (அக்கரை நாடுகளிலிருந்து) அலைகளைக் கிழித்துக்கொண்டு காற்றின் உதவியினால் இக்கரையை யடைவதற்குப் பாய்களை விரித்துக் கொண்டு வந்த பெரிய நாவாய்க் கப்பல்கள் இத்துறை முகத்திலே கூட்டமாக வந்து தங்கின. நாவாய்களில் விலை யுயர்ந்த பண்டங்களை இறக்குமதி செய்யும்போது அச்செய்தி முரசு அடித்து ஒலியுண்டாக்கி அறிவிக்கப்பட்டது. துறை முகத்தில் நாவாய்கள் தங்கியிருந்த காட்சியானது, கடலை முற்றுகை செய்யும் மலைகள் போலத் தோன்றிற்று. இப்படிப்பட்ட வாணிக வளமுள்ள, ஆழமான அகழியை யுடைய சாலியூரை (நெல்லூரை)க் கைப்பற்றினான் நெடுஞ்செழியன் என்பது.

இவ்வாறு சிறப்பிக்கப்பட்ட சாலியூர்த் துறைமுகப் பட்டினமும் மேலே கூறப்பட்ட மருங்கூர்த் துறைமுகப் பட்டினமும் ஒன்றுதானோ என்னும் ஐயம் தோன்றுகிறது. சாலியூர், கடல்நீரை அகழியாகக் கொண்டிருந்தது என்று *மதுரைக்காஞ்சி* கூறுகிறது. மருங்கூர்ப் பட்டினத்தை யடுத்திருந்த ஊணூர், கோட்டை மதிலைப் பெற்றிருந்தது என்று நக்கீரர் கூறுகிறார். மதிலைச் சூழ்ந்து கிடங்கு (அகழி) இருப்பது வழக்கந்தானே. இக்குறிப்புகளினால் சாலியூரும் ஊணூரும் ஒன்று என்று கருதத் தோன்றுகிறது. ஆனால், உறுதியாகச் சொல்லத் தக்க சான்றுகள் இல்லை. இது எப்படியானாலும் சரி, இதுவரையில் அறியப்படாத ஒரு

பழைய துறைமுகப்பட்டினம் இப்போது சங்கச் செய்யுள்களிலிருந்து வெளிப்பட்டது என்பது இந்த ஆராய்ச்சிக் கட்டுரையினால் நன்கு தெரிகின்றது.

மருங்கூர்ப் பட்டினம் கி. பி. 13ஆம் நூற்றாண்டுச் சாசனங்களிலும் கூறப்படுகிறது. சோழநாட்டிலே நன்னிலம் தாலுகாவில் உள்ள திருச்செங்காட்டங்குடி உத்தராபதீசுவரர் கோவிலின் முன்மண்டபத்து மேற்குப் பக்கத்துச் சுவரின் அடிப்புறத்தில் ஒரு சாசனம் எழுதப்பட்டிருக்கிறது. திரிபுவன சக்கரவர்த்தி இராஜராஜ தேவரின் (III) மூன்றாம் ஆட்சியாண்டில் (கி. பி. 1218-இல்) இந்த சாசனம் எழுதப் பட்டது. மருங்கூர்வாசிகளான இருவர் இந்தக் கோவிலுக்கு நிலம் தானங் கொடுத்ததை இச்சாசனம் கூறுகிறது. மருங்கூருக்கு 'இராஜநாராயண சதுர்வேதிமங்கலம்' என்று பெயர் இருந்ததை இச்சாசனம் தெரிவிக்கிறது.

இதே கோவிலின் இரண்டாவது கோபுர வாயிலின் இடதுபுறச் சுவரில் உள்ள சாசனம், திரிபுவனச் சக்கரவர்த்தி பராக்கிரம பாண்டிய தேவரின் ஏழாவது ஆட்சியாண்டில் எழுதப்பட்டது. மருங்கூரில் இருந்த இரண்டு வேலி நிலத்தை இக்கோவிலுக்குத் தானம் செய்யப்பட்ட செய்தி இதில் கூறப்படுகிறது. (காண்க: 63 & 76 of 1913, Nos. 753 & 766, Tanjore Dt., *A Topographical list of the inscriptions of Madras Presidency*, Vol. II.)

இந்தச் சாசனங்களிலிருந்து கி. பி. 13ஆம் நூற்றாண்டிலும் மருங்கூர்ப்பட்டினம் இருந்ததென்பது தெரிகின்றது. இப்போது இவ்வூர் இதே பெயருடன் இருக்கிறதா அல்லது வேறு பெயர் பெற்றிருக்கிறதா அல்லது கடலில் மறைந்து போய்விட்டதா என்பதை மேற்கொண்டு ஆராய வேண்டியது பழம் பொருள் ஆராய்ச்சி இலாகாவின் கடமையும் ஆராய்ச்சிக்காரர்களின் கடமையும் ஆகும்.

*இரண்டாவது உலகத் தமிழ்க் கருத்தரங்கு நிகழ்ச்சிகள்,*
IIIஆவது தொகுதி, உலகத்தமிழாராய்ச்சி மன்றம், சென்னை, 1968

# திருமெழுக்குப்புறம்

திருக்கோயில்களில் நாள்தோறும் திருமெழுக்கிட்டுக் கோமயம் கோசலம் தெளித்துத் தூய்மைப்படுத்துவது வழக்கம். இதற்குத் திருமெழுக்கு இடுதல் (மெழுகுதல்) என்று பெயர். திருமெழுக்குத் தொண்டினைச் சிலர் பக்தியின் பொருட்டு இலவசமாகச் செய்வர். இந்தத் தொண்டு நடைபெறுவதன் பொருட்டுச் செல்வந்தர் சிலர் நிலம் அல்லது பொருள் தானம் செய்வதும் உண்டு. இவ்விதத் தானத்துக்குத் திருமெழுக்குப்புறம் என்பது பெயர்.

திருநாவுக்கரசு சுவாமிகளின் திருத்தமக்கையரான திலக வதியார், திருவதிகை வீரட்டானக் கோயிலில் திருமெழுக்குத் திருத்தொண்டினைச் செய்து வந்தார். அவர் பக்தி காரணமாக ஊதியத்தை விரும்பாமல், தாமாகவே இத்திருத்தொண்டினை நாள்தோறும் செய்து வந்தார்.

புலர்வதன்முன் திருவலகு பணிமாறிப் புனிறகன்ற
நலமலி ஆன் சாணத்தால் நன்குதிரு மெழுக்கிட்டு
மலர்கொய்து கொடுவந்து மாலைகளும்
தொடுத்தமைத்துப்
பலர் புகழும் பண்பினால் திருப்பணிகள் பல செய்தார்

என்றும்,

சீறடியார் திருவலகும் திருமெழுக்கும் தோண்டியும்
கொண்டு
ஆறணிந்தார் கோயிலுனுள் அடைந்தவரைக்
கொடுபுக்கார்

என்றும், *பெரியபுராணம்* இச்செய்தியைக் கூறுகிறது.

திலகவதியாரைப் போல எல்லோரும் இந்தத் திருத் தொண்டினை இலவசமாகச் செய்வார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. திருமெழுக்கிடும் திருத்தொண்டினைச் செய்வதற் கென்று கோயில்களில் நிபந்தங்கள் செய்யப்பட்டிருந்தன. அதற்குத் திருமெழுக்குப்புறம் என்பது பெயர். திருமெழுக்குத் தொண்டினைச் செய்கிறவர்களுக்குக் காசு கொடுக்காமல்

அதற்குப் பதிலாக நெல் கொடுப்பது அக்காலத்து வழக்கம். அதன் பொருட்டு நிலங்கள் தானம் செய்யப்பட்டிருந்தன. அந்த நிலங்களில் விளையும் நெல்லைத் திருமெழுக்கிடுவோருக்குக் கொடுப்பது வழக்கம். இந்தச் செய்தியைச் சாசனங்களிலிருந்து அறிகிறோம். அந்தச் சாசனங்கள் சிலவற்றைக் காட்டுவோம்.

தஞ்சாவூர் மாவட்டம், மாயூரம் தாலுகா, குற்றாலம் என்னும் ஊரில் உள்ள சிவன்கோவில் சாசனம். இந்தக் கோயிலுக்குச் சொன்னவாறறிவார் கோயில் என்பது பழைய பெயர். இப்போது, உக்தவேதீஸ்வரர் கோவில் என்று பெயர் கூறப்படுகிறது. உத்தம சோழனின் தாயாரான செம்பியன் மாதேவியார் என்னும் அரசியார் இந்தக் கோயிலுக்குப் பல கட்டளைகளை அமைத்திருக்கிறார். அக்கட்டளைகளில் ஒன்று திருமெழுக்குப்புறம். "திருமுற்றம் திருவலகிட்டுத் திருமெழுக்கிடுவார் மூவர்க்கு நிசதம் நெல்லுக் குறுணி நானாழியாக ஓராட்டைக்கு நெல்லு நாற்பத்தைங் கலத்துக்கு நிலன் காலே அரைமா அரைக்காணி" (எண் 170, *தென்னிந்தியக் கல்வெட்டுக்கள்*, தொகுதி 13) என்று இந்தச் சாசனப் பகுதி கூறுகிறது.

தஞ்சை மாவட்டம் மாயூரம் தாலுகா திருமணஞ்சேரி கோயில். இதற்குப் பழைய பெயர் திருக்கற்றளி மகாதேவர் கோயில் என்பது. இப்போதைய பெயர் உத்வாகநாத சுவாமி கோயில் என்பது. இந்தக் கோயிலுக்கும் செம்பியன் மாதேவியார் நிபந்தங்களைச் செய்திருக்கிறார் என்பதை இங்குள்ள சாசனம் கூறுகிறது. இங்குக் கோயிலில் திருமெழுக்கிடுவார் இருவர் நியமிக்கப்பட்டிருந்தனர் (எண் 14 *தென்னிந்தியக் கல்வெட்டுக்கள்*, தொகுதி 13).

தஞ்சாவூர் மாவட்டம் கும்பகோணம் தாலுகா திருக்கோடிகா. இவ்வூர் இப்போது திருக்கோடிகாவல் என்று கூறப்படுகிறது. திருக்கோடிகாவுக்குக் கண்ணமங்கலம் என்னும் பெயரும் இருந்தது என்று சாசனத்திலிருந்து தெரிகிறது. இவ்வூரிலுள்ள திருக்கோடிகா ஈசுவரர் கோயில் சாசனம், திருமெழுக்குப்புறமாக நிலம் தானம் செய்யப் பட்டிருந்ததைக் கூறுகிறது. இந்த நிலத்தின் எல்லையை இந்தச் சாசனம் இவ்வாறு கூறுகிறது:

"ஆத்திரையன் கிழவன் மெழுக்குப்புறமாக வைத்த நிலத்துக்குக் கீழ்பாற் கெல்லை உட்சிறு வாய்க்காலுக்கு மேற்கு, தென்பாற் கெல்லை புதுவாய்க்காலுக்கு வடக்கு, மேற்பாற்

கெல்லை மெழுக்குப் புறத்துக்குக் கிழக்கு, வடபாற் கெல்லை மெழுக்குப்புறத்துக்கு வடவெல்லைக் கொத்தத்துக்குத் தெற்கு நிலம் காணி அரைக் காணிச் செய்" (எண் 175, *தென்னிந்தியக் கல்வெட்டுக்கள்*, தொகுதி 13).

இவ்வாறு திருமெழுக்குக்கென்று நிலங்கள் தானம் செய்யப்பட்டிருந்தன. திருக்கோயில்களில் திருவலகு இட்டுச் சாணநீர் தெளித்து மெழுகுவது மரபு. பசுவின் சாணத்தினால் மெழுகுவது தொன்தொட்டுள்ள வழக்கம். கற்றரையல்லாத மண் தரைகளுக்குச் சாணநீர் மெழுகுவது மரபு. பசுவின் சாணத்தில் மெழுகினால் பூச்சிகள் சேரா. மேலும், சிவபெருமானுக்கும் திருமாலுக்கும் முற்காலத்தில் பஞ்ச கவ்வியம் (ஆனைந்து) அபிஷேகம் செய்யப்பட்டது என்பதைச் சாசனங்களும் தெரிவிக்கின்றன. பஞ்சகவ்வியம் என்னும் ஆன் ஐந்து என்பது, பால், தயிர், நெய், கோமயம் (சாணம்), கோமூத்திரம் என்பன.

திருக்கோயில்கள் மெழுகுவதற்குரிய சாணம் கன்று ஈன்று புனிறு நீங்கிய பசுவின் சாணமாக இருத்தல் வேண்டும் என்று கூறப்படுகிறது. "புனிறு அகன்ற நலமலி ஆன் சாணத்தினால்" திலகவதியார் திருமெழுக்குத் தொண்டு செய்தார் என்று *பெரியபுராணங்* கூறுவது காண்க.

அந்தக் காலத்துக் கோயில்களுக்கும், இந்தக் காலத்துக் கோயில்களுக்கும் வேறுபாடுகள் உண்டு. அக்காலத்தில் கோயில் தரை பெரும்பாலும் மண் தரையாக அல்லது செங்கல் தரையாக இருந்தது. அப்போது சாணத்தினால் மெழுக வேண்டியிருந்தது. இக்காலத்தில் கோயில் தரைகள் பெரும் பாலும் கருங்கல் தரையாக இருப்பதனால் சாணத்தினால் மெழுகவேண்டிய அவசியம் இல்லை. திருவலகிட்டு நீரினால் சுத்தம் செய்தால் மட்டும் போதும். இக்காலத்துக் கோயில் களில் நிகழ்கிற நடைமுறையை அறியேன்.

கோயில்களையும் சுற்றுப்புறங்களையும், தூய்மையாகவும் அழகாகவும் வைத்திருக்க வேண்டுவது மிகமிக அவசியமாகும். கோயிலைக் கண்காணிப்போரும் கோயிலுக்குச் சென்று வழிபடுவோரும் இதில் கண்ணுங் கருத்துமாக இருக்க வேண்டும். காகிதம், தேங்காய் நார், வாழைப்பழத்தோல், பூக்கள் முதலிய பொருள்களைக் கோயில் தரைகளில் சிதறுவது கூடாது. இந்தச் செய்தியில் கோயிலுக்குச் சென்று வழிபடுவோர் கருத்தாக இருக்கவேண்டும். கோயிலுக்குச்

சென்று வழிபடுவது எவ்வளவு புண்ணியச் செயலென்று கருதுகிறோமோ, அவ்வளவு புண்ணியமானது கோயிலில் குப்பை போடாதிருப்பதும் என்பதை ஒவ்வொருவரும் கருத்தில் வைக்கவேண்டும். இறைவன் எவ்வளவு புனிதமான வனோ அவ்வளவு புனிதமானது இறைவனின் கோயில் என்பதை ஒவ்வொருவரும் அறிய வேண்டும்.

*திருக்கோயில்*, மாலை 11, மணி 4, ஜனவரி 1969

# சங்க காலத்து நடுகற்கள்

பழங்காலத்துத் தமிழர் வீரத்தைப் போற்றினார்கள். போர்க்களத்தில் புறங்காட்டி ஓடாமல் திறலோடு போர் செய்த வீரர்களைத் தமிழர் புகழ்ந்து போற்றிப் பாராட்டினார்கள். திறலோடு போர்செய்து களத்தில் விழுந்து உயிர்விட்ட வீரர்களுக்கு நடுகல் நட்டு நினைவுச்சின்னம் அமைத்தார்கள். விறல் வீரர்களின் நினைவுக்காக நடப்பட்ட நடுகற்களைப் பற்றிச் சங்க நூல்களில் காணலாம்.

வெட்சிப் போர், கரந்தைப் போர், வஞ்சிப் போர், உழிஞை போர், நொச்சிப் போர், தும்பைப் போர், வாகைப் போர் என்று போரைத் தமிழர் ஏழு வகையாகப் பிரித்திருந்தார்கள். சங்க காலத்தில், அரசர்கள் போர் செய்வதைத் தங்கள் கடமைகளில் முக்கியமானதாகக் கருதினார்கள். ஏழு வகையான போர்களிலே எந்தப் போரிலானாலும் ஒரு வீரன் திறலாகப் போர் செய்து உயிர் விட்டால் அந்த வீரனுக்கு நடுகல் நட்டு அவன் வீரத்தைப் பாராட்டினார்கள். வீரர்களின் நினைவுக்காகக் கல் நடுவதைத் *திருக்குறளும்* கூறுகிறது.

என் ஐமுன் நில்லன்மின் தெவ்விர், பலர்என் ஐ
முன்நின்று கல்நின் றவர் (படைச்செருக்கு)

வீரத்தைப் பாராட்டி நடப்படுவதனால் நடுகல்லுக்கு வீரக்கல் என்றும் பெயர் உண்டு. வீரக்கல் நடுவதற்கு ஐந்து துறைகளைக் கூறுகிறார் தொல்காப்பியர். அவை காட்சி, கல்கோள், நீர்ப்படை, நடுதல், வாழ்த்து என்று ஐந்து துறைகளாம். காட்சி என்பது நடவேண்டிய கல்லை மலையில் கண்டு தேர்ந்தெடுப்பது. கல்கோள் என்பது தேர்ந்தெடுத்த கல்லைக் கொண்டு வருவது. நீர்ப்படை என்பது கொண்டுவந்த கல்லில் இறந்த வீரனுடைய பெயரையும் அவனுடைய சிறப்பையும் பொறித்து நீராட்டுவது. நடுதல் என்பது அந்த வீரக்கல்லை நடவேண்டிய இடத்தில் நட்டு அதற்கு மயிற் பீலிகளையும் மாலைகளையும் சூட்டிச் சிறப்புச் செய்வது. வாழ்த்து என்பது யாருக்காகக் கல் நடப்பட்டதோ அந்த வீரனுடைய திறனையும் புகழையும் வாழ்த்திப் பாடுவது. கல்நாட்டு விழாவுக்கு ஊரார் மட்டும் அல்லாமல் சிறப்பாக வீரர்களும் வந்து சிறப்புச் செய்வார்கள்.

போரில் இறந்த வீரர்களுக்கு நடுகல் நடுகிற வழக்கம் பழந்தமிழகத்தில் மட்டுமல்லாமல் வேறு நாடுகளிலும் பழங்காலத்தில் இருந்து வந்தது. ஐரோப்பாக் கண்டத்திலும் சில நாடுகளில் நடுகல் நடுகிற வழக்கம் பழங்காலத்தில் இருந்தது. அந்த நடுகற்களுக்கு அவர்கள் மென்ஹிர் என்று பெயர் கூறினார்கள். மென்ஹிர் என்றால் நெடுங்கல் அல்லது உயரமான கல் என்பது பொருள். மென்ஹிர் (Menhir) என்பது பிரெடன் (Breton) மொழிச்சொல். ('Men' - Stone; 'Hir' - High.) இந்தோனேசியத் தீவுகள் எனப்படும் ஜாவா, சுமத்திரா போன்ற கிழக்கிந்தியத் தீவுகளிலும் நடுகல் நடுகிற வழக்கம் பழங்காலத்தில் இருந்தது. இதனால், பழந்தமிழரைப் போலவே வேறு நாட்டாரும் நடுகல் நடுகிற வழக்கத்தைக் கொண்டிருந்தார்கள் என்பது தெரிகின்றது.

வீரர்களுக்கு நடுகல் நட்டதைச் சங்கச் செய்யுள்களில் காண்கிறோம். கரந்தைப் போரில் இறந்துபோன ஒரு வீரனுக்கு நடுகல் நட்டதை ஆவூர் மூலங்கிழார் தம்முடைய செய்யுளில் கூறுகிறார் (*புறம்* 261: 13-15). இன்னொரு கரந்தைப் போரில் வீரமரணம் அடைந்த ஒரு வீரனுக்கு வீரக்கல் நட்டபோது அவன் மீது கையறுநிலை பாடினார் புலவர் உறையூர் இளம்பொன் வாணிகனார். அந்த நடுகல்லின்மேல் அவனுடைய பெயரைப் பொறித்து மாலைகளாலும் மயிற்பீலிகளாலும் அழகு படுத்தியிருந்ததை அச்செய்யுளில் அவர் கூறுகிறார் (*புறம்* 264).

சேலம் மாவட்டத்திலிருந்த தகடூர் கோட்டையின் தலைவன் அதிகமான் நெடுமான் அஞ்சி. பெருஞ்சேரல் இரும்பொறை என்னும் சேர அரசன் தகடூரின் மேல் படையெடுத்து வந்து அக்கோட்டையை முற்றுகையிட்டான். அதன் காரணமாகப் பல நாட்கள் போர் நிகழ்ந்தது. அப்போரில் அதிகமான் நெடுமான்அஞ்சி புண்பட்டு இறந்து போனான். அவனுக்கு வீரக்கல் நட்டு அவன் வீரத்தைப் போற்றினார்கள். அப்போது அவனுடைய புலவராக இருந்த ஔவையார் கையறு நிலை பாடினார் (*புறம்* 232).

கோவலர் (ஆயர்) வளர்த்து வந்த பசுமந்தைகளைப் பகையரசனுடைய வீரர்கள் வந்து ஓட்டிக்கொண்டு போய்விட்டார்கள். இதனையறிந்த அவ்வூர் வீரன் அவர்களைத் தொடர்ந்து சென்று வில்லை வளைத்து அம்புமாரி பொழிந்து பகைவரை ஓட்டித் தன்னூர்ப் பசுக்களை மீட்டுக் கொண்டான். ஆனால், வெற்றிபெற்ற அவன் பகைவீரர்கள் எய்த அம்புகளினால் புண்பட்டு மாண்டு போனான். திறலுடன் போர்செய்து மாண்டுபோன அவ்வீரனுக்கு அவ்வூர்க் கோவலர்கள் நடுகல் நட்டார்கள். அந்த நடுகல்லுக்கு வேங்கைமரத்துப் பூக்களினாலும்

பனங்குருத்துகளாலும் மாலைகள் கட்டிச் சூட்டிச் சிறப்புச் செய்தார்கள். இந்தச் செய்தியைச் சோணாட்டு முகையலூர் சிறு கருத்தும்பியார் தம்முடைய செய்யுளில் கூறியுள்ளார் (*புறம்* 265).

இன்னொரு ஊரில் பகைவர்கள் வந்து அவ்வூர்ப் பசுமந்தைகளைக் கவர்ந்து கொண்டு போனார்கள். அப்போது அவ்வூர் வீரன் அவர்களைத் தொடர்ந்து சென்று போராடி மந்தைகளை மீட்டுக்கொண்டான். ஆனால், பகைவர் எய்த அம்புகள் உடம்பில் பாய்ந்தபடியால் அவன் இறந்து போனான். அவனுக்காக நட்ட வீரக்கல்லில் அவனுடைய பெயரைப் பொறித்து மயிற்பீலிகளினால் அக்கல்லை அழகுசெய்து போற்றினார்கள் என்று மருதனிளநாகனார் என்னும் புலவர் பாடுகிறார் (*அகம்* 131: 6-11).

தன் ஊர்ப் பசுக்களைப் பகைவர் கவர்ந்து கொண்டு போனபோது அவ்வூர் வீரன் அப்பகைவரிடமிருந்து பசுக்களை மீட்டான். ஆனால், பகைவரின் அம்புகளினால் புண்பட்ட அவன் இறந்து போனான். அவ்வூரார் அவ்வீரனின் நினைவுக்காக வீரக்கல் நட்டுப் போற்றினார்கள். அந்தக் கல்லின்மேல் அவ்வீரனுடைய பெயரை எழுதினார்கள். மாலைகளையும் பீலிகளையுஞ் சூட்டினார்கள். நடுகல்லின் மேலே சித்திரப் படத்தினால் (சித்திரம் எழுதப்பட்ட துணி), பந்தல் அமைத்துச் சிறப்புச் செய்தார்கள். இந்நிகழ்ச்சியை வடமோதங்கிழார் கூறியுள்ளார் (*புறம்* 260).

ஒரு ஊரிலிருந்த பசுமந்தைகளைச் சில வீரர்கள் வந்து பிடித்துக்கொண்டு போய்விட்டார்கள். அதையறிந்த அவ்வூர் வீரர் சிலர் அவர்களைத் தொடர்ந்து சென்று பசுக்களை மீட்பதற்காகப் போர் செய்தார்கள். பகைவரும் எதிர் நின்று அம்பு எய்தனர். பகைவரின் அம்புக்கு அஞ்சிச் சில வீரர்கள் ஓடிப்போனார்கள். ஒரு வீரன் மட்டும் புறங்கொடாமல் நின்று போர்செய்தான். பகைவீரர்களின் அம்புகள் அவனுடைய உடம்பில் தைத்து அவன் அக்களத்திலே இறந்து போனான். அவ்விறல் வீரனுக்கு நடுகல் நட்டுப் போற்றினார்கள் அவ்வூரார் (*புறம்* 263).

ஆண்டுதோறும் வீரக்கல்லுக்கு அவ்வீரனுடைய உறவினர் பூசை செய்தார்கள். அந்நாளில் அந்நடுகல்லை நீராட்டி எண்ணெய் பூசி மலர் மாலைகளைச் சூட்டி நறுமணப் புகையைப் புகைத்தார்கள். அந்தப் புகையின் மணம் ஊரெங்கும் கமழ்ந்தது. வீட்டில் சமைத்த மதுவை இறந்த வீரனுக்குப் பலியாகக் கொடுத்தனர். இந்தச் செய்தியை மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் தம்முடைய செய்யுளில் கூறுகிறார் (*புறம்* 329).

சங்க காலத்துத் தமிழகத்திலே அடிக்கடி போர்கள் நிகழ்ந்தன. போரில் இறந்த வீரர்களுக்கு நடுகற்கள் நடப் பட்டன. ஆகையினால் நாடெங்கும் நடுகற்கள் காணப் பட்டன.

நல்லமர்க் கடந்த நலனுடை மறவர்
பெயரும் பீடும் எழுதி யதர்தொறும்
பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல் (*அகம்* 67: 8-10)

என்று புலவர் நோய்பாடியார் கூறியது போன்று ஊர்களிலும் வழிகளிலும் நடுகற்கள் இருந்தன.

நடுகற்கள், பலகை போன்று அமைந்த கருங்கற்களினால் ஆனவை. அவை நீண்டதாக இருந்தன. 'நெடுநிலை நடுகல்' என்று ஒரு புலவர் கூறுகிறார். பன்னிரண்டடி உயரமுள்ள நடுகற்களும் இருந்தன. பழமையான நடுகற்களின் மேலே செடி கொடிகளும் படர்ந்திருந்தன. நடுகல்லில் இறந்த வீரனுடைய பெயரும் பீடும் எழுதப்பட்டிருந்தபடியால் 'எழுத்துடை நடுகல்' என்று கூறப்பட்டது. வழிப்போக்கர் வழியில் உள்ள நடுகற்களண்டை நின்று அக்கற்களில் எழுதப்பட்ட எழுத்துக்களைப் படிப்பது வழக்கம். சில சமயங்களிலே அக்கற்களில் எழுதப்பட்ட எழுத்துகளில் சில எழுத்து மழுங்கி மறைந்துபோய் சில எழுத்துகளே எஞ்சியிருக்கும். அவ்வெழுத்து களைப் படிப்போருக்கு அதன் பொருள் விளங்காமலிருக்கும்.

சில வீரர்கள் தங்களுடைய அம்புகளை நடுகற்களின் மேல் தேய்த்துக் கூராக்குவர். எஃகினால் ஆன அம்பு முனையைத் தேய்க்கும்போது நடுகல்லில் எழுதப்பட்டுள்ள எழுத்துகள் சில மாய்ந்துபோகும். எஞ்சியுள்ள எழுத்துகளைப் படிப்போருக்கு அவ்வெழுத்தின் பொருள் விளங்காமற் போயிற்று. இச்செய்தியை மருதன் இளநாகனார் கூறுகிறார்.

இருங்கவின் இல்லாப் பெரும்புல் தாடிக்
கடுங்கண் மறவர் பகழி மாய்த்தென
மருங்குல் நுணுகிய பேஎமுதிர் நடுகல்
பெயர்பயம் படரத் தோன்று குயிலெழுத்து
இயைபுடன் நோக்கல் செல்லாது அசைவுடன்
ஆறுசெல் வம்பலர் விட்டனர் கழியும்
சூர்முதல் இருந்த ஓமையம் புறவு (*அகம்* 297: 5-11)

உப்பு வாணிகராகிய உமணர் உப்பு மூட்டைகளை வண்டிகளில் ஏற்றிக்கொண்டு ஊர்ஊராகச் சென்று விற்பார்கள். செல்லும்போது வழியில் உள்ள நடுகற்களின்மேல் வண்டிச்சக்கரம் உராய்ந்து நடுகல்லில் எழுதப்பட்டுள்ள எழுத்துகளில் ஒன்றிரண்டு எழுத்துகளைத் தேய்த்து விடுவதும்

உண்டு. அவ்வாறு மறைந்துபோன எழுத்து இல்லாமல் மற்ற எழுத்துக்களைப் படிக்கிறவர்களுக்கு அதன் வாசகம் வேறு பொருளைத் தந்தது என்று மருதன் இளநாகனாரே மீண்டுங் கூறுகிறார்.

மரங்கோள் உமண்மகன் பேரும் பருதிப்
புன்றலை சிதைத்த வன்றலை நடுகல்
கண்ணி வாடிய மண்ணா மருங்குல்
கூருளி குயின்ற கோடுமாய் எழுத்தால்
ஆறுசெல் வம்பலர் வேறுபயம் படுக்குங்
கண்பொரி கவலைய கானகம் (*அகம்* 343: 4-9)

நடுகற்கள் பலவித உயரங்களில் அமைக்கப்பட்டன. மூன்று அடி உயரமுள்ள நடுகற்களும் பன்னிரண்டடி உயரமுள்ள நடுகற்களும் உண்டு.

இதுவரையில் கடைச்சங்க காலத்து (கி.மு. 300 முதல் கி. பி. 250 வரையில்) நடுகற்களைப் பற்றி ஆராய்ந்தோம். அக்காலத்து நடுகற்கள் இதுவரையில் கண்டுபிடிக்கப்படவில்லை. சங்க காலத்துக்குப் பிறகு கி. பி. 14ஆம் நூற்றாண்டு வரையிலும் தமிழ்நாட்டிலும் கன்னடநாட்டிலும் வீரர்களுக்கு நடுகல் நடுகிற வழக்கம் இருந்துவந்தது. பிற்காலத்து வீரக்கற்களில் பல நமக்குக் கிடைத்திருக்கின்றன. இந்தப் பிற்காலத்து நடுகற்களில் பிற்காலத்து வட்டெழுத்துகள் பொறிக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் சங்ககாலத்து வீரக்கற்கள் ஒன்றேனும் இதுகாறும் கிடைக்கவில்லை.

சங்க காலத்தில் வழங்கி வந்த தமிழ் எழுத்து எது?

வட்டெழுத்து என்னும் ஒருவகையான எழுத்து முற்காலங்களில் தமிழ்நாட்டில் வழங்கி வந்தது. வட்டெழுத்து வழங்குவதற்கு முன்பு பிராஃமி எழுத்து சங்க காலத்தில் வழங்கி வந்தது என்பதை இப்போது அறிகிறோம். மலைக்குகைகளிலே பாறைக்கற்களில் செதுக்கி வைக்கப்பட்டுள்ள பிராஃமி எழுத்துகளிலிருந்து வட்டெழுத்துக்கு முன்பு பிராஃமி எழுத்து தமிழ்நாட்டில் வழங்கி வந்தது என்பதை அறிகிறோம்.

கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் பாரத தேசத்தை அரசாண்ட அசோக சக்கரவர்த்தி காலத்தில் பிராஃமி எழுத்து தமிழ்நாட்டில் வழங்கப்பட்டது என்று பொதுவாகக் கருதப்படுகிறது. அதாவது கடைச்சங்க காலத்திலே பிராஃமி எழுத்து தமிழகத்தில் வழங்கப்பட்டது என்பது தெரிகின்றது. இப்போது தமிழ்நாட்டில் கிடைக்கிற பிராஃமி எழுத்துகள் தமிழ்நாட்டுப் பௌத்த, ஜைன மதத்தார்களால் எழுதப் பட்டவை. பௌத்த, ஜைனர் காலத்துக்கு முன்பு, அதாவது

பிராஃமி எழுத்து வருவதற்கு முன்பு தமிழ்நாட்டில் என்ன எழுத்து வழங்கி வந்தது?

தமிழர்களுக்கு வேறு எழுத்து இல்லை என்றும் பிராஃமி எழுத்தைத்தான் தமிழர்களும் கைக்கொண்டார்கள் என்றும், *தொல்காப்பியம், புறநானூறு, அகநானூறு* முதலிய சங்கநூல்கள் எல்லாம் பிராஃமி எழுத்தினால் எழுதப்பட்டவை என்றும் ஒருசாரார் கூறுகின்றனர். இவ்வாறு கூறுகிறவர்கள் (பிராஃமி எழுத்து கண்டுபிடிக்கப்படுவதற்கு முன்பு) *தொல்காப்பியம்* முதலிய சங்ககாலத்து நூல்கள் வட்டெழுத்தினால் எழுதப்பட்டன என்று கூறிவந்தார்கள். இப்போது, பிராஃமி எழுத்து சங்க காலத்தில் வழங்கி வந்தது என்பது தெரிந்த பிறகு, *தொல்காப்பியம்* முதலிய சங்க நூல்கள் பிராஃமி எழுத்தினால் எழுதப்பட்டவை என்று கூறுகிறார்கள்.

இன்னொரு சாரார், பிராஃமி எழுத்துக்கு முன்பு ஏதோ ஒரு வகையான எழுத்து சங்ககாலத்தில் வழங்கி வந்தது என்றும், பிராஃமி எழுத்து வந்த பிறகு அந்தப் பழைய எழுத்து மறைந்துவிட்டதென்றும் கூறுகிறார்கள். அந்தப் பழைய எழுத்து இன்ன உருவமுடையது என்பது தெரியவில்லை.

பிராஃமி எழுத்துக்கு முன்பு தமிழ்நாட்டில் வேறு வகையான பழைய எழுத்து இருந்ததா? இருந்தது என்று சொல்வதற்குச் சான்று இல்லை. இருக்கவில்லை என்று சொல்வதற்கும் சான்று இல்லை.

பிராஃமி எழுத்துத்தான் முதன்முதல் தமிழர் அறிந்த எழுத்து. அதற்கு முன்பு எந்த எழுத்தும் தமிழில் இல்லை என்று கூறுகிறவர், வேறு பழைய எழுத்து இருந்ததில்லை என்று கூறுவதற்குச் சான்று காட்டவில்லை.

பிராஃமி எழுத்துக்கு முன்பு, தமிழில் வேறு எழுத்து இருந்ததா இல்லையா என்னும் கேள்விக்குச் சரியான விடை கூறத் தகுந்தவை சங்க காலத்து நடுகற்களே. சங்க காலத்து நடுகற்களில் எழுத்துகள் பொறிக்கப்பட்டிருந்தன என்பதை மேலே சான்று காட்டிக் கூறினோம். அந்த வீரக் கற்கள் கிடைக்குமானால், அக்கற்களில் எழுதப்பட்டுள்ள எழுத்துகளைக் கொண்டு அந்தக் காலத்தில் வழங்கி வந்த எழுத்தின் வரிவடித்தையறியலாம். ஆனால், இதுவரையில் சங்க காலத்து நடுகல் ஒன்றேனுங் கண்டுபிடிக்கப்படவில்லை.

பௌத்தர், ஜைனர் மட்டும் ஆதிகாலத்தில் தமிழ்நாட்டில் பிராஃமி எழுத்தை எழுதினார்கள் என்றால், அக்காலத்தில் பௌத்தர் ஜைனரல்லாத தமிழர் வேறு ஒரு வகையான எழுத்தை எழுதியிருக்க வேண்டும். அந்த எழுத்துகள் நிச்சயமாக அக்காலத்து நடுகற்களில் எழுதப்பட்டிருக்க வேண்டும்.

ஆகவே, கடைச்சங்க காலத்தில் பிராஃமி எழுத்து வழங்கி வந்ததா அல்லது வேறுவகையான எழுத்து வழங்கி வந்ததா என்பதை அறிவதற்கு அக்காலத்து நடுகற்களைக் கண்டுபிடிக்க வேண்டும். அகழ்வாராய்ச்சி செய்யும் புதைபொருள் ஆய்வாளர் (ஆர்க்கியாலஜி இலாகா) இது பற்றி இது வரையில் சிந்திக்கவே இல்லை. இனியாயினும் இதுபற்றிச் சிந்திப்பார்களாக.

தமிழக அரசு தன் சொந்தச் செலவில் ஆர்க்கியாலஜி இலாகா ஒன்றை நிறுவி செயல்பட்டு வருகிறது. அந்த இலாகா, சங்ககாலத்து நடுகற்களைக் கண்டுபிடித்து உதவுமானால் இந்தப் பிரச்சினைக்கு முடிவு காணக்கூடும். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு நடப்பட்ட வீரக்கற்கள் நிலத்திலே ஆழ்ந்து புதைந்து கொண்டிருக்கும். பதினைந்து அடி அல்லது இருபது அடி ஆழத்திலும் புதைந்து கிடக்கலாம். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களும், தமிழகத்து ஆர்க்கியாலஜி இலாகாவும், மத்திய அரசாங்கத்து ஆர்க்கியாலஜி இலாகாவும் இணைந்து ஒன்று சேர்ந்து இதில் முயல்வார்களானால் பயன் காணக்கூடும்.

தமிழ்நாட்டு ஆர்க்கியாலஜி இலாகாவும், மத்திய அரசாங்கத்து ஆர்க்கியாலஜி இலாகாவும் (எபிகிராபி இலாகாவும் உட்பட) கோயில்களிலுள்ள கல்வெட்டெழுத்துக்களையும் தரைக்கு மேலே காணப்படுகிற கல்வெட்டெழுத்துகளையும் மட்டும் கண்டுபிடித்துக் கொண்டிருப்பது போதாது. தரைக்குள் புதைந்து கிடக்கிற வீரக்கல் போன்றவற்றையும் அகழ்ந் தெடுத்து வெளிப்படுத்த வேண்டும். பெயரளவில் மட்டும் செயலாற்றாமல் சுறுசுறுப்பாக முயற்சியோடு செயலாற்ற வேண்டும். 'உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ?'

*ஆராய்ச்சி,* மலர் 1, இதழ் 2, 1969

# ஒரு பிராஃமி எழுத்துச் சாசனம்

பாரத தேசத்தில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே பிராஃமி எழுத்துகள் வழக்கத்தில் இருந்தன. தமிழ் நாட்டிலும் பிராஃமி எழுத்துக்கள் அக்காலத்தில் வழங்கி வந்தன. பாரத தேசத்தை யரசாண்ட அசோக சக்கரவர்த்தி காலத்தில், கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் பிராஃமி எழுத்துகள் தமிழ் நாட்டில் புகுந்தன. கடைச் சங்க காலத்தில் (அசோக சக்கரவர்த்தியின் ஆட்சிக் காலத்தில்) பௌத்த பிக்குகள் பிராஃமி எழுத்தைத் தமிழ் நாட்டில் புகுத்தினார்கள். சில நூற்றாண்டு வரையில் பிராஃமி எழுத்து தமிழ்நாட்டில் வழங்கி வந்தது. பிறகு அவ்வெழுத்து வட்டெழுத்தாக மாறுதலடைந்து கி.பி. பத்தாம் நூற்றாண்டு வரையில் வழங்கி வந்தது கி.பி. பத்தாம் நூற்றாண்டுக்குப் பிறகு வட்டெழுத்து மறைந்து இப்போது வழங்கப்படுகிற கிரந்த எழுத்து தோன்றியது.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே கற்பாறைகளில் எழுதப்பட்ட பிராஃமி எழுத்துச் சாசனங்கள் தமிழ்நாட்டிலே மலைப்பாறைகளில் ஆங்காங்கே காணப்படுகின்றன. அவ்வாறு காணப்படுகிற பிராஃமி எழுத்துச் சாசனம் ஒன்றை இங்கு ஆராய்வோம்.

திருநெல்வேலி நகரத்துக்கு அடுத்துள்ள பாளையங் கோட்டைக்கு வடகிழக்கே பத்து மைல் அளவில் இருக்கிற மருகால்தலை என்னுங் கிராமத்தில் இந்தப் பிராஃமி எழுத்துச் சாசனம் இருக்கிறது. இந்தக் கிராமத்தில் உள்ள பூலுடையார் மலை என்னும் குன்றில் சில சிறு கோயில்கள் இருக்கின்றன. இக்கோயில்கள் பிற்காலத்தவை. இந்த மலையில் ஒரு இடத்தில் இயற்கையாக அமைந்துள்ள குகை ஒன்று இருக்கிறது. இந்தக் குகையில் தரையில் அமைக்கப்பட்ட கற்படுக்கைகள் காணப் படுகின்றன. இந்தக் கற்படுக்கைகள், அக்காலத்தில் இந்த மலைக்குகையில் வசித்த முனிவர்களுக்காக அமைக்கப் பட்டவை. அக்காலத்தில் பௌத்த மதத் துறவிகளும் ஜைன மதத் துறவிகளும் ஊருக்கு அப்பால் மலைகளில் தங்கியிருந்தனர். அந்த முனிவர்களுக்காக குகைகளின் உள்ளே தரையில் கற்படுக்கைகள் அமைக்கப்பட்டன.

நம்முடைய ஆராய்ச்சிக்கு உரிய கற்படுக்கைகளின் மேலே பிற்காலத்திலே எழுதப்பட்ட எழுத்துகளும் இருக்கின்றன. இந்தப் பிற்காலத்து எழுத்துக்களைப் பற்றி இங்கு ஆராய்ச்சி இல்லை. இந்த மலைக்குகையின் வாயிலுக்கு மேற்புறத்தில் பொறிக்கப்பட்டுள்ள பிராஃமி எழுத்துக்கள்தான் இப்போது நம்முடைய ஆராய்ச்சிக்கு உரியன.

இந்தப் பிராஃமி எழுத்துச் சாசனம் பல நூற்றாண்டுகளாக மறக்கப்பட்டு மறைந்து கிடந்தது. திருநெல்வேலி கலெக்டர் ஆபீசைச் சேர்ந்த ஒரு ஆங்கிலேயர் 1906 ஆம் ஆண்டு இந்தச் சாசன எழுத்தைத் தற்செயலாகக் கண்டுபிடித்தார். இச்செய்தி ஆர்க்கியாலாஜி இலாகாவுக்கு அறிவிக்கப்பட்டது. பிறகு, இது பற்றிய செய்தி எபிகிராபி (சாசன எழுத்து) இலாகாவின் 1906 -07 ஆம் ஆண்டு அறிக்கையில் தெரிவிக்கப்பட்டது (*Madras Epigraphy Report* 1907, Part II, Para I). இந்தச் சாசனம். 1906 ஆம் ஆண்டுச் சாசனத் தொகுப்பில் 407 ஆம் எண்ணுள்ளதாகப் பதிவு செய்யப் பட்டிருக்கிறது. சாசன எழுத்து இலாகாவைச் சேர்ந்தவர்கள் இந்தத் தமிழ்ச் சாசனத்தைப் பாலி மொழிச் சாசனம் என்று தவறாகக் கருதினார்கள். எபிகிராபி இலாகாவின் 1907 ஆம் ஆண்டு அறிக்கையில் 60 ஆம் பக்கத்தில், "அசோகர் சாசன எழுத்துக்களைப் போன்ற எழுத்தில் பாலி மொழியில் இந்தச் சாசனம் எழுதப்பட்டிருக்கிறது" என்று கூறியுள்ளனர்.

இந்தச் சாசன எழுத்துக்கள் பெரியனவாகப் பொறிக்கப் பட்டுள்ளன. ஒரு அடி முதல் ஒன்றரை அடி வரையில் பெரிய எழுத்தாகக் காணப்படுகின்றன. ஒரே வரியில் பதினேழு எழுத்துக்களைக் கொண்டிருக்கிறது இந்தச் சாசனம். ஆழமாகக் கொத்தப்பட்டுள்ள இந்தப் பிராஃமி எழுத்தின் வரிவடிவம் இது:

இந்தச் சாசனத்தில் இடது புறத்திலிருந்து நான்காவது எழுத்து ஸி என்னும் வடமொழி எழுத்து. மற்றவை எல்லாம் தமிழ் எழுத்துக்கள்.

எபிகிராபி இலாகாவைச் சார்ந்த திரு. H. கிருஷ்ண சாஸ்திரி இந்த எழுத்துக்களைக் கீழ்க்கண்டவாறு படித்தார் (*Proceedings of the First All India Oriental Conference* 1920, p. 333).

வே ண கோ ஸி பா னா கு டு பி தா க (ஆ) (ளா) கா ஞா ணா ன

திரு. K.V. சுப்பிரமணிய அய்யர் இந்த எழுத்துக்களை இவ்வாறு படித்தார் (*Proceedings and Transactions of the Third All India Oriental Conference*):

வேண் கோஸிபான் குடுபிதா காள காஞ்சணம்

அவர் இதற்கு இவ்வாறு விளக்கங் கூறினார்: 'வேண் நாட்டு காஸ்யபன் (அல்லது வேளிர் தலைவன் காஸ்யபன்) கொத்துவித்த சுபமுள்ள (அல்லது கல்லினாலான) ஆசிரமம்'.

திரு. C. நாராயணராவ் இந்தச் சாசனம் பிராகிருத பாஷையில் எழுதப்பட்டது என்று கருதிக் கொண்டு, முதலில் பிராகிருதமாகவும் பிறகு அதையே சமஸ்கிருதமாகவும் கீழ்க்கண்டவாறு படித்தார் (*New Indian Antiquary*, Vol. I, pp. 364-65):

ஂவண கோஸிபான குட்டுபிதா காளகாஞ்சநம் (பிராகிருதம்).

வேணாகி ஸிபான குட்டுபிதா கால காஞ்சனம் (சமஸ்கிருதம்).

பிறகு கீழ்க்கண்டவாறு பொருள் கூறுகிறார்: 'பௌத்த வினயபிடகத்தைச் சார்ந்த (அல்லது, வேணாகீ, வைநயகீ என்னும் பெயரையுடைய) சில்பி குலத்தைச் சார்ந்த ஒரு பெண்மகளால் செய்விக்கப்பட்ட காலகாஞ்சனம்'.

இவர் சாசனத்தில் கூறப்படாததை தம் மனம் போலக் கற்பித்துக் கொண்டு பொருத்தமற்றவர்களைக் கூறியுள்ளார். இது, தமிழ்ச் சாசனத்தைப் பிராகிருத பாஷை என்று தவறாகக் கருதிக்கொண்டதன் விளைவு. இவர் கூற்றை அறவே ஒதுக்கி விடுவோம்.

திரு. ஐராவதம் மகாதேவன் அவர்கள், இதை இவ்வாறு வாசித்து இவ்வாறு பொருள் காண்கிறார் (*Seminar on Inscriptions*, 1966, p. 63):

'வேண் காஸிபன் கொடுபித கல் கஞ்சணம்'

'வேள் காஸிபனால் கொடுக்கப்பட்ட கல் படுக்கை' என்று பொருள் கூறுகிறார்.

திரு T.V. மகாலிங்கம் அவர்கள் இந்தச் சாசனத்தைச் கீழ்க்கண்டபடி படித்துப் பொருள் கூறுகிறார் (*Early South Indian Palaeography*, 1969, pp. 221-223):

'வேண் கோஸிபன் குடுபித கல் கஞ்சணம்'

கஞ்சணம் என்பதைக் கம் + சணம் என்று பிரித்து கம் = கம்மியர் (கம்மாளர்), சணம் + சயனம் (படுக்கை) என்று பொருள் கூறுகிறார். இந்த உறையுள் (அல்லது, படுக்கை, கல்லினால் அமைக்கப்பட்டு வேண் கோஸிபனால் தானமாகக் கொடுக்கப்பட்டது என்று இதற்குத் திரண்ட பொருள் கூறுகிறார்.

கடைசி சொல்லைக் கஞ்சணம் என்றும் காஞ்சனம் என்றும் இவர்கள் படித்துள்ளனர். இதன் வாசகம் கஞ்சணம் என்பதே. இச்சொல்லின் பொருள் இன்னதென்று தெரிய வில்லை. இது இந்தக் குகையைக் குறிக்கிறது என்பது மட்டும் நிச்சயமாகத் தெரிகிறது. இனி இந்தச் சாசனத்தில் சரியான வாசகத்தையும் பொருளையும் ஆராய்வோம்.

𑀯𑁂 𑀡 𑀓𑀸 𑀲𑀺 𑀧 𑁵 𑀓𑀼 𑀝𑀼 𑀧𑀺 𑀢 𑀓 𑀮 𑀓 𑀜 𑀘 𑀡 𑀫

இவ்வெழுத்துகளில் புள்ளி இடப்பட வேண்டியவை புள்ளியிடப்படாமல் எழுதப்பட்டுள்ளன. இவை

வெ ண கா ஸி ப ன கு டு பி த க ல க ஞ ச ண ம

என்றிருக்கின்றன. புள்ளியிட்டுப் படித்தால் இவ்வாறு அமைகிறது:

வெ ண் கா ஸி ப ன் கு டு பி த க ல் க ஞ் ச ண ம்

இந்த எழுத்துக்களைப் பட்டிப்ரொலு பிராஃமி எழுத்து வாய்பாட்டின்படி படிக்க வேண்டும். அதாவது தென்னாட்டுப் பிராஃமி எழுத்துப்படி படிக்கவேண்டும். வடநாட்டுப் பிராஃமி எழுத்துப்படி படித்தால் தவறாகும். திரு. T.V. மகாலிங்கம் அவர்கள் சரியாகவே பட்டிப்ரோலு பிராஃமி எழுத்து வாய்பாட்டின்படி படித்திருக்கிறார்.

முதல் எழுத்தை வெ என்றும் வே என்றும் படிக்கலாம். மேலே சொன்னவர்கள் எல்லோரும் வே என்று படித்து இரண்டு எழுத்துக்களை வேண் என்று படித்துள்ளனர். ஆனால் இதை வெ என்று படிப்பதே சரியெனத் தோன்றுகிறது. சாசனத்தில் காணப்படுகிற பெயர் வெண்காஸிபன் என்பதே; வேண்காஸிபன் அன்று. வேள்+காஸிபன் = வேண்காஸிபன் என்று திரு. மகாலிங்கம் கூறுவது இலக்கணப் பொருத்தமாக இல்லை. வெண்காஸிபன் என்பது சங்க காலத்தில் வழங்கி வந்த பெயர்.

வெண் கண்ணன், வெண் கொற்றன், வெண் பூதன், வெண்பூதி என்னும் பெயர்கள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே சங்க காலத்தில் வழங்கிவந்துள்ளன. வெண் பூதன் என்னும் புலவர் குறுந்தொகை 83ஆம் செய்யுளைப் பாடியவர். வெண்பூதியார் குறுந்தொகை 97, 174, 219ஆம் செய்யுட்களைப் பாடினவர். வெண்மணிப் பூதியார் குறுந்தொகை 299ஆம் செய்யுளைப் பாடியவர். வெண்கொற்றனார் குறுந்தொகை

86ஆம் செய்யுளையும் மதுரைக் கணயத்தார் மகன் வெண்ணாகனார் *குறுந்தொகை* 223ஆம் செய்யுளையும் பாடினார்கள். வெண் கண்ணனார் *அகநானூறு* 130, 192ஆம் செய்யுட்களைப் பாடினார்.

காசிபன் என்னும் பெயருள்ளவரும் சங்க காலத்தில் இருந்தனர். காசிபன் கீரன் என்னும் புலவர் *நற்றிணை* 248ஆம் செய்யுளைப் பாடியுள்ளார். இந்தச் சாசனத்தில் வந்துள்ள வெண் காசிபன் என்பவர் சங்க காலத்தில் இருந்தவராதல் வேண்டும்.

சாசனத்தில், வெண் காசிபன் என்னும் சொல்லுக்கு அடுத்த சொல் குடுபித என்பது. இது குடுப்பித்த என்று இருக்க வேண்டும் ப் த் என்னும் ஒன்றெழுத்துக்கள் இச்சாசனத்தைப் பொறித்த சிற்பியினால் விடுபட்டுள்ளன. குடுப்பித்த என்பது கொடுப்பித்த என்று பிற்காலத்தில் வழங்கப்படுகிறது. பழைய சாசனங்களில் குடு என்னும் சொல் காணப்படுகிறது. கொடு என்பது பிற்காலத்து வழக்கு. கல் என்பது பாறை அல்லது மலை என்னும் பொருள் உள்ள சொல். கஞ்சணம் என்பது என்ன பாஷைச் சொல் என்பது தெரியவில்லை. அதன் நேரான பொருள் இன்னதென்று தெரியவில்லை. இச்சொல் இங்கு இக்குகையைக் குறிக்கிறது என்பதில் ஐயமில்லை.

இந்தப் பிராஃமி எழுத்துச் சாசனத்தின் அமைப்பைக் கொண்டு இது கி.மு. இரண்டாம் நூற்றாண்டில் எழுதப்பட்டது என்று அறிஞர்கள் கருதுகிறார்கள். எனவே இது கடைச் சங்க காலத்தில் எழுதப்பட்ட சாசனம் என்று தெரிகிறது. இது போன்று பிராஃமி எழுத்துச் சாசனங்கள் வேறு பல தமிழ் நாட்டில் ஆங்காங்கே காணப்படுகின்றன.

*ஆராய்ச்சி*, மலர் 1, இதழ் 1, 1969

# சங்க காலத்து வாணிகம்

சங்க காலத்துத் தமிழகம் கிழக்கு, மேற்கு, தெற்கு ஆகிய மூன்று பக்கங்களிலும் நீண்ட கடற்கரையைக் கொண்டிருந்தது. கிழக்கே குணக்கடலும் (வங்காளக் குடாக்கடல்) மேற்கே குடக்கடலும் (அரபிக்கடலும்) தெற்கே குமரிக்கடலும் (இந்துமகா சமுத்திரம்) தமிழகத்தைச் சூழ்ந்திருந்தன. மேற்குக் கடற்கரை பக்கமாக இருந்த சேரநாடு மிகப் பிற்காலத்தில், 500 ஆண்டுகளுக்கு முன்பு மலையாளம் பேசப்படுகிற நாடாகப் பிரிந்து இப்போது கேரளம் என்று பெயர் பெற்றிருக்கிறது. கேரளம் மலையாளம் பேசப்படுகிற நாடாக மாறுவதற்கு முன்பு நெடுங்காலமாகச் சேரநாடு என்று பெயர்பெற்றுத் தமிழ்நாடாக இருந்தது.

சங்ககாலத் தமிழகம் என்பது கி. பி. 250க்கு முற்பட்டது. மூன்று பக்கங்களிலும் கடல் சூழ்ந்திருந்தபடியால் தமிழர் மரக்கலம் ஏறிக் கடலில் பிரயாணம் செய்வதற்கு வாய்ப்பாக இருந்தது. கடற்கரையோரத்து நிலங்களுக்கு அக்காலத்தில் நெய்தல் நிலம் என்று பெயர் வழங்கிற்று. நெய்தல் நிலங்களில் வாழ்ந்துவந்த மக்களுக்குப் பரதவர் அல்லது பட்டினவர் என்பது பெயர். பரதவர் என்னும் பெயர் பிற்காலத்தில் சிதைந்து பரவர் என்று வழங்கப்படுகிறது. நெய்தல் நிலம் மணல் பரந்துள்ளபடியால் அதைத் தொல்காப்பியம் 'பெருமணல் உலகம்' என்று கூறுகிறது. பெருமணல் உலகமாகிய நெய்தல் நிலத்தில் நெல் முதலிய தானியங்கள் விளைவதில்லை. ஆகவே அங்கிருந்தவர்கள் கடலில் சென்று மீன் பிடித்துவந்து விற்று உயிர் வாழ்ந்தார்கள். கட்டுமரங் களிலும் அம்பி (தோணி)களிலும் கடலில் சென்று வலைவீசி மீன் பிடித்து வந்தார்கள். அவர்களுடைய சந்ததியார் இப் போதும் கட்டுமரங்களிலும் படகுகளிலும் கடலில் சென்று மீன் பிடித்து வருகிறார்கள்.

பரதவரும் பட்டினவரும் அல்லாத வேறு தமிழர், நாவாய்கள் வைத்து அயல் நாடுகளுடன் கடல் வழியாக வாணிபம் செய்தார்கள். அவர்கள் பெரிய பாய்க்கப்பல்களிலே சரக்குகளை ஏற்றிக்கொண்டு அயல்நாடுகளுக்குச் சென்று வாணிபஞ் செய்தனர். தமிழரின் கடல் வாணிபம் மிகத்

தொன்மையானது. *தொல்காப்பிய* நூலினால் கப்பல் வாணிகக் குறிப்பு காணப்படுகிறது. கடலில் செல்லுகிறவர்கள் தங்களோடு மகளிரை அழைத்து கொண்டு போகிற வழக்கம் தமிழருக்கு இல்லை என்று அந்நூல் கூறுகிறது.

'முந்நீர் வழக்கம் மகடூஉவோடு இல்லை' என்பது *தொல்காப்பிய* சூத்திரம் (பொருளதிகாரம், அகத்திணையில் - 37). (முந்நீர்-கடல். மகடு - மகளிர் / பெண்கள்).

இதனால், தமிழ்நாட்டுக் கடல் வாணிகம் தொல்காப்பியர் காலத்துக்கு முன்பிருந்து நடந்து வருகிறது என்பது தெரிகின்றது. தமிழரின் கடல் வாணிகத்தைக் கிழக்குக்கடல் வாணிகம் என்றும் மேற்குக்கடல் வாணிகம் என்றும் இரண்டு பிரிவாகப் பிரிக்கலாம். தெற்கே குமரிக்கடலுக்கு (இந்துமகா சமுத்திரத்துக்கு) அப்பால் நிலம் இல்லாதபடியால் தெற்குக் கடலில் வாணிகம் நடக்கவில்லை. கிழக்குக்கடல் வாணிகம் என்பது, குணக்கடலாகிய வங்காளக்குடாக் கடலில் உள்ள இலங்கை, ஆந்திரம், கலிங்கம், வங்காளம், காழகம் (பர்மா), சாவகம் (கிழக்கிந்தியத் தீவுகள் எனப்படும் இந்தோனேசியா) முதலிய நாடுகளுடன் செய்யப்பட்ட வாணிகம். மேற்குக்கடல் வாணிகம் என்பது குடக்கடலாகிய அரபிக்கடலில் செய்யப்பட்ட வாணிகம். அங்கு முக்கியமாக கிரேக்க, ரோம, எகிப்து தேசத்து யவனர்களுடன் அரபிநாட்டு அராபியருடனும் வாணிகம் நடந்தது. இந்த வாணிகங்களைப்பற்றி விளக்கிக் கூறுவோம்:

**கிழக்குக்கடல் வாணிகம்**

முதலில் கிழக்குக்கடல் வாணிகத்தைப் பற்றிக் கூறுவோம். தமிழர்களின் வாணிகக் கப்பல்கள் மரப்பலகைகளில் இரும்பு ஆணி அடித்து இணைக்கப்படாமல் பனைநார், தென்னை நாரினால் இணைத்துக் கட்டப்பட்டிருந்தன. அராபியரின் தோணிகளும் அக்காலத்தில் ஆணி இல்லாமல் நாரினால் கட்டப்பட்டிருந்தன. இந்தக் கப்பல்களில் பாய்மரங்களில் துணிப்பாய்கள் கட்டப்பட்டிருந்தபடியால் காற்றினால் தள்ளப்பட்டு நினைத்த இடங்களுக்குச் சென்றன. இந்தப் பாய்க்கப்பல்களில் தமிழ் வாணிகர் சரக்குகளை ஏற்றிக் கொண்டு அயல்நாடுகளுக்குக் கொண்டுபோய் விற்று, அங்குள்ள சரக்குகளை ஏற்றிக்கொண்டு தமிழகத்துக்குக் கொண்டு வந்தார்கள். ஆதிகாலத்தில் கப்பல் வாணிகர்கள் நெடுந்தூரஞ் செல்லாமல் கரையோரமாகவே சென்று வாணிகம் செய்தார்கள். தமிழகத்துக்குக் கிழக்கே கடலுக் கப்பால் பெருந்தூரத்திலிருந்த காழகம் (பர்மா), மலயம் (மலயா), சாவகம் (கிழக்கிந்தியத் தீவுகள்) முதலிய

தூர தேசங்களுக்குக் கரையோரமாகச் சுற்றிக்கொண்டு போவதற்குக் காலதாமதமும் பொருட்செலவும் கஷ்டமுமாக இருந்தது. பல ஆயிர மைல் தூரம் சுற்றிக்கொண்டு போகவேண்டியதாக இருந்தது. தமிழகத்துக்கு நேர்கிழக்கே அக்கரை நாடாக உள்ள கடாரம், சாவகம் முதலிய நாடுகளுக்கு நடுக்கடலின் ஊடே நேர்கிழக்காகச் சென்றால் பிரயாணத் தூரமும் காலமும் சுருங்கும். இதனையறிந்த அக்காலத்துத் தமிழர் தமிழகத்திலிருந்து நேர்கிழக்கே நடுக்கடலில் பிராயணஞ் செய்ய முயன்றார்கள்.

முதல்முதலாகக் கடலைக் குறுக்காகக் கடந்து சென்றவன் ஒரு சோழமன்னன் என்று தெரிகிறது. அந்தச் சோழனுடைய பெயர் தெரியவில்லை. அவன் கரிகாற்சோழனுடைய முன்னோன் என்று கூறப்படுகிறான். அந்த முன்னோனாகிய சோழன், கரிகாலனின் காலத்துக்கு முன்னே எத்தனை தலைமுறைக்கு முன்பு இருந்தான் என்பதும் தெரியவில்லை.

கரிகாற்சோழன் வெண்ணி என்னும் ஊரில் சேர அரசனுடன் போர்செய்து வெற்றி பெற்றான். அப்போது அந்த வெண்ணியூரில் இருந்த வெண்ணிக்குயத்தியார் என்னும் புலவர் கரிகாலனுடைய வெற்றியைப் புகழ்ந்து அவனை நேரில் பாடினார். அந்தச் செய்யுளில், கரிகாலனுடைய மூதாதையான சோழன் ஒருவன் கடலில் நாவாய் ஓட்டியதைக் கூறுகிறார்.

> நளியிரு முன்நீர் நாவாய் ஓட்டி
> வளிதொழில் ஆண்ட உரவோன் மருக! (*புறம்* 66: 1-2)

என்பது அவன் வாசகம்.

(முந்நீர் - கடல். நாவாய்-பாய்க்கப்பல் அல்லது கப்பற் படை. வளி-காற்று. மருகன்-பரம்பரையில் வந்தவன்).

தமிழகத்துக்கு அருகில் தென்கிழக்கேயுள்ள சிங்கள (இலங்கை)த் தீவுக்குச் சோழன் நாவாய் ஓட்டிச் சென்றான் என்று கருதுவது தவறு. ஏனென்றால், மிக அருகில் உள்ள சிங்களத்துக்குத் தமிழ் வாணிகர் வெகுகாலத்துக்கு முன்னமே சென்று வாணிகம் செய்து வந்தனர். ஆகவே அந்தச் சோழன் சிங்கள நாட்டுக்கு நாவாய் ஓட்டிச் சென்றான் என்று கருதுவது கூடாது. மிக அருகிலுள்ள சிங்கள நாட்டுக்கு நாவாய் ஓட்டியிருந்தால் அதை இப்புலவர் சிறப்பாகக் கூறியிருக்க மாட்டார். அதுவும் வளிதொழில் ஆண்ட உரவோன் என்று கூறப்படுகிறபடியால், காற்றின் உதவியைப் புதிதாக அறிந்து தூரதேசத்துக்கு நாவாய் ஓட்டிச்சென்றான் என்பதே சரியான பொருளாகும். வாணிகர் யாரும் இதற்கு முன்பு கப்பலோட்டிப் போகாத வழியாக இவன் போனபடியால் அதைச் சிறப்பாக இப்புலவர் பாடியுள்ளார். இந்தச் சோழன் காற்றின் உதவியால்

நடுக்கடலின் ஊடே செல்லும் வளியைக் கண்ட இந்தச் சோழன் கி. மு. முதல் நூற்றாண்டில் இருந்திருக்க வேண்டும். 'வளிதொழில் ஆண்ட' இந்தச் சோழனைப் பற்றிய வரலாறு மறைந்து போனது இரங்கத்தக்கது.

காழகம், கடாரம், சாவகம் ஆகிய கிழக்குக்கோடி நாடுகளுடன் சங்க காலத்துத் தமிழர் வாணிகஞ் செய்து வந்ததைச் சங்க நூல்களில் அறிகிறோம். முக்கியமாகச் சாவகத் தீவுகளுடன் தமிழகம் வணிகத் தொடர்பு மட்டுமல்லாமல் மத சம்பந்தமாகவும் அரசியல் சம்பந்தமாகவும் அக்காலத்திலேயே தொடர்பு கொண்டிருந்தது.

சங்ககாலத்தில் காவிரிப்பூம்பட்டினத் துறைமுக நகரத்தில் வாழ்ந்திருந்த கப்பல் வாணிகர்களில் முதன்மையானவன் மாநாய்கன் என்பவன். மாநாய்கன் பரம்பரையார் தலைமுறை தலைமுறையாகக் கடல்கடந்து கப்பல் வாணிபம் செய்து வந்தனர். சிலப்பதிகாரக் காவியத்தின் தலைவியாகிய கண்ணகி மாநாய்கன் குடும்பத்தில் பிறந்தவள் என்று *சிலப்பதிகாரம்* கூறுகிறது.

> போகநீள் புகழ்மன்னும் புகார்நகர் அதுதன்னில்
> மாகவான் நிகர்வண்கை மாநாய்கன் குலக் கொம்பர்

என்று மங்கல வாழ்த்துப்பாடல் பாடுகிறது.

மாநாய்கன் என்பது அந்த வாணிகனுடைய இயற்பெயர் அன்று; அது குடிப்பெயர். மாநாய்கன் என்பது மாநாவிகன் என்பதன் திரிபு. நாவிகன் - கப்பல் வாணிகன். மாநாய்கன் (மாநாவிகன்) என்றால் கப்பல் வாணிகரின் தலைவன் என்பது பொருள். சோழநாட்டுக் கப்பல் வாணிகரின் தலைவனாக இருந்தவன் மாநாய்கன்.

கோவலனுடைய முன்னோர்களும் கடலில் சென்று கப்பல் வாணிகம் செய்துவந்தனர். கோவலனுக்கு ஒன்பது தலைமுறைக்கு முன்பு இருந்த அவனுடைய பாட்டன் கிழக்குக் கடலில் சென்று கொண்டிருந்தபோது புயல் காற்றடித்துக் கப்பல் கவிழ்ந்தது. கோவலனுடைய பாட்டனான நாவிகன் உயிர்தப்பிக் கரை சேர்வதற்காகக் கடலில் நீந்திக் கொண்டிருந்தான். கடைசியில் அவன் தெய்வச் செயலால் ஒரு தீவின் கரையையடைந்து உயிர்பிழைத்தான். மணிமேகலை என்னுந் தெய்வம் கடல்காவல் தெய்வமாக இருந்தது என்று அக்காலத்துக் கப்பல் வாணிகர் (முக்கியமாகப் பௌத்தர்கள்) அக்காலத்தில் நம்பினார்கள். மணிமேகலை தெய்வந்தான் தன்னைக் கடலில் சாகாமல் காப்பாற்றிற்று என்று கோவலனுடைய பாட்டன் நம்பினான். பிறகு அவனுடைய பரம்பரையில் வந்த கோவலனுக்கு மாதவியிடத்தில் பெண்

குழந்தை பிறந்தபோது அந்தக் குழந்தைக்குத் தன் பாட்டனைக் காப்பாற்றின மணிமேகலை தெய்வத்தின் பெயரைச் சூட்டினான் என்று *சிலப்பதிகாரங்* கூறுகிறது (அடைக்கலக் காதை. அடி: 21-39).

தமிழ்நாட்டுக் கிழக்குக்கரைத் துறைமுகப்பட்டினங் களிலிருந்து புறப்பட்டு 1500 மைலுக்கப்பாலுள்ள கிழக்குக்கோடி நாடுகளுக்குச் சென்ற வாணிகக் கப்பல்கள் முதலில் இலங்கைத் தீவின் வடக்கில் ஒரு சிறு தீவில் இருந்த மணிபல்லவம் என்னும் துறைமுகப்பட்டினத்தில் தங்குவது வழக்கம். தமிழர் மணிபல்லவம் என்று பெயர்கூறிய துறைமுகத்தை அக்காலத்துச் சிங்களவர் ஜம்புகொல பட்டினம் என்று பெயர் கூறினார்கள் என்பதைச் சிங்களநாட்டுப் பழைய நூல்களாகிய *தீபவம்சம்*, *மகாவம்சம்* என்னும் நூல்களிலிருந்து அறிகிறோம். மணிபல்லவமாகிய ஜம்புகொல பட்டினம் ஏற்றுமதி இறக்குமதி நடந்த வாணிகத் துறைமுகம் அன்று. கிழக்குக் கடலில் பிரயாணஞ்செய்த வாணிகக் கப்பல்கள் அந்தத் துறைமுகத்தில் தங்கி கப்பல் பயணத்துக்கு வேண்டிய குடிநீரை எடுத்துக்கொண்டு சென்றன. பிறகு, மணிபல்லவத்தை விட்டு நேரே கிழக்கு நோக்கி நெடுந்தூரம் பிரயாணஞ்செய்து மலயநாடு, கிழக்கிந்தியத் தீவுகள் முதலிய நாடுகளுக்குச் சென்றன. போகிற வழியில் நடுக்கடலில் நாகர்மலைத் தீவுகள் இருந்தன. அந்தத் தீவுகளில் வசித்தவர்கள் அநாகரிகரான காட்டுமிராண்டிகள். அவர்கள் உடையுடுத்தாமல் அம்மணமாகத் திரிந்தார்கள். அவர்களில் ஒரு இனத்தார் மனிதரைக் கொன்று நரமாமிசம் தின்றனர். அவர்களை நக்கசாரணர் என்று *மணிமேகலைக்* காவியங் கூறுகிறது.

நாகர்மலைத் தீவுகளில் வாணிகம் நடைபெறாதபடியால் தமிழகக் கப்பல் வாணிகரும் ஏனைய கப்பல் வாணிகரும் அந்தத் தீவுகளில் தங்குவது இல்லை. சங்ககாலத்தில் நாகர்மலைத் தீவுகள் என்று பெயர் பெற்றிருந்த இந்தத் தீவுகள் பிற்காலத்தில் மாநக்கவரம் என்று பெயர் பெற்றிருந்தது. பிற்காலத்துச் சோழ அரசர்கள் மாநக்கவரத் தீவை வென்று அரசாண்டனர் என்று சோழனுடைய செப்பேட்டுச் சாசனம் கூறுகின்றது. இப்போது அந்தத் தீவுகள் நிக்கோபார் தீவுகள் என்று பெயர் கூறப்படுகின்றன. நக்கவாரி தென்னைமரங்கள் அத்தீவுகளிலிருந்து கொண்டுவரப்பட்டவை.

சங்க காலத்தில் காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்த சாதுவன் என்னும் வாணிகன் நாகர்மலைத் தீவில் தற்செய லாகச் சென்று சிலகாலங்கழித்துத் தன்னுடைய நகரத்துக்குத் திரும்பி வந்ததை *மணிமேகலை* காவியங் கூறுகிறது. கப்பல்

வாணிகனாக இருந்த சாதுவன் தன்னுடைய பெருஞ் செல்வத்தைச் சூதாடல் முதலிய தீய ஒழுக்கங்களினால் இழந்து வறுமையடைந்தான். பிறகு அவன் தான் இழந்த செல்வங்களை மீண்டுஞ் சம்பாதிக்க எண்ணிச் சாவக நாட்டுக்குச் செல்லக் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து கப்பலில் புறப்பட்டுச் சென்றான். இடைவழியில் நாகர்மலைத் தீவுகளுக்கு அருகில் சென்றுகொண்டிருந்தபோது புயல் அடித்துக் கப்பல் கவிழ்ந்தது. சாதுவன் கடலில் நீந்தி நாகர்மலைத் தீவு ஒன்றில் கரையேறினான். அவன் கடற்கரையில் இளைப்பினாலும் சோர்வினாலும் உறங்கிக் கொண்டிருந்தபோது நக்கசாரணர் சிலர் அவனைக் கண்டு அவனைக் கொல்ல முயன்றார்கள். சாதுவன் அவர்களுடைய பாஷையை முன்னமே அறிந்திருந்த படியால் அவர்களிடம் நயமாகப் பேசினான். தங்களுடைய பாஷையில் அவன் பேசுவதைக்கண்டு வியப்படைந்த அவர்கள் அவனை அழைத்துக்கொண்டுபோய்த் தங்களுடைய தலைவனிடம் சேர்த்தார்கள். சாதுவன் சிலகாலம் அவர்களுடன் தங்கியிருந்தான். சிலகாலஞ் சென்றபிறகு, சாவகத் தீவுகளுக்குச் சென்று வாணிகஞ்செய்து விட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்த சந்திரதத்தன் என்னும் வாணிகனுடைய கப்பல் அவ்வழியாக வந்தது. சாதுவன் அந்தக் கப்பலில் ஏறித் தன்னுடைய காவிரிப்பூம்பட்டினத்துக்குத் திரும்பி வந்தான். இந்தச் செய்திகளை *மணிமேகலைக்* காவியம் கூறுகிறது (பிச்சையிட்ட காதை. அடி: 3-16., 53-73., 125-127).

சோழ நாட்டவரைப் போலவே பாண்டி நாட்டாரும் கிழக்கே வெகுதூரத்திலுள்ள சாவகத் தீவுகளுக்குச் சென்று வாணிகஞ் செய்தார்கள் என்பதை *மணிமேகலை* காவியத்தினால் அறிகிறோம். சாவகத் தீவுகளுக்குச் சென்று வாணிகஞ்செய்து திரும்பி வந்த சில கப்பல் வாணிகர் மதுரை நகரத்துக்கு வந்தபோது, அங்கு ஆபுத்திரன் என்பவனைக் கண்டு சாவகத்தில் மழை பெய்யாமல் பஞ்சம் ஏற்பட்டு மக்கள் உண்ண உணவு இல்லாமல் அல்லற்படுகின்றனர் என்று கூறினார்கள்.

மாநீர் வங்கம் வந்தோர் வணங்கிச்
சாவக நன்நாட்டுத் தண்பெயல் மறுத்தலின்
ஊனுயிர் மடிந்ததுர வோய்

(*மணிமேகலை,* பாத்திரமரபு கூறிய காதை)

இதிலிருந்து பாண்டிய நாட்டாரும் சாவக நாட்டிற்கு (கிழக்கிந்தியத் தீவுகளுக்கு) சென்று வாணிபம் செய்தனர் என்பதை அறிகிறோம்.

சாவகநாட்டு அரசனுக்கும் சோழநாட்டு அரசனுக்கும் அரசியல் தொடர்பு ஏற்பட்டிருந்தது. அந்தக் காலத்தில் சாவகநாட்டை அரசாண்ட புண்ணியராசன் சோழ அரசனான கிள்ளிவளவனுடன் - இவன் கரிகாற் சோழனுடைய மகன் - நட்புக்கொள்ள விரும்பித் தூது அனுப்பினான். அந்தத் தூதன் நாவாய் ஏறிக் காவிரிப்பூம்பட்டினத்துக்கு வந்து கிள்ளி வளவனைக் கண்டு சென்றான் என்று *மணிமேகலை* காவியம் கூறுகிறது.

கிள்ளி வளவனொடு கெழுதகை வேண்டிக்
கள்ளவிழ் தாரோய்! கலத்தொடும் போகிக்
காவிரிப் படப்பை நன்னகர் புக்கேன்

(*மணிமேகலை* 25: 14-16)

என்று அந்தத் தூதன் புண்ணியராசனிடம் கூறினான். சாவக நாட்டுக்கும் சோழ நாட்டுக்கும் வாணிகத் தொடர்பு இருந்தபடியினால், இந்த அரசியல் தொடர்பு ஏற்பட்டது போலத் தோன்றுகிறது.

மதச் சார்பாகவும் சாவக நாட்டுக்கும் தமிழகத்துக்கும் சங்க காலத்தில் தொடர்பு இருந்ததை *மணிமேகலை* காவியத்தினால் அறிகிறோம். அந்தக் காவியத்தில் சாவகநாட்டிலும் தமிழ்நாட்டிலும் பௌத்தமதம் சிறப்பாக இருந்தது. கோவலனுடைய மகளாகிய மணிமேகலை பௌத்தமதத்தைச் சேர்ந்தபிறகு ஒரு பௌத்த தெய்வத்தின் அருள் பெற்று ஆகாயவழியாகப் பறந்துபோய் சாவகநாட்டில் தங்கினாள் என்றும் அங்குச் சாவகநாட்டு மன்னனை ஒரு பௌத்தத் துறவியுடன் கண்டு பேசியதாகவும் அம்மன்னனை இலங்கையிலுள்ள மணிபல்லவத் தீவுக்கு வரச்சொல்லித் தான் ஆகாய வழியாக மணிபல்லவத்துக்குச் சென்றதாகவும் *மணிமேகலை* காவியங் கூறுகிறது. சாவகநாட்டு மன்னன் நாவாய் ஏறிச் சாவகத்திலிருந்து மணிபல்லவத்துக்கு வந்தான் என்றும் அக்காவியங் கூறுகிறது. (*மணி.* 24ஆம் காதை. அடி 163-167 & 25ஆம் காதை)

மணிமேகலை ஆகாயவழியாகப் பறந்துசென்றாள் என்பது காவியப்புலவனின் கற்பனையே. அவள் மரக்கலம் ஏறிக் கடல்வழியாகச் சாவகநாட்டுக்கும் மணிபல்லவத்துக்கும் சென்றிருக்கவேண்டும் என்பதில் ஐயமில்லை. மணிமேகலை ஆகாயவழியாகப் பறந்துசென்றாள் என்று கற்பனையாக *மணிமேகலை* காவியங் கூறுவதற்கு இரண்டு காரணங்கள் உள்ளன. மகளிர் நாவாய் ஏறிக் கடல் பிரயாணஞ் செய்யக் கூடாது என்பது அந்தக் காலத்துச் சம்பிரதாயம். ஆகையால் அந்த வழக்கத்தை மீறி மணிமேகலை கடலில் கப்பல் ஏறிச்

சென்றாள் என்று கூறுவது காவியப்புலவனுக்குப் பொருந்தாது. ஆகவே, ஆகாய மார்க்கமாகக் கடல்கடந்து சென்றாள் என்று கற்பனையாகக் கூறியதாக இருக்கலாம். இன்னொரு காரணமுங் கூறலாம். பௌத்த மதத்துத் துறவிகள் சித்திபெற்று ஆகாய மார்க்கமாகச் சஞ்சரித்தார்கள் என்பது அக்காலத்துப் பௌத்தர்களின் சமய நம்பிக்கை. கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் அசோக சக்கரவர்த்தி காலத்தில் மகிந்தன் (மகேந்திரன்) என்னும் பௌத்தபிக்ஷு இலங்கைக்கு வந்து பௌத்தமதப் பிரசாரம் செய்தார் என்றும் அவரும் அவரைச் சார்ந்த பிக்ஷுக்களும் வட இந்தியாவிலிருந்து ஆகாயவழியாகப் பறந்துவந்து இலங்கையில் இறங்கினார்கள் என்றும் *மகாவம்சம்*, *தீபவம்சம்* என்னும் பௌத்தசமய நூல்கள் கூறுகின்றன. இவ்வாறு ஆகாயவழியாகப் பறந்தனர் என்று கூறுவது அக்காலத்து அந்தச் சமயத்து நம்பிக்கை. மகேந்திரனும் அவரைச் சார்ந்த பிக்ஷுக்களும் கப்பல் ஏறிக் கடல்கடந்து இலங்கைக்கு வந்தார்கள் என்றே சரித்திரக்காரர்கள் கருதுகின்றனர். ஆகாயவழியாகப் பறந்துவந்து இறங்கினார்கள் என்று கூறுவதனாலேயே அது பொய்க்கதை என்று சரித்திரக்காரர் கருதுவதில்லை. அதுபோலவே, மணிமேகலை ஆகாயவழியாகப் பறந்துசென்றாள் என்று *மணிமேகலை* நூல் கூறுவதை அப்படியே முழு உண்மை என்று ஏற்றுக்கொள்ளக்கூடாது. மணிமேகலை கப்பல் ஏறி சாவகநாட்டுக்கும் மணிபல்லவத்துக்கும் சென்றாள் என்பதே உண்மையாகும்.

பௌத்தத் துறவிகளைப் போலவே ஜைன சமயத் துறவி களும் ஆகாயவழியாகப் பறந்துசென்றனர் என்று ஜைன சமயத்துப் பழைய நூல்களும் கூறுகின்றன. இது மத நம்பிக்கையே தவிர உண்மை என்று கருதுவது கூடாது.

பிற்காலச் சோழ சாம்ராச்சிய காலத்தில் இராசராச சோழன் ஆட்சிக்காலத்தில் (கி. பி. 985-1014), சுமத்திரா தீவை அரசாண்ட 'ஸ்ரீமாற விசயோத்துங்க வர்மன்', நாகப் பட்டினத்தில் சூடாமணி விகாரை யென்னும் பௌத்தப் பள்ளியைக் கட்டினான். என்று சோழனுடைய சாசனம் ஒன்று கூறுகிறது (Leiden Grant *Epigraphica Indica*, Vol. XXII). இது கி. பி. 10ஆம் நூற்றாண்டிலும் சாவக நாட்டுக்கும் தமிழ் நாட்டுக்கும் இருந்த தொடர்பைத் தெரிவிக்கிறது.

தமிழ் நூல்கள் சாவா, சுமத்திரா, போர்னியோ, செலிபிஸ் முதலிய கிழக்கிந்தியத் தீவுகளைச் சாவகம் என்று கூறுகின்றன. சங்ககாலத் தமிழர் சாவகத் தீவுகளுக்குச் சென்று வாணிகஞ் செய்து வந்ததுபோலவே, சாவகநாட்டு வாணிகரும் தமிழ கத்துக்கு வந்து வாணிகஞ் செய்திருக்கக்கூடும். அக்காலத்தில்

உலகப் புகழ்பெற்ற காவிரிப்பூம்பட்டினத்துத் துறைமுகத்தில் வெவ்வேறு பாஷைகளைப் பேசின வெவ்வேறு நாட்டுக் கப்பல் வாணிகர் வந்து தங்கினார்கள் என்று சங்கச் செய்யுள்கள் கூறுகின்றன.

மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்துப்
புலம்பெயர் மாக்கள் கலந்தினி துறையும்
முட்டாச் சிறப்பிற் பட்டினம்

*(பட்டினப்பாலை 216-218)*

என்றும்,

*கயவாய் மருங்கில் காண்போர்த் தடுக்கும்*
*பயனற வறியா யவனர் இருக்கையும்*
*கலந்தரு திருவிற் புலம்பெயர் மாக்கள்*
*கலந்தினிதுறையும் இலங்குநீர் வரைப்பும்*

*(சிலம்பு, இந்திர விழா: 9-12)*

என்றும்,

கலந்தரு திருவில் புலம்பெயர் மாக்கள்
வேலைவா லுகத்து விரிதிரைப் பரப்பில்
கூல மறுகிற் கொடியெடுத்து நுவலும்
மாலைச் சேரி

*(சிலம்பு, கடலாடு. 130-131)*

என்றும் கூறுவதைக் காண்க.

சாவகத் தீவிலிருந்து கப்பல் வாணிகர் தமிழ்நாட்டைக் கடந்து இந்துமகா சமுத்திரத்தில் ஆப்பிரிக்கா கண்டத்திற்கு கிழக்கில் உள்ள மடகாஸ்கர் தீவில் சென்று வாணிகஞ் செய்தார்கள். கி.மு. முதல் நூற்றாண்டிலேயே அவர்கள் தங்களுடைய நீண்ட குறுகலான படகுகளில் சரக்குகளை ஏற்றிக்கொண்டு பசிபிக் மகாசமுத்திரத்தையும் இந்துமகா சமுத்திரத்தையும் கடந்து மடகாஸ்கர் தீவில் தங்கி கிழக்கு ஆப்பிரிக்கா நாடுகளுடன் வாணிகஞ் செய்தார்கள். சாவகநாட்டு மக்கள் அக்காலத்திலேயே மடகாஸ்கர் தீவில் குடியேறி வாழ்ந்தார்கள். பிற்காலத்தில், ஆப்பிரிக்கா கண்டத்தின் கிழக்குக்கரை நாடுகளிலிருந்தும் ஆப்பிரிக்க மக்கள் வந்து மடகாஸ்கர் தீவில் குடியேறி அந்நாட்டவருடன் கலந்துபோனார்கள். அவர்கள் எல்லோரும் அந்நாட்டவரின் பாஷையையே பேசினார்கள். இப்போது. மடகாஸ்கர் தீவு மலகாசி குடியாட்சி நாடு என்று புதுப்பெயர் பெற்றிருக்கிறது. இப்போதும் அங்கு பேசப்படுகிற பாஷை மலகாசி பாஷையே. கி.பி. முதல் நூற்றாண்டிலேயே சாவகநாட்டு மக்கள் மடகாஸ்கர் தீவுக்கு வந்து அங்குத் தங்கள் பாஷையைப்

பரப்பினார்கள் என்று மனித வரலாற்று ஆசிரியர்கள் கூறுகிறார்கள். கிழக்குக் கோடியிலுள்ள சாவகத்தீவின் வாணிகர்கள் பசிபிக் மகாசமுத்திரத்தைக் கடந்து அப்பால் இந்து மகாசமுத்திரத்தையும் கடந்து மடகாஸ்கர் தீவுக்குச் சென்றவர்கள், இடைவழியில் உள்ள தமிழ்நாட்டுக்கும் வந்து வாணிபஞ் செய்திருப்பார்கள் அன்றோ? சாவகநாட்டரசன் புண்ணியராஜன், சோழநாட்டுக் கிள்ளிவளவனிடம் தூது அனுப்பியதையும் அவ்வரசன் மணிபல்லவத்துக்குப் போன தையும் முன்னமே அறிந்தோம். எனவே, சாவகநாட்டு வாணிகரும் தமிழ்நாட்டுத் துறைமுகங்களுக்கு வாணிகத்தின் பொருட்டு வந்திருக்கக் கூடும்.

தமிழ்நாட்டு வாணிகர் சாவகத் தீவுகளிலிருந்து கொண்டு வந்து இறக்குமதி செய்த பொருள்களைச் *சிலப்பதிகார* காவியம் கூறுகிறது. பாண்டிநாட்டுக் கிழக்குக்கரையில் அக்காலத்தில் இருந்த துறைமுகப்பட்டினங்களில் தொண்டிப் பட்டினமும் ஒன்று. அந்தத் தொண்டித் துறைமுகப்பட்டினம் இந்தக் காலத்தில் குக்கிராமமாக இருக்கிறது (சங்ககாலத்தில் மேற்கு கடற்கரையில் சேரநாட்டிலும் ஒரு தொண்டித் துறை முகப்பட்டினம் இருந்தது. அங்குக் கிரேக்க (யவன) வாணிகர் கள் வந்து வாணிகஞ் செய்தார்கள். இங்குக் கூறப்படுகிற பாண்டிநாட்டுத் தொண்டி வேறு; அந்தத் தொண்டி வேறு). கிழக்குக் கடலில் சென்று திரும்பி வந்த நாவாய்கள் கொண்டல் காற்றின் (கொண்டல் - கிழக்குக் கடல்காற்று) உதவியினால் தொண்டித் துறைமுகத்துக்கு வந்துசேர்ந்தன என்று *சிலப்பதி காரம்* கூறுகிறது. மேலும் அங்கிருந்து வந்த சரக்குகளைப் பற்றியும் கூறுகிறது.

> ......................... ஓங்கிரும் பரப்பின்
> வங்கஈட்டத்துத் தொண்டியோர் இட்ட
> அகிலும் துகிலும் ஆரமும் வாசமும்
> தொகுகருப் பூரமும் சுமந்துடன் வந்த
> கொண்டலொடு புகுந்து
>
> (ஊர்காண். 106-110)

இதில் கூறப்பட்ட பொருள்கள் எல்லாம் சாவகத் தீவுகளுக் குரிய பொருள்கள். இந்தப் பொருள்கள் அந்தக் காலத்தில் வேறு எங்கும் கிடைக்காதவை என்பதை அறியவேண்டும்.

அகில் என்பது அகிற்கட்டை. தமிழ்நாட்டு அகிலைவிடச் சாவகநாட்டு அகில் தரத்திலும் மணத்திலும் பேர்போனது. அக்காலத்துத் தமிழ் மகளிர் முழுகிக்குளித்துத் தங்கள் கூந்தலை அகிற்புகையினால் உலர்த்தினார்கள் (அகிலுண விரித்த அம்மென் கூந்தல்). மேலும் தெய்வங்களுக்கும் மணமுள்ள அகிலைப் புகைத்து வழிபட்டார்கள்.

துகில் என்றால் துணி என்பது பொருள். இங்குத் துகில் என்பது பட்டுத்துணியைக் குறிக்கின்றது. 'துகில் - பட்டுவர்க்கம்' என்று அரும்பதவுரையாசிரியரும், அடியார்க்கு நல்லாரும் உரை எழுதியுள்ளது காண்க. அடியார்க்குநல்லார் பட்டுத்துணிகளில் பலவகைகளைக் குறிக்கிறார். பட்டுத் துணியைச் சங்க நூல்கள் 'நூலாக்கலிங்கம்' என்று கூறுகின்றன. அந்தக் காலத்தில் பட்டுத்துணிகள் சீனா நாடு ஒன்றிலேதான் உற்பத்தியாயின. வேறு நாடுகளில் பட்டுத்துணிகள் அக் காலத்தில் கிடையாது. சீனா தேசத்துப் பட்டுத்துணிகள் மத்திய ஆசியாவின் ஊடே தரைவழியாகப் பாரசீகம், எகிப்துதேசம், உரோமாபுரி முதலிய நாடுகளுக்குக் கொண்டு போகப்பட்டன. தமிழ்நாட்டுக்கு வந்த பட்டுகள் சாவகத் தீவுகளின் வழியாக வந்தன. சீன நாட்டு வாணிகர் பட்டுத்துணிகளைக் கப்பல்களில் ஏற்றிக் கொண்டு சாவகத் தீவுகளுக்கு வந்து விற்றார்கள். அந்தத் துணிகளைத் தமிழ்நாட்டுக் கப்பல் வணிகர் சாவகத் தீவுகளிலிருந்து வாங்கி வந்து தமிழகத்தில் விற்றார்கள்.

ஆரம் என்பது சந்தனக்கட்டை. தமிழ்நாட்டிலேயே ஆரமும் அகிலும் உண்டாயின. 'குடமலைப்பிறந்த ஆரமும் அகிலும்' என்று *பட்டினப்பாலை* (188) கூறுகிறது. ஆனால், சாவகநாட்டுச் சந்தனம் மண்வளமுடையதாகையால் மணத்திலும் தரத்திலும் உயர்ந்திருந்தது. ஆகவே, சாவகநாட்டுச் சந்தனமும் இறக்குமதியாயின.

வாசம் என்பது மணமுள்ள வாசனைப் பொருள்கள். ஆங்கிலத்தில் ஸ்பைஸ் (spice) என்று கூறப்படும். அவை தக்கோலம், சாதிக்காய், இலவங்கம் (கிராம்பு), குங்குமப்பூ, கஸ்தூரி, புழுகு (புனுகு) முதலியவை. இந்த வாசப்பொருள்கள் எல்லாம் அந்தக் காலத்தில் சாவகத் தீவில் மட்டுமே கிடைத்தன. வேறு நாடுகளில் கிடைக்கவில்லை.

கருப்பூரமும் சாவகநாட்டுச் செலுபீஸ் தீவில் உண்டாயிற்று. அது அக்காலத்தில் மிகப் புகழ்பெற்றது.

இந்தப் பொருள்கள் எல்லாம் தமிழகத்தில் இறக்குமதி செய்யப்பட்டன என்று கூறுகிறபடியினாலே கிழக்கிந்தியத் தீவுகளுடன் சங்ககாலத்துத் தமிழர் வாணிகத் தொடர்பு கொண்டிருந்தார்கள் என்பது திண்ணமாகத் தெரிகின்றது.

பவழமும் கிழக்குக்கடல் தீவுகளிலிருந்து தமிழகத்துக்கு வந்தது. 'குணகடல் துகிரும்' என்று *பட்டினபாலை* (189) கூறுவது காண்க. பவழமணிகள் கிழக்குக்கடல் தீவுகளிலிருந்து கிடைத்தது போலவே, மத்தியதரைக்கடலில் இருந்தும் கிடைத்தன. அவற்றை யவன வாணிகர் கொண்டுவந்தனர்.

சாவகத் தீவுகளுக்கு அருகில் வடக்கேயுள்ள காழகம், கடாரம், மலயம் முதலிய நாடுகளுடனும் தமிழர் வாணிகம் செய்தனர். 'காழகத்து ஆக்கம்' என்று *பட்டினப் பாலை*(191) கூறுகிறபடியால் காழகத்துப் பொருள்களும் தமிழகத்துக்குக் கொண்டுவரப்பட்டன என்பது தெரிகின்றது.

தமிழகத்துக்கு வடக்கேயுள்ள கிழக்குக்கடல் துறைமுகப் பட்டினங்களிலும் தமிழர் வாணிகஞ் செய்தார்கள். வடக்கே வங்காளத்தில் கங்கையாற்றுத் துறைமுகத்துடனும் அவர்கள் வாணிகம் செய்தார்கள். 'வடமலைப்பிறந்த பொன்னும் மணியும்' 'கங்கைவாரியும்' என்று *பட்டினப்பாலை* கூறுகிறது. கலிங்கம், ஆந்திரம் என்னும் நாடுகளின் துறைமுகங்களிலும் தமிழர் கப்பல் வாணிகஞ் செய்தார்கள். சந்தனம் உரைக்கிற சந்தனக்கல் (வடவர் தந்த வான்கேழ் வட்டம்) இந்நாடு களிலிருந்து தமிழகத்துக்கு வந்தன.

இவ்வாறு கிழக்குக்கடலில் சென்று கப்பல் வாணிகஞ் செய்த சங்ககாலத்துத் தமிழர் தங்கள் நாட்டுக்கு அருகில் உள்ள சிங்கள (இலங்கை) நாட்டிலும் வாணிகம் செய்தனர் என்று சொல்லாமலே விளங்கும். அந்தக் காலத்தில் ஈழநாடு உணவுப் பெருக்கமுள்ள நாடாக இருந்தது. 'ஈழத்து உணவு' இறக்குமதியானதை *பட்டினப்பாலை* கூறுகிறது. ஈழநாட்டின் பழைய தலைநகரமான அநுராதபுரத்தில் தமிழ் வாணிகசாத்து நிலையாக இருந்து வாணிகஞ் செய்தது. 2200 ஆண்டுகளுக்கு முன்னரே, கிறிஸ்து சகாப்தத்துக்கு இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு, அநுராதபுரத்தில் தமிழ் வாணிகர் மாளிகையொன்று இருந்ததை அங்குள்ள பிராஃமி எழுத்துச் சாசனம் கூறுகிறது. கற்பாறையோடு சார்ந்திருந்த அந்த வாணிகச்சாத்து மாளிகை பல ஆண்டுகளுக்கு முன்பே அழிந்துபோய் மண்மூடிக் கிடந்தது. மழை நீரினால் சிறிது சிறிதாக மண்கரைந்து கடைசியில் பாறைக் கல்லும் அதில் பொறிக்கப்பட்டுள்ள பிராஃமி எழுத்துகளும் அண்மைக்காலத்தில் கண்டுபிடிக்கப் பட்டன. அங்குத் தமிழ் நாவிகத் தலைவன் அமர்ந்திருந்த இடமும் மற்றும் வாணிகத் தலைவர்கள் அமர்ந்திருந்த இடங் களும் அவர்கள் பெயர்களுடன் பாறையில் பொறிக்கப் பட்டுள்ளன (Tamil House-holders' Terrace - Anuradhapura by. S. Paranavatana, pp, 13-14, *Annual Bibiliography of Indian Archaeology*, Vol. xiii, 1938).

தமிழ்நாட்டு வாணிகர் இலங்கையின் தலைநகரமான அநுராதபுரத்தில் வாணிக நிலையம் அமைத்து வாணிகஞ் செய்ததைப் பற்றிச் சங்க இலக்கியங்களில் அதிகமாக ஒன்றுங் காணப்படவில்லை. ஆனால், தமிழ் வாணிகர்கள் கி.மு.

இரண்டாம் நூற்றாண்டில் இலங்கை ஆட்சியைக் கைப்பற்றி அரசாண்ட வரலாற்றைச் சிங்களநாட்டு நூல்கள் கூறுகின்றன. சேனன், குட்டகன் என்னும் இரண்டு சகோதரர்கள் இலங்கையில் குதிரை வாணிகஞ் செய்து கொண்டிருந்த ஒரு தமிழ் வாணிகருடைய பிள்ளைகள் என்றும், அவர்கள் சூரதிஸ்ஸன் என்னும் சிங்கள அரசனை வென்று இராச்சியத்தைக் கைப்பற்றி அநுராதபுரத்திலிருந்து இருபத்திரண்டு ஆண்டுகள் நீதியாக அரசாண்டார்கள் என்றும் அவர்கள் புத்தசகாப்தம் 306 முதல் 328 வரையில் (கி.மு. 177 முதல் 155 வரை) அரசாண்டார்கள் என்றும் *கோவம்சம்* என்னும் நூல் கூறுகிறது (*கேரவம்சம்*, XXI: 10-11). இதே செய்தியைத் *தீபவம்சம்* என்னும் நூலுங் கூறுகிறது (*தீபவம்சம்* 18:47).

பிறகு ஏலாரன் (ஏலேலசிங்கன்) என்னும் தமிழ் வாணிகன் இலங்கையை நாற்பத்துநான்கு ஆண்டு அரசாண்டான். இவனைத் திருவள்ளுவரின் மாணவன் (சீடன்) என்றுங் கூறுவர். ஏலாரன் புத்தசகாப்தம் 338 முதல் 382 வரையில் (கி.மு. 145 முதல் 101 வரையில்) இலங்கையை, பகைவர் நண்பர் என்னும் வேறுபாடு இல்லாமல், நீதியோடு அரசாண்டான் என்று *மகாவம்சம்* என்னும் நூல் கூறுகிறது ( XXI: 13-14). இந்தச் செய்தியையே *தீபவம்சம்* என்னும் நூலுங் கூறுகிறது (18: 49). இந்தச் செய்திகள் எல்லாம் பழைய இலங்கைச் சரித்திர நூல்களிலிருந்தும் சாசன ஆராய்ச்சியிலிருந்தும் தெரிகின்றன.

தமிழ்நாட்டின் கிழக்குக்கரையில் சேரபட்டினம் (எயிற் பட்டினம்), காவிரிப்பூம்பட்டினம் (புகார்), நாகப்பட்டினம், தொண்டி, மருங்கூர்ப்பட்டினம், கொற்கை என்னும் துறைமுகப்பட்டினங்கள் இருந்தன. பாண்டிநாட்டின் தெற்கே குமரித்துறையைப் பற்றித் தமிழ் நூல்கள் கூறுகின்றன. ஆனால் அது துறைமுகப்பட்டினமாக இருந்ததைத் தமிழ்நூல்கள் கூறவில்லை. கிரேக்க (யவன) வாணிகர்கள் எழுதியுள்ள நூலிலிருந்து குமரியும் துறைமுகப்பட்டினமாக இருந்தது என்பது தெரிகின்றது.

புதுச்சேரிக்குத் தெற்கே அரிக்கமேடு என்னும் இடத்தில் கடற்கரையையடுத்து ஒரு வாணிகப் பண்டகசாலை இருந்ததைச் சமீபகாலத்தில் கண்டுபிடித்துள்ளனர். அதைப் 'பொதுகெ' என்று யவன வணிகர் எழுதியுள்ளனர். இந்தத் துறையைப் பற்றியும் சங்க நூல்களில் ஒன்றும் கூறப்பட வில்லை. இது, கி.மு. முதல் நூற்றாண்டுக்கும், கி.பி. இரண்டாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் இருந்த துறைமுகம் என்று அகழ்வாராய்ச்சியாளர் கருதுகின்றனர். இங்குக்

கிடைத்த உரோமாபுரி நாணயங்கள், உரோமாபுரிப் பீங்கான்கள், வேறு பொருள்கள் முதலியவைகளைப் பற்றியறிய விரும்புவோர் *ஏன்ஷியன்ட் இந்தியா* என்னும் வெளியீட்டில் காண்க (*Ancient India*, Number 2, Arikamedu: An Indo-Roman Trading station on the East Coast of India by R.E.M. Wheeler, A. Ghosh and Krishna Dave, pp. 17-124 July 1946).

**மேற்குக்கடல் வாணிகம்**

இனி, தமிழகத்தின் மேற்குக் கடற்கரையில் சங்ககாலத்தில் நடந்த கடல் வாணிகத்தைப் பற்றிக் கூறுவோம். அராபியரும், பாரசிகரும், எகிப்தியரும், யவனரும் (கிரேக்கரும் உரோமரும்) மேற்குக்கரையில் தமிழர்களோடு வாணிகஞ் செய்தார்கள். மேற்சொன்ன அந்த நாடுகளுக்குத் தமிழ் வாணிகர் அதிகமாகச் செல்லவில்லை. ஏனென்றால், மேற்சொன்ன நாட்டவர் தங்களுடைய தோணிகளிலும் நாவாய்களிலும் நேரே தமிழகத்துக்கு வந்து சரக்குகளை வாங்கிக் கொண்டு போனார்கள். அந்தக் காலத்தில் சேரநாட்டில் முக்கியமான ஏற்றுமதிப் பொருளாக இருந்தது மிளகு. அந்தக் காலத்தில் உலகத்திலேயே சேரநாட்டில்தான் மிளகு விளைந்தது. மேல்நாட்டார் மிளகைப் பெரிதும் விரும்பினார்கள்.

மேற்குக் கடற்கரைத் துறைமுகங்களில் ஆதிகாலத்தில் வாணிகஞ் செய்யத் தொடங்கியவர்கள் அராபியர். அராபியர் முசுறித் துறைமுகத்துக்கு அருகில் தங்கி வாணிகஞ் செய்தார்கள். முசுறித் துறைமுகத்துக்கு அருகில் கொடுமணம், பந்தர் என்னும் ஊர்கள் இருந்தன. பந்தர் என்னும் இடத்தில் அராபிய வணிகர் தங்கி வாணிகஞ் செய்தார்கள். பந்தர் என்ற சொல்லே அரபிமொழிச் சொல். அரபிமொழியில் பந்தர் என்றால் அங்காடி அல்லது வாணிகஞ் செய்யும் இடம் என்பது பொருள் (இக்காலத்திலும் சென்னையில் 'பந்தர் தெரு' என்று ஒரு தெரு இருக்கிறது. அங்குப் பெரும்பாலும் முஸ்லிம்கள் வாணிகஞ் செய்கிறார்கள்).

*பதிற்றுப்பத்தில் பந்தர் என்னும் இடம் குறிக்கப்படுகிறது.*

கொடுமணம் பட்ட நெடுமொழி யொக்கலொடு
பந்தர்ப் பெயரிய பேரிசை மூதூர்க்
கடனறி மரபிற் கைவல் பாண!
தெண்கடல் முத்தமொடு நன்கலம் பெறுகுவை

*(பதிற்று. 7ஆம் பத்து 7: 1-4)*

கொடுமணம் பட்ட வினைமாண் அருங்கலம்
*பந்தர்ப் பயந்த பலர்புகழ் முத்தம்."*

*(பதிற்று. 8ஆம்பத்து 4: 5-6)*

இன்னிசைப் புணரி யிரங்கும் பௌவத்து
நன்கல வெறுக்கை துஞ்சும் பந்தர்க்
கமழும் தாழைக் கானலம் பெருந்துறை

*(பதிற்று. 6ஆம் பத்து 5: 3-5)*

பந்தரில் பொன் நகைகளும் முத்துக்களும் விற்கப்பட்டன என்று அறிகிறோம். யவனர்கள் (கிரேக்கர், ரோமர்) வருவதற்கு முன்பே அராபியர் சேரநாட்டில் வந்து வாணிகம் செய்தனர். அவர்கள் முக்கியமாகத் தமிழ்நாட்டிலிருந்து மிளகை ஏற்றிக் கொண்டு போய் எகிப்து நாட்டு அலக்ஸாந்திரியா துறைமுகப் பட்டினத்தில் விற்றார்கள். அங்கிருந்த மிளகு உரோமாபுரி சாம்ராச்சியத்துக்குச் சென்றது. யவனர்கள் மிளகைப் பெரிதும் விரும்பினார்கள். அவர்களுடைய உணவில் மிளகு முக்கிய இடம் பெற்றது. மிளகை அவர்கள் மேலும் மேலும் வாங்கினார்கள். அதனால், அராபிய வாணிகருக்குப் பெரிய ஊதியங் கிடைத்தது. நூறு மடங்கு லாபம் பெற்றனர் என்று சொல்லப்படுகிறது. யவனர்களின் (கிரேக்கர், ரோமர்) உணவில் மிளகு இன்றியமையாத முக்கிய இடம் பெற்றபடியால் அவர்கள் மிளகை விரும்பி வாங்கினார்கள். அதனால் மிளகுக்கு 'யவனப் பிரியா' என்னும் பெயரும் ஏற்பட்டது. தமிழகத்து மேற்குத் தொடர்ச்சி மலைகளில் மட்டும் மிளகு கிடைத்தபடியால் இங்கிருந்தே அவர்கள் மிளகைப் பெற்றார்கள். தமிழகத்து மிளகு யவனநாட்டு மக்களுக்குமிடையே அராபியர் இருந்து கொள்ளை லாபம் பெற்றார்கள். ஆகவே அராபியர் ஆதிக்கத்தை அடக்கி யவனர்கள் நேரடியாகத் தமிழகத்துக்கு வரத் தொடங்கினார்கள்.

யவன வாணிகர் தொடக்கத்தில் செங்கடலில் மட்டும் வந்து வாணிகம் செய்தார்கள். அவர்கள் செங்கடலை எரித்ரைக் கடல் (Maris Erythrei) என்று கூறினார்கள். எரித்ரைக் கடல் என்றால் அவர்கள் மொழியில் செங்கடல் என்பது பொருள். பிறகு, யவனர்கள் செங்கடலைத் தாண்டி வந்து அரபி நாட்டின் தென்கரையிலும் பாரசீகக் குடாக் கடலிலும் வாணிகம் செய்தார்கள். இந்தக் கடல்களுக்கும் அவர்கள் எரித்ரைக் கடல் என்றே பெயரிட்டார்கள். பிறகு மேலும் தெற்கே வந்து இந்தியாவின் மேற்குக்கரையோரத்துத் துறை முகங்களில் வாணிகம் செய்தார்கள். தமிழகத்துச் சேரநாட்டுக் கடற்கரைப் பட்டினங்களிலும் வந்து வாணிகஞ் செய்தார்கள். அப்போது அரபிக்கடலுக்கும் அவர்கள் எரித்ரைக் கடல் (செங்கடல்) என்ற பெயரையே வழங்கினார்கள். பிறகு குமரிக்கடல் வங்காளக் குடாக் கடலுக்கும் வந்து வாணிகம் செய்தார்கள். இந்தக் கடல்களுக்கும் யவனர் எரித்ரைக் கடல் என்றே பெயர்

கூறினார்கள். யவன வாணிபர்கள் செங்கடல், அரபிக்கடல், வங்காளகுடாக் கடல்களில் வந்து வாணிகஞ் செய்ததையும் அவர்கள் வந்து வாணிகஞ் செய்த துறைமுகங்களின் பெயரையும் அவர்கள் ஏற்றுமதி இறக்குமதி செய்த பொருள்களையும் பற்றி கி.பி. முதல் நூற்றாண்டில் யவன வாணிகர் ஒருவர் கிரேக்க பாஷையில் ஒரு நூல் எழுதியுள்ளார். அந்த நூலுக்கு *The Periplus Maris Erythrei* என்று பெயர்.

உரோம நாட்டுச் சாம்ராச்சியத்தை அந்தக் காலத்தில் அரசாண்ட சக்கரவர்த்தி அகஸ்தஸ் என்பவர். அவர் கி. மு. 31முதல் கி. பி. 14 வரையில் 45 ஆண்டு அரசாண்டார். அந்த அரசர் காலத்தில் யவனக் கப்பல்கள் நேரடியாகத் தமிழகத்துக்கு வரத்தொடங்கின. அந்தக் கப்பல்கள், அராபியரின் கப்பல் களைவிடப் பெரியவைகளாகவும் அழகாகவும் இருந்தன. அந்த யவனக் கப்பல்கள் கடற்கரையோரமாகவே பிரயாணஞ் செய்து வந்தன. நடுக்கடலின் ஊடே பிரயாணஞ் செய்யவில்லை. கரையோரமாகச் சுற்றிக்கொண்டு வந்தபடியால் கால தாமதமும் பொருட் செலவும் ஏற்பட்டன. பிறகு ஹிப்பாலஸ் என்னும் யவன மாலுமி, இந்திய மாலுமிகளின் உதவியினால் தென்மேற்குப் பருவக் காற்றையறிந்தான். அந்தப் பருவக் காற்றின் உதவியால் அராபிக் கடலின் ஊடே கப்பலைச் செலுத்தி முசிறி, தொண்டி, நறவு முதலிய சேரநாட்டுத் துறைமுகங்களுக்கு விரைவில் வந்துபோக முடிந்தது. அதன் பிறகு யவனக் கப்பல்கள், பருவக் காற்றின் உதவி கொண்டு விரைவாகவும் காலதாமதம் இல்லாமலும் வந்து மிளகு முதலிய பொருள்களை ஏற்றுமதி செய்து கொண்டு போயின.

அகஸ்தஸ் அரசன் காலத்தில் உரோமாபுரித் தங்கசாலை களில் தங்க நாணயங்களும் வெள்ளி நாணயங்களும் ஏராளமாக வெளியிடப்பட்டன. உரோம சாம்ராச்சியத்தைச் சேர்ந்த ஸ்பெயின் நாட்டில் தங்கச் சுரங்கம் இருந்தபடியால் அந்தத் தங்கத்தைக் கொண்டு பொன் நாணயங்கள் வெளி யிடப்பட்டன. யவனக் கப்பல்கள் உரோம நாட்டிலிருந்து பொன் நாணயங்களைக் கொண்டு வந்து மிளகுகளை ஏராளமாக வாங்கிக் கொண்டு போயின. மிளகுக்கு அடுத்த படியாகத் தமிழகத்திலிருந்து யவனர் வாங்கிக் கொண்டு போனவை பேர்போன நீல நிறக் கல்லும் முத்துமே. கொங்கு நாட்டின் வடக்கிலிருந்த புனனாட்டில் நீலக்கல் சுரங்கம் இருந்தது. அந்தக் காலத்தில் இந்த மணி வேறு எங்கும் கிடைக்கவில்லை. முத்து, பாண்டியரின் கொற்கைத் துறை முகத்தில் கிடைத்தது. இவற்றை எல்லாம் யவனர் பணம்

கொடுத்து வாங்கிக்கொண்டு போனார்கள். அதனால் உரோமா புரியின் பொன்னும் வெள்ளியும் தமிழகத்துக்கு ஏராளமாகக் கிடைத்தன. ரோமநாட்டுச் செல்வம் வெளிநாடுகளுக்குச் செல்வதை அக்காலத்து உரோம நாட்டு அறிஞர்கள் கண்டித்திருக்கிறார்கள்.

யவன வாணிகர் பொற்காசுகளைக் கொண்டுவந்து கொடுத்து அதற்கு ஈடாகக் கறியை (கறி - மிளகு) ஏற்றிக் கொண்டு போனதைத் தாயங்கண்ணனார் தம்முடைய ஒரு செய்யுளில் கூறுகிறார்.

..................................................சேரலர்
சுள்ளியம் பேரியாற்று வெண்ணுரை கலங்க
யவனர் தந்த வினைமாண் நன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
வளங்கெழு முசிறி *(அகம் 149: 7-11)*

இதை அவர் நிகழ்காலத்தில் கூறியிருக்கிறபடியால், அவருடைய காலத்தில் தாம் நேரில் கண்டதையே கூறியுள்ளார் என்பது தெரிகின்றது.

சுள்ளி என்று பெயர்பெற்றிருந்த பெரியாறு கடலில் கலக்கிற இடத்தில் முசிறித் துறைமுகம் இருந்தது. சுள்ளி யாற்றின் வெள்ளத்தில் அடித்துக் கொண்டுபோன மண், துறைமுகத்தில் படிந்து தூர்ந்துவிட்டபடியால், முசிறித் துறைமுகத்தில் யவனரின் பெரிய நாவாய்க் கப்பல்கள் வந்து தங்குவதற்கு ஏற்ற ஆழம் இல்லாமலிருந்தது. ஆகவே, யவனக் கப்பல்கள் துறைமுகத்துக்கு அப்பால் கடலில் நின்றன. சிறிய படகுகளில் மிளகை ஏற்றிக்கொண்டு போய் யவனக் கப்பல் களில் இறக்கி அதற்கு ஈடாகப் பொன் நாணயங்களை அந்தக் கப்பல்கள் கொண்டு வந்தன என்று அக்காலத்தில் பேர் பெற்றிருந்த பரணர் என்னும் புலவர் கூறுகிறார்.

மனைக் குவைஇய கறி மூடையாற்
கலிச் சும்மைய கரைகலக் குறுந்து
கலந் தந்த பொற் பரிசம்
கழித் தோணியாற் கரை சேர்க்குந்து
..........
முழங்குகடல் முழவின் முசிறி *(புறம் 343: 3-10)*

இந்தப் புலவரும் இந்த வாணிபத்தை நிகழ்காலத்தில் கூறுவது காண்க.

வாணிகத்தினால் அந்தந்த நாட்டு அரசர்களுக்குச் செல்வம் கிடைத்தது. ஆகவே, முக்கியத் துறைமுகப்பட்டினங்களைக்

கைப்பற்றுவதற்கு அரசர்கள் முயன்றார்கள். தமிழகத்துக்கு வடக்கே மேற்குக் கடற்கரையில் இருந்த பெரிய துறைமுகப் பட்டினங்கள் சங்க காலத்தில் சாதவாகன அரசர்களிடம் இருந்தன. சாதவாகனருக்கு சதகர்ணி என்றும் நூற்றுவர்கன்னர் என்றும் பெயர் உண்டு. மேற்கு இந்தியத் துறைமுகங்கள் அவர்களுடைய ஆளுகையிலிருந்தபடியால் அவர்களுக்கு வாணிகத்தின் மூலமாகப் பெருத்த பொருள் வருவாய் இருந்தது. அந்தப் பொருள் வருவாயைத் தாங்கள் பெற்றுக் கொள்ள விரும்பி சாகர் என்னும் அரசர்கள் சாதவாகனருடன் போர் செய்து அவர்களுடைய மேற்குப்பக்கத்து நகரங்களையும் நாடுகளையும் கைப்பற்றினார்கள். சாதவாகனர், தாங்கள் இழந்த நாடுகளை மீண்டும் கைப்பற்றுவதற்குச் சாகர்களுடன் போர் செய்தார்கள். இவ்வாறு சாதவாகனர்களுக்கும் சாகர் களுக்கும் அடிக்கடி போர் நிகழ்ந்தன. ஏறத்தாழ இருநூறு ஆண்டுகள் அப்போர்கள் நடந்தன. அந்தப் போர்களில் சாதவாகன அரசருக்கு உதவியாகத் தமிழ்நாட்டு அரசர் இருந்தார்கள். சோழ அரசரும் சேர அரசரும் சாதவாகன ருக்குப் போரில் உதவிசெய்திருக்கிறார்கள்.

சேரநாட்டுக் கடல் வாணிகத்துக்கு எதிராகக் கடற் கொள்ளைக்காரர்கள் அக்காலத்தில் இருந்தார்கள். அவர்கள் யவனக் கப்பல்களை வழிமறித்துக் கொள்ளையடித்தபடியால் யவன வாணிகர் சேரநாட்டுத் துறைமுகங்களுக்கு வர அஞ்சினார்கள். சேரநாட்டுக்கு வடமேற்கே அரபிக்கடலில் இருந்த ஒரு சிறு தீவிலே கடற்கொள்ளைக்காரர்கள் தங்கியிருந்தார்கள். அவர்கள் அந்தத் தீவில் கடம்ப மரத்தைக் காவல் மரமாக நட்டு வளர்த்தார்கள். அதனால் அவர்கள் கடம்பர் என்று கூறப்பட்டனர் (அந்தக் கடம்பர் வேறு. பிற்காலத்தில் சரித்திரப் புகழ்பெற்று விளங்கிய கடம்பர்கள் வேறு. கடற்கொள்ளைக்காரராகிய கடம்பரையும் சில நூற்றாண்டுகளுக்குப் பிறகு சரித்திரப் புகழ்பெற்று விளங்கிய கடம்ப அரசரையும் ஒன்றாகக் கருதுவது தவறு).

கடற்கொள்ளைக்காரக் கடம்பரின் கடற்கொள்ளை காரணமாகச் சேரநாட்டுத் துறைமுகப்பட்டினங்களுக்கு யவனக் கப்பல்கள் வருவது தடைப்பட்டது. அப்போது சேர அரசர் கடம்பரை அழித்து ஒடுக்க வேண்டியதாயிற்று. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்னும் சேர அரசன் தன்னுடைய மகனான சேரன் செங்குட்டுவன் தலைமையில் ஒரு கடற் படையையனுப்பி, கடல் தீவிலிருந்த கடம்பரை வென்று அடக்கினான். அத்தீவில் அவர்கள் வளர்த்திருந்த கடம்ப

மரத்தையும் அடியோடு வெட்டி வீழ்த்தினான் என்று *பதிற்றுப்பத்து* கூறுகிறது (*பதிற்றுப்பத்து* 2ஆம் பத்து, 5ஆம் பத்து). தமிழகத்தின் மேற்குக் கடல் வாணிகமும் சங்ககாலத்தின் இறுதிவரையில் (ஏறத்தாழ கி. பி. 250 வரையில்) சிறப்பாக நடந்தது.

**அயல்நாட்டுத் தரை வாணிகம்**

இதுவரையில் சங்ககாலத்துக் கடல் வாணிகத்தைப் பற்றி சுருக்கமாகக் கூறினோம். இனி, சங்ககாலத்துத் தமிழர் அயல் நாடுகளில் செய்த தரை வாணிகத்தைப் பற்றிக் கூறுவோம்.

காதலன் தன் காதலியை (மனைவியை) விட்டுத் தனியே பிரிந்து பொருள் ஈட்டச் சென்றதைப் பாலைத்திணைச் செய்யுட்கள் கூறுவதைச் சங்க இலக்கியங்களில் படிக்கிறோம். அவர்கள், தமிழ் நாட்டுக்கு அப்பால் உள்ள மொழி பெயர் தேயல்களுக்கு (வேறு பாஷை பேசப்பட்ட தேசங்களுக்கு)ச் சென்றார்கள் என்று சங்கச் செய்யுள்கள் கூறுகின்றன. வாணிகர் வண்டிகளில் சரக்குகளை ஏற்றிக் கொண்டு கூட்டமாக அயல் நாடுகளுக்குச் செல்வார்கள். அந்த வணிகக் கூட்டத்துக்கச் 'சாத்து' என்பது பெயர். அக்காலத்தில் எல்லைப் புறங்களில் பாதுகாப்பு இல்லாதபடியால் கொள்ளைக்காரர் வணிகச் சாத்தை இடைமறித்துப் பொருட் களைக் கொள்ளை யடிப்பதும் உண்டு. அதைத் தடுப்பதற்காகச் சாத்துகள் தங்களுடன் வில் வீரர்களையும் அழைத்துக் கொண்டு போனார்கள். பாரத நாட்டில் மட்டுமல்ல, வெளி தேசங் களிலும் வணிகச்சாத்துகள் அக்காலத்தில் இருந்தன. வாணிச்சாத்துக்கு ஆங்கிலத்தில் Caravan என்பது பெயர்.

கோவலனுடைய தந்தை வாணிகச்சாத்தின் தலைவனாக இருந்தான் என்று *சிலப்பதிகாரக்* காவியங் கூறுகிறது. சாத்தின் தலைவனாக இருந்தபடியால் அவன் மாசாத்துவான் என்று பெயர் பெற்றான் (மா - பெரிய. சாத்துவான் - வாணிகச் சாத்தின் தலைவன்). காவிரிப்பூம்பட்டினத்தில் இறக்குமதியான பொருள்களையும் சுற்றுப்புறத்து நாடுகளில் உற்பத்தியான பொருள்களையும் சாத்து மூலமாக அவன் அயல்நாடுகளில் அனுப்பி வாணிகஞ் செய்தான். இப்பெரு வாணிகத்தினால் மாசாத்துவான் பெரும்பொருள் சேர்த்துச் சோழ அரசனுக்கு அடுத்தபடியாகப் பெருங்குடிமகனாக விளங்கினான்.

பெருநிலம் முழுதாளும் பெருமகன் தலைவைத்த
ஒருதனிக் குடிகளோடு உயர்ந்தோங்கு செல்வத்தான்
வருநிதி பிறர்க்கார்த்து மாசாத்துவன் என்பான்
இருநிதிக் கிழவன்மகன் ஈரெட்டாண் டகவையான்

என்று கோவலனையும் அவனுடைய தந்தையான மாசாத்து வானையும் *சிலப்பதிகாரம்* கூறுகிறது (மங்கல வாழ்த்துப் பாடல் 31-34).

சங்க காலத்துத் தமிழர் தரைவழியாக வட இந்தியாவுக்குச் சென்று வாணிகஞ் செய்து பொருள் ஈட்டினார்கள். அந்தத் தரைவாணிகத்தைப் பற்றிச் சங்கச் செய்யுள்கள் அதிகமாகக் கூறவில்லை. தமிழகத்திலிருந்து மேற்குப் பக்கமாகவும் கிழக்குப் பக்கமாகவும் வட இந்தியாவுக்குப் பெருஞ் சாலைகள் சென்றன. அந்தச் சாலைகள் வடநாடுகளின் ஊடே (கன்னடநாடு, ஆந்திர நாடுகளின் வழியாக) சென்றபடியால் அவை வடுகவழி மேற்கு, வடுகவழி கிழக்கு என்று பெயர் பெற்றிருந்ததைப் பிற்காலத்தில் சாசனங்களினால் அறிகிறோம். உஞ்சை (உஜ்ஜையினி), வாரணாசி (காசி) நாடுகளுக்குத் தமிழர் சென்றதையும் அங்கிருந்தவர் தமிழ்நாட்டுக் குமரிமுனைக்கு வந்து நீராடிச் சென்றதையும் *மணிமேகலையினால்* அறிகிறோம். (அக்காலத்தில் இராமேசுவரம் புண்ணிய இடமாகக் கருதப்பட வில்லை, குமரித்துறையே புண்ணிய இடமாகக் கருதப் பட்டது.)

இப்போது ஒரிசாதேசம் என்று கூறப்படுகிற பழைய கலிங்க நாட்டில் சங்ககாலத்துத் தமிழர் சென்று நெடுங் காலமாக அங்குத் தங்கி வாணிகஞ் செய்ததை அந்நாட்டுக் கல்வெட்டு வட்டெழுத்துச் சாசனங்கள் கூறுகின்றன. கிறிஸ்து சகாப்தத்துக்கு முன்பு இரண்டாம் நூற்றாண்டில் கலிங்கதேசத்தை யரசாண்டவன் காரவேலன் என்னும் அரசன். அவன் அக்காலத்தில் வடக்கே பேரரசனாக விளங்கினான். காரவேலன் சதகர்ணியரசனையும் வென்று புகழ் படைத்தவன். அவன் கி.மு. 165ஆம் ஆண்டில் (அவனுடைய பதினாறாம் ஆட்சியாண்டில்), கலிங்க நாட்டில் பல ஆண்டுகளாகச் செல்வாக்குப் பெற்றிருந்த தமிழ் வாணிகச் சாத்தை அழித்தான் என்று அந்தச் சாசனங் கூறுகிறது. அந்த ஆண்டுக்கு முன்பு 113 ஆண்டுகளாகத் தமிழ்ச்சாத்து கலிங்க நாட்டில் தங்கி வாணிகஞ் செய்து கொண்டு அந்நாட்டில் பெரிய செல்வாக்குப் பெற்றிருந்தது. அந்தச் சாத்தின் ஆதிக்கம் நாளுக்குநாள் பெருகியபடியாலும் ஆட்சிக்கே ஆபத்து நேரிடக்கூடும் என்று தெரிந்தபடியாலும் காரவேல அரசன் அந்த வாணிகச் சாத்தை அழித்து ஒடுக்கினான் என்று அவனுடைய ஹத்திகும்பா குறைச் சாசனம் கூறுகிறது. எனவே கி.மு. 278இல் இருந்தே (கி. மு. 165 + 113 = 278) சங்ககாலத்துத் தமிழ் வாணிகச் சாத்து கலிங்க நாட்டில் சென்று வாணிகஞ் செய்யத் தொடங்கியதை இச்சாசனத்திலிருந்து அறிகிறோம்.

கலிங்க நாட்டில் வாணிகஞ் செய்த தமிழ்ச் சாத்தினர் என்னென்ன பொருள்களைக் கொண்டு போய் வாணிகஞ் செய்தார்கள் என்பது தெரியவில்லை. ஆனால் கலிங்க நாட்டிலிருந்து சேலைகளைக் கொண்டு வந்து தமிழகத்தில் வணிகஞ் செய்தார்கள் என்பதைச் சங்கச் செய்யுள்களிலிருந்து அறிகிறோம். அந்தச் சேலைகளுக்குக் கலிங்கச்சேலை என்பது பெயர். தொடக்கக் காலத்தில் கலிங்க நாட்டுப் புடவைகளுக்கு மட்டும் பெயராக வழங்கிய அந்தச் சொல், காலஞ் செல்லச் செல்ல எல்லாப் புடவைகளுக்கும் பொதுப் பெயராக கலிங்கம் என்று வழங்கியதைச் சங்கச் செய்யுளில் காண்கிறோம்.

சந்தனக் கட்டையை இழைக்கிற சந்தனக் கல்லும் வடக்கிலிருந்து தமிழகத்துக்கு வந்தது. அந்தச் சந்தனக் கல்லும் கலிங்க நாட்டிலிருந்து அல்லது ஆந்திர நாட்டிலிருந்து வந்திருக்க வேண்டும். ஏனென்றால், அதை 'வடவர் தந்த வான் கோழ் வட்டம்' என்று *நெடுநல்வாடை* (வரி: 51) கூறுகிறது.

ஆந்திர நாட்டில் அந்தக் காலத்தில் பேர்பெற்றிருந்த அமராவதி நகரத்திலும் அக்காலத்தில் தமிழர் சென்று வாணிகம் செய்தனர் என்பது இன்னொரு சாசனத்தால் தெரிகிறது. அமராவதி நகரத்தில் இருந்த பேர்போன பௌத்த சயித்தியக் கோவில் கி. மு. 200 முதல் கி. பி. 200 வரையில் கட்டப் பட்டது. அந்தச் சேதியத்தைக் கட்டுவதற்கு அந்நகரத்திலிருந்து செல்வர்களும் வாணிகரும் பொருளுதவி செய்தார்கள். அச்சேதியத்தைக் கட்டுவதற்குப் பொருளுதவி செய்தவர்களில் தமிழ்க் குடும்பமும் ஒன்று. இப்போது லண்டன் பொருட் காட்சிச் சாலையில் உள்ள பிராஃமி எழுத்துச் சாசனக்கல், இந்தச் செய்தியைக் கூறுகிறது. தமிழ் கண்ணனும் இவனுடைய தம்பி சுல்ல (இளங்) கண்ணனும் இவர்களுடைய தங்கை (நாகம்மாள்)யும் சேர்ந்து உதம்பதக்கல்லைத் தானம் செய்தனர் என்று அந்தச் சாசனம் கூறுகிறது (Page. 20, No. 80, Notes on the Amaravati Stupa by. J. Burgess, 1882). இந்தத் தமிழ்க் குடும்பத்தினர் தமிழ்நாட்டிலிருந்து ஆந்திரநாடு சென்று வாணிகஞ் செய்தவர் என்று தோன்றுகின்றனர்.

இதுவரையில் சங்ககாலத்துத் தமிழர் வாணிகத்தைப் பற்றிச் சுருக்கமாகக் கூறினோம் அதற்குப் பிற்காலத்திலும் இந்த வாணிகங்கள் தொடர்ந்து நடந்தன.

*ஆராய்ச்சி,* மலர் 1, இதழ் 4, 1970

# திருக்காரிக்கரை

திருக்காரிக்கரைத் திருக்கோவில், செங்கல்பட்டு மாவட்டத்துத் திருவள்ளூர் தாலுகாவில் இராமகிரி என்னுமிடத்தில் இருக்கிறது. திருக்காரிக்கரை என்னும் பழைய பெயர் மாறி, இப்போது இராமகிரி என்று பெயர் வழங்கப் படுகிறது. திருக்காரிக்கரை நாகலாபுரத்துக்கு அருகில் இருக்கிறது. நாகலாபுரத்திலிருந்து தும்பூரு கோனைக்குப் போகிற இடைவழியில், திருக்காரிக்கரைக் கோவில் இருக்கிறது. இக்கோவிலில் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமான் பெயர் வாலீசுவரர் என்பது. சாசன எழுத்துக்களில் 'திருக்காரிக்கரை உடைய நாயனார்' என்று பெயர் கூறப்படுகிறார். பழைய சாசன எழுத்துக்களிலே, "ஜயங்கொண்ட சோழ மண்டலத்து (தொண்டைமண்டலத்து)க் குன்றவர்த்தனக் கோட்டத்து நின்றையூர் நாட்டுத் திருக்காரிக்கரை" என்று கூறப்படுகிறது.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருக்காளத்திக்குச் சென்ற போது, போகிற வழியில் திருக்காரிக்கரைக் கோவிலுக்கு வந்து, சிவபெருமானை வணங்கிச் சென்றார் என்று *பெரிய புராணத்தினால்* அறிகிறோம்.

> பல்பதியும் நெடுங்கிரியும் படர்வனமும்
> சென்றடைவார்
> செல்கதிமுன் அளிப்பார்தம் திருக்காரிக்கரை பணிந்து
> தொல்கலையின் பெருவேந்தர் தொண்டர்கள்பின்,
> உம்பர்குழாம்
> மல்குதிருக் காளத்தி மாமலைவந் தெய்தினார்
> (திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம் 343)

இதனால், திருக்காரிக்கரை வாலீசுவரர் திருக்கோவில், மிகப் பழமையானது என்பது தெரிகின்றது.

இந்தக் கோவிலிலே கல்வெட்டுச் சாசனங்கள் சில காணப்படுகின்றன. அவை கி.பி. 12ஆம் நூற்றாண்டிலிருந்து எழுதப்பட்டவை. அவை, இந்தக் கோவிலுக்கு நிலங்களும் ஆடு மாடுகளும் பொருள்களும் தானம் செய்யப்பட்டதைக் கூறுகின்றன.

மூன்றாம் குலோத்துங்க சோழன் காலத்துச் சாசனங்களும் மூன்றாம் இராசராசன் காலத்துச் சாசனங்களும், இங்குக் காணப்படுகின்றன. மூன்றாம் குலோத்துங்க சோழன் காலத்துச் சாசனங்களாவன:

இவனுடைய 6ஆம் ஆட்சியாண்டில் எழுதப்பட்டவை இரண்டு சாசனங்கள். திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீவீர ராஜேந்திர சோழ தேவருடைய (மூன்றாங் குலோத்துங்க சோழனுடைய) 6ஆவது ஆண்டில் (கி. பி. 1184இல்) எழுதப் பட்டவை. பையூர் நாடாழ்வான் குவளைய்ம் அழகியான் ஒற்றி அரசன், இக்கோவிலுக்குத் திருநந்தாவிளக்குக்காகத் தொண்ணூற்றாறு ஆடுகளைத் தானங் கொடுத்ததைக் கூறுகிறது. அதாவது இந்த ஆடுகளின் பாலிலிருந்து நெய் எடுத்து நாள்தோறும் ஒரு திருவிளக்கு ஏற்றுவதற்காக இந்த ஆடுகள் தானம் செய்யப்பட்டன (No. 701, *S. I. I.*, Vol. xvii). இதே. ஆள் இந்தக் கோவிலுக்குத் தொண்ணூற்றாறு ஆடுகளைத் தானஞ்செய்ததை இன்னொரு கல்வெட்டுக் கூறுகிறது. இந்தச் சாசனத்தின் விசித்திரம் என்னவென்றால், "திருநாயற்றுக் கிழமைதோறும் ஒரு ஆடு வெட்டக்கடவதாக விட்ட ஆடு தொண்ணூற்றாறு" என்று இந்தச் சாசனத்தில் எழுதப் பட்டிருப்பதுதான் (No. 708, *S.I.I.*, Vol. xvii).

இது மிகவும் புதுமையாகக் காணப்படுகிறது. சிவன் கோவில்களில் ஆடு வெட்டுவது வழக்கம் இல்லை. இது வரையில் இந்த வழக்கம் இருந்தது இல்லை. ஆனால் இந்த ஒரே சாசனம் ஆடு வெட்டுவதைக் கூறுகிறது! காளி கோயிலுக்கு ஆடு வெட்டுவது மரபுதான். ஆனால் சிவன் கோவிலில் வெட்டுவது மரபு அன்று. வழக்கமும் அன்று. நிச்சயமாகக் கிடையாது. இந்தக் கல்வெட்டெழுத்துக் கூறுவதன் கருத்து என்ன என்று தெரியவில்லை.

இந்த அரசனுடைய 11ஆம் ஆண்டில் (கி.பி. 1188-89)இல் எழுதப்பட்ட சாசனம், கோசலத்தரையன் வலந்தருவான் கோசலத்தரையன், இக்கோவிலில் திருவிளக்கு எரிப்பதற்காக முப்பத்திரண்டு பசுக்களைத் தானஞ் செய்ததைக் கூறுகிறது. இந்தப் பசுக்களின் பாலிலிருந்து கிடைக்கிற நெய்யினால் திருவிளக்கு எரிக்க வேண்டும் என்று இந்தச் சாசனங் கூறு கிறது. நெய் அளிக்கும் உழக்குக்கு 'திருக்காரிக்கரையுடை யான்' உழக்கு என்று பெயர் கூறப்பட்டுள்ளது (No. 686, *S.I.I.*, Vol. xvii).

இவ்வரசனுடைய 15ஆம் ஆண்டில் எழுதப்பட்ட சாசனம் (கி. பி. 1192-93); இதன் பிற்பகுதி எழுதப்படாமல் விடப்பட்டுள்ளது. இது இத்திருக்கோவிலில் விளக்கு

எரிப்பதற்காக 49 பழங்காசு கொடுக்கப்பட்டதைக் கூறுகிறது (No. 688, *S.I.I.*, Vol. xvii).

இந்த அரசனுடைய 32ஆவது ஆண்டில் எழுதப்பட்ட இரண்டு சாசனங்கள் (கி. பி. 1209-10), தனி நின்று வென்ற வீரநரசிங்கயாதவராயன், இந்தக் கோவிலில் சித்திரைத் திருநாள் உற்சவத்துக்கு நீர்வாயில் என்னும் ஊரைத் தேவதான மாகக் கொடுத்ததைக் கூறுகிறது. 'நீர்வாயில் காசாயம் பொன்னாயம் நெல்லாயம் உட்பட' விட்டதாகக் கூறுகிறது (No. ၆96, *S.I.I.*, Vol. xvii). இரண்டாவது சாசனம், "திருக்காரிக் கரையுடைய பிள்ளையார்க்குப் பூசைக்கும் அமுது படிக்கும்" ஆக வேலூரும் சாத்தமங்கலமும் சூரலூர்த்தடையும் சர்வ மானியமாகக் கொடுத்ததைக் கூறுகிறது (No. 697, *S.I.I.*, Vol. xvii).

மூன்றாம் இராஜராஜசோழன் காலத்துச் சாசனங்கள்:

இவ்வரசனுடைய 10ஆம் ஆண்டில் (கி. பி. 1225-26) எழுதப்பட்டது. இக்கோவிலில் நந்தாவிளக்கு ஒன்றுக்காக முப்பத்திரண்டு பசுக்களை, நின்றையூர் நாட்டு வேளான் தானங் கொடுத்ததைக் கூறுகிறது (No. 715, *S.I.I.*, Vol. xvii).

இந்தச் சோழனுடைய 25ஆம் ஆண்டில் (கி. பி. 1240-41) எழுதப்பட்ட சாசனம் காரிப்பிள்ளை என்பவர் மூன்று மாடைகளை (பொற்காசு) இந்தக் கோவிலுக்குத் தானஞ் செய்ததைக் கூறுகிறது. இந்தக் காசுகளின் வட்டியிலிருந்து ஒரு நந்தாவிளக்கு நாள்தோறும் ஏற்ற வேண்டுமென்று இந்தச் சாசனங் கூறுகிறது (No. 712, *S.I.I.*, Vol. xvii).

இவ்வரசனுடைய 27ஆம் ஆண்டில் (கி. பி. 1242 - 43) எழுதப்பட்ட சாசனம், இக்கோவிலில் திருவிளக்கு ஏற்று வதற்காகக் கோட்டூர் வடுகன் ஒன்றரை மாடைப் பொன்னைத் தானம் செய்ததைக் கூறுகிறது (No. 710, *S.I.I.*, Vol. xvii).

இவ்வரசனுடைய 29ஆம் ஆண்டுச்சாசனம் (கி. பி. 1245) கொட்டளத்தூர் கிழவன் (கிழவன் - தலைவன்) வடுகப்பிள்ளை என்னும் வயிராதராயன் இக்கோவிலில் திருவிளக்கு ஏற்று வதற்காகப் பதினாறு மாடைப் பொற்காசுகளைத் தானஞ் செய்ததைக் கூறுகிறது (No. 713, *S.I.I.*, Vol. xvii).

சாளுக்கிய வீரகண்ட கோபாலனுடைய 3வது ஆண்டு (கி.பி. 1294 - 49) வீரநரசிங்க தேவனான யாதவராயரின் சேனாபதி நகுலன் விழுப்பதராயன் இக்கோவிலுக்குப் பதினாறு எருமை களைத் தானஞ்செய்ததைக் கூறுகிறது. இவ்வெருமைகளின் பாலிலிருந்து நெய் எடுத்துத் திருவிளக்கு ஏற்ற வேண்டுமென்று இச்சாசனங்கள் கூறுகின்றன (No. 716, *S.I.I.*, Vol. XVII).

யாதவராயரின் 36ஆவது ஆண்டில் எழுதப்பட்ட சாசனம், அரிகண்டபுரத்து ஊரார் இந்தக் கோவிலுக்குத் தங்கள் ஊரில் நிலம் தானஞ் செய்ததைக் கூறுகிறது. இந்த நிலத்தின் வருவாயிலிருந்து இக்கோவிலில் திருநாளுக்கு (உற்சவத்துக்கு)ச் செலவு செய்யவேண்டுமென்று இந்தச் சாசனம் கூறுகிறது (No. 705, *S.I.I.*, Vol. xvii).

இரண்டாம் ஹரிஹரராயர் காலத்துச் சாசனம் (கி.பி. 1400) நின்றையூர் நாட்டில் உள்ள வேலூர்க் கிராமத்தார், தங்கள் மனைகளையும் தோட்டந் துரவுகளையும் இக்கோவிலுக்குத் தானஞ் செய்ததைக் கூறுகிறது. இந்த ஊரில் இதற்கு முன்பே கோவிலுக்குத் தானஞ் செய்யப்பட்ட நிலம் இருந்தது (No. 700, *S.I.I.*, Vol. xvii).

இரண்டாம் புக்கராயர் காலத்துச் சாசனம் (கி. பி. 1382) திருக்காரிக்கரையில், 'திருவாளன்மடம்' என்னும் பெயருள்ள ஒரு மடம் இருந்ததையும், அந்த மடத்துத் தலைவர் சத்திய தரிசினி என்பவர் இருந்ததையும், அந்த மடத்துக்கு நின்றையூர் நாட்டு வெண்குளத்தூரார் நிலம் தானம் செய்ததையுங் கூறுகிறது. காவந்தகண்டநல்லூர் நத்தமும் ஏரியும் நன்செய் புன்செய் நிலங்களும் இந்த மடத்துக்குத் தானம் செய்யப் பட்டன (No. 699, *S.I.I.*, Vol. xvii).

சாலிவாகன சக ஆண்டு 1358இல் (கி. பி. 1436இல்) ஸ்ரீ சக்கரகர் என்னும் சிற்றரசன் இக்கோவிலில், திருக்கதவுகளை அமைத்து, திருபள்ளியறை நாச்சியாரையும் எழுந்தருளுவித்தார் என்று ஒரு சாசனங் கூறுகிறது (No. 693, *S.I.I.*, Vol. xvii).

வீர நரசிங்க யாதவராயரின் 36ஆவது ஆண்டில் எழுதப் பட்ட சாசனம் இந்தக் கோவிலில் பூசைசெய்து கொண்டிருந்த சிவப்பிராமணர், தங்களுடைய 42வட்டத்தில் பத்து வட்டத்தை (பத்து நாள் பூசையை) அகவலன் சூரிய பட்டனுக்கு விற்று விட்ட செய்தியைக் கூறுகிறது (No. 711, *S.I.I.*, Vol. xvii).

திருக்காரிக்கரைக் கோவில் குளக்கரையில் ஒரு கருங்கல் நந்தி இருக்கிறது. அதன் வாயிலிருந்து நீர் விழுந்து கொண்டி ருக்கிறது. இந்த நந்தியின் பின்புறத்தில் எழுதப்பட்டுள்ள எழுத்து கி.பி. 10ஆம் நூற்றாண்டு எழுத்தாகத் தெரிகிறது. இதன் வாசகம்: "ஸ்ரீ பரமேஸ்வரன் தரிசனத்திலேறிடு என்று பிரசாதஞ்செய்யச் சாமுண்டி மகன் கூவத்துப் பெருந்தாசன் விட்ட ஏறு" என்பது (No. 717, *S.I.I.*, Vol. xvii).

கூவம் என்னும் ஊரில் இருந்த சாமுண்டி என்பவனின் மகனான பெருந்தச்சன் என்னும் சிற்பியின் கனவிலே சிவபெருமான் தோன்றிக் கல்லினால் ஒரு நந்தியைச் செய்து ஊவ என்று கூற, அதன்படியே அவன் இந்த நந்தியைச் செய்து இதன் வாயி லிருந்து நீர்வரும்படி அமைத்தான் என்பது இதன் பொருள்.

இங்கு இன்னுஞ்சில கல்வெட்டெழுத்துக்கள் உள்ளன. அவை அவ்வளவு முக்கியமானவை அல்ல. அவற்றுள் சில சிதைந்துள்ளன. இதுவரையும் கூறியதிலிருந்து இந்தக் கோவிலைப்பற்றி மறைந்துபோன எத்தனையோ பல செய்திகளை அறிந்துகொள்கிறோம்.

*திருக்கோயில்,* மாலை 12, மணி 6, மார்ச் 1970

# திருவக்கரை

தென்னாற்காடு மாவட்டத்தில் விழுப்புரம் தாலூகாவில் திருவக்கரை என்னும் திருப்பதி இருக்கிறது. இங்குள்ள சிவன் கோவிலில் சந்திரசேகரேசுவரரும், வடிவாம்பிகை அம்மையும் எழுந்தருளியிருக்கின்றார்கள். திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார், இக்கோயிற் சிவபெருமானைப் பாடியுள்ளார்.

சந்திரசேகரனே! அருளாய் என்று தண் விசும்பில்
இந்திரனும்முதலா இமையோர்கள் தொழு திறைஞ்ச
அந்தர மூவெயிலும் அனலாய்விழ ஓரம் பினால்
மந்தர மேருவில்லா வளைத்தானிடம் வக்கரையே

என்பது அத்திருப்பதிகத்தில் மூன்றாஞ்செய்யுள்.

திருவக்கரைத் திருக்கோவிலிலே பல கல்வெட்டெழுத்துக் கள் இருக்கின்றன. இக்கல்வெட்டெழுத்துக்களிலிருந்து இந்தக் கோவிலைப் பற்றிய பழைய செய்திகளை அறிகிறோம். இந்தக் கல்வெட்டெழுத்துக்களில் காலத்தினால் பழமையானது முதலாம் இராஜராஜசோழன் காலத்தது. இவனுடைய 16ஆவது ஆட்சி ஆண்டில் (கி. பி. 1000-1001), இந்தக் கோவில் கற்றளியாகக் கட்டப்பட்டது. கற்றளியாகக் கட்டப்படுவதற்கு முன்பு இக்கோவில் செங்கற் கட்டடமாக இருந்திருக்க வேண்டும். இந்தக் கோவிலைக் கற்றளியாகக் கட்டியவர், செம்பியன் மாதேவியார் என்னும் சோழ அரசியார்.

"ஸ்ரீகோராஜராஜ ராஜகேசரி பன்மற்கு யாண்டு 16வது ஸ்ரீ கண்டராதித்த தேவர் தம்பிராட்டியார் ஸ்ரீஉத்தம சோழரைத் திருவயிறு வாய்த்த உடைய பிராட்டியார் செம்பியன் மாதேவியார் எடுப்பித்தருளின ஸ்ரீவக்கரைத் திருக்கற்றளிச் சிவலோகம் உடைய பரம சுவாமிகள்" என்று இந்தச் சாசனம் கூறுகிறது.

இதனைத் தொடர்ந்து வருகிற நீண்ட சாசனம் முற்றுப் பெறவில்லை. நிலமும் பொன்னும் தானஞ் செய்து அவற்றின் வருவாயிலிருந்து திருவமுது, நெய்யமுது, பொரிக்கறி, மிளகு பொடி ஆகிய கறியமுது இரண்டு, தயிரமுது, அடைக்காயமுது வெற்றிலையமுது முதலியவற்றுக்கு நிபந்தங்கள் செய்திருக் கிறார். மற்றும் தலைப்பறை கொட்டும் உவச்சன், திருப்பதிகம்

பாடுவார், திருப்பள்ளித் தாமம் பறிப்பான், திருவலகும் திருமெழுக்கும் இட்டுப் பள்ளித்தாமம் தொடுப்பவள், ஸ்ரீகாரியஞ் செய்கிறவர்கள் முதலியோருக்கு நிபந்தங்கள் செய்திருக்கிறார். மற்றும் 'கலசங்களும் சால்களும் குடங்களும் பெருந்திருவமுதுக்குப் பானைகளும் சட்டிகளும்' இடும் குசவனுக்கும், நிபந்தங்கள் செய்திருக்கிறார் (222, தெ. இ. க. தொகுதி 17).

இங்கு ஒன்றைக் கவனிக்க வேண்டும். இந்தக் கோவிலைக் கருங்கல்லினால் கற்றளியாகக் கட்டி நிலங்களையும் பொன்னையும் வழங்கின இந்த அரசியார், பானை சட்டிகளில் திருவமுது செய்ய நிபந்தங்கள் செய்திருக்கிறார். சோழப் பேரரசியாகிய அவர் விரும்பியிருந்தால் பொன், வெள்ளி, வெண்கலப் பாத்திரங்களை வழங்கியிருக்கலாம். அப்படி இல்லாமல் மட்கலங்களை நியமித்தது அக்காலத்து வழக்கத்தைத் தெரிவிக்கிறது. அரசர்களுங்கூட அக்காலத்தில் மட்கலங்களையே சமைப்பதற்கு உபயோகித்தார்கள் என்பது இதனால் தெரிகிறது.

முதலாம் இராஜராஜனுடைய 29ஆம் ஆட்சியாண்டில் எழுதப்பட்ட இன்னொரு சாசனம் இக்கோவிலில் இருக்கிறது. அது கி. பி. 1013-14 ஆம் ஆண்டில் எழுதப்பட்டது. அது மாம்பாக்கம் உடையான் சாத்தன் ஆலை என்பவன் இந்தக் கோவிலில் நந்தாவிளக்கு ஒன்று வைத்து, அவ்விளக்குக்கு நாள் தோறும் நெய் அட்டுவதற்காகத் தொண்ணூறு ஆடுகளைத் தானஞ் செய்ததைக் கூறுகிறது. அதாவது ஆட்டுப் பாலிலிருந்து நெய் எடுத்துத் திருவிளக்கு ஏற்றவேண்டும் என்று ஏற்பாடு செய்ததைக் கூறுகிறது (195, தெ. இ. க. தொகுதி 17).

இராஜேந்திரசோழன் (முதலாமவன்) ஏழாவது ஆட்சியாண்டில் (கி. பி. 1018) நந்தி ஏறன் என்பவன் திருநந்தாவிளக்கு ஒன்று இக்கோவிலுக்கு வைத்தான். விளக்கு எரியும் நெய்க்காகத் தொண்ணூறு ஆடுகளையும் கோவிலுக்குத் தானம் செய்தான். இதனை இன்னொரு சாசனம் கூறுகிறது (197, தெ. இ. க தொகுதி 17).

இராசேந்திர சோழனின் 21ஆம் ஆண்டில் (கி. பி. 1052) இந்தக் கோவிலில், இணையன் ஆடவல்லானான பெரியன் என்பவர் 72 பலம் நிறையுள்ள வெண்கலத்தினால் செய்த ஒரு செயகண்டிகையை (சேமக்கலம்) தானம் செய்தார் என்று இன்னொரு சாசனம் கூறுகிறது (198).

முதலாங் குலோத்துங்கசோழனின் பத்தாம் ஆண்டுச் சாசனம் (கி. பி. 1079) ஒன்று, அழகிய சோழப் பல்லவரை

யனுடைய அகமுடையான் தாமருடையான் திருவாறை பொன் என்பவர், இக்கோவிலுக்குச் சந்தி விளக்குக்காகப் பன்னிரண்டு ஆடுகளைத் தானஞ் செய்ததைக் கூறுகிறது (199). இந்தச் சோழனுடைய 29ஆம் ஆண்டுச் சாசனம் (கி.பி. 1098) இந்தக் கோவிலுக்குத் தேவரடியாரைத் தானம் செய்ததைக் கூறுகிறது.

"ஜயங்கொண்ட சோழ மண்டலத்து (தொண்டை மண்டலத்து) மாத்தூர் நாட்டுப் பந்திமங்கலத்துப் பரலிகை ஊர் இருக்கும் வேளாளன் மாம்பாக்க முடையான் அமுதன் பள்ளி கொண்டானும், அமுதன் வேளானும், அமுதன் உய்ய வந்தானும் இவ்வனைவோங்கள் அடியாள் அங்காடியும், இவள் மகள் பேரங்காடியும், இவள் மக்களும் திருவக்கரை யுடைய மாதேவற்குத் தேவரடியாராக ஸ்ரீஹஸ்தத்தே நீர்வார்த்துக் குடுத்தோம்" என்று இந்தச் சாசனம் கூறுகிறது (204).

விக்கிரமசோழனுடைய மூன்றாம் ஆண்டு (கி. பி. 1120) சாசனம், ஓய்மா நாட்டு முந்நூற்றுக்குடிப்பள்ளி செங்கெணி அம்மையப்பன் பண்டி என்பவர் இக்கோவில் பெருமானுக்கு மந்திரபோனகம், நெய்யமுது, கறியமுது, அடைக்காயமுது, தயிரமுது முதலியவற்றிற்கு நிவந்தம் செய்ததைக் கூறுகிறது (201). இவருக்கு நரலோகவீரப் பேரரையன் என்னும் சிறப்புப் பெயரும் உண்டு.

திருவக்கரைச் சிவன் கோவிலில், எழுந்தருளியுள்ள வரதராஜப் பெருமாள் கோவிலின் வாயிலில் இடதுபுறத்து வாயிலின் நிலையில் ஒரு செய்யுள் எழுதப்பட்டிருக்கிறது. அது கீழ்வருமாறு:

ஸ்வஸ்திஸ்ரீ.
இசைவிளங்குடையன்மன் எங்கோனுக்கு .
இருபத்து நாலாமாண்டு
குசைவிளங்கு மறையவர்கள் குழுமிய
வக்கரை மாலின் கோயில் சாலத்
திசை விளங்கு திருவாசல் பொற்கதவு
சமைத்தான் வென்றி
திசைவிளங்கு வேற்கண்டன் துருவ்வை கோன்
வழிக்கரிசி மடந்தை கோவே.

இந்தச் சாசன எழுத்து, கி. பி. 11ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டதாகத் தோன்றுகிறது (230).

சோழ அரசனான இரண்டாம் இராஜாதிராஜனால் ஏழாம் ஆட்சியாண்டில் (கி. பி. 1169), திருவக்கரைக் கோயிலின்

கோபுரம் கட்டப்பட்டது. இதற்கு முன்னர்க் கோபுரம் இல்லை என்று தோன்றுகிறது. இந்தக் கோபுரத்தைக் கட்டினவன் அம்மையப்பன் பாண்டிநாடு கொண்டானான கண்டர் சூரியன் சம்புவராயன் என்பவன். இந்தச் சாசனத்தின் வாசகம் இது:

"ஸ்வஸ்திஸ்ரீ. திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீஇராஜாதி ராஜ தேவற்கு யாண்டு ஏழாவது திருவக்கரை ஆளுடையார் கோயிலில் திருக்கோபுரம், கண்டர் சூரியன் திருக்கோபுரம் என்னும் பெயரால் செய்வித்தான் அம்மையப்பன் பாண்டிநாடு கொண்டானான கண்டர் சூரியன் சம்புவராயன்" (217).

இந்தச் சம்புவராயனே இத்திருக்கோவிலில் ஆயிரக்கால் மண்டபத்தையுங் கட்டினான். இந்த மண்டபம் மூன்றாங் குலோத்துங்கச் சோழனுடைய இரண்டாவது ஆண்டில் (கி. பி. 1179) கட்டப்பட்டது. இந்தச் சாசனத்தின் வாசகம் இது:

"ஸ்வஸ்திஸ்ரீ. திரிபுவனச் சக்கரவர்த்திகள் மதுரையும் பாண்டியன் முடித்தலையுங் கொண்டருளின, ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு 2வது. இராஜராஜ வளநாட்டு மாத்தூர் நாட்டு உடையார் திருவக்கரை ஆளுடையார் கோயிலில் இத்திருமண்டபம் கண்டர் சூரியன் திருமண்டபம் என்னும் பெயரால் செய்வித்தான் அம்மை அப்பன் பாண்டிநாடு கொண்டானான கண்டர் சூரியன் சம்புவராயன் (212).

மூன்றாம் குலோத்துங்க சோழனின் பதினாறாவது ஆண்டில் (கி. பி. 1194) எழுதப்பட்ட இன்னொரு சாசனம், இந்தக் கோவிலில் நான்கு நந்தாவிளக்கு தானங்கொடுத்ததைக் கூறுகிறது. தானங்கொடுத்தவர் ஒரு காடவராயர். இத்திரு நந்தாவிளக்கு நாலுக்கும் விட்ட சாவா மூவாப்பசு 128. ரிஷபம் 4. ஒரு நந்தாவிளக்குக்கு 32 பசுக்கள் வீதம் 4 விளக்குகளுக்கு 128 பசுக்களைக் கொடுத்தார். இந்தப் பசுக்களின் பாலிலிருந்து நெய் எடுத்து அந்த நெய்யினால் விளக்கேற்றவேண்டும் என்பது கட்டளை. 4 ரிஷபம் (காளைமாடு) கொடுத்தது எதுக் கென்றால், இவை "சாவாமூவாப் பசுக்கள்" ஆகையால் இப்பசுக்களின் எண்ணிக்கை குறையாமல் கன்றுகள் ஈன்று வளர்ச்சி எய்தி இருப்பதற்கு (215).

இந்த மூன்றாங் குலோத்துங்கசோழனுடைய 16ஆம் ஆட்சியாண்டில் (கி. பி. 1193) கண்டர் சூரியன் சம்புவராயன் இரண்டு குத்துவிளக்குகளைத் தானஞ்செய்தான். இந்தச் சம்புவராயன் இக்கோவிலில் கோபுரத்தையும் ஆயிரக்கால் மண்டபத்தையும் கட்டினதை முன்னமே கூறினோம். குத்துவிளக்குச் சாசனத்தின் வாசகம் இது:

"ஸ்வஸ்திஸ்ரீ. திரிபுவனச் சக்கரவர்த்திகள் குலோத்துங்க சோழதேவற்கு யாண்டு 16வது உடையார் திருவக்கரை ஆளுடையார்க்கு அம்மை அப்பன் பாண்டிநாடு கொண்டானான கண்டர் சூரியன் செய்வித்து இட்ட ஐஞ்சு நிலைக்குத்து விளக்கு 2-னால் இருப்பு நாராசம் உட்படத் தாராஎடை ஆயிரத்து நூற்று எண்பத்து இருபலம்" (216, தெ. இ. க. தொகுதி 17).

மூன்றாம் விக்கிரமபாண்டியனுடைய நான்காம் ஆண்டில் (கி. பி. 1285) எழுதப்பட்ட சாசனம், இப்பாண்டியனுடைய அரசி இக்கோவிலில் ஒரு மண்டபம் கட்டியதைக் கூறுகிறது. "பெருமாள் விக்கிரமபாண்டிய தேவ்ர் நம்பிராட்டியார் உலகமுழுதுடையார் செய்வித்த திருமண்டடம் யாண்டு 4" (210).

இந்தப் பாண்டியனுடைய ஆறாவது ஆண்டில் (கி.பி. 1288) எழுதப்பட்ட சாசனம், இந்தப் பாண்டியன் இந்தக் கோவிலுக்கு நிலம் தானங் கொடுத்ததைக் கூறுகிறது. இவன் தன் பேரால் நித்திய பூசை, திருநாள்களை அமைத்தான். "நம் பேரால் கட்டின விக்கிரமபாண்டியன் சந்திக்கும் விக்கிரம பாண்டியன் திருநாளுக்கும் அமுதுபடி சாத்துப்படி உள்ளிட்டு வேண்டும் நித்த நைமித்திகங்களுக்கும் திருநாமத்துக் காணி" என்று இச்சாசனம் கூறுகிறது (202).

முதலாங் குலோத்துங்கசோழனுடைட்ய 44ஆம் ஆண்டுச் சாசனம் (கி. பி. 1113), இக்கோயிற் சிவபெருமானுக்கும் திருமாலுக்கும் துர்க்கைக்கும் திருவிளக்காக 65 பொற்காசு தானம் செய்யப்பட்டதைக் கூறுகிறது. "இக்காசு அறுபத்தஞ்சுக்குத் திருவக்கரை ஆளுடையார்க்கு ஒரு திருநந்தா விளக்கும், திருவக்கரை ஆழ்வார்க்கு ஒரு திருநாந்தா விளக்கும், துர்க்கையார்க்கொரு சந்தி விளக்கும் இரண்டு தேவர்களுக்கும் சனி எண்ணெய் காப்பு மாசத் திருநாழி எண்ணெயும் நீக்கி நின்றது தூண்டுவான் கூலியாகவும் இப்பரிசு சந்திராதித்தவல் இக்கோயிலிரண்டுங், குடமும் அலகுங் கொண்டு புகுவார் இத்திரு விளக்கும் எரித்து இக்கோயில் கைக்கொண்டு திருவாராதனை செய்வோம்" என்று இந்தச் சாசனப்பகுதி கூறுகிறது (203).

சாலிவாகன சக ஆண்டு 1352-இல் (கி. பி. 1430இல்) செம்மந்தை காங்கேயன் என்பவர் இக்கோயிலில் ஒரு கோபுரத்தையும் ஒரு மண்டபத்தையுங் கட்டினார் என்று ஒரு செய்யுட் சாசனங் கூறுகிறது. இந்தக் கோபுரமும் மண்டபமும் முற்கூறிய கண்டர் சூரியன் சம்புவராயன் அமைத்த கோபுரமும் மண்டபமும் அல்ல; இவை வேறு.

விம்பச் சகர மற்றொராயிரத்து
முந்நூற்றுக்குமேல்
ஐம்பத் திரண்டினில் வக்கரையார்க்கு
அணிகோபுரமுஞ்
செம்பொற்றிரு மண்டபமுங் கண்டான்
செஞ்சொல்தேவரசன்
கப்பக் களிற்றண்ணல் இதூர்மன்
செம்மந்தை காங்கேயனே (218)

இந்தக் கோபுரமும் மண்டபமும் பிற்காலத்தில் பழுதடைந்த போது செவ்வண்ணன் என்பவர் இவற்றைப் புதுப்பித்தா ரென்று இங்குள்ள இன்னொரு சாசனச் செய்யுள் கூறுகிறது. இந்தச் சாசனத்தின் எழுத்து பிற்காலத்தது. இந்தச் சாசனச் செய்யுள் இது:

பன்னாக பூஷணர் வக்கரை
ஈசற்குப் பத்தியுடன்
முன்னாளிற் காங்கயன் கோபுரம்
மண்டபம் முற்றுங்கண்டான்
இந்நாள் அதனை யெல்லாம்
நவமாக்கினன் எங்கள் கச்சிச்
சின்னான் துணைவன் அரசன்
குமாரன்நற் செவ்வண்ணனே (219)

இந்தச் செய்திகளையெல்லாம் திருவக்கரைத் திருக்கோயிலில் எழுதப்பட்டிருக்கிற கல்வெட்டுச் சாசனங்களிலிருந்து அறி கிறோம். கல்லில் எழுதி வைக்காமலிருந்தால் இவைகளை நாம் எங்ஙனம் அறிய முடியும்?

திருக்கோயில்களில் திருவிளக்கு ஏற்றினால் ஞானம் பெறலாம் என்பது ஆன்றோர் வாக்கு. திருவிளக்கு இடுவது பெரும் புண்ணியமாகக் கருதப்படுகிறது. திருவிளக்கேற்றிக் கடவுளை வணங்கினால் கடவுள் திருவருள் கிடைக்கும்.

விரும்பிநல் விளக்குத்தூபம்
விதியினால் இடவல்லார்க்குக்
கரும்பினிற் கட்டிபோல்வார்
கடவூர் வீரட்டனாரே

என்று திருநாவுக்கரசு சுவாமிகள் கூறுவது காண்க.

முற்காலத்துப் பெரியவர்கள் எண்ணெய் விளக்கேற்று வதைவிட, நெய் விளக்கு ஏற்றுவதை உயர்வாக மதித்தார்கள் (இதனால் எண்ணெய் விளக்குக் கூடாது என்பதன்று). இதனால்தான் அக்காலத்தவர் வசதியிருந்தபோது திருக்

கோயில்களில் நெய்யினால், திருவிளக்கு ஏற்றினார்கள். அதற்காக ஆடுகளையும் பசுக்களையும் திருக்கோயில்களுக்குத் தானம் கொடுத்தார்கள். செல்வர்கள் அக்காலத்தில் பசுக் களையும் ஆடுகளையும் திருக்கோயில்களுக்குத் தானஞ் செய்து, அவற்றின் பாலிலிருந்து கிடைக்கிற கலப்பற்ற நெய்யினால் திருவிளக்கேற்ற நிபந்தங்களைச் செய்தார்கள். இச்செய்திகளைக் கல்வெட்டெழுத்துக்களிலிருந்து அறிகிறோம்.

*திருக்கோயில்*, மாலை 12, மணி 8, மே 1970

# சங்க காலத்துக் கைத்தொழிலும் வாணிகமும்

சங்க காலத்தில் (கி.பி. 250க்கு முற்பட்ட காலத்தில்) உழவுத் தொழில், கைத் தொழில், வாணிகத் தொழில் ஆகிய தொழில்கள் நடந்தன. அந்தத் தொழில்களில் முக்கியமான மூன்று தொழில்களைப் பற்றி இங்கு ஆராய்ந்து பார்ப்போம். அவை உப்பு, சங்குவளை, வெல்லம் என்னும் மூன்று. இந்தத் தொழில்களைப் பற்றிச் சங்க இலக்கியங்களிலிருந்து அறி கிறோம். இந்தப் பொருள்கள் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படவில்லை. இந்த மூன்றும் உள்நாட்டு உற்பத்திப் பொருளாகவும் கைத்தொழிலாகவும் வாணிகப் பொரு ளாகவும் இருந்தன.

**உப்பு**

எந்தக் காலத்திலும் உப்பு முக்கியமானது. உப்பிடாத உணவு உண்டா? உப்பில்லாப் பண்டம் குப்பையிலே என்பது பழமொழி. சங்க காலத்திலும் உப்பு செய்பொருளாகவும் வாணிகப் பொருளாகவும் உணவுப் பொருளாகவும் இருந்தது. மக்கள் வாழ்க்கையில் தினசரி உபயோகமான உப்பைப் பற்றிச் சங்க இலக்கியங்களில் ஆங்காங்கே கூறப்படுகின்றது. நெய்தல் நிலம் எனப்படுகிற கடற்கரையைச் சார்ந்த நிலங்களில் சில இடங்களில் உப்பளங்கள் இருந்தன. உப்பளங்களில் பாத்தி களை அமைத்து உப்பங்கழிகளிலிருந்து உப்பு நீரைப் பாய்ச்சி உப்புக் காய்ச்சினார்கள். வெயிலில் பாத்திகளிலுள்ள நீர் கொதித்து ஆவியாகிப் போய் பாத்திகளில் உப்பு பூக்கும். இதுவே "கடுவெயில் கொதித்த கல் விளை உப்பு" (நற். 354:8). நெய்தல் நிலத்து மக்கள் உப்பளங்களில் உப்பை விளை வித்தார்கள். இவர்கள் "உவர் விளை உப்பின் உழா உழவர்" (நற். 331:1) என்று கூறப்பட்டனர். இந்த 'வெண்கல் அமிழ்தம்' எல்லோருக்கும் இன்றியமையாத பொருளாக இருந்தது. மழை பெய்யாத வேனிற்காலங்களில் உப்பங்கழிகள் நீர் வரண்டு அங்கு இயற்கையாக உப்பு உண்டாவதும் உண்டு.

வறப்பின், மாநீர்முண்டகந் தாஅய்ச் சேறுபுலர்ந்து
இருங்கழிச் செறுவின் வெள்ளுப்பு விளையும் *(நற்.* 311:3-4)

என்று உலோச்சனார் கூறுகிறார். இந்த உப்பு சுத்தமாக இராதபடியால் உணவுக்கு உபயோகப்படுத்துவது இல்லை. உப்புப் பாத்திகளில் விளைந்த உப்பைக் குவியல்குவியலாகக் குவித்து வைத்து உப்பு வாணிகர் வரவை எதிர்பார்த்திருப் பார்கள்.

உவர்விளை உப்பின் உழாஅ உழவர்
ஒழுகை உமணர் வருபதம் நோக்கி
கானல் இட்ட காவற் குப்பை *(நற்.*331:1-3)

(உவர்-உவர்நிலம். உழா உழவர் - ஏர் உழாமல் உப்பைப் பயிரிடுபவர். உமணர் - உப்பு வாணிகர். கானல் - கடற்கரை. குப்பை - குவியல்.)

நெய்தல் நிலத்தில் வாழ்ந்த மீனவச் சிறுமிகள் கடல் அலை களில் குளித்து விளையாடிய பிறகு பொழுது சாய்ந்தபோது, உப்பளங்களில் குவித்து வைத்துள்ள உப்புக் குவியல்களின் மேல் ஏறி நின்று, கடலில் மீன்பிடிக்கச் சென்ற தங்களுடைய தந்தையர் கடலில் திரும்பி வருகிற மீன்படகுகளை எண்ணி னார்கள்.

திரை உழந்து அசைஇய நிரைவளை ஆயமொடு
உப்பின் குப்பை ஏறி, எற்பட
வருதிமில் எண்ணுந் துறைவனொடு ஊரே
*(அகம்* 190:1-3)

உப்பை வாங்கிக் கொண்டு போய் ஊர்ஊராக விற்பதற்கு உப்பு வாணிகர் வருவர். உப்பு வாணிகருக்கு உமணர் என்று பெயர் வழங்கிற்று. உமணர் வண்டிகளில் நெல்லை ஏற்றிக் கொண்டு வந்து, நெல்லைக் கொடுத்து உப்பை வாங்கி வண்டிகளில் ஏற்றிக் கொண்டு போனார்கள். சங்க காலத்தில் பெரும்பாலும் பண்டமாற்று வாணிகம் இருந்தது. காசு கொடுத்துப் பொருளை வாங்கும் வழக்கம் அக்காலத்தில் பெரும்பாலும் இல்லை. காசுகள் மிகச் சுருக்கமாக வழங்கின.

உமணர் பெரும்பாலும் மருத நிலங்களில் (நெல் விளையும் ஊர்களில்) இருந்து வண்டிகளில் நெல்லை ஏற்றிக் கொண்டு வந்தார்கள். அவர்கள் மனைவி மக்களோடு வந்து, உப்பை வாங்கிக் கொண்டு குடும்பத்தோடு ஊர்ஊராகச் சென்று உப்பு விற்றார்கள்.

தந்நாட்டு விளைந்த வெண்ணெல் தந்து
பிறநாட்டு உப்பின் கொள்ளை சாற்றி
நெடுநெறி ஒழுகை நிலவு மணல் நீந்தி
அவண் உறை முனிந்த ஒக்கலோடு புலம்பெயர்ந்து
உமணர் போகலும் *(நற். 183:1-5)*

(தம் நாடு - உமண வாணிகருடைய மருத நிலம். பிறநாடு - அயல் நாடாகிய நெய்தல் நிலம். கொள்ளை சாற்றி - விலைகூறி. ஒழுகை - வண்டி. அவண் உறை - தம் ஊரில் தனியே இருப் பதை, முனிந்த - வெறுத்த. ஒக்கல் - சுற்றம்)

கடற்கரையில் வாழ்ந்த மீனவர் மீனை விற்று அதனால் வந்த நெல்லையும், 'உமணர் தந்த உப்பு நொடை நெல்லையும்' உணவாக உண்டார்கள்.

ஆயும், உப்பை மாறி வெண்ணெய் தரீஇய
உப்புவிளை கழனிச் சென்றவள். *(குறுந். 269:4-6)*

என்று ஒரு மீனவச் சிறுமி கூறுகிறாள்.

உப்பை வாங்கி வண்டிகளில் ஏற்றிக் கொண்டு உமணர் கூட்டங்கூட்டமாக வழியே சென்றார்கள்.

உவர்விளை உப்பின் கொள்ளை சாற்றி
அதர்படு பூழிய சேண்புலம் படரும்
ததர்கோல் உமணர்பதி போகு நெடுநெறிக்
கணநிரை வாழ்க்கை *(அகம் 390:1-4)*

உமணர், கடற்கரைக்கு அப்பாலுள்ள உள்நாட்டு ஊர் களுக்கும் மலைநாடுகளுக்கும் உப்பு வண்டிகளை ஏற்றிக் கொண்டு போனார்கள்.

கழியுப்பு முகந்து கன்னாடு மடுக்கும்
ஆரைச் சாகாட்டு ஆழ்ச்சி போக்கும்
உரனுடை நோன் பகடு

*(புறம் 60: 7-9)*

(கல்நாடு - மலைநாடு. ஆழ்ச்சிபோக்கும் - பள்ளத்திலிருந்து மேட்டின் மேல் செல்லும்)

உவர்விளை உப்பின் குன்றுபோல் குப்பை
மலை உய்த்துப் பகரும் நிலையா வாழ்க்கைக்
கணங்கொள் உமணர்

*(நற் 138: 1-3)*

பாரமுள்ள வண்டியை இழுத்துக் கொண்டு எருதுகள் மேட்டில் ஏறியும் பள்ளத்தில் இறங்கியும் செல்லும்போது

வண்டியின் அச்சு முறிந்து விடுவதும் உண்டு. அதன் பொருட்டு உமணர் சேம அச்சு கொண்டு போனார்கள் (*புறம்* 102: 1-5). அவர்கள் பாதிரிப் பூவையும் அலரிப் பூவையும் இணைத்துக் கட்டின மாலையைத் தலையில் அணிந்து, காலில் செருப்புத் தொடுத்துக் கையில் தடி ஏந்தியிருந்தார்கள்.

அந்தப் பாதிரித் துய்த்தலைப் புதுவீ
எரியிதழ் அலரியொடு இடைபட விரைஇ
வண்தோட்டுத் தொடுத்த வண்டுபடு கண்ணித்
தோல் புதைச் சிரற்றடிக் கோலுடையுமணர்

(*அகம்* 191: 1-4)

அக்காலத்தில் ஊர்களுக்குச் செல்லும் வழிகள் செம்மையாக இல்லை. உமணர் வழியில் தங்கி உணவு சமைத்து உண்டு, பிறகு மீண்டும் பிரயாணம் செய்தார்கள் (*அகம்.* 159: 1-4). சில இடங்களில் சமைக்கவும் உண்ணவும் நீர் கிடைக்காது. அவ்விடங்களில் மண்ணை அகழ்ந்து குழி உண்டாக்கிச் சுரந்த நீரை உண்டனர் (*அகம்* 295: 9-14). தீக்குச்சிகள் இல்லாத காலமாகையால், அவர்கள், தீக்கடை கோலினால் தீயுண்டாக்கிச் சோறு சமைத்து உண்டனர் (*அகம்* 169: 5-8).

போகிற வழியில் ஊர்தோறும் தங்கி ஊரில் சென்று உப்பை விற்றார்கள். ஊர்களில் உமணர் (ஆடவர்) சென்று உப்பு விற்பது இல்லை. உமணப் பெண்கள் உப்பைக் கொண்டுபோய் விற்றனர். உப்பைக் கொடுத்து அதற்கு ஈடாக நெல்லைப் பெற்றனர்.

நெல்லும் உப்பும் நேரே, ஊரீர்!
கொள்ளீரோ வெனச் சேரி தொறும் நுவலும்

(*அகம்* 390: 8-9)

(சேரி-தெரு, நுவலும் - சொல்லும்.)

கதழ்கோல் உமணர் காதல் மடமகள்
சில்கோல் எல்வளை தெளிர்ப்ப வீசி
நெல்லின் நேரே வெண்கல் உப்பெனச்
சேரி விலைமாறு கூறலின் (*அகம்* 140: 5-8)

ஆறுகளும் கால்வாய்களும் இருக்கிற ஊர்களுக்குச் சிறு படகுகளில் உப்பை ஏற்றிக் கொண்டுபோய் விற்றார்கள். சோழநாட்டில் காவிரியாற்றின் வழியாகப் படகுகளில் உப்பு கொண்டுபோய் விற்றார்கள். அந்தப் படகுகளை, குதிரைகளைக் கட்டுவதுபோல, ஆற்றங்கரையோரமாக (வெள்ளத்தில் அடித்துக் கொண்டு போகாதபடி) கட்டி வைத்தார்கள். இதை,

கொழும் பல்குடிச் செழும் பாக்கத்துக்
குறும் பல்லூர் நெடுஞ் சோணாட்டு
வெள்ளை யுப்பின் கொள்ளை சாற்றி
நெல்லொடு வந்த வல்வாய்ப் பஃறி
பணைநிலைப் புரவியின் அணைமுதற் பிணிக்கும்
கழிசூழ் படப்பை... *(பட்டினப் பாலை 27-32)*

என்று கடியலூர் உருத்திரங் கண்ணனார் கூறுகிறார்.

வண்டிகள் போக முடியாத மலைநாட்டு ஊர்களுக்குக் கழுதைகளின் மேல் உப்பு மூட்டைகளை ஏற்றிக் கொண்டு போய் விற்றார்கள். அவர்கள் கூட்டமாகச் சேர்ந்து உப்புப் பொதிகளை ஏற்றிக் கொண்டு நல்ல நிமித்தம் பார்த்து வீரர்களையும் அழைத்துக் கொண்டு மலைநாடுகளுக்குச் சென்றார்கள். ஏனென்றால், வழிப்பறிக் கொள்ளைக்காரர், யாருமில்லாத இடைவழியில் மறித்து அவர்களைக் கொள்ளை யிடுவதும் உண்டு.

அணங்குடை முந்நீர் பரந்த செறுவின்
உணங்குதிறம் பெயர்ந்த வெண்கல் அமிழ்தம்
குடபுல மருங்கின் உய்ம்மார் புள்ளோர்த்துப்
படையமைத் தெழுந்த பெருஞ்செய் யாடவர்
நிரைப்பரப் பொறைய நரைப்புறக் கழுதைக்
குறைக் குளம்புதைத்த கற்பிறழ் இயவு

*(அகம் 207: 1-6)*

(புள்ளோர்த்து - நன்னிமித்தம் பார்த்து, வழிப்பறி ஏற்படாமலிருக்க நிமித்தம் பார்த்து. படை அமைத்து - பாதுகாப்புக்காக வீரர்களை அமைத்துக் கொண்டு)

பொறைமலி கழுதை நெடுநிரை தழீஇய
திருந்துவாள் வயவர்

*(அகம் 89: 12-13)*

உப்பு மூட்டைகளை மட்டுமல்லாமல் மிளகு முதலிய வேறு பண்டங்களையும் சுமந்துகொண்டு போகக் கழுதைகளை அக்காலத்தில் பயன்படுத்தினார்கள்.

இல்போல் நீழல் செல்வெயில் ஒழிமார்
நெடுஞ்செவிக் கழுதைச் சிறுகாய் ஏற்றைப்
புறநிறைப் பண்டத்துப் பொறையசாஅக் களைந்த

*(அகம் 343: 11-13)*

உப்பு, மக்கள் எல்லோருக்கும் பயன்பட்ட இன்றியமையாப் பொருளாக இருந்தபடியால் உப்பு உற்பத்தித் தொழிலும் உப்பு வாணிகமும் சிறப்பாக நடந்தன.

**வளை (சங்கு)**

வளை என்றால் சங்கு என்பது பொருள். கடலில் வளைகள் கிடைத்தன. கிழக்கு மேற்கு தெற்கு ஆகிய மூன்று பக்கங்களிலும் கடல் சூழ்ந்திருந்தபடியால் சங்குகள் அதிக மாகக் கிடைத்தன. முக்கியமாக ஆறுகள் கடலில் கலக்கிற முகத்துவாரங்களில் சங்குகள் கிடைத்தன. கடலில் முழுகிச் சங்குகளை எடுத்தனர். சங்கு முழுகி எடுக்குந் தொழில் பல இடங்களில் நடந்தது. முக்கியமாகப் பாண்டிநாட்டின் கொற்கைக் குடாக்கடலில் சங்குக் குளிப்பும் முத்துக் குளிப்பும் நடைபெற்றன. அக்காலத்தில் தாமிரபரணி ஆறு கொற்கைக் குடாக் கடலில் சென்று விழுந்தது. அங்கு முத்தும் சங்கும் கிடைத்தன. அன்றியும் கொற்கைக் குடாக்கடல் பேர்போன துறைமுகமாகவும் இருந்தது. ரோமாபுரியிலிருந்து வந்த யவன வாணிகர் கடல்வழியாகக் கொற்கைப் பட்டினத்துக்கும் வந்தார்கள். தாலமி என்னும் யவனர் தமது நூலில் கொற்கைத் துறைமுகத்தை Kolkhoi என்று கூறுகிறார். பிற்காலத்தில் கொற்கைக் குடாக் கடல் மணல் தூர்ந்து கிழக்கே ஐந்து மைல் தூரம் அகன்றுவிட்டது. இப்போது கொற்கைக் கடல் இருந்த இடம் மணல் தரையாக இருக்கிறது.

நெய்தல் நிலத்து மக்களான பரதவர் கொற்கைக் கடலில் முழுகி முத்துச் சிப்பிகளையும் சங்குகளையும் (வலம்புரிச்சங்கு, இடம்புரிச்சங்குகள்) எடுத்தனர். அவ்வமயம் முத்துக்குளிக்கிற செய்தியைச் சங்கு ஊதி முழக்கி ஊராருக்குத் தெரிவித்தார்கள்.

இலங்கிரும் பரப்பின் எறிசுறா நீக்கி
வலம்புரி மூழ்கிய வான்திமில் பரதவர்
ஒலிதலைப் பணிலம் ஆர்ப்பக் கல்லெனக்
கலிகெழு கொற்கை (*அகம்* 350: 11-13)

(பணிலம் ஆர்ப்ப - சங்கு முழங்க)

வளைகளை (சங்குகளை) வாளினால் அறுத்து அரத்தினால் அராவி வளையல்களைச் செய்தார்கள். "அரம்போழ் அல்வளை" (*ஐங்குறுநூறு*, நெய்தல் 106), "கடற்கோடு அறுத்த அரம்போழ் அல்வளை" (ஐங்குறு. 194), "கோடீர் எல்வளை" (*ஐங்குறுநூறு*. 196), "கோடீர் இலங்கு வளை" (*குறுந்* 31:5) (கோடு சங்கு). சங்கை அறுத்து வளையல் செய்த தொழில் அந்தக் காலத்தில் சிறப்பாக இருந்தது. சங்கு

அறுக்குந் தொழிலைச் செய்தவர் 'வேளாப் பார்ப்பார்' என்று கூறப்பட்டனர்.

வேளாப் பார்ப்பான் வாள்அரந் துமித்த
வளைகளைந் தொழிந்த கொழுந்து

*(அகம்* 24: 1-2)

வேளாப் பார்ப்பான் என்பதற்கு வெள்ளி செய்யாத பார்ப்பான் என்றும், விசுவப் பிராமணர் என்றும் கம்மாளர் என்றும் இரண்டு வகையாகப் பொருள் கூறுகின்றனர். இது ஆராய்ச்சிக்குரியது. நக்கீரர் சங்கு அறுத்து வளையல் செய்த குலத்தில் பிறந்தவர் என்பது "சங்கறுப்ப தெங்கள் குலம் சங்கரனார்க் கேது குலம்" என்னும் வெண்பாவினால் அறி கிறோம்.

சங்குவளை அணிவதை அக்காலத்துப் பெண்கள் நாகரிக மாகக் கருதினார்கள். அது மங்கலமாகவும் கருதப்பட்டது. மணமகன், தான் மணக்க இருக்கும் மணமகளுக்குச் சங்குவளை கொடுப்பதும் அக்காலத்து வழக்கம். குடில்களில் வாழ்ந்த ஏழைப் பெண்கள் முதலாக அரண்மனைகளில் வாழ்ந்த அரசிகள் வரையில் எல்லாப் பெண்களும் சங்கு வளைகளை அணிந்தார்கள். செல்வச் சீமாட்டிகளும் அரசிகளும் பொன் வளைகளையும் அணிந்ததோடு அல்லாமல் கட்டாயமாகச் சங்கு வளைகளையும் அணிந்திருந்தார்கள். செல்வந்தர் அல்லாத சாதாரண மகளிர் இடம்புரிச் சங்கு வளைகளையும் செல்வந்தர்களான சீமாட்டிகளும் அரசியரும் வலம்புரிச்சங்கு வளைகளையும் அணிந்தார்கள். வலம்புரிச்சங்கு வளை விலையதிகமானது. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுடைய அரசியாகிய பாண்டி மாதேவி கைகளில் தங்க வளைகளை அணிந்திருந்ததோடு வலம்புரிச்சங்கு வளைகளையும் அணிந்திருந்தாள்.

பொலந்தொடி தின்ற மயிர்வார் முன்கை
வலம்புரி வளையொடு கடிகைநூல் யாத்து

*(நெடுநல்வாடை* 141-142)

கைம்பெண்களைத் தவிர மற்ற மங்கையர் எல்லோரும் சங்குவளைகளை அணிந்தபடியால் சங்குவளையறுக்குந் தொழில் அக்காலத்தில் நாடெங்கும் முக்கியமாக இருந்தது. முக்கியமான நகரங்களில் சங்கு அறுக்கும் தொழிற்சாலைகள் இருந்தன. காவிரிப்பூம்பட்டினத்தில் 'அணிவளை போழுநர் அகன் பெருவீதியும்' (*சிலம்பு.* 5: 47) இருந்தது. சேரநாட்டு வஞ்சிமா நகரத்தில்,

இலங்கரம் பொரூஉம் வெள்வளை போழ்நரோடு
இலங்குமணி விளைஞர் இரீஇய மறுகும்
*(மணி.*28: 44-45)

இருந்தது. சங்குவளை சுமங்கலிப் பெண்களுக்கு மங்கல அணியாக இருந்தது. கணவனை இழந்து கைம்பெண் ஆன மகளிர் தங்கள் கைகளில் அணிந்திருந்த சங்கு வளைகளை உடைத்தெறிந்தனர்.

கூந்தல் கொய்து குறுந்தொடி நீக்கி
அல்லி உணவின் மனைவி *(புறம்* 250: 4-5)

கோவலனுடைய மனைவி கண்ணகி தான் அணிந்திருந்த பொன் நகைகளையெல்லாம் (தங்கக் காப்பு உட்பட) விற்ற பிறகும் சங்கு வளையலை மட்டும் அணிந்திருந்தார். அவர் மதுரையில் கோவலனை இழந்து கைம்பெண் ஆன பிறகு கொற்றவை கோயிலின் பின்பு தன்னுடைய சங்கு வளைகளை உடைத்துப் போட்டார்.

கொற்றவை வாயிற் பொற்றொடி தகர்த்து
*(சிலம்பு. கட்டுரை காதை* 181)

('பொற்றொடி - பொலிவினையுடைய சங்குவளை. துர்க்கை கோயில் வாயிலிலே தன் கைவளையைத் தகர்த்து' என்பது அரும்பதவுரை விளக்கம்).

கைம்பெண்களைத் தவிர ஏனைய மகளிர் எல்லோரும் அக்காலத்தில் சங்குவளைகளை அணிந்திருந்தார்கள். இதைச் சங்க இலக்கியங்களில் நெடுகக் காணலாம். சங்குவளை அணியும் வழக்கம் சமீப காலத்தில் மறைந்துவிட்டது. பதினெட்டாம் நூற்றாண்டு முதல் கண்ணாடி வளையல் அணியும் வழக்கம் ஏற்பட்டுவிட்டது. முஸ்லிம் (முகமதியர்) தொடர்பு ஏற்பட்ட பிறகு இந்த மாறுதல் ஏற்பட்டது. தொன்றுதொட்டுப் பல நூற்றாண்டுகளாகத் தமிழகத்திலும் பாரத நாட்டிலும் மகளிர் சங்கு வளைகளையணிந்து வந்த வழக்கம் பிற்காலத்தில் மறைந்து போயிற்று. அந்தக் காலத்தில் சங்கு எடுக்கும் தொழிலும் சங்கு அறுக்கும் தொழிலும் சிறப்பாக நடந்து வந்து, பிற்காலத்தில் மறைந்து போயிற்று.

சங்கு முழங்குவது மங்கலமாகக் கருதப்பட்டது. அக்காலத்து அரசர்களின் அரண்மனைகளில் காலை வேளையில் வலம்புரிச்சங்கும் முரசும் முழங்கப்பட்டன. "இரங்கு குரல் முரசமொடு வலம்புரி ஆர்ப்ப" (*புறம்* 397: 5). இக்காலத்திலும் திருமண வீடுகளிலும் சங்கு முழங்கப்படுகிறது. கோயில்களில்

திருவிழாக் காலத்தில் சங்கு முழங்கப்படுகிறது. ஆனால், தொன்றுதொட்டு மகளிர் சங்கு வளையல் அணிந்துவந்த வழக்கம் அடியோடு மறைந்துவிட்டது.

**கரும்பும் வெல்லமும்**

சங்க காலத்திலே கரும்பும் வெல்லமும் முக்கியமான விவசாயப் பொருளும் உற்பத்திப் பொருளுமாக இருந்தன. கொங்கு நாட்டிலே தகடூர் நாட்டையரசாண்ட அதிகமான் அரசர்களின் முன்னோன் ஒருவன், தேவலோகத்திலிருந்து, கரும்பைக் கொண்டு வந்து தமிழ்நாட்டில் பயிர் செய்தான் என்று கூறப்படுகிறான்.

அமரர்ப் பேணியும் ஆவுதி அருத்தியும்
அரும்பெறல் மரபின் கரும்பு இவண் தந்தும்
நீரக இருக்கை ஆழி சூட்டிய
தொன்னிலை மரபின்நின் முன்னோர் போல

(*புறம்* 99: 1-4)

என்று ஔவையார் கூறுகிறார். அவரே இன்னொரு செய்யுளிலும் இதைக் கூறுகிறார்.

அரும்பெறல் அமிழ்தம் அன்ன
கரும்பு இவண் தந்தோன் பெரும்பிறங் கடையே

(*புறம்* 392: 20-21)

இதனால், கொங்கு நாட்டு அதிகமான் அரசன் ஒருவன் ஏதோ தூரதேசத்திலிருந்து கரும்பைக் கொண்டு வந்து தமிழகத்தில் முதல்முதலாகப் பயிர் செய்தான் என்பது தெரிகிறது.

கரும்பைப் பழனவெதிர் என்றுங் கூறினர் (*ஐங்குறுநூறு* 91). (பழனம் - கழனி. வெதிர் - மூங்கில்). மூங்கில் மலைகளில் செழித்து வளரும். கரும்பு கழனிகளில் செழித்து வளர்கிறது. ஆகவே கரும்பு 'பழனவெதிர்' என்று கூறப்பட்டது. கரும்புப் பாத்திகளைப் பற்றிச் சங்கச் செய்யுள்கள் கூறுகின்றன. பாண்டிநாட்டுச் சிறு மலையில் கரும்பு பயிர் செய்யப்பட்டது.

தமிழகத்தில் எல்லா ஊர்களிலும் கரும்பு பயிர் செய்யப்பட்டது. கரும்பைச் சாறு பிழிந்து காய்ச்சி வெல்லஞ் செய்யும் எந்திரங்களும் ஆலைகளும் ஊர்தோறும் இருந்தன. பாண்டி நாட்டுத் தேனூரில் கரும்புச் சாற்றைப் பிழிந்து வெல்லங் காய்ச்சிய ஆலை இருந்தது. அந்த யந்திரம் இயங்கும் போது யானை பிளிறுவது போல ஓசையுண்டாயிற்று.

கரும்பின் எந்திரம் களிற்றெதிர் பிளிற்றும்
தேர்வண் கோமான் தேனூர் (*ஐங்குறுநூறு* 55)

தொண்டை நாட்டு ஊர்களிலும் வெல்லங் காய்ச்சும் ஆலைகள் இருந்தன.

எந்திரஞ் சிலைக்கும் துஞ்சாக் கம்பலை
விசயம் அடூஉம் புகைசூழ் ஆலைதொறும்
கரும்பின் தீஞ்சாறு விரும்பினிர் பெறுமின்
*(பெரும்பாண்.260-261)*

(விசயம் - வெல்லம்)
ஆலைக் கலமரும் தீங்கழைக் கரும்பே.
(*மலைபடுகடாம்* 119)

மழை கண்டன்ன ஆலைதொறும் ஞெரேரெனக்
கழைகண் உடைக்கும் கரும்பின் ஏத்தமும்
*(மலைபடுகடாம்* 340-341*)*

வெல்லத்தை மக்கள் அதிகமாகப் பயன்படுத்தினபடியால் வெல்லங் காய்ச்சுந் தொழிலும் கரும்பு பயிரிடும் தொழிலும் சிறப்பாக நடந்தன. வெல்லம் உரோம் (Rome) நாடு முதலிய அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டதா என்பது தெரியவில்லை. அக்காலத்தில் ஐரோப்பா கண்டத்தவருக்குக் கரும்பும் வெல்லமும் தெரியாது. உரோமர் இனிப்புக்குத் தேனை மட்டும் பயன்படுத்தினார்கள். ஆனால், தேன் எல்லோருக்கும் கிடைத்திருக்குமா என்பது ஐயமாக இருக்கிறது.

ஐரோப்பியருக்குக் கரும்பும் வெல்லமும் 15ஆம் நூற்றாண்டில்தான் அறிமுகம் ஆயிற்று. அதற்கு முன்பு அவர்களுக்கு சர்க்கரை, வெல்லம் முதலிய கரும்புப் பொருள்கள் தெரியா. 16ஆம் நூற்றாண்டில் ஐரோப்பியர் கரும்பைக் கொண்டு போய் மேற்கிந்தியத் தீவுகளிலும் அமெரிக்காவிலும் பயிர் செய்தார்கள். அவர்கள் அங்கிருந்து வெல்லச் சர்க்கரை காய்ச்சி ஐரோப்பாவுக்கு ஏற்றுமதி செய்தார்கள். பீட்ரூட் கிழங்கிலிருந்து சர்க்கரை காய்ச்சும் முறையை ஐரோப்பியர் கண்டறிந்ததும் 18ஆம் நூற்றாண்டில்தான். எனவே, ஐரோப்பியருக்கு வெல்லச் சர்க்கரை நெடுங்காலமாகத் தெரியாமலிருந்தது. ஆனால், பாரத நாட்டிலும் தமிழகத்திலும் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே வெல்லம் செய்யப்பட்டது. சங்ககாலத்திலே கரும்புப் பயிரும் வெல்லங்காய்ச்சுந் தொழிலும் சிறப்பாக நடந்தன. வெல்லங் காய்ச்சுவது முக்கியமான தொழில்களில் ஒன்றாக இருந்தது.

சங்க காலத்தில் உப்பு உற்பத்தி செய்வதும், வெல்லங் காய்ச்சுவதும், சங்குவளையல் அறுப்பதும் ஆகிய தொழில்

களும் வாணிகங்களும் சிறப்பாக நடந்தன. இவற்றைப் பற்றிய செய்திகளைச் சங்க இலக்கியங்களில் ஆங்காங்கே படிக்கிறோம். இந்த மூன்று வாணிகப் பொருள்களில் சங்கு வளையல் வாணிகம் இக்காலத்தில் முழுவதும் மறைந்து போய்விட்டது. ஆனால் உப்பு வாணிகமும் வெல்லம் சர்க்கரை வாணிபமும் பெருகியிருக்கிறது.

சங்க காலத்தில் நடந்த வேறு கைத்தொழில் வாணிகம் முதலியவற்றைப் பற்றிப் பின்னர் ஆராய்வோம்.

*ஆராய்ச்சி,* மலர் 3, 1971

# வையாவி நாட்டுச் சங்ககாலத்து அரசர்கள்

முருகப் பெருமான் எழுந்தருளியுள்ள ஆறுபடை வீடுகளில் பழனியும் முக்கியமான இடம். மற்றப் படை வீடுகளைப் போலவே பழனியும் மிகப் பழமையானது. சங்ககாலத்திலே பழனி, பொதினி என்று பெயர் பெற்றிருந்தது. பொதினி என்னும் பெயர் பிற்காலத்தில் பழனி என்று மருவி வழங்குகிறது. பழனி (பொதினி)யைச் சூழ்ந்திருந்த நாடு அந்தக் காலத்தில் ஆவிநாடு என்றும் வையாவிநாடு என்றும் பெயர் பெற்றிருந்தது. ஆவிநாட்டையரசாண்ட அரசர் ஆவியர் என்றும் வையாவிக்கோ என்றும் வேள் ஆவி என்றும் பெயர் பெற்றிருந்தனர். மாமூலனார், வேள் ஆவி அரசரையும் அவர்களுடைய பொதினியையும் கூறுகிறார்.

வண்டுபடத் ததைந்த கண்ணி ஒண்கழல்
உருவக் குதிரை மழவர் ஓட்டிய
முருகன் நற்போர் நெடுவேள் ஆவி
அறுகோட் டியானைப் பொதினி (*அகம்* 1: 1-4)

என்றும்,

முழவுறழ் திணிதோள் நெடுவேள் ஆவி
பொன்னுடை நெடுநகர்ப் பொதினி
(*அகம்* 61: 15-16)

என்றும் அவர் கூறுகிறார்.

ஆவிநாட்டில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமானை நக்கீரர், 'ஆவினன்குடி முருகன்' என்று கூறுகிறார். 'ஆவினன் குடி அசைதலும் உரியன்' (*திருமுருகாற்றுப்படை* 176).

பொதினி (பழனி)யும் வையாவி நாடும் இந்தக் காலத்திலே பாண்டி நாட்டிலே மதுரை மாவட்டத்து மதுரைத் தாலுகாவில் இணைந்திருக்கின்றன. சங்க காலத்திலே இவை கொங்கு நாட்டைச் சார்ந்திருந்தன. பழைய கொங்கு நாட்டின் தென்கோடியிலே வையாவி நாடும் பொதினியும் அமைந்திருந்தன.

கடைச்சங்க காலத்திலே வையாவி நாட்டை அரசாண்ட வேள் ஆவிக் கோக்களில் பேர்போன அரசன் பேகன் என்பவன்.

அவனை வையாவிக் கோப்பெரும் பேகன் என்றும் கூறுவர். வையாவிக் கோப்பெரும்பேகன் கடையெழு வள்ளல்களில் ஒருவனாகத் திகழ்ந்தான். புலவர்களுக்கும் மற்றவர்களுக்கும் அவன் பொன்னையும் பொருளையும் வழங்கினான். ஆகவே கபிலர் அவனைக் "கைவண் ஈகைக் கடுமான் பேகன்" (*புறம்* 144) என்று கூறுகிறார்.

மேகம் சூழ்ந்து மழை பெய்கிறபோது மயில்கள் மகிழ்ச்சியினால் தோகையை விரித்து ஆடுவது இயல்பு. மேகத்தைக் கண்டால் மயில்களுக்கு மகிழ்ச்சியுண்டாகும். இந்த இயற்கையின்படி மயில் ஒன்று மழை காலத்தில் தன் தோகையை விரித்து அசைந்து ஆடிற்று. அதனைக் கண்ட வையாவிக் கோப்பெரும்பேகன், அந்த மயில் குளிரினால் நடுங்கி வருந்துகிறது என்று கருதினான். கருதி, அந்த மயிலுக்குப் போர்வையை விரித்துப் போர்த்தினான். மகிழ்ச்சியினால் ஆடுகிற மயிலைக் குளிரினால் நடுங்குகிறது என்று கருதியது அவனுடைய அறியாமை என்று கருதுவதை விட அவனுடைய வள்ளண்மையான அருள் உள்ளத்தைக் காட்டுகிறது என்று கருதுவது சிறப்பாகும். பரணர் அவனுடைய இந்தச் செயலைப் பாராட்டியுள்ளார்.

மடத்தகை மாமயில் பனிக்கும் என்றருளிப்
படாஅம் ஈத்த கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேகன்!

(*புறம்* 145)

இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனாரும் தாம் பாடிய *சிறுபாணாற்றுப்படையில்*, பேகன் மயிலுக்குப் போர்வை யளித்ததைக் கூறுகிறார்.

வானம் வாய்த்த வளமலைக் கவாஅன்
கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய
அருந்திறல் அணங்கின் ஆவியர் பெருமகன்
பெருங்கல் நாடன் பேகனும்

(*சிறுபாண்.* 85-87)

வையாவிக் கோப்பெரும் பேகனுக்குக் கண்ணகி என்ற பெயர் கொண்ட மனைவி ஒருத்தியிருந்தாள். சங்ககாலத்திலே கண்ணகி என்னும் பெயர் மகளிர்க்குப் பரவலாக வழங்கப் பட்டது. கண்ணகி என்பது கண்ணழகி என்பதன் திரிபு.

மகளிரின் கண் அழகைச் சுட்டுகிற பெயர்களை மகளிர்க்குச் சூட்டுவது வழக்கம். இந்த வழக்கம் அக்காலத்திலும் இக்காலத்திலும் இருந்து வருகிறது. கண்ணகி (கண்ணழகி), நக்கண்ணை, காமக்கண்ணி, கயற்கண்ணி, மீனாட்சி, காமாட்சி, விசாலாட்சி, அஞ்சனாட்சி முதலான பெயர்களைச் சூட்டுவது அக்காலத்தும் இக்காலத்தும் உள்ள மரபு. கோவலனுடைய மனைவியின் பெயரும் கண்ணழகியே.

வையாவிக் கோப்பெரும் பேகன் தன்னுடைய மனைவியை விட்டுப் பிரிந்து இன்னொருத்தியோடு வாழ்ந்து வந்தான். இதனையறிந்த புலவர்கள் வள்ளலாகிய இவனிடஞ் சென்று இவனுடைய மனைவியோடு சேர்ந்து வாழும்படி வேண்டினார்கள். கண்ணகி காரணமாக வையாவிக் கோப்பெரும்பேகனைப் பெருங்குன்றூர் கிழார் (*புறம்* 146), கபிலர் (*புறம்* 143), பரணர் (*புறம்* 144, 145), அரிசில்கிழார் (*புறம்* 146) முதலானோர் பாடினார்கள்.

வையாவி நாட்டு அரசர்களில் பேர்போன இன்னொரு வேள் அரசன் பெயர் பதுமன் என்பது. இவனை வேள் ஆவிக் கோமான் பதுமன் என்றும் கூறுவர். வையாவிக் கோமான் பதுமனுக்கு இரண்டு பெண்கள் இருந்தார்கள். அவர்களுக்குத் தேவி என்று பெயரிட்டான். அந்தப் பெண்களைச் சேர அரசர் குலத்தில் மணஞ்செய்து கொடுத்தான். மூத்த மகளைக் குடக்கோ நெடுஞ்சேரலாதன் என்னும் சேர மன்னனுக்கு மணஞ்செய்து கொடுத்தான். இளைய மகளைப் பொறையர் என்னும் சேர மன்னர் மரபைச் சேர்ந்த செல்வக் கடுங்கோ வாழியாதனுக்கு மணஞ்செய்து கொடுத்தான். செல்வக் கடுங்கோ வாழியாதன் கொங்குநாட்டை அரசாண்டான். குடக்கோ நெடுஞ்சேரலாதனும் செல்வக்கடுங்கோ வாழியாதனும் தாயாதிமுறைத் தமயன் தம்பியர் ஆவர். வையாவிக்கோ பதுமனுடைய மகளிரான தமக்கை தங்கையரை இந்தத் தமயன் தம்பிமார் திருமணஞ்செய்து கொண்டு வாழ்ந்தார்கள். எனவே இவர்கள் சமகாலத்தில் வாழ்ந்தவர்கள். ஒவ்வொரு பெண்களும் இரண்டிரண்டு மக்களைப் பெற்றெடுத்தனர். அவர்களுடைய பெயர் களங்காய்க் கண்ணி நார் முடிச்சேரல் (4ஆம் பத்தின் தலைவன்), ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் (6ஆம் பத்தின் தலைவன்), பெருஞ்சேரல் இரும்பொறை (8ஆம் பத்தின் தலைவன்), குட்டுவன் இரும்பொறை என்பவை. இவர்களுடைய வழிமுறை கீழே காட்டப்பட்டுள்ளது.




இவ்வாறு, வேள் ஆவிக் கோமான் பதுமனுடைய இரண்டு பெண்களுக்கு நான்கு அரச குமாரர்கள் பிறந்தனர். ஆனால், பதுமனுடைய மூத்த மகளை மணஞ்செய்திருந்த குடக்கோ நெடுஞ்சேரலாதன் இன்னொரு மனைவியையும் மணஞ் செய்திருந்தான். அந்த மனைவி சோழ அரசன் மகளான நற்சோணை என்பவள். நற்சோணைக்கும் இரண்டு பிள்ளை கள் பிறந்தனர். ஆகவே, குடக்கோ நெடுஞ்சேரலாதனுக்கு இரண்டு மனைவியரிடத்திலும் நான்கு பிள்ளைகள் பிறந்தனர். நற்சோணைக்குப் பிறந்த மக்கள், தமிழக வரலாற்றில் புகழ் பெற்றவனான செங்குட்டுவனும் தமிழில் ஆதிகாவியத்தை இயற்றிப் புகழ் பெற்றவரான இளங்கோவடிகளும் ஆவர். குடக்கோ நெடுஞ்சேரலாதனுடைய வழி முறையைக் கீழே காண்க.




இவர்களில் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலும் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனும் செங்குட்டுவனுக்கும் இளங்கோவடிகளுக்கும் (மாற்றாந்தாய் வழித்) தமயன் தம்பியர் ஆவர். தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையும்

குட்டுவன் இரும்பொறையும் இவர்களுக்குத் தாயாதிச் சகோதரர் ஆவர். இந்தச் சகோதரர் எல்லோரும் ஏறத்தாழச் சமகாலத்தில் (கி. பி. இரண்டாம் நூற்றாண்டில்) வாழ்ந்தவர்கள். இவர்களில் இளங்கோவடிகளும் குட்டுவன் இரும்பொறையும் தவிர மற்றவர் எல்லோரும் *பதிற்றுப்பத்தின்* ஒவ்வொரு பத்துக்குத் தலைவர் ஆவர். இவர்களில் அதிககாலம் அரசாண்டவன் கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன். இவன் ஐம்பத்தைந்து ஆண்டு அரசாண்டான். இவனுடைய மற்றச் சகோதரர்கள் எல்லோரும் இவனைவிடக் குறைந்த காலம் அரசாண்டார்கள். இவனுடைய தமயனான களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் இருபத்தைந்து ஆண்டு அரசாண்டான். தம்பியாகிய ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் முப்பத்தெட்டு ஆண்டும் தாயாதித் தமயனான பெருஞ்சேரல் இரும்பொறை பதினேழு ஆண்டும் அரசாண்டார்கள். இவர்கள் எல்லேரையும் விட அதிகக் காலம் (55 ஆண்டு) அரசாண்டவன் செங்குட்டுவன் ஒருவனே.

சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குப் பத்தினிக் கோட்டம் அமைத்துச் சிறப்புச் செய்தான். அவன் விழாச் செய்தது அவனுடைய ஐம்பதாம் ஆட்சி ஆண்டில் என்று *சிலப்பதிகாரம்* கூறுகிறது. அந்த விழாவைச் சிறப்புச்செய்ய அயல்நாடுகளிலிருந்து சில அரசர்கள் வந்திருந்தனர் என்றும் அவர்களில் இலங்கை அரசனான கயவாகுவும் (கஜபாகுவும்) ஒருவன் என்றும் *சிலப்பதிகாரம்* கூறுகிறது. 'கடல் சூழ் இலங்கைக் கயவாகு (கஜபாகு) வேந்தன்' கி.பி. 171 முதல் 193 வரையில் இருபத்திரண்டு ஆண்டு இலங்கையை அரசாண்டான் என்று *மகாவம்சம்* என்னும் நூல் கூறுகிறது. எனவே, கஜபாகுவும் செங்குட்டுவனும் சமகாலத்தில் இருந்தவர் என்று தெரிகின்றனர். கஜபாகு ஏறத்தாழ கி.பி.175-ல் வஞ்சிமா நகரத்துக்கு வந்து பத்தினி விழாவைச் சிறப்புச் செய்தான் என்று கொள்வோமானால், அந்த ஆண்டு செங்குட்டுவனுடைய ஐம்பதாவது ஆட்சியாண்டாக அமைகிறது. செங்குட்டுவன் 55ஆண்டு ஆட்சி செய்தபடியால், அவன் கி. பி. 175க்குப் பிறகு ஐந்து ஆண்டு ஆட்சி செய்து கி. பி. 125 முதல் 180 வரையில் அரசாண்டான் என்று கருதலாம். இதில் இவனுடைய இளவரசுக் காலமும் சேர்ந்தது.

செங்குட்டுவனுடைய தந்தையான நெடுஞ்சேரலாதன் ஐம்பத்தெட்டு ஆண்டு அரசாண்டான், ஆகையால் அவன் ஏறத்தாழ கி.பி. 72 முதல் 130 வரையில் அரசாண்டிருக்கலாம். நெடுஞ்சேரலாதனுக்குப் பெண் கொடுத்த மாமனாகிய வேள் ஆவிக்கோ பதுமன் அவனைவிட மூத்தவனானபடியால் அவன்

ஏறத்தாழ கி. பி. 20 முதல் 80 வரையிலும் வாழ்ந்தவனாதல் வேண்டும் என்று கருதலாம். ஆகவே வேள் ஆவிக்கோ பதுமன் கி.பி. முதல் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து இரண்டாம் நூற்றாண்டின் முற்பாதிவரையிலும், அவன் மகனான சேரன் செங்குட்டுவன் கி.பி. இரண்டாம் நூற்றாண்டிலும் வாழ்ந்த வர்கள் எனக் கருதலாம்.

வையாவிக்கோ மன்னர்களைப் பற்றி இவ்வளவுதான் சங்க நூல்களிலிருந்து தெரிகின்றன. அவர்கள், சங்ககாலத்தில் கொங்கு நாட்டின் தென் பகுதியைச் சேர்ந்திருந்த வையாவி நாட்டை அரசாண்டார்கள் என்றும் சேர அரசரோடும் கொங்குச் சேரரோடும் உறவு கொண்டிருந்தனர் என்றும் தெரிகின்றனர். சங்ககாலத்துக்குப் பிறகு வையாவி நாடும் பொதினி நகரமும் பாண்டியர் ஆட்சிக்குட்பட்டுப் பாண்டிய நாட்டோடு இணைந்துவிட்டன. கடைச்சங்க காலத்தில் பொதினி என்று பெயர் பெற்றிருந்த நகரம் இப்போது பழனி என்று புகழ் பெற்று விளங்குகிறது. இந்த வரலாறுகளைச் சங்கநூல் களிலிருந்து அறிகிறோம்.

*பழனி அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்*
*திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா சிறப்பு மலர்,* 02–11–1973

# இலக்கியத்தில் நடுகல்

உலகத்திலே எல்லா நாடுகளிலும் வீரர்களைப் போற்றினார்கள். எல்லா நாட்டிலும் வீரர்களுக்குத் தனிச்சிறப்பு இருந்தது. பழந்தமிழ் நாட்டிலே வீரர்களுக்குத் தனிச்சிறப்பு இருந்தது. பழந்தமிழர் போரைப் பற்றித் தனி இலக்கணம் எழுதினார்கள். போரைப் பற்றிய இலக்கியங்களும் இருந்தன. அவற்றிற்குப் புறப்பொருள் என்று பெயரிட்டிருந்தார்கள். *தொல்காப்பியம்*, *புறப்பொருள் வெண்பாமாலை* என்னும் இலக்கண நூல்களும், *புறநானூறு* போன்ற இலக்கிய நூல்களும் தமிழில் உண்டு. போர் முறையை ஏழு விதமாகப் பிரித்திருந்தார்கள். நிரை (பசு மந்தை) கொள்ளுதல் வெட்சி என்றும், நிரைமீட்டல் கரந்தை என்றும் பெயர் பெற்றன. நாட்டைப் பிடிக்க ஓர் அரசன் படையெடுத்துப் போருக்கு வரும்போது அவனை எதிர்த்துப் போர் செய்து தன் நாட்டைக் காப்பாற்றுவான், அந்த நாட்டரசன். இவ்விரு அரசருக்கும் நடக்கும் போருக்கு வஞ்சிப்போர் என்பது பெயர். ஓர் அரசன் பகையரசனுடைய கோட்டைமேல் படையெடுத்துச் சென்று கோட்டை மதிலைச் சூழ்ந்து முற்றுகையிடுவது உழிஞைப் போர் என்று பெயர் பெற்றது. முற்றுகையிடப்பட்ட மதிலுக்குள்ளிருக்கும் அரசன் கோட்டைக்குள்ளிருந்து போர் புரிவது நொச்சிப்போர் என்று பெயர் பெற்றது. இரண்டு அரசர்கள் தம்முடைய வீரத்தைக் காட்டப் போர் செய்வது தும்பைப்போர் என்று பெயர் பெற்றது. இவற்றைத் தவிர வாகைப்போர் என்று ஒரு வகைப் போர் உண்டு. இது அரசர், போர் வீரர்களுக்கு மட்டுமல்லாமல் இசை பாடுதல், யாழ் வாசித்தல், நாட்டியம் ஆடுதல், சேவல் போர், காடைப் போர், தகர் (ஆடு) போர் முதலிய ஏனையோருக்கும் பொதுவானது. இவ்வாறு பலவகையான போர்முறைகள் பழந்தமிழ் நாட்டில் இருந்தன. போர்க்காலங்களிலே வீரப்போர் செய்து பின் வாங்காமல் உயிர் நீத்த வீரர்களுக்கு நடுகல் நட்டு அவ்வீரர்களுக்குச் சிறப்புச் செய்தார்கள். வீரக்கல் நடுகிற வழக்கம் மிகப் பழங்காலந் தொட்டு இருந்தது. பழங்காலத்தில் நடப்பட்ட ஆயிரக்கணக்கான நடுகற்கள் தமிழ்நாட்டிலே பல இடங்களிலே காணக் கிடக்கின்றன. தொல் பொருள் ஆய்வுத்

துறையினர் நடுகற்கள் பலவற்றைக் கண்டுபிடித்து அவற்றைப் படி எடுத்து வெளியிட்டிருக்கிறார்கள். இன்னும் பல நூற்றுக் கணக்கான நடுகற்கள் கண்டுபிடிக்கப்படாமலேயுள்ளன.

*தொல்காப்பியப்* பொருளதிகாரப் புறத்திணையியலில் போரில் மடிந்த வீரர்க்கு நடுகல் நடுவது பற்றி இவ்வாறு கூறப்படுகிறது:

காட்சி கால்கோள் நீர்ப்படை நடுதல்
சீர்த்த மரபின் பெரும்படை வாழ்த்தலென்று
இருமூன்று மரபின் கல்

போரில் இறந்த வீரனுக்கு நடுகல் நட்டு அவனுடைய வீரத்தைப் போற்றினார்கள். அதற்குரிய கல்லை, மலைக்குச் சென்று தேர்ந்தெடுத்து அதைக் கொண்டுவந்து நீரில் இட்டு நீர்ப்படை செய்து பிறகு அந்த வீரனுடைய பெயரையும் புகழையும் அக்கல்லில் எழுதி, அதை நடவேண்டிய இடத்தில் நட்டு நாட்டு மக்கள் எல்லோரும் சேர்ந்து சிறப்புச் செய்து வாழ்த்துவார்கள். இவை ஐந்தும் நடுகல் நடுவதற்குரிய ஐந்து துறைகளாகும்.

(மேற்சொன்ன தொல்காப்பியச் சூத்திரத்தில் 'சீர்த்த மரபில் பெரும்படை' என்று ஒரு தொடர் கூறப்படுகிறது. பெரும்படை என்பது போர்க் காலத்தில் மடிந்துபோன அரசனுக்கு எடுக்கப்படுகிற பள்ளிப்படை இது பற்றி இங்கு ஆராய்ச்சி இல்லை. வடக்கிருந்து (பட்டினி கிடந்து) உயிர் விட்டவருக்கும் கண்ணகி போன்ற வீரபத்தினிக்கும் நடுகல் நட்டுச் சிறப்புச் செய்வதும் உண்டு. கணவனோடு தீயில் விழுந்து உடன் கட்டையேறின மகளிர்க்கும் நடுகல் நடுவது உண்டு. இது மாஸ்திக்கல் (மாசதிக்கல்) என்று பெயர் பெறும். இந்த வகையான நடுகற்களைப் பற்றியும் இங்கு ஆராய்ச்சி இல்லை.)

பகைவருடைய (மாற்றாருடைய) ஊரில்போய் அங்குள்ள தொறுக்களைக் (எருமை, பசு மந்தைகளை) கவர்ந்து கொண்டு வருவது பழந்தமிழகத்தில் அடிக்கடி நடந்த சாதாரண நிகழ்ச்சி. இது களவுக் குற்றமாகக் கருதப்படவில்லை. இந்த வெட்சிப் போரைச் சிற்றரசர்களும் வீரத்தில் சிறந்த மறவர்களும் அரசர்களுங்கூடச் செய்தார்கள். முள்ளூர் மன்னன் (மலையமான் திருமுடிக்காரி) இரவில் குதிரை மேல் சென்று அயலூரிலிருந்த ஆனிரைகளைக் கவர்ந்து கொண்டு வருவது வழக்கம். இதைக் கபிலர் கூறுகிறார்.

மாயிரு முள்ளூர் மன்னன் மாவூர்ந்து
எல்லித் தரீஇய இனநிரை *(நற்றிணை. 291: 7-8)*

செங்குட்டுவனுடைய தம்பியாகிய ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், தண்டாரணிய நாட்டில் (விந்திய மலைப்பிரதேசத்தில்) சென்று பகைவருடைய வருடைப்பசுக்களைக் கவர்ந்து கொண்டு சேரநாட்டுத் தொண்டிப் பட்டினத்தில் கொண்டு வந்து பலருக்குக் கொடுத்தான் என்று *பதிற்றுப்பத்தில்* 6ஆம் பத்துப் பதிகம் கூறுகிறது.

பகைவர் கொண்டு போன ஆனிரைகளை மீட்பதற்காக நடந்த கரந்தைப் போரில் ஒரு வீரன் போர் செய்து ஆனிரைகளை மீட்டான். ஆனால், அவன் வெற்றியடைந்த போதிலும் அவன் பகைவரின் அம்புகளினால் இறந்து போனான். இதை ஒக்கூர் மாசாத்தியார் கூறுகிறார்.

கெடுக சிந்தை கடிது இவள் துணிவே
மூதில் மகளிர் ஆதல் தகுமே
மேனாளுற்ற செருவிற்கு இவள் தன்ஐ
யானை யெறிந்து களத் தொழிந்தனனே
நெருநல் உற்ற செருவிற்கு இவள் கொழுநன்
பெருநிரை விலங்கி யாண்டுப் பட்டனனே.
இன்றும், செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிது விரித் துடீஇப்
பாறு மயிர்க் குடுமி எண்ணெய்நீவி
ஒருமகன் அல்லது இல்லோள்
செருமுகம் நோக்கிச் செல்கென விடுமே *(புறம் 279)*

வெட்சி வீரர் கவர்ந்து கொண்டுபோன ஆனிரைகளை மீட்பதற்காகக் கரந்தை வீரர் செய்யும் போர் கடுமையானது. ஆனிரைகளைக் கவர்ந்து கொண்ட வெட்சி வீரர் எளிதில் ஆனிரைகளை விட்டுக் கொடுக்க மாட்டார்கள். கடுமையாகப் போர் செய்து கரந்தை வீரர்களைக் கொல்வார்கள். வெட்சி வீரரிடமிருந்து ஆனிரைகளை மீட்கும் கரந்தை வீரர், கடலுக்குள் புகுந்து மறைந்த மண்ணுலகத்தைப் பெருமுயற்சி செய்து மீட்டெடுத்த வராகப் பெருமாளுக்கு உவமை கூறப்படுகின்றனர்.

கடல் புக்கு மண்ணெடுத்து காரேனக் கோட்டின்
மிடல் பெரிதெய்தின மாதோ - தொடலைக்
கரந்தை மறவர் கருதாதார் உள்ளத்
துரந்து நிரைமீட்ட தோள் *(பெரும்பொருள் விளக்கம்)*

கரந்தைப் போரில் வெற்றியோடு உயிர்விட்ட வீரர்களுக்காக எடுக்கப்பட்ட நடுகற்கள் ஏராளமாக உள்ளன. அவர்களைப் பற்றிய செய்யுட்களும் இலக்கியங்களில் பல உள்ளன. அச்செய்யுட்களையெல்லாம் இங்குக் காட்ட வேண்டுவது

இல்லை. ஆனால், ஒரு செய்யுளை மட்டும் கூறி மேற் செல்லுவோம். வடமோதங்கிழார், கரந்தைப் போரில் ஒரு வீரன் ஆனிரைகளைப் பகைவரிடமிருந்து மீட்டின பின்பு அவனுடைய உடல் முழுவதும் பகைவருடைய அம்பு தைத்து அவன் இறந்து போனதைக் கூறுகிறார். சந்திர கிரகணத்தின் போது, முழு நிலாவைப் பாம்பு விழுங்கிவிட, அதன் வாயிலிருந்து சந்திரன் மிக அரிதின் முயன்று வெளிப்பட்டது போல, அந்த வீரன் தன் ஊர் ஆனிரைகளைப் பகை வீரரிடமிருந்து கடும் போர் செய்து மீட்டுக் கொண்டான். ஆனால், அந்தோ! அவன் உடம்பு முழுவதும் பகை வீரர்கள் எய்த அம்புகள் தைத்து விட்டன. அவன் உயிரானது பாம்பு தன் தோலை உரித்துப் போட்டுவிட்டுப் போய்விட்டது போல, அவனுடைய உடம்பை விட்டுப் பிரிந்து வீரசுவர்க்கத்துக்குப் போய்விட்டது. உயிர் போய்விட்டபடியால், அவனுடைய உடம்பு, அம்புகள் தைத்த இலக்கு மரம்போலக் காணப்பட்டது. அவனுடைய பெயரும் புகழும் அவனுடைய நடுகல்லில் எழுதப்பட்டு விளங்கிற்று என்று அப்புலவர் அழகான ஒரு செய்யுளில் கூறுகிறார்.

முன்னூர்ப் பூசலின் தோன்றித் தன்னூர்
நெடுநிரை தழீஇய மீளியாளர்
விடுகணை நீத்தம் துடிபுணை யாக
வென்றி தந்து கொன்று கோள்விடுத்து
வையகம் புலம்ப வளைஇய பாம்பின்
வையெயிற் றுய்ந்த மதியின் மறவர்
கையகத் துய்ந்த கன்றுடைப் பல்லான்
நிரையொடு வந்த உரையன் ஆகி
உரிகளை அரவம் மானத் தானே
அரிது செல் உலகிற் சென்றனன் உடம்பே,
கானச் சிற்றியாற்று அருங்கரைக் காலுற்றுக்
கம்பமொடு துளங்கிய இலக்கம் போல
அம்பொடு துளங்கி ஆண்டொழிந் தன்றே
உயர் இசை வெறுப்பத் தோன்றிய பெயரே
மடஞ்சால் மஞ்ஞை அணி மயிர் சூட்டி
இடம்பிறர் கொள்ளாச் சிறுவழிப்
படஞ்செய் பந்தர்க் கல்மிசை யதுவே *(புறம் 260: 12-28)*

(குறிப்பு: இச்செய்யுளில், 'கம்பமொடு துளங்கிய இலக்கம்' என்பது இலக்கு மரத்தை. வீரர்கள் குறி தவறாமல் அம்பு எய்து பழகுவதற்காக, உயரமாக வளர்ந்த இலவம் பஞ்சுமரம், முருக்கமரம் போன்ற மரங்களைத் தேர்ந்தெடுத்து அந்த

மரங்களின் கிளைகளையெல்லாம் வெட்டிவிட்டு நடுமரத்தை மட்டும் விட்டுவைப்பார்கள். அந்த உயரமான மரத்தின் ஓரிடத்தைக் குறியாக வைத்துக்கொண்டு வில்லிலிருந்து அம்பு எய்து பழகுவார்கள். அம்மரத்தின்மேல் வேல் எறிந்தும் பழகுவார்கள். 'வென் வேல், இளம்பல் கோசர் விளங்கு படை கன்மார், இகலினர் எறிந்த அகலிலை முருக்கின், பெருமரக் கம்பம்' என்று காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் *புறம்* 169இல் இதனைக் கூறுவது காண்க. இந்த இலக்குக் கம்பத்தில் பல அம்புகள் தைத்துக் கொண்டிருப்பதுபோல, ஆனிரைகளை மீட்ட வீரன் உடம்பில் பகைவீரர் எய்த அம்புகள் தைத்திருந்தன. வடமோதங்கிழார், இலக்குக் கம்பத்தில் அம்புகள் தைத்துக் கொண்டிருப்பதுபோல, வீரனுடைய உடம்பில் அம்புகள் தைத்துக் கொண்டிருந்தன என்று கூறுவது வெறுங் கற்பனை அன்று. வட ஆர்க்காடு மாவட்டம் திருவண்ணாமலைத் தாலுகாவைச் சேர்ந்த செங்கம் என்னும் ஊரில் உள்ள நடுகற்கள் இரண்டில், தொறு மீட்டு இறந்து போனவர் உடம்பில் அம்புகள் தைத்திருப்பது போன்று சிற்ப உருவம் காணப்படுகின்றன.

மகாபாரதத்தில் விராடபர்வத்தில் தொறு கவர்தலும், தொறு மீட்டலும் கூறப்படுகிறது. துரியோதனனுடைய வீரர்கள் விராடதேசத்துக்கு வந்து அந்தத் தேசத்தின் பசுமந்தைகளை ஓட்டிக் கொண்டு போனார்கள். அப்போது அங்குப் பேடியின் உருவத்தோடு அஞ்ஞாதவாசஞ் செய்திருந்த அர்ச்சுனன், உத்தரகுமரனைத் தேரில் ஏற்றிக் கொண்டு போய்ப் போர் செய்து ஆனிரைகளை மீட்டுக் கொண்டு வந்தான் என்று மகாபாரதம் கூறுகிறது.

கரந்தைப் போரில் தொறு மீட்கச் சென்றவர் பகைவருடைய அம்புக்கு அஞ்சித் திரும்பிவருவதும் உண்டு. ஆனால் அவர்களை நாட்டு மக்கள் மதிக்கமாட்டார்கள். தொறுவை மீட்காமல் பகைவருடைய அம்புக்கு அஞ்சிப் புறங்காட்டி ஓடிவந்த 'வீரர்களை'த் திருத்தக்கதேவர் புகழ்வது போல இகழ்ந்து நகைக்கிறார். இராசமாபுரத்திலிருந்து பசு மந்தைகளை அயல் நாட்டு மறவர்கள் வந்து கவர்ந்து கொண்டு போனார்கள். இதை அறிந்த அரசன் கட்டியங்காரன், தன்னுடைய பிள்ளைகளை அழைத்து மறவர்கள் கவர்ந்து கொண்டு போன ஆனிரைகளை மீட்டுக் கொண்டு வருமாறு ஏவினான். அவர்கள் சென்று மறவர்களுடன் போர் செய்தார்கள். ஆனால் மறவர்கள் எய்த அம்புக்கு ஆற்றாமல் போர்க்களத்திலிருந்து ஓடி வந்துவிட்டார்கள். இந்தச் செய்தியைச் சிலர் அரசனிடம் சென்று தெரிவித்தார்கள். அரசனுடைய மக்கள் தோற்று ஓடிவந்துவிட்டதை வெகுநயமாகக் கூறினார்கள்.

வம்புகொண் டிருந்த மாதர்
வனமுலை மாலைத் தேன்சோர்
கொம்புகொண் டன்ன நல்லார்
கொழுங்கயல் தடங்கண் போலும்
அம்புகொண் டரசர் மீண்டார்
ஆக்கொண்டு மறவர் போனார்
செம்புகொண் டன்ன இஞ்சித்
திருநகர்ச் செல்வ! என்றார்.

(*சீவகசிந்தாமணி*, கோவிந்தையர் இலம்பகம் 31)

இதில், 'அம்பு கொண்டரசர் மீண்டார், ஆக்கொண்டு மறவர் போனார்' என்பது படித்துப்படித்து இன்புறத்தக்கது.

போரிலே பின் வாங்காமல் வீரப்போர் செய்து உயிர் விட்டவர்களின் உயிர் விண்ணுலகஞ்சென்று வீரசுவர்க்கத்தைச் சேர்கிறது என்றும் அந்த வீரசுவர்க்கத்தில் அவர்கள் இன்பம் அனுபவித்துக் கொண்டு சுகமாக வாழ்கிறார்கள் என்றும் அக்காலத்தில் மக்கள் நம்பினார்கள். குடக்கோ நெடுஞ்சேரலாதனும், சோழன் வேற்பஃறடக்கை பெருவிறற்கிள்ளியும் 'போர்' என்னும் ஊரில் போர் செய்தார்கள். அந்தப் போரில் இரண்டு பேரும் உயிர் விட்டார்கள். இறந்துபோன அவர்கள் 'அரும்பெறல் உலகத்தை' யடைந்தார்கள் என்று கழாத்தலையார் என்னும் புலவர் (*புறம்* 62) கூறுகிறார்.

வாடாப் பூவின் இமையா நாட்டத்து
நாற்ற உணவினோரும் ஆற்ற
அரும்பெறல் உலகம் நிறைய
விருந்து பெற்றனரால்

(*புறம்* 62: 16-19)

*சீவகசிந்தாமணி* மண்மகள் இலம்பகத்தில், வீரப்போர் செய்து மாண்டவர் வீரசுவர்க்கம் அடைகிறார்கள் என்று கூறப்படுகிறது. விபுலனும் வேறு ஒரு வீரனும் போர்செய்த போது அந்த வீரன் வீரமரணம் அடைந்தான். அப்போது அரமங்கையர் அவன் மேல் மலர்மாரி சொரிந்து தொழுது வீரசுவர்க்கத்துக்கு அழைத்துச் சென்றார்கள் என்று *சிந்தாமணிக்* காவியம் கூறுகிறது.

எரிந்தார் அயில் இடைபோழ்ந்தமை உணராதவன்
நின்றான்
சொரிந்தார் மலர் அரமங்கையர் தொழுதார்விசும்
படைந்தான்

(*சீவகசிந்தாமணி*, மண்மகள் 164)

என்னும் செய்யுளும்

தற்புறந் தந்து வைத்த தலைமகற் குதவி வீந்தால்
கற்பக மாலை சூட்டிக் கடியர மகளிர்த் தோய்வர்
பொற்றசொன் மாலை சூட்டிப் புலவர்கள் புகழக்
கன்மேல்
நிற்பர்தம் வீரந் தோன்ற நெடும்புகழ் பரப்பி என்றான்

*(சீவகசிந்தாமணி,* மண்மகள் 201)

என்னும் செய்யுளும் போரில் மடிந்த வீரர், வீரசுவர்க்கம் போகிறார் என்பதைக் கூறுகின்றன.

சில நடுகற்களிலே கீழ்ப்பகுதி, மேல்பகுதிகளாக இரண்டு சிற்ப உருவங்கள் அமைக்கப்பட்டுள்ளன. கீழ்ப்பகுதி சிற்பம், போர் வீரன் போர் செய்வது போன்று காணப்படுகிறது. அந்தச் சிற்பத்துக்கு மேலேயுள்ள சிற்பம், அந்த வீரன் போரில் இறந்த பிறகு வீரசுவர்க்கம் சென்று, அங்கு அரமங்கையரோடு இருப்பதைக் குறிக்கின்றன. இவை, வீரமரணம் அடைந்த வீரன், வீரசுவர்க்கம் சென்று இன்பம் அனுபவிக்கிறான் என்னும் கருத்தைப் புலப்படுத்துகின்றன.

முன்பு சொன்னது போல நடுகற்களைப் பற்றித் தமிழ் இலக்கியங்களிலே பல குறிப்புகள் காணப்படுகின்றன. ஏட்டிலே கூறப்படுகிற நடுகற்களைப் போலவே, நாட்டிலும் நடுகற்கள் காட்சியளிக்கின்றன.

அறுபத்து மூன்று சிவனடியார்களில் ஒருவராகிய சேரமான் பெருமாள் நாயனார் தாம் பாடிய *திருவாரூர் மும்மணிக் கோவையில்,* "பட்டோர் பெயரும் ஆற்றலும் எழுதி நட்டக்கல்லும்" என்று நடுகல்லைக் கூறுகிறார்.

*Seminar on Hero Stones,*
R.Nagasamy (Editor),
The State Department of Archaeology, Govt. of Tamil Nadu, 1974.

# இராமேசுவரத் தீவு

இராமேசுவரம் என்னும் இச்சிறு தீவு முற்காலத்தில் இராமநாதபுரத்தோடு இணைந்து ஒரே நிலமாக இருந்து பிறகு சிறு தீவாக மாறிற்று என்னும் வரலாறு பலருக்குத் தெரியாது. இச்செய்தி பலருக்கு வியப்பாக இருக்கும். ஆனால், இராமேசுவரத் தீவும் இராமநாதபுரமும் ஒரு காலத்தில் இணைந்திருந்தது என்பது உண்மை.

தென்னிந்தியாவின் கடற்கரை ஓரங்கள் எக்காலத்திலும் ஒரே மாதிரியாக இருந்ததில்லை. கடற்கோள்களினாலும் கடல் அரிப்பினாலும் நமது நாட்டுக் கடற்கரைப் பக்கங்களில் எத்தனையோ மாற்றங்கள் நெடுங்காலமாக நடந்துள்ளன. இன்றும் நடந்து கொண்டிருக்கிறது. இப்போது பாண்டிய நாட்டுக்கு அருகில் இருக்கிற இலங்கைத்தீவு முன்னொரு காலத்தில், பல்லாயிர ஆண்டுகளுக்கு முன்னே தமிழகத்தோடு இணைந்து ஒரே நிலமாக இருந்தது. இந்தப் பெரிய நிலப்பரப்பு, பல்லாயிர ஆண்டுகளுக்கு முன்னே கடற்கோளினாலும் கடல் அரிப்பினாலும் சிறிதுசிறிதாகச் சிதைந்து போய்க் கடைசியில் தனித் தீவாகப் பிரிந்து போய் பிற்காலத்தில் இலங்கைத் தீவாக மாறிப்போயிற்று. நில ஆராய்ச்சி செய்யும் அறிஞர்கள் இந்த வரலாற்றுச் செய்தியைக் கூறுகிறார்கள். இலங்கை, தனித் தீவாகப் பிரிந்துபோன பிறகுங்கூட, கொழும்புக்குத் தெற்கேயுள்ள கடலோரங்களில் கடல் கொந்தளிப்பு ஏற்பட்டு அந்தப் பகுதி நிலங்கள் கடலில் முழுகிப்போயின என்று *மகாவம்சம்* என்னும் இலங்கை வரலாற்று நூல் கூறுகிறது.

கன்னியாகுமரி இப்போது தமிழகத்தின் தெற்கெல்லை யாக அமைந்திருக்கிறது. பல நூற்றாண்டுகளுக்கு முன்னே, கன்னியாகுமரிக்குத் தெற்கே ஒரு நிலப்பரப்பு தமிழகத்தோடு இணைந்திருந்தது. அந்த நிலப்பரப்பு ஏறத்தாழ இரண்டு மாவட்டங்கள் (ஜில்லாக்கள்) அளவு இருந்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. அந்த நிலப்பரப்பு பிற்காலத்தில் கடற்பெருக்கினாலும் கடல் அரிப்பினாலும் பையப்பையக் கடலில் முழுகிப் போய்விட்டது. அந்த நிலப்பரப்பு முதல் தடவை ஏற்பட்ட கடல் கொந்தளிப்பினால் ஒரு பகுதி மறைந்துபோய், எஞ்சியிருந்த இன்னொரு பகுதி நிலம்

மற்றுமொரு கடற் பெருக்கினால் மறைந்து போயிற்று. இந்த வரலாற்றுச் செய்தியைச் *சிலப்பதிகாரமும் கலித்தொகையும்* கூறுகின்றன. *இறையனார் அகப்பொருள் உரைப்பாயிரமும்*, கடற்கோள்களினால் முழுகிப்போன இந்த நிலங்களைக் கூறுகிறது.

திருப்பதி என்னும் திருவேங்கடமலையை எல்லோரும் அறிவார்கள். வேங்கடமலையைச் சூழ்ந்திருக்கும் நாடுகளுக்கு வேங்கடக் கோட்டம் என்பது பழைய பெயர். இந்த வேங்கடக் கோட்டத்துக்குக் கிழக்கே கடற்கரையோரமாகப் பவத்திரிக் கோட்டம் என்னும் ஒரு நிலப்பரப்பு இருந்தது. பவத்திரிக் கோட்டம் ஒரு ஜில்லா (மாவட்டம்) அளவுள்ள நிலம். இந்தப் பவத்திரி நாட்டை 1800 ஆண்டுகளுக்கு முன்பு இருந்த நக்கீரர் *அகநானூறு* 340-ம் செய்யுளில் கூறுகிறார். இந்தப் பவத்திரிக் கோட்டம் கி. பி. 11-ம் நூற்றாண்டில் கடலில் முழுகிப் போயிற்று. கடலில் முழுகிப்போன பவத்திரிக் கோட்டம் இப்போது திருவேற்காடு ஏரி என்று பெயர் பெற்றுப் பெரும் நீர்ப்பரப்பாக இருக்கிறது. பவத்திரிக் கோட்டம் இருந்ததையும் அதுகடலில் முழுகிப் போனதையும் பிற்காலத்துச் சோழ அரசர்களின் கல்வெட்டுக்கள் கூறுகின்றன. பவத்திரிக் கோட்டத்தில் இருந்த ஊர்களில் ஒன்று காகந்தி என்பது. இதைக் 'கடல்கொண்ட காகந்தி' என்று சோழர் கல்வெட்டுகள் கூறுகின்றன. நெடுங்காலமாகத் தொண்டை நாட்டின் கடற்கரையோரமாக இருந்த பவத்திரிக் கோட்டம் கடலில் முழுகிப்போய் இப்போது திருவேற்காடு ஏரியாக மாறிப்போய் விட்டது. இந்த ஏரியின் தென்பகுதி இப்போது தமிழக அரசாட்சிக்குட்பட்டும் வடபகுதி ஆந்திர அரசுக்குட்பட்டும் இருக்கின்றன.

தமிழகத்தின் தெற்கே பாண்டிநாட்டிலே கிழக்குக் கடற்கரையையடுத்து, கொற்கைக் குடாக் கடல் இருந்தது. கொற்கைக் குடாக் கடல் நிலத்தில் புகுந்து உள்கடலாக அமைந்திருந்தது. கொற்கைக் குடாக் கடலின் மேற்கே கொற்கைப்பட்டினம் இருந்தது. இது துறைமுகப்பட்டினமாகவும் முத்துக் குளிக்கும் இடமாகவும் இருந்தது. கொற்கை நகரத்தைப் பற்றிச் சங்கப்பாடல்கள் சிறப்பாகக் கூறுகின்றன. தாமிரபரணி ஆறு அக்காலத்தில் கொற்கைக் குடாக் கடலில் சென்று விழுந்தது. கடற்கரையிலிருந்து ஐந்து மைல் தூரம் உள்புகுந்து உள்நாட்டுக் கடலாக இருந்த கொற்கைக் குடாக் கடல் பிற்காலத்தில், ஏறத்தாழக் கி. பி. 10-ம் நூற்றாண்டில் மண் மூடி மறைந்துபோய் விட்டது. கடற்கரைப் பக்கமாகக் கடல் அலைகள் மணலைக் கொண்டுவந்து கொற்கைக்

குடாக்கடலின் ஒரு புறத்தைத் தூர்த்துவிட்டது. தாமிரபரணி ஆறு மணலை அடித்துக் கொண்டு வந்து கொற்கைக் குடாக்கடலின் இன்னொரு புறத்தைத் தூர்த்து விட்டது. இவ்வாறு இருபுறமும் மணல் தூர்ந்து கொற்கைக் குடாக் கடல் அடியோடு மறைந்துபோய் இப்போது அது இருந்த இடம் நிலமாக மாறிவிட்டது. தாமிரபரணி ஆறும் இடம் மாறிவிட்டது. இவ்வாறு கடற்கரையோரங்களில் கடல் அரிப்பினாலும் கடல் பெருக்கினாலும் பல இடம் கடல் மாறிப்போனதற்குப் பல சான்றுகளைக் காட்டலாம்.

இராமேசுவரம் ஒரு காலத்தில் இராமநாதபுரத்தோடு இணைந்திருந்ததென்றும் அது பிற்காலத்தில் தீவாகப் பிரிந்து தாய்நாட்டிலிருந்து பிரிந்துவிட்டதென்றுங் கூறுகிறோம். அதனை விளக்குவோம். இராமேசுவரம் இராமநாதபுரத்துடன் இணைந்திருந்த காலத்தில் இராமேசுவரக் கோயிலிலிருந்து இராமலிங்கப் பெருமானை இராமநாதபுரத்துக்கு எழுந்தருளுவித்து ஒரு வாரம் தங்கிப் பிறகு மீண்டும் இராமேசுவரத்துக்குக் கொண்டு போவது வழக்கமாக இருந்தது. இவ்வாறு ஆண்டுதோறும் வழக்கமாக இருந்தது. இவ்வாறு இராமேசுவரம் தீவாக மாறுவதற்கு முன்புவரையில் நடந்து வந்தது. தீவாக மாறிப்போன பிறகு இராமலிங்கேசுவரர் இராமநாதபுரத்துக்கு எழுந்தருளுவது நின்றுவிட்டது. ஏறத் தாழக் கி. பி. 12-ம் நூற்றாண்டில் இலங்கையை அரசாண்ட சிங்கள அரசன் தமிழ்நாட்டின்மேல் படையெடுத்துப் போர் செய்ய வந்தபோது, அவன் தன்னுடைய சேனையைக் கப்பல் களில் ஏற்றிக்கொண்டு வந்து இராமேசுவரத்தில் இறங்கிப் பிறகு அந்தச் சேனையை இராமநாதபுரத்துக்கு அழைத்து வந்தான் என்று *சுல்லவம்சம்* என்னும் இலங்கை நூல் கூறுகிறது. இதனாலும் இராமநாதபுரமும் இராமேசுவரமும் முற்காலத்தில் ஒன்றாக இணைந்திருந்தது என்பதை அறிகிறோம்.

ஏறத்தாழ 500 ஆண்டுகளுக்கு முன்பு இராமநாதபுர வட்டத்தில் போர்ச்சுகீசியர் வந்து கப்பல் வாணிகம் செய்தார்கள். அக்காலத்தில் பெரும் புயலடித்துக் கடல் கொந்தளித்துக் கடலில் நீண்டு கிடந்த இராமேசுவரத்தைத் தீவாகப் பிரித்துவிட்டதும் கடல்நீர், சிறு கால்வாய்போல் பாய்ந்து இராமநாதபுரத்தையும் இராமேசுவரத்தையும் பிரித்து விட்டது. சிலகாலம் வரையில் இந்தச் சிறு கால்வாயைக் கடந்து இராமநாதபுரத்துக்குப் போக்குவரத்து இருந்தது. பிறகு இந்தக் குறுகலான கால்வாயில் கடல்நீர் புகுந்து அதை அகல மாக்கிவிட்டது. அப்போது போர்ச்சுகீசிய வாணிகர் தங்க ளுடைய வணிகக் கப்பல்களின் போக்குவரத்துக்காக இந்தக்

கால்வாயை ஆழமாகவும் அகலமாகவும் செய்துவிட்டார்கள். அதற்காக அவர்கள் ஆயிரக்கணக்கான வராகன்களைச் செலவு செய்தார்கள்.

புயல் அடித்துக் காற்று மழையினாலும் கடல் கொந்தளிப்பினாலும் இயற்கையாக உடைப்புண்ட இராமேசுவரம் பிறகு பையப்பைய உடைப்பு அகலமாகிக் கால்வாயாகி விட்டது. அந்தக் கால்வாயைப் போர்ச்சுகீசிய வாணிகர் கப்பல் போக்குவரத்துக்கு ஏற்றதாக அகலமும் ஆழமுமாகச் செய்துவிட்டனர். இவ்வாறு இராமேசுவரம் தனித் தீவாகப் பிரிந்து போயிற்று. இராமநாதபுரத்துக்கும் இராமேசுவரத்துக்கும் இடையில் உள்ள கால்வாய் இப்போது பாம்பன் கால்வாய் என்று பெயர் கூறப்படுகிறது. இராமேசுவரமும் இராமநாதபுரமும் முன்னொரு காலத்தில் இணைந்து ஒரே நிலமாக இருந்தது என்பதைப் பிற்காலத்தவர் மறந்து விட்டார்கள்.

*அருள்மிகு இராமநாதசுவாமி திருக்கோயில்*
*மகா கும்பாபிஷேகச் சிறப்புமலர்* (இரண்டாம் பகுதி),
சோமலெ (ப. ஆ.), 1975

# சோழவாண்டிபுரம்

தென்னார்க்காடு மாவட்டம், திருக்கோயிலூர் தாலுகாவில், திருக்கோயிலூரிலிருந்து பதினொரு கல் தூரத்தில் சோழ வாண்டிபுரம் என்னும் ஊர் இருக்கிறது. ஊருக்குக் கிழக்கே ஒரு கல் தூரத்தில் ஆண்டிமலை என்றும் பஞ்சபாண்டவமலை என்றும் பெயருள்ள மலை இருக்கிறது. இந்த மலையில் மரம் செடிகள் இல்லை. பெரும்பெரும் பாறைக்கற்கள் பெரும் பெரும் குண்டுக்கற்கள் இந்த மலைமேல் உள்ளன. இக்குன்றின் மேலே ஏறிச்சென்றால் இயற்கையாக அமைந்துள்ள சிறு சுனை காணப்படுகிறது. இந்தச் சுனைக்கு அருகில் பாறைக் கல்லில் காராம் பசுவின் குளம்பு அடிச்சுவடு பதிந்திருப்பது போன்று அடையாளம் காணப்படுகிறது. ஆகவே இந்தச் சுனைக்குக் காராம்பசு சுனை என்று பெயர் கூறப்படுகிறது. இதற்கு அருகில் ஏறத்தாழ மூன்று அடி உயரமுள்ள பாறைக்கல்லின் மேல் ஒரு வட்டமும் வட்டத்துக்குள் நான்கு மூலையுள்ள சதுரமும் பொறிக்கப்பட்டுள்ளன.

இந்த இடத்துக்கு அருகில் ஒரு பெரும்பாறைமேல் மற்றொரு பெரும் பாறைக்கல் நிற்கிறது. மேலேயுள்ள பாறைக்கல் அகலமாக இருப்பதனாலே அதன் கீழே வெயில் படாமல் நிழலாக இருக்கிறது. இதன் கீழேயுள்ள பாறைக் கற்றறையில் நாற்புறத்திலும் கற்படுக்கைகள் செதுக்கி அமைக்கப்பட்டுள்ளன. கற்படுக்கைகளின் அருகில் எழுத்து கள் காணப்படவில்லை. சைன முனிவர்கள் பழங்காலத்தில் இந்த இடத்தில் தங்கியிருந்து தவம் செய்திருக்க வேண்டும். இவற்றைக் கடந்து தெற்குப் பக்கமாகச் சென்றால் ஒரு இடத்தில் பெரும் பாறைக்கற்கள் இயற்கையாக அமைந்து ஒரு கூடம் போலக் காட்சியளிக்கிறது. கரடுமுரடாக அமைந்த இந்த இடத்தில் வெயில் படாமல் குறுகிய தாழ்ந்த மண்டபம் போல் காணப்படுகிறது. இங்கு நிழலாக இருப்பதனால் இங்குத் தங்கியிருக்க முடியும். இந்த இடத்துக்கு பள்ளிக்கூடம் என்று பெயர் கூறப்படுகிறது. பள்ளி என்றால் சமண முனிவர்கள் தங்கும் இடத்துக்குப் பெயர். இந்தப் பள்ளிக்கூடத்தில் பழங்காலத்தில் சமண சமய துறவிகள் தங்கியிருந்தார்கள் போலத் தோன்றுகிறது. கிராமத்துச் சிறுவர்கள் இந்தப்

பள்ளிக்கூடத்துக்கு வந்து துறவிகளிடத்தில் கல்விக் கற்றிருக்கக் கூடும். பாடசாலைக்குப் பள்ளிக்கூடம் என்று பெயர் வந்த காரணம் ஜைனப்பள்ளியில் ஜைனத் துறவிகள் பிள்ளைகளுக்கும் பாடம் கற்பித்த காரணத்தினாலாகும்.

இந்த இடத்துக்கு அருகில் சற்றுத் தூரத்தில் குடிசை போல் இயற்கையாக அமைந்துள்ள இடம் இருக்கிறது. இரண்டு பெரிய பாறைக்கற்கள் உயரமாக அமைந்து இரண்டும் உச்சியில் ஒன்றோடு ஒன்று இணைந்திருப்பதனால் இந்த இடம் இவ்வாறு காணப்படுகிறது. பாறைகள் அடிப் புறத்தில் அகன்று நின்று மேற்புறம் சாய்ந்து குடிசைபோன்று அமைந்துள்ளன. அதாவது ஒரு சிறு குகைபோன்று காணப்படுகிறது. இதன் உள்ளே வெளிச்சம் படுவதனால் இருட்டாகவில்லை. குகைக்கு உள்பக்கத்தில் தனிப் பாறைக் கல்லில் செதுக்கி அமைக்கப்பட்ட இயக்கி உருவம் காணப்படுகிறது. இந்த இயக்கி பக்கவாட்டமாக நின்று கொண்டிருப்பது போல அழகாகப் புடைப்புச் சிறப்பாக அமைக்கப்பட்டுள்ளது. இயக்கி தன்னுடைய வலது கையைத் தன் அருகில் காலண்டை நிற்கிற சிறு பெண்ணின் தலைமேல் வைத்திருப்பது போலக் காணப்படுகிறது. *இயக்கி இடது கையைத் தன் மார்பின் அருகில் வைத்துக் கொண்டிருப்பது போலவும் அந்தக் கிளியின் தலை உடைந்திருக்கிறது.

இயக்கியின் வலது பக்கத்தில் ஒரு மரத்தின் சிற்ப உருவம் காணப்படுகிறது. இந்த இயக்கியின் வலது பக்கத்துக் காலடியில் நிமிர்ந்து நிற்கிற சிங்கத்தின் உருவம் வெகு அழகாகக் காணப்படுகிறது. இந்த இயக்கியின் உருவத்தைக் காளியம்மன் என்றும் இந்த இடத்தைக் காளியம்மன் கோயில் என்றும் கூறுகிறார்கள். குகைக்கோயில் போல அமைந் திருக்கிற பாறையின் வலப்புறத்தில் சற்று உயரமான இடத்தில் பார்சுவநாத தீர்த்தங்கரின் திருவுருவம் புடைப்புச் சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளது. வலதுப்பக்கத்துப் பாறையில் உயர மான இடத்தில் கோமடேசுவரரின் (பாகுபலியின்) திருமேனி புடைப்புச் சிற்பமாக அமைக்கப்பட்டுள்ளது. இதே பாறையில், கோமடேசுவரருக்கு இடது பக்கத்தில் தமிழ் எழுத்துக் கல்வெட்டு ஒன்று இருக்கிறது. இதன் வாசகம் இது:

ஸ்வஸ்திஸ்ரீ மேல் கொங்கரையர் புத்தகண்டர் செய்வித்த சேதியம்

---

* அச்சான இதழில் இவ்விடம் சிதைந்துள்ளது. அதில் உள்ளவாறு பதிப்பிக்கப்பட்டுள்ளது.

இயற்கையாக அமைந்த யட்சிக் குகைக் கோயிலின் அமைப்பு இது:




1. பாகுபலி 2. கல்வெட்டு 3. இயக்கி உருவக் கல்
4. பார்சுவநாதர்

பள்ளிக்கூடத்துப் பாறைக்கும் இயக்கி (காளியம்மன்) பாறைக் கோயிலுக்கும் இடையில் தெற்கு நோக்கிச் சென்றால் பெரும் பாறையொன்று நிற்கிறது. இதைக் கோரைப் பாய்ப்பாறை என்று கூறுகிறார்கள். இந்தப் பாறையில் தமிழ்ச் சாசன எழுத்துப் பொறிக்கப்பட்டிருக்கிறது. இந்தப் பாறையின் முக்காற் பகுதியை அடிப்பக்கத்தில் முட்செடிகளும் சப்பாத்திக் கள்ளியும் முளைத்து மூடிக்கொண்டிருந்தன (16-1-1962இல் நான் சென்ற போது). சாசன எழுத்தின் ஒவ்வொரு வரிக்கும் இடையே கோடு அமைக்கப்பட்டிருப்பதனால், இந்தச் சாசன அமைப்பு கோரைப்பாயைப் பரப்பினாற்போலக் காணப் படுகிறபடியால், இந்தப் பாறைக்கு கோரைப்பாய்ப் பாறை என்று பெயர் கூறப்படுகிறது. இந்தச் சாசன எழுத்து படி எடுக்கப்பட்டுள்ளதா என்பது தெரியவில்லை. சப்பாத்திக் கள்ளியும் முட்புதரும் மூடிக் கொண்டிருந்தபடியால் இதை வாசிக்க முடியவில்லை. தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறையினர் இங்குச் சென்று சாசனத்தைப் பதிவு செய்து படி எடுக்கும்படி கேட்டுக் கொள்கிறோம்.

மலைக்கு அப்பால் உள்ள ஊரில் ஒரு வயலில் (இது பழைய வாழைத் தோட்டம்) மகாவீரருடைய உருவச்சிலை கருங்கல்லில் அமைக்கப்பட்டுள்ளது. மகாவீரர் பதுமாசனத்தில் அமர்ந்து தலைக்குமேல் முக்குடையுடன் காட்சியளிக்கிறார்.

கோரைப்பாய் சாசனத்தில் இந்த மலையையும் இங்குள்ள ஜைனப் பள்ளியைப் பற்றியும் செய்திகள் கிடைக்கும் என்பதில் சற்றும் ஐயமில்லை.

*முக்குடை, பிப்ரவரி 1976*

# வஞ்சிக் கருவூர்: சங்ககாலச் சேரநாட்டின் தலைநகரம்

சங்க காலத்துச் சேர நாடு தமிழகத்தின் ஒரு பகுதியாக இருந்தது. அந்தச் சேரநாட்டின் தலைநகரம் வஞ்சிமாநகர் என்று பெயர் பெற்றிருந்தது. வஞ்சி நகரத்துக்குக் கருவூர் என்று இன்னொரு பெயரும் வழங்கியது. வஞ்சிக் கருவூர் சேர நாட்டிலே மேற்குக் கடற்கரை ஓரத்தில் சுள்ளியாற்றின் கரைமேல் இருந்தது. அந்தக் காலத்திலேயே கொங்கு நாட்டின் தலைநகரமும் வஞ்சி என்றும் கருவூர் என்றும் பெயர் பெற்றிருந்தது. பிளைனி என்னும் கிரேக்க வரலாற்றாசிரியர் ஒரு கருவூரைக் குறிப்பிடுகிறார். அந்தக் கருவூரை அவர் கரவ்ரா என்று கூறுகிறார். அந்தக் கருவூர் கடற்கரைக்கு அப்பால் உள்நாட்டிலே இருந்தது என்று அவர் கூறியுள்ளார். அவர் கூறுகிற கருவூர், கொங்குநாட்டுக் கருவூராகும். கொங்கு நாட்டுக் கருவூர் இப்போது திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் கரூர் என்று பெயர் பெற்றிருக்கிறது. பிளைனி கூறுகிற கருவூர் ஒருவேளை சேரநாட்டுக் கருவூராகவும் இருக்கக் கூடும். எப்படியென்றால், சேர நாட்டுக் கருவூர் முசிறித் துறைமுகத்துக்குக் கிழக்கே சிறிது தூரத்தில் உள்நாட்டில் இருந்தது. ஆகையால், பிளைனி கூறுகிற கரவ்ரா என்னும் கருவூர் சேரநாட்டுக் கருவூரா அல்லது கொங்குநாட்டுக் கருவூரா என்பதை அறுதியிட்டுக் கூறமுடியவில்லை. கருவூர் என்னும் பெயரோடு இரண்டு ஊர்கள், சேரநாட்டில் ஒன்றும், கொங்குநாட்டில் ஒன்றும் இருந்தன. இரண்டு கருவூர்கள் இருந்தன என்பதையறியாமல், சில ஆண்டுகளுக்கு முன்பு சில அறிஞர்கள் இதுபற்றி ஆராய்ந்தார்கள். அவர்களில் சிலர், கொங்குநாட்டில் உள்ள கரூரே, சேரநாட்டின் தலைநகரம் என்று கூறினார்கள். வேறு சிலர், சேரநாட்டுத் தலைநகரமான கருவூர் சேரநாட்டிலே மேற்குக் கடற்கரையையடுத்து இருந்தது என்று கூறினார்கள்.

*ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழர்* என்னும் நூலை ஆங்கிலத்தில் எழுதின திரு. கனகசபைப்

பிள்ளை, வஞ்சிக் கருவூர் சேரநாட்டில் இருந்தது என்று அந்நூலில் எழுதினார். வேறு சில அறிஞர்களும் அவ்வாறே கருதினார்கள். கொங்கு நாட்டுக் கருவூரே சேரர்களின் தலைநகரம் என்பதை நிலைநாட்டுவதற்காகத் திரு. ரா. இராகவையங்கார் *வஞ்சிமாநகர்* என்னும் நூலை எழுதினார். இந்த நூல் தெளிவு இல்லாமல் படிப்பவருக்குக் குழப்பத் தையும் ஐயத்தையும் மேன்மேலும் கிளப்பிவிட்டது. இவரை ஆதரித்துத் திரு. மு. இராகவையங்கார் தாம் எழுதிய *சேரன் செங்குட்டுவன்* என்னும் நூலில் கொங்குநாட்டு வஞ்சிக் கருவூரே, சேரர்களின் தலைநகரம் என்று எழுதினார். வேறு சில அறிஞர்களும் இதுபற்றி ஆராய்ந்து கட்டுரைகளை எழுதி னார்கள்.[1]

'சேரநாட்டை அரசாண்ட சேர மன்னர்களின் தலை நகரம், சேரநாட்டிலே முசிறித் துறைமுகத்துக்குக் கிழக்கே இருந்தது. அதற்கு வஞ்சிநகரம் என்றும் கருவூர் என்றும் பெயர்கள் வழங்கின. சேர மன்னர், தங்களுடைய சேர நாட்டுக்குக் கிழக்கேயுள்ள கொங்குநாட்டைக் கைப்பற்றி அந்நாட்டையும் அரசாண்டார்கள். அப்போது அவர்கள் கொங்குநாட்டின் தலைநகரத்துக்குத் தங்களுடைய தலை நகரமான வஞ்சிக் கருவூரின் பெயரையே சூட்டினார்கள். ஆகவே, சங்க காலத்திலேயே சேரநாட்டிலும் கொங்கு நாட்டிலும் வஞ்சி (கருவூர்) என்னும் பெயருள்ள இரண்டு ஊர்கள் இருந்தன.[2] இந்த வரலாற்று உண்மையை அறியாத படியால், சில ஆண்டுகளுக்கு முன்பு சில அறிஞர்கள், கருவூர் (வஞ்சி) பற்றி இருவேறு கருத்துக்களைக் கூறி விவாதம் செய்தார்கள்.

இரண்டு வஞ்சிமா நகரங்களையும் (கருவூர்களையும்) சங்க நூல்கள் கூறுகின்றன. இடைக்காலத்தில் சேரநாட்டு வஞ்சிக் கருவூர் என்னும் பெயர் மறைந்து, அஞ்சைக்களம் என்றும் கொடுங்கோளூர் என்றும் பெயர் பெற்றது. பிற் காலத்தில், அஞ்சைக்களமும் (கொடுங்கோளூரும்) மறைந்து போயிற்று.

சங்க காலத்தில் சேரநாட்டின் தலைநகரமாக இருந்த வஞ்சிக்கருவூரின் அமைப்பு, எப்படி இருந்தது என்பதை இங்கு ஆராய்வோம்: இந்த ஆய்வுக்குப் பேருதவியாக இருப்பவை சங்கநூல்களே. வஞ்சிமா நகரத்தின் அமைப்பைக் கூறுவதற்கு முன்பு சேரநாட்டின் அமைப்பைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும். அக்காலத்தில் குடக்கடல் என்று குறிப்பிடப்பட்ட

இப்போதைய அரபிக்கடல், சேரநாட்டின் மேற்கு எல்லையாக இருந்தது. சேரநாட்டின் கிழக்கு எல்லை சையமலைத் தொடர்களாகும். சையமலைத்தொடர் இக்காலத்தில் மேற்குத் தொடர்ச்சி மலைகள் என்னும் பெயர் பெற்றுள்ளன. அரபிக்கடலுக்கும் சையமலைக்கும் இடையேயுள்ள சேர நாடு, அகலம் குறைந்தும் வடக்குத் தெற்காக நீண்டும் உள்ளது. கடலுக்கும் மலைக்கும் இடையேயுள்ள அகலம், ஐம்பது மைலுக்குள்ளாகவே உள்ளது.

**அயிரிமலையும் பெரியாறும்**

சேரநாட்டின் கிழக்கு எல்லையாக இருந்தது சையமலைத் தொடர் என்று கூறினோம். சையமலைத் தொடரில் உள்ள ஒருமலைக்கு அயிரிமலை என்பது பெயர். அயிரிமலைமேல் பேரியாறு (பெரியாறு) தோன்றிப் பாய்ந்தது. அந்த இடத்தில், அந்த ஆற்றுக்கு அயிரியாறு என்பது பெயர். அயிரிமலைமேல் அயிரியாறு தோன்றிய இடத்துக்கு அருகில் கொற்றவை கோயில் இருந்தது. அந்தக் கொற்றவைக்கு அயிரிக்கொற்றவை என்பது பெயர். அயிரிக்கொற்றவை சேர அரசர்களின் குலதெய்வம்.[3] சங்க இலக்கியத்தில் இரண்டு அயிரி ஆறுகள் கூறப்படுகின்றன. *அகநானூறு* 177-ம் பாடலிலும் (*அகம்* 177:11), 253-ம் பாடலிலும் (*அகம்* 253: 20) கூறப்படுகிற அயிரை ஆறு வேறு. அந்த அயிரையாறு எருமை நாட்டில் (மைசூர் நாட்டில்) இருந்தது. *பதிற்றுப்பத்தில்* கூறப்படுகிற அயிரை ஆறு, சேரநாட்டு அயிரிமலைமேல் தோன்றி சேரநாட்டில் பாய்ந்த பெரியாற்றின் வேறு பெயர்.

அயிரிமலைமேல் தோன்றி, அம்மலைமேல் அயிரியாறு என்று பெயர் பெற்ற ஆறு, தரையில் இழிந்து மேற்கு நோக்கிப் பாய்ந்து அரபிக் கடலில் விழுந்தது. தரையில் பாய்ந்தபோது அந்த ஆற்றுக்குப் பேரியாறு என்று பெயர். இதைப் பெரியாறு என்றும் வழங்குவர். பெரியாற்றுக்குச் சுள்ளி ஆறு என்னும் பெயர் உண்டு.[4] பெரியாறு வரலாற்றுச் சிறப்புடையது. பெரியாறு மலைமேலிருந்து தரையில் இழிந்து சம நிலத்தில் பாய்கிற இடத்தில், சேரன் செங்குட்டுவன் ஆண்டுதோறும் வேனிற்காலத்தில் பாசறை அமைத்து, சுற்றத்தோடு அங்குத் தங்கியிருந்து வேனிற் காலத்தைக் கழித்தான். இந்தச் செய்தியைச் செங்குட்டுவனைப் பாடிய பரணர் கூறுகிறார்:

பல்பொறி மார்ப! நின்பெயர் வாழியரோ
நின்மலைப் பிறந்து நின்கடல் மண்டும்

மலிபுனல் நிகழ்தரும் தீநீர் விழவில்
பொழில்வதி வேனில் பேரெழில் வாழ்க்கை
மேவரு சுற்றமொடு உண்டினிது நுகரும்
தீம்புனல் ஆயம் ஆடும்
காஞ்சியம் பெருந்துறை மணலினும் பலவே[5]

வேனிற்காலத்தில் பெரியாற்றங்கரையில் செங்குட்டுவன் தங்கியிருந்த காலத்தில், அவனுடைய இளவலான இளங்கோ வடிகளும் சீத்தலைச்சாத்தனாரும் அந்த இடத்துக்குச் சென்று செங்குட்டுவனைக் கண்டு வருவது வழக்கம். ஓராண்டு செங்குட்டுவன் மலையடிவாரத்துக்குச் சென்று தங்கியிருந்த போது குன்றக் குறவரும் சீத்தலைச்சாத்தனாரும் செங்குட்டுவ னுக்குக் கண்ணகியின் செய்தியைக் கூறினார்கள்.[6] இந்தச் செய்தியையறிந்த செங்குட்டுவன் கண்ணகிக்குப் பத்தினிக் கோட்டம் அமைக்க எண்ணினான்.[7]

பெரியாறு சேரநாட்டில் மேற்கு நோக்கிப் பாய்ந்து, அரபிக்கடலில் விழுந்தது. பெரியாறு கடலில் கலந்த இடத்தில் முத்துச்சிப்பிகள் உண்டாயின. முத்துச்சிப்பியிலிருந்து முத்துக்கள் கிடைத்தன. இங்கு உண்டான முத்துக்களைக் கௌர்ணேயம் என்று கௌடல்லியரின் *அர்த்தசாத்திரம்* கூறுகிறது.[8] வடமொழி *அர்த்தசாத்திரத்து*க்குப் பழைய தமிழ் மலையாள உரை ஒன்று உண்டு. அந்த உரை இந்த முத்தைப்பற்றி இவ்வாறு கூறுகிறது: அதன் வாசகம் இது: "கௌர்ணேய மாவிது மல (மலை) நாட்டில் முரசி ஆகின்ற பட்டினத்தினரிகே சூர்ண்ணியாற்றிலுளவாமவு." இதில் முரசி என்பது முசிறிப்பட்டினம். சூர்ண்ணி ஆறு என்பது பெரியாற்றின் வடமொழிப் பெயர். தமிழ்நாட்டில் முத்துக்குப் பேர்போன இடம் பாண்டிநாட்டுக் கொற்கை. இதைத் தமிழ் நூல்கள் கூறுகின்றன. ஆனால், சேரநாட்டு முத்தைப் பற்றிச் சங்கநூல்களில் காணப்படவில்லை. கௌடல்லியரின் *அர்த்தசாத்திரம்* இதைக் கூறுகிறது. பெரியாற்றுக்குச் சுள்ளியாறு என்று தமிழில் வேறு பெயர் இருந்ததையறிவோம். சூர்ண்ணி ஆறு என்னும் வடமொழிப் பெயர், சுள்ளி என்னும் சொல்லிலிருந்து உண்டானது போலும்.

சுள்ளி என்னும் பேரியாறு கடலில் கலந்த புகர் முகத்தில் ஆற்றின் வடகரைமேல் கடற்கரைப் பக்கத்தில் முசிறி என்னும் பேர்போன துறைமுகப்பட்டினம் இருந்தது. கிரேக்க யவனர் இந்தத் துறைமுகப்பட்டினத்தை முசிரிஸ் என்றும், வட மொழிக்காரர் மரீசிபட்டணம் என்றும் கூறினார்கள்.

**வஞ்சிமாநகரம்**

இப்போது நமது ஆராய்ச்சிக்குரிய வஞ்சி நகரத்துக்கு வருவோம். வஞ்சிமாநகரம் கரூவூர் என்றும் பெயர் பெற்றிருந்ததை முன்னமே அறிந்தோம். சேர மன்னர்களின் தலைநகரமாக இருந்த இந்த வஞ்சிமாநகரம் முசிறித் துறை முகத்துக்குக் கிழக்கே பேரியாற்றின் வடகரைமேல் இருந்தது. வஞ்சி நகரத்தின் அமைப்பைப் பெரிதும் *மணிமேகலை* காவியத்திலிருந்தும் *சிலப்பதிகாரக்* காவியத்திலிருந்தும் அறிகிறோம். சுள்ளியாற்றின் வடகரைமேல் கிழக்கு மேற்காக, நீண்ட சதுரமாக அமைந்திருந்த வஞ்சிமாநகரம் பெரிய நகரமாகப் பரந்திருந்தது. இந்த நகரத்திலே வழக்குரைமன்றம், பொதியில் சதுக்கம், செய்குன்று, பூங்கா, அறச்சாலை, நீர்நிலைகள், சிவபெருமான் கோயில், திருமால் கோயில், பௌத்த சமணப்பள்ளிகள் முதலானவை இருந்தன.[9]

தெருக்கள் கிழக்கு மேற்காகவும் வடக்குத் தெற்காகவும் அமைந்திருந்தன. நகரத்தின் மையத்தில் அகலமும் நீளமும் உள்ள பெரிய நெடுஞ்சாலை கிழக்கு மேற்காக அமைந்திருந்தது. அந்த நெடுஞ்சாலை இந்த நகரத்திலிருந்து முசிறித் துறைமுகப்பட்டினத்திற்குச் சென்றது. நகரத்துத் தெருக்களில் பலவகையான தொழிலாளர்களும் வசித் திருந்தனர். பலவகைப் பொருள்கள் விற்கப்பட்ட கடைத் தெருக்கள் இருந்தன. நகரத்தைச் சூழ்ந்து கோட்டை மதில்கள் இருந்தன. மதிலைச் சார்ந்திருந்த தெருக்களில் மீன், உப்பு, கள், இறைச்சி, அப்பம், பிட்டு முதலான பொருள்களை விற்கும் வாணிகர் இருந்தார்கள்.[10] இந்தத் தெருக்களை அடுத்து, மட்பாண்டம் செய்வோர், செம்பு பித்தளை வெண்கலப் பாத்திரம் செய்வோர், இரும்புக் கருவிகளைச் செய்வோர், பொன் வெள்ளி நகை செய்வோர், மரத் தொழில் செய்வோர், கட்டடவேலை செய்வோர், தோல் கருவிகள் செய்வோர், துணி தைப்போர் முதலான தொழிலாளிகள் குடியிருந்த தெருக்கள் இருந்தன.[11] மாலைகட்டுவோர், இசைவாணர், சங்குவளை அறுப்போர், நடனமகளிர் வாழ்ந்த தெருக்களும் இருந்தன.[12] அரிசி பருப்பு முதலான நவதானியம் விற்போர், அறுவைவாணிகர், நவமணி விற்போர், பொன்வாணிகர் முதலானோர் இருந்த வீதிகளும் இருந்தன.[13] அமைச்சர், அரச ஊழியர், அரண்மனை ஊழியர் முதலானோர் வீதிகளும் குதிரைப்பந்தி, யானைப்பந்தி முதலான இடங்களும் இருந்தன.[14] வீடுகளில் இருந்து வெளிப்படும் கழிவுநீர் சாக்கடைகள் சுருங்கைகளில் ஓடி நகரத்துக்கு அப்பால் நகரத்தைச் சூழ்ந்திருந்த அகழிகளில் விழுந்தன.[15]

**அரண்மனைகள்**

சேரமன்னர்களின் அரண்மனைகள் வஞ்சிமா நகரத்தின் நடுவிலே அமைந்திருந்தன. ஒன்று 'பொன் மாளிகை' என்று பெயர் பெற்றிருந்தது. 'கொடிமதில் மூதூர்நடுநின்றோங்கிய தமனிய மாளிகை[16] (தமனியமாளிகை - பொன்மாளிகை). இந்தப் பொன் மாளிகையின் நிலாமுற்றத்தில் இருந்து, பறையூர்க் கூத்தச் சாக்கையன் ஆடிய கொட்டிச்சேதம் என்னும் கூத்தைச் செங்குட்டுவனும் அவனுடைய அரசியும் கண்டு மகிழ்ந்தார்கள்.[17] இந்தப் பொன்மாளிகையிலே தான், சேர அரசர் அரசியல் நடத்திய 'வேத்தியல் மண்டபம்' இருந்தது.[18] அரண்மனைக்கு அருகிலேயே சிவபெருமான் கோயிலும் அறிதுயில் அமர்ந்தோன் (திருமால்) கோயிலும் இருந்தன.[19]

பொன் மாளிகைக்குத் தெற்கே பேரியாற்றின் கரைமேல் இன்னொரு மாளிகை இருந்தது. அதற்கு 'வெள்ளிமாடம்' என்பது பெயர்.[20] இந்த வெள்ளிமாளிகை இலவந்திகைச் சோலையில் அமைந்திருந்தது.[21] 'விளங்கு இலவந்தி வெள்ளிமாடம்'. இலவந்திகைச் சோலைக்கு நீராவிச் சோலை என்றும் பெயருண்டு. இலவந்திகை அல்லது நீராவிச் சோலை அரச குடும்பத்துக்குரிய சோலை. அதில், அவர்களைத் தவிர ஊர்ப் பொதுமக்கள் நுழையக் கூடாது. வெள்ளிமாடத்தில் சேர அரசரின் குடும்பம் வாழ்ந்து வந்தது. செங்குட்டுவன், இளவேனிற் காலத்தில், மலையிலிருந்து பெரியாறு இழிந்த இடத்திற்குச் சென்றபோது, வெள்ளிமாடத்திலிருந்து புறப்பட்டுப் போனான்.[22]

இதுகாறும் நகரத்தின் அமைப்பைப் பற்றிக் கூறினோம். இனி நகரத்தைச் சூழ்ந்திருந்த கோட்டை மதில்களைப் பற்றிப் பார்ப்போம்.

**கோட்டை மதில்கள்**

வஞ்சிமா நகரத்தைச் சூழ்ந்து கோட்டை மதில்களும் அகழியும் காவற்காடும் இருந்தன. கோட்டை மதில் காவல் உடையதாக இருந்தபடியால் 'கடிமதில்' என்று கூறப்பட்டது.[23] மதிலைச் சூழ்ந்து, மதிலுக்கு வெளியே அகழி இருந்தது. அகழியில் மீன்களும் முதலைகளும் இருந்தன; தாமரை அல்லி முதலான நீர்ப்புக்களும் இருந்தன.[24] நகரத்தில் இருந்து தூம்புகளின் வழியாகவும் சுருங்கைகளின் வழியாகவும் வந்த கழிவுநீர் அகழியில் வந்து விழுந்தது.[25] (சங்க காலத்து மதுரை நகரத்தில், கழிவுநீர் நகரக் கோட்டையின் வெளியே சூழ்ந்திருந்த அகழியில் சென்று விழுந்தது இங்கு நினைவு

கொள்ளற்பாலது). இவ்வாறு நகரம் சுகாதார அமைப்போடு இருந்ததை அறிகிறோம். வஞ்சிமா நகரத்தின் தெற்கே சுள்ளியாறு (பேரியாறு) பாய்ந்தபடியால் அந்த ஆறே அகழியாக அமைந்திருந்தது. மற்றக் கிழக்கு மேற்கு வடக்குப் பக்கங்களில் கோட்டைச் சுவரைச் சூழ்ந்து அகழிகள் அமைக்கப்பட்டிருந்தன (தரைப்படம் காண்க).* அகழிக்கு உள்பக்கத்தில் நகரத்தைச் சூழ்ந்து மதிற் சுவர்கள் இருந்தன. இந்தச் சுவர்கள் புறமதில்களாகும். இந்தப் புறமதில்களின் மேலே போர்க் கருவிகளும் இயந்திரப் பொறிகளும் வைக்கப்பட்டு காவலுடையதாக இருந்தன.[26] அகழி சூழ்ந்த கோட்டை மதிலின்மேல் போருக்குரிய எந்திரக் கருவிகள் வைக்கப்பட்டிருந்ததைப் *பதிற்றுப்பத்து* ஆறாம் பத்தும் கூறுகிறது.

எந்திரத் தகைப்பின் அம்புடை வாயில்
கோள்வன் முதலைய குண்டுகண் அகழி
வானுற வோங்கிய வளைந்துசெய் புரிசை[27]

இந்தக் கோட்டைச் சுவரின் வாயிலின்மேல் சிலம்பும் தழையும் தொங்கவிடப்பட்டிருந்தன. 'செம்பொறிச் சிலம் பொடு அணி தழை தூங்கும்.[28] இதற்குப் பழைய உரையாசிரியர் இவ்வாறு விளக்கங் கூறுகிறார்: "சிலம்பும் தழையும் புரிசைக்கண் தங்கினவென்றது ஈண்டுப் பொரு வீருளரேல் நும்காலிற் கழலினையும் அரையிற் போர்க்குரிய உடையினையும் ஒழித்து இச்சிலம்பினையும் தழையினையும் அணிமின் என அவரைப் பெண்பாலாக இகழ்ந்தவாறென்க. இனி அவற்றை அம்மதிலில் வாழும் வெற்றி மடந்தைக்கு அணியென்பாருமுளர்." சங்ககாலத்து மதுரைக் கோட்டை வாயிலின் மேலே பந்தும் பாவையும் கட்டித் தொங்கவிடப் பட்டிருந்தன[29] என்பது இங்கு நினைவுகூரத் தக்கது.

வஞ்சிமாநகரத்தின் புறமதிலுக்கு உள்ளே மிளைக்காடு (காவற்காடு) இருந்தது. புறமதில்களைச் சூழ்ந்திருந்த மிளைக் காட்டுக்கு அப்பால் உள்மதில்கள் இருந்தன. உள்மதில்கள் வெண்சுதை பூசப்பெற்று வெள்ளிக் குன்று போலக் காணப்பட்டன.[30] இதனால் வஞ்சிமாநகரத்தின் கோட்டைச் சுவர்கள் அகமதில் என்றும் புறமதில் என்றும் இரண்டு மதிற்சுவர்களைக் கொண்டிருந்ததை யறிகிறோம். கோட்டைச் சுவர்களின் மேலே வாயிலுக்குமேல் கொடிகள் பறந்தன. நகரத்துக்குள்ளே போவதற்கு வாயில்கள் இருந்தன.

---

* *தரைப்படம் எதுவும் அச்சான கட்டுரையில் இடம்பெறவில்லை. (ப-ர்)*

**குணவாயிலும் குடவாயிலும்**

நகரத்துக்கு மத்தியில் அகலமான நெடுஞ்சாலையொன்று கிழக்கிலிருந்து மேற்குப் பக்கமாகச் சென்றது. அந்த நெடுஞ்சாலை கோட்டையின் கிழக்கு வாயிலிலிருந்து மேற்கே நகரத்தின் மத்தியில் அரண்மனைப் பக்கமாகச் சென்று குடவாயிலைக் கடந்து மேற்கே கடற்கரைப் பக்கத்தில் இருந்த முசிறித் துறைமுகப்பட்டினத்துக்குச் சென்றது. வஞ்சி நகரத்துக் கோட்டையின் கிழக்கு வாயிலுக்குக் குணவாயில் என்பது பெயர். கோட்டையின் மேற்கு வாயிலுக்குக் குடவாயில் என்று பெயர். நகரத்தின் நடுமையத்தில் அரண்மனைக்கு எதிராக ஓர் அகன்றசாலை வடக்குப் பக்கமாகச் சென்று வடக்கு வாயிலைக் கடந்து சென்றது.

கோட்டையின் குணவாயிலுக்கு அருகில், கோட்டைச் சுவருக்கு வெளியே ஒரு சோலை இருந்தது. அங்குப் பல சமயத்துத் துறவிகள் தங்கியிருந்தனர். சைவ வைணவக் கோயில்களும் பௌத்த சமணப் பள்ளிகளும் 'நற்றவ முனிவரும் கற்றடங்கினவரும்' மதிலுக்கு வெளியேயிருந்த சோலையில் இருந்தனர்.[31] இந்த இடத்துக்குக் குணவாயிற் கோட்டம் என்பது பெயர். இந்தக் குணவாயிற்கோட்டத்தில் செங்குட்டுவனின் தம்பியாகிய இளங்கோ அடிகள், துறவு பூண்டுத் தங்கியிருந்தார்.[32] குணவாயில் கோட்டத்தைப் 'பகல் செல்வாயில்' என்று *சிலப்பதிகாரம்* கூறுகிறது[33] (பகல் செல் வாயில் - சூரியன் போகிற வழி; கிழக்குத்திசை. குணவாயில் - கிழக்கு வாயில்; குணக்கு - கிழக்கு). சங்க காலத்துக்குப் பிறகு, முசிறித் துறைமுகப்பட்டினமும் வஞ்சிமாநகரமும் மறைந்து போன பின்னரும் குணவாயிலும், குணவாயிற்கோட்டமும் அழியாமல் இருந்தன. பிற்காலத்தில் மலையாளிகள் குணவாயிற்கோட்டத்தை 'த்ருக்கணா மதிலகம்' என்று கூறினார்கள். இது, திருக்குண மதிலகம் என்பதன் சிதைவு. 'த்ரு' என்பது திரு என்னும் சொல்லின் சிதைவு. 'கணா' என்பது குண என்பதன் சிதைவு. மதிலகம் என்பது கோட்டை மதில் உள்ள இடம் என்னும் பொருளுள்ளது. வஞ்சி நகரம் அழிந்துபோன பிறகு, அதன் பகுதியாக எஞ்சியிருந்த குணவாயிலும் அதன் அருகில் இருந்த கோட்டமும் 'த்ருக்கணா மதிலகம்' என்று மலையாளிகளால் கூறப்பட்டன. இந்த இடத்தைப் பற்றி இக்காலத்தில் சில அறிஞர்கள் ஆராய்ந்து கட்டுரை எழுதியுள்ளனர்.[34]

குணவாயிற்கோட்டத்தில் பலசமயக் கோயில்களும் பல சமயத்துத் துறவிகளும் சமயத் தத்துவங்களைக் கற்ற சமயச்

சான்றோர்களும் இருந்தனர். இங்கிருந்த சமயவாதிகளிடத்தில் மணிமேகலை சமயக் கணக்குகளை (சமயத் தத்துவங்களைக்) கேட்டறிந்தாள் என்பதை *மணிமேகலை* காவியத்திலிருந்து அறிகிறோம். *மணிமேகலை* 27ஆம் காதையின் தலைப்புக்கு விளக்கம் கூறுகிற கொளு, 'வஞ்சிமா நகர்ப்புறத்துச் சமயக் கணக்கர் தந்திறங்கேட்ட பாட்டு' என்று கூறுகிறது. இதனாலே, குணவாயிற் கோட்டத்தில் இருந்த பல சமயவாதிகளிடத்தில், அவள் பல்வேறு சமயக் கொள்கைகளைத் தெரிந்து கொண்டாள் என்பது விளங்குகிறது.

குணவாயிற்கோட்டத்துக்கு அருகிலேயே, சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குப் பத்தினிக்கோட்டம் அமைத்தான் என்பதை *மணிமேகலையிலிருந்து* குறிப்பாக அறிகிறோம். காவிரிப்பூம்பட்டினம் வெள்ளத்தில் முழுகிப் போனதை மணிபல்லவத் தீவில் கேள்விப்பட்ட மணிமேகலை, காவிரிப் பூம்பட்டினத்துக்குப் போகாமல் நேரே வஞ்சிமா நகரத்துக்கு வந்தாள்; வந்தபோது அவளுக்கு ஓர் ஆர்வம் தோன்றியது. வஞ்சிமா நகரத்தில் சேரன் செங்குட்டுவன் எடுத்திருந்த பத்தினிக் கோட்டஞ் சென்று வணங்க வேண்டும் என்பது அவளுக்குத் தோன்றிய ஆர்வமாகும். அவள் நேரே பத்தினிக் கோட்டஞ் சென்று கண்ணகியின் படிவத்தை வணங்கினாள் என்று *மணிமேகலை* காவியங் கூறுகிறது. கண்ணகியின் படிவத்தை வணங்கின பிறகு, மணிமேகலை நகரத்துக்குள் சென்றாள் என்றும், சென்றவள் தற்செயலாக நகரத்தின் குடவாயிலண்டைத் தன்னுடைய பாட்டனான மாசாத்து வானைக் கண்டனள் என்றும் *மணிமேகலை* காவியம் கூறுகிறது. இவளுடைய பாட்டனான மாசாத்துவான், கோவலனும் கண்ணகியும் இறந்த பிறகு வாழ்க்கையை வெறுத்துத் துறவுபூண்டு வஞ்சி மாநகரத்தில் இருந்த பௌத்த விகாரையில் தங்கியிருந்தான். இந்த பௌத்த விகாரை வஞ்சி நகரத்தின் மேற்கு வாயிலருகில் இருந்தது. மணிமேகலை, குணவாயிலில் (கிழக்கு வாயிலில்) நுழைந்து நகரத்துக்குள் சென்று, மேற்கு வாயிலண்டை தன்னுடைய பாட்டனைக் கண்டாள் என்று தெரிகிறது. *மணிமேகலை* காவியம் 26-வது காதையின் தலைப்புக்கு விளக்கங் கூறுகிற அதன் கொளு, 'மணிமேகலை கண்ணகி கோட்டமடைந்து வஞ்சிமாநகர் புக்க பாட்டு' என்று கூறுகிறது. இதிலிருந்து, கண்ணகிக் கோட்டம் நகரத்துக்கு வெளியே (கோட்டை மதிலுக்கு வெளியே) இருந்ததென்பது திட்டமாகத் தெரிகிறது.

குணவாயிற் கோட்டத்துக்கு அருகிலே, அமைக்கப் பட்டிருந்த பத்தினிக் கோட்டத்துக்குப் பக்கத்தில் வைதிக மதத்தவரின் வேள்விச்சாலை இருந்தது. பத்தினித் தெய்வம் மன்னர்களுக்கு வரங்கொடுத்த பிறகு, செங்குட்டுவன் மன்னர் களுடனும் மாடலமறையவனுடனும் வேள்விச் சாலைக்குச் சென்றனன் என்று *சிலப்பதிகாரம்* கூறுகிறது.[35] செங்குட்டுவன் பத்தினிக் கோட்டத்தைவிட்டு வேள்விச் சாலைக்குப் போன பிறகு, குணவாயிற் கோட்டத்திலிருந்த இளங்கோ அடிகள் பத்தினிக் கோட்டஞ் சென்றார்.[36] இவற்றிலிருந்து குணவாயிற் கோட்டத்துக்கு அருகிலேயே பத்தினிக் கோட்டமும் வேள்விச்சாலையும் இருந்தன என்பது தெரிகின்றது.

குணவாயிற்கோட்டத்துக்கு அருகில், கோட்டை வாயிலுக்கு வெளியே, அரசாங்க மாளிகையொன்று இருந்தது. அது வேள் ஆவிக்கோ மாளிகை என்று பெயர் பெற்று இருந்தது. வேளாவிக்கோ மாளிகை, நீர் சூழ்ந்த ஒரு பொழிலின் நடுவிலே அமைந்திருந்தது.

பேரிசை வஞ்சி மூதூர்ப் புறத்துத்
தாழ்நீர் வேலித் தண்மலர்ப் பூம்பொழில்
வேளாவிக் கோ மாளிகை

என்று இதைச் *சிலப்பதிகாரம்* கூறுகிறது.[37]

வேளாவிக்கோ மாளிகை, அரசாங்கத்து விருந்தினர் வந்தால் அவர்கள் தங்குவதற்காக அமைக்கப்பட்டதுபோலும்.

வஞ்சி நகரத்துக் கிழக்கு வாயிலுக்கு வெளியே இருந்த பத்தினிக் கோட்டத்தை வணங்கின பிறகு, அங்கே குணவாயிற்கோட்டத்திலிருந்த சமயவாதிகளின் சமயக் கணக்குகளைக் கேட்ட மணிமேகலை, கிழக்கு வாயிலின் வழியே நகரத்துக்குள் சென்று மேற்கு வாயிலருகிற் சென்ற போது தன்னுடைய பாட்டனைக் கண்டாள். அவனுடைய முன்னோர்களில் ஒருவன் அந்த இடத்தில் பௌத்தச் சயித்தியம் ஒன்றைக் கட்டியிருந்தான். அந்தச் சயித்தியம் வானளாவி உயர்ந்து வெண்சுதை பூசப்பெற்றிருந்தது. அந்தப் புத்த சயித்தியத்தைக் கட்டினவன், கோவலனுக்கு முன்பு (ஒன்பது தலைமுறைக்கு முன்னர்) இருந்தவன். அவனும் கோவலன் என்று பெயர் பெற்றிருந்தான். கோவலனுடைய தந்தையான மாசாத்துவான் பௌத்தப் பிக்குவாகத் துறவுபூண்டு இந்தச் சயித்தியத்துக்கு வந்திருந்தான். இவனை மணிமேகலை கண்டு வணங்கினபோது இச்செய்திகளை யெல்லாம் அவன் அவளுக்குக் கூறினான்.[38] பிறகு, மணிமேகலை வஞ்சி

மாநகரத்தின் மேற்கு வாயில் பக்கத்திலிருந்து ஆகாயவழியே பறந்து காஞ்சிபுரத்துக்குச் சென்றாள் என்று *மணிமேகலை* காவியம் கூறுகிறது. இது ஏற்கத்தக்கது அன்று. காவியப் புலவர் ஏன் இப்படிக் கற்பனை செய்தார் என்பதை இக்கட்டுரை யாளர் எழுதிய 'மணிமேகலையின் விண்வழிச் செலவு' என்னும் கட்டுரையில் காண்க.[39]

வஞ்சி மாநகரத்தின் மத்தியில் அமைந்திருந்த அரண்மனை வாயிலில் இருந்து, வடக்கே ஒரு பெருஞ்சாலை இருந்தது. அது கோட்டையின் வடக்கு வாயிலைக் கடந்து சென்றது. கோட்டையின் வடக்கு வாயிலுக்கு வெளியே புறநிலைக் கோட்டம் என்னும் கோயில் இருந்தது. செங்குட்டுவன் இமய யாத்திரைக்குப் புறப்பட்டபோது நல்ல முழுத்தத்தில் கொற்றவாளையும் கொற்றக்குடையையும் வடக்கே எடுத்துச் செல்லும்படி கட்டளையிட்டான். அவ்வாறே நல்ல முழுத்தத் தில், கொற்றவாளையும் கொற்றக்குடையையும் கொற்றயானை யின்மேல் ஏற்றிக் கொண்டுபோய் இந்தப் புறநிலைக் கோட்டத்தில் வைத்தார்கள்.[40]

கோட்டை மதிலுக்கு வெளியேயும் மக்கள் வாழ்ந்தனர். அவர்கள் நகரத்துக்குப் புறத்திலே (வெளியிலே) குடியிருந்த படியால் புறக்குடி மக்கள் என்று கூறப்பட்டனர். அவர்கள் கோட்டை மதில்களுக்கு வெளியே குடியிருந்தபடியால், கோட்டையைச் சூழ்ந்து கொண்டு முற்றுகையிடுபவர் போலக் காணப்பட்டார்கள்.

> வாங்குவில் தானை வானவன் வஞ்சியின்
> வேற்று மன்னரும் உழிஞைவெம் படையும்
> போல் புறஞ்சுற்றிய புறக்குடி[41]

இதுகாறும் சேரநாட்டுத் தலைநகரமான வஞ்சிமா நகரத்தின் அமைப்பைப் பற்றிக் கூறினோம். இனி, அதனோடு தொடர்புடைய முசிறித் துறைமுகப்பட்டினத்தைப் பற்றிக் காண்போம்.

**முசிறித் துறைமுகப்பட்டினம்**

வஞ்சிமாநகரத்துக்கு மேற்கே சுள்ளிப்பேரியாறு கடலில் கலந்த இடத்தில், அதன் வடகரைமேல் கடற்கரையையொட்டி முசிறித் துறைமுகமும் முசிறிப்பட்டினமும் இருந்தன. அக் காலத்தில் அது பெரிய நகரமாகவும் இருந்தது. அக்காலத்தில், முசிறி உலகப் புகழ் பெற்ற பேர்போன நகரமாக இருந்தது. கிரேக்க யவனர் இந்தப் பட்டினத்தை முசிறிஸ் என்று கூறினார்கள். வட இந்தியர் இந்தப் பட்டினத்தை மிரிசிபதனம்

என்று குறிப்பிட்டனர். முசிறி என்பதைத்தான், அவர்கள் மிரிசி என்று திரித்துக் கூறினார்கள். அந்தக் காலத்தில் சேர நாட்டிலிருந்து மிளகு பெருவாரியாக வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாயிற்று. ஆகவே, சமஸ்கிருதமொழியில் மிளகுக்கு மிரிசி என்று பெயர் கூறப்பட்டது. முசிறிப்பட்டினமாகிய மிரிசிப் பட்டினத்திலிருந்து வந்தமையால் வடமொழியாளர் அந்த நகரத்தின் பெயரையே, மிளகுக்கு மிரிசி என்று கூறினார்கள்.

சுள்ளிப்பேரியாறு கடலில் கலந்த புகர்முகத்தில் முத்துச் சிப்பிகள் விளைந்தன. அந்தச் சிப்பிகளிலிருந்து முத்துக்கள் எடுக்கப்பட்டன. இந்தச் சேரநாட்டு முத்தினைக் கௌர்ணெயம் என்று கௌடல்லியரின் *அர்த்தசாத்திரம்* கூறுவதை முன்னமே குறிப்பிட்டோம். முசிறியை மிரிசி என்று கூறியது போலவே வடமொழியாளர் சுள்ளி (பேரியாறு) யாற்றைச் சூர்ணி என்று கூறினார்கள். சூர்ணி ஆற்றில் உண்டான முத்து சௌர்ணெயம் என்று பெயர் பெற்று, பிறகு அந்தச் சொல் கௌர்ணெயம் என்றாயிற்று.

முசிறிப்பட்டினத்தைச் சங்கப்புலவர் நக்கீரர் 'முன்னுறை முதுநீர் முசிறி' என்று கூறுகிறார்.[42] இன்னொரு சங்கப் புலவரான நக்கீரர் 'முழங்கு கடல் முழவின் முசிறி' என்று கூறுகிறார்.[43] அராபியரும் கிரேக்க யவனரும் மேற்குக்கரைத் துறைமுகங்களுக்கு வந்து வாணிகஞ் செய்தார்கள். அவர்களின் முக்கியமான குறிக்கோள் முசிறித் துறைமுகமாக இருந்தது. யவன வாணிகர் தங்களுடைய அழகான பெரிய நாவாய்களை எகிப்து நாட்டு அலக்சாந்திரிய துறைமுகப்பட்டினத்திலிருந்து செங்கடல் வழியாகச் செலுத்திக் கொண்டு, அரபிக்கடலுக்கு வந்து முசிறி, தொண்டி முதலான துறைமுகப் பட்டினங் களுக்குச் சென்று கடல் வாணிகஞ் செய்தார்கள். கி. பி. முதல் நூற்றாண்டின் தொடக்கக் காலத்தில் ரோமப் பேரரசை ஆட்சி செய்த பேர்போன அகுஸ்தஸ் சக்கரவர்த்தி இந்தக் கப்பல் வாணிகத்தை நிலை நிறுவினார். அவர் செங்கடல் பகுதியில் இருந்த அராபியரை அடக்கி, யவனக் கப்பல்கள், செங்கடல் பட்டினங்களிலும் அரபிக்கடல் பட்டினங்களிலும் சென்று வாணிகஞ் செய்ய வழி செய்தார். அக்காலத்தில், கப்பல்கள் நடுக்கடலில் செல்லாமல் கரையோரமாகவே சென்று வந்தன. அதனால், மாதக்கணக்கில், ஆண்டுக்கணக்கில் காலதாமதம் ஏற்பட்டது. பருவக்காற்றின் துணைகொண்டு செங்கடலி லிருந்து நடுக்கடலில் கப்பல் ஓட்டி, முசிறித்துறைமுகத்துக்கு

விரைவில் வந்து போகும் முறையைத் தமிழ் வாணிகரும் அராபிய வாணிகரும் அறிந்திருந்தார்கள். இவர்கள் அறிந் திருந்ததை கிரேக்க மாலுமியாகிய ஹிப்பலஸ் என்பவன் எப்படியோ அறிந்து கொண்டு, யவனக் கப்பல்களை நடுக்கடல் வழியே செலுத்திக் கொண்டு முசிறித்துறைமுகத்துக்கு வந்தான். அதுமுதல் யவனக் கப்பல்கள் விரைவாக நடுக்கடல் வழியே முசிறித் துறைமுகத்துக்கு வந்து போகத் தொடங்கின. பருவக்காற்றுக்கு ஹிப்பலஸ் என்பவன் பெயரையே யவனர் சூட்டினார்கள். ஹிப்பலஸ் கி. பி. 40-ல் இந்தப் பருவக்காற்றைப் பயன்படுத்தினான் என்பர்.

கி. பி. முதல் நூற்றாண்டிலும் இரண்டாம் நூற்றாண்டிலும் சேரநாட்டுத் துறைமுகங்களோடு யவனர் செய்த கப்பல் வாணிகம் உச்ச நிலையில் இருந்தது. இந்த யவன - தமிழ் வாணிகத்தைச் செம்மையாக வளர்த்த அகுஸ்தஸ் சக்கர வர்த்திக்கு கிரேக்க வாணிகர் முசிறிப்பட்டினத்தில் ஒரு கோயிலைக் கட்டிப் பாராட்டினார்கள்.[44] சங்க காலத்தில் காவிரிப்பூம்பட்டினத்திலும் அரிக்கமேடு துறைமுகத்திலும் யவன மாலுமிகள் தங்கியிருந்தது போலவே, முசிறிப் பட்டினத்திலும் யவன மாலுமிகள் தங்கியிருந்தார்கள். சங்க காலத்திலே அரபு வாணிகர்கள் முசிறித் துறைமுகப் பட்டினத்தில் ஒரு பகுதியில் தங்கி வாணிகஞ் செய்தனர். அவர்கள் தங்கியிருந்து வாணிகஞ் செய்த இடம் 'பந்தர்' என்று பெயர் பெற்றிருந்தது. பந்தர் என்னும் அரபுச் சொல்லின் பொருள், அங்காடி அல்லது கடைத்தெரு என்பது. முசிறி நகரத்து பந்தரில் அரபு வாணிகர் முக்கியமாக முத்துக்களை விற்றார்கள். பந்தருக்கு அருகில் இருந்த கொடுமணம் என்னும் ஊர், பொன் நகைகளுக்குப் பேர்பெற்றிருந்தது. முசிறிப் பட்டினத்துப் பந்தர், கொடுமணம் என்னும் ஊர்களில் நகை வாணிகம் சிறப்பாக இருந்தது.

> கொடுமணம் பட்ட நெடுமொழி யொக்கலொடு
> பந்தர்ப் பெயரிய பேரிசை மூதூர்க்
> கடனறி மரபிற் கைவல் பாண
> தென்கடல் முத்தமொடு நன்கலம் பெறுகுவை[45]

> கொடுமணம் பட்ட வினைமாண் நன்கலம்
> பந்தர்ப் பயந்த பலர்புகழ் மூத்தம்[46]

முசிறித் துறைமுகத்திலிருந்து கிரேக்க யவனர் பல பொருள்களை ஏற்றுமதி செய்து கொண்டு போனார்கள். அப்பொருள்களில் முக்கியமான ஏற்றுமதிப் பொருள் மிளகு. அதிக அளவாக மிளகை ஏற்றிக் கொண்டு போவதற்காக

யவனக் கப்பல்கள் பெரிதாக இருந்தன. மத்தியதரைக்கடல் நாடுகளில் மிளகு அக்காலத்தில் அதிகமாகச் செலவாயிற்று. யவனர் மிளகை அதிகமாக வாங்கிக் கொண்டு போனபடியால் மிளகுக்கு 'யவனப் பிரியா' என்று வடமொழியாளர் பெயரிட்டனர்.

யவனக் கப்பல் வாணிகர் முசிறித்துறைமுகத்துக்கு வந்து மிளகை வாங்கிச் சென்றதை சங்கப் புலவர் தங்கள் செய்யுட்களில் கூறியுள்ளனர். யவனர் மரக்கலங்களில் முசிறித்துறைமுகத்துக்கு வந்து பொன்னைக் கொடுத்து, கறியை (கறி - மிளகு) ஏற்றிக்கொண்டு போனதைப் புலவர் தாயங்கண்ணனார் கூறுகிறார்.

............................................... சேரலர்
சுள்ளியம் பேரியாற்று வெண்ணுரை கலங்க
யவனர் தந்த வினைமாண் நன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
வளங்கெழு முசிறி[47]

முசிறித் துறைமுகத்தில் நடந்த மிளகு வாணிகத்தைப் புலவர் பரணரும் கூறுகிறார். உள்நாடுகளில் விளைந்த மிளகைப் பறித்துச் சேர்த்து மூட்டைகளாகக் கட்டி முசிறித்துறைமுகத்துக்கு அனுப்பினார்கள். யவனக் கப்பல்கள் வந்தபோது மிளகு மூட்டைகளைப் படகுகளில் ஏற்றிக் கொண்டு போய் பெரிய யவன நாவாய்களில் ஏற்றினார்கள். ஏற்றின மிளகுக்கு ஈடாக யவனர் தந்த பொற் காசுகளை வாங்கிக் கொண்டு வந்தார்கள் என்று பரணர் கூறுகிறார்.

மனைக் குவைஇய கறி மூடையால்
கலிச்சும்மைய கரை கலக்குறுத்து
கலந் தந்த பொற் பரிசம்
கழித் தோணியாற் கரை சேர்க்குந்து[48]

(மனைக்குவைஇய - வீடுகளில் குவித்துவைத்த, கறிமூடை - மிளகு மூட்டை, கலம்தந்த - யவனரின் மரக்கலம் கொண்டு வந்த, பொற்பரிசும் - பொன்விலை) இச்செய்யுளில் 'கழித்தோணி' கூறப்படுகிறது. கழிகள் (உப்பங்கழிகள்) முசிறித்துறைமுகப்பட்டினத்தில் இருந்தன என்பது இதனால் தெரிகிறது. உப்பங்கழிகள் இக்காலத்தில் 'காயல்' என்று கூறப்படுகின்றன.

முசிறித் துறைமுகம், முசிறிப்பட்டினத்தில் சுள்ளியாறு கடலில் கலக்கிற இடத்தில் ஆற்றின் வடக்குக் கரையில் இருந்தது. அந்தத் துறைமுகத்தில் அரபுநாடு முதலான

நாடுகளிலிருந்து வந்த படகுகள் வந்து தங்கின. ஆனால், யவனரின் பெரிய கப்பல்கள் துறைமுகத்தில் வந்து நிற்க வில்லை. ஏனென்றால், பெரியாறு அடித்துக் கொண்டுவந்த மணல் நெடுங்காலமாக துறைமுகத்தில் தூர்ந்து கொண்டு, அந்த இடத்தை ஆழம் இல்லாமல் செய்துவிட்டது. யவனக் கப்பல்கள் பெரிதாகவும் உயரமாகவும் இருந்தபடியால் அவை துறைமுகத்தில் வந்து நிற்காமல், தூரத்தில் கடலிலேயே நின்றன. ஆகையால் சரக்குகளைத் தோணிகளில் ஏற்றிக் கொண்டுபோய் யவனக் கப்பல்களில் இறக்கினார்கள். இந்தச் செய்தியை யவனர்கள் எழுதிய குறிப்பிலிருந்து அறிகிறோம்.

துறைமுகத்தைச் சார்ந்து முசிறிப்பட்டினம் பெரிதாக இருந்தது. வடக்குத் தெற்காகவும் கிழக்கு மேற்காகவும் வீதிகள் அமைந்திருந்தன. அங்குக் கரையோரங்களில் நெய்தல் நில மக்களின் குப்பங்கள் இருந்தன. அவர்கள் கடலில் சென்று மீன் பிடித்து, விற்று வாழ்ந்தனர். அயல் நாடுகளிலிருந்து வாணிகத்துக்காக வந்த அராபியர், யவனர் முதலானவர் தங்கியிருந்த இடங்களும் இருந்தன. தொழிலாளிகளும் பல பொருள்களை ஏற்றுமதி இறக்குமதி செய்த வாணிகர்களும் அந்நகரத்தில் வாழ்ந்தனர். வஞ்சிமா நகரத்தில் கிழக்கு மேற்காக அமைந்திருந்த நெடுஞ்சாலை தொடர்ந்து கடற்கரை வரையில் சென்றது. கடற்கரைப் பக்கமாக, உரோம நாட்டு சக்கரவர்த்தி அகுஸ்தஸ் ஸீசரின் கோயில் கடற்கரையோரத்தில் இருந்ததை முன்னமே கூறினோம்.

முசிறிப்பட்டினத்தின் நடுவில் ஒரு கோயில் இருந்தது. அந்தக் கோயில் எந்தத் தெய்வத்துக்குரியது என்பது தெரிய வில்லை. அந்தக் கோயிலில் இருந்த படிமத்தை (தெய்வ உருவத்தை)ப் பாண்டியன் ஒருவன் கவர்ந்துகொண்டு போனான். பாண்டியன் முசிறிப்பட்டினத்தை முற்றுகையிட்டு நகரத்தை வென்று அங்கிருந்த படிமத்தைக் கொண்டு போனான் என்று தாயங்கண்ணனார் கூறுகிறார்.

வளங்கெழு முசிறி யார்ப்பெழ வளைஇ
அருஞ்சமங் கடந்து படிமம் வவ்விய
நெடுநல் யானை யடுபோர்ச் செழியன்[49]

முசிறிப்பட்டினத்தை முற்றுகையிட்டுப் போர்செய்த செழியன் (பாண்டியன்)அந்தப் போரை வென்று, சேரனுடைய யானைப்படையில் இருந்த யானைகளைக் கவர்ந்தான் என்று நக்கீரர் கூறுகிறார்.

கொய் சுவற்புரவிக் கொடித்தேர்ச் செழியன்
முதுநீர் முன்றுறை முசிறி முற்றிக்
களிறுபட பெருக்கிய கல்லென் ஞாட்பு[50]

முசிறிப்பட்டினத்தில் போர்செய்த பாண்டியன், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியனாகத் தோன்றுகிறான். இவனுடன் போர் செய்து தோற்ற சேரன், குட்டுவன் சேரல் என்று தோன்றுகிறது. குட்டுவன் சேரலுக்குக் கோக்கோதை மார்பன் என்னும் பெயரும் வழங்கியது. குட்டுவன் சேரலாகிய கோக்கோதை மார்பன், சேரன் செங்குட்டுவனுடைய மகன். தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனும் கோக்கோதை மார்பனும் சமகாலத்தவர்.

**நகரங்களின் அழிவு**

சங்ககாலத் தமிழகம் கிழக்கு மேற்கு தெற்கு ஆகிய மூன்று பக்கங்களில் மிக நீண்ட கடற்கரையைக் கொண்டிருந்தது. கடற்கரை யோரங்களிலிருந்த பல ஊர்களைக் கடல் அழித்துவிட்டது. கடற்கோள்களினால் பல ஊர்கள் அழிந்து போனதைத் தமிழ் இலக்கியங்களும் செவிவழிச் செய்திகளும் கூறுகின்றன. முன் ஒரு காலத்தில் தமிழகத்தே இணைந்திருந்த நிலம், கடற்கோள்களினால் உடைந்து பிரிந்து இலங்கைத் தீவாக மாறிவிட்டது என்பதை நிலநூல் வல்லவர் கூறுகின்றனர். பழைய இலங்கையிலும் இரண்டு கடல் கோள்கள் நிகழ்ந்ததை *மகாவம்சம்* கூறுகிறது. பழங்காலத்தில் பாண்டி நாட்டுக்குள்ளே (ஐந்து மைல் உள்ளே) வந்திருந்த கொற்கைக் குடாக்கடல், தாமிரபரணியாற்றினாலும் கடல் அலைகளினாலும் மணல் தூர்ந்து பையப்பையப் பிற்காலத்தில் மறைந்து, அந்தக் கடல் பகுதி நிலமாக மாறிவிட்டதையறிகிறோம். தொண்டை நாட்டில் கடற்கரையோரத்தில் இருந்த பவத்திரிக் கோட்டம் பிற்காலத்தில் கடலில் முழுகி மறைந்து போய், இப்போது பழவேற்காடு ஏரி என்று பெயர் பெற்றிருக்கிறது. இவ்வாறு ஒரு பெரிய கோட்டம் ஒன்று முழுகிப் போயிற்று. இராமநாதபுரத்தோடு இணைந்து கடலுக்குள் இருந்த நிலப்பகுதி, பிற்காலத்தில் உடையுண்டு, இப்போது இராமேசுவரத் தீவாக மாறிப் போயிற்று. இவ்வாறு தமிழகத்தின் கரையோரங்களில் பல அழிவுகள் ஏற்பட்டுள்ளன. மேற்குக் கரையிலிருந்த பழைய சேரநாட்டிலும் பல கடற்கோள்களினால் கடற்கரைப் பட்டினங்களும் ஊர்களும் மறைந்து போயின. சேரநாட்டின் கடற்கரையோரத்தில் இருந்த பேர்போன மூலவாசம் என்னும் ஊர், புத்தக் கோயிலுக்குப்

பெயர் பெற்றிருந்தது. அந்த ஊர் ஸ்ரீ மூலவாசம் என்று உலகப்புகழ் படைத்திருந்தது. பிற்காலத்தில் (கி. பி. 11-ம் நூற்றாண்டில்) அந்த ஊர் கடலினால் அழிக்கப்பட்டு மறைந்து போயிற்று.

இவற்றைப் போலவே, சேரநாட்டில் உலகப் புகழ் பெற்றிருந்த வஞ்சிமாநகரமும் முசிறிப் பட்டினமும் பிற் காலத்தில் கடலில் முழுகி, மறைந்து போயின. முதலில் கடற்கரைக்கு அருகில் இருந்த முசிறித் துறைமுகமும் பட்டினமும் அழிந்து போயின. பிறகு, பிற்காலத்தில் வஞ்சிமா நகரத்தின் பெரும்பகுதி ஊர்கள் மறைந்து போயின. இந்த நகரங்களின் அழிவுக்குக் காரணமாக இருந்தது சுள்ளி ஆறாகிய பேரியாறுதான். மேற்குத் தொடர்ச்சி மலையில் அயிரிமலை மேல் தோன்றி, தரையில் இழிந்து நாட்டில் பாய்ந்து, கடலில் புகுந்த பேரியாறு, பல நூற்றாண்டுகளாக மணலை அடித்துக் கொண்டு போய் கடலுக்கு அருகில் இருந்த துறைமுகத்தைத் தூர்த்துக்கொண்டு வந்தது. துறைமுகத்தைத் தூர்த்துக் கொண்டிருந்தது மட்டுமல்லாமல், இந்த ஆறே தூர்ந்து கொண்டு ஆழமில்லாமற் போயிற்று. முசிறித்துறைமுகம் மணல் தூர்ந்து ஆழமில்லாமற் போனபடியால், யவனரின் பெரிய கப்பல்கள் 'துறைமுகத்துக்குள் வரமுடியாமற் போனதை முன்னமே கண்டோம்.

பெரியாற்றில் எப்போதும் வெள்ளம் இருந்தது என்பதைச் சங்கச் செய்யுட்களிலிருந்து அறிகிறோம்.

கோடை நீடக் குன்றம் புல்லென
அருவியற்ற பெருவறற் காலையும்
நிவந்து கரையிழிதரு நனந்தலைப் பேரியாறு

என்று பாலைக் கவுதமனார் பாடினார்.[51] 'புனல் பேரியாறு' என்று பெருங்குன்றூர் கிழார் பாடியனார்.[52] வறண்ட காலத்திலும் பேரியாற்றில் வெள்ளம் பாய்ந்தோடியது என்றும் அந்த வெள்ளம் கரைகளை உடைத்துப் பக்கங்களில் பரவிற்று என்றும் பரணர் பாடினார்.

குன்று வறங்கூரச் சுடர்சினந்திகழ
அருவியற்ற பெருவறற் காலையும்
அருஞ்செயற் பேராறு இருங்கரையுடைத்து[53]

ஆற்று வெள்ளம் இரு கரைகளிலும் வழிந்து பாய்ந்தது என்று கூறுகிறபடியால், ஆறே காலப்போக்கில் மணல் தூர்ந்து ஆழமில்லாமற் போயிற்று என்று தெரிகிறது. இவ்வாறு மணல் தூர்ந்து ஆழமில்லாமற்போன பேரியாறு, கி.பி. 14-ம்

நூற்றாண்டில் ஓராண்டில் பெரும் மழைபெய்து வெள்ளப் பெருக்கெடுத்தது. அப்போது கடலும் கொந்தளித்து அலை பொங்கியது. அதனால், முசிறிப் பட்டினமும் அதனைச் சார்ந்த கடற்கரை ஊர்களும் கடலில் மூழ்கி, மறைந்து போயின.

சேரநாட்டு வஞ்சிநகரமும் முசிறிப்பட்டினமும் பிற் காலத்தில் மறைந்து போயின. மறைந்துபோன அந்த நகரங்களைப் பற்றின செய்திகளைச் சங்ககாலத்து நூல்களும் சங்கச் செய்யுட்களும் நமக்கு நினைவூட்டிக் கொண்டிருக் கின்றன. இந்நூல்களின் உதவியினால் மறைந்துபோன அந்த நகரங்களின் அமைப்புகளை ஒருவாறு படம் எழுதிப் பார்க்கிறோம்.

### விளக்கங்களும் குறிப்புகளும்

1. 'Vancimanagar or the Great city called Vanci', C.S. Cheluva Aiyar, pp. 113-134, *Journal of Oriental Research*, Madras, Vol. III; The Karora of Ptolemy, K. V. Krishna Ayyar, pp. 119-120, *Indian Historical Quarterly*, Vol. V; Vanchi or Karuvur - the Ancient Chera Capital, K.G. Sesha Ayyar pp. 249-259, *Kerala Society Papers, Trivandrum Series*. 9-10; 'Vanci Mutur', K.G. Sesha Ayyar, *Rama Varma Research Institute Bulletin* No. 3, pp. 1-9; Ganganur - A study, K.R. Pisharoti, pp. 33-36, *Rama Varma Research Institute Bulletin* Vol. I; Ganganur - A Reply, Raja K. Rama Varama, *Rama Varma Research Institute Bulletin*, No. 2, pp. 64-71; 'Karuvur or Vanjimanagar', C.M. Ramachandran Chettiar, *Quarterly Journal of the Mythic Society*, Vol. XXVI, pp. 144-46.
2. *கொங்கு நாட்டு வரலாறு*, மயிலை. சீனி. வேங்கடசாமி, 1974, பக்கம்: 18.
3. *பதிற்றுப்பத்து*, மூன்றாம்பத்து, 1:29, பதிகம்: 'அயிரை மரைஇ'. இதன் பழைய உரை காண்க. ஏழாம்பத்து, 10:26., 'உருகெழுமரபின் அயிரைபரைஇ,' 9-ம் பத்து, 8:12. இதன் பழைய உரை காண்க. 10.19.
4. 'சுள்ளியம் பேரியாறு' என்று *அகம்* 149 கூறுகிறது.
5. *பதிற்றுப்பத்து*, ஐந்தாம்பத்து, 8:12-18.
6. *சிலப்பதிகாரம்*, காட்சிக்காதை, அடி: 21-92.
7. *மேற்படி* அடி: 107-115.
8. கௌடல்லியர், *அர்த்தசாத்திரம்*. 3ம் பகுதி, 11ஆம் அதிகாரம். மயிலை. சீனி. வேங்கடசாமி எழுதிய 'சேர நாட்டு முத்து' என்னும் கட்டுரை காண்க. *தெ.பொ. மீ. மணிவிழா மலர்*, பக்கம்: 493-498.

9. *மணிமேகலை*, 28ஆம் காதை, அடி: 59-66.
10. *மேற்படி* அடி: 31-34.
11. *மேற்படி* : 34-43.
12. *மேற்படி* : 43-47.
13. *மேற்படி* : 49-54.
14. *மேற்படி* : 56-58.
15. *மேற்படி* : 5-22.
16. *சிலப்பதிகாரம்*, 28-ம் காதை, 49-50.
17. *மேற்படி* : 50-77.
18. *மேற்படி* : 78-79.
19. *மேற்படி* 26-ம் காதை. 54-57, 62-63.
20. *மேற்படி* 25-ம் காதை. 4.
21. *மேற்படி*
22. *மேற்படி* 3-9, 21-23.
23. *மணிமேகலை*, 28-ம் காதை. அடி. 24.
24. *மேற்படி* : 18-22.
25. *மேற்படி* : 5-17.
26. *மணிமேகலை*, 28-ம் காதை, அடி: 23-24.
27. *பதிற்றுப்பத்து*, ஆறாம் பத்து, 3:7-9.
28. *மேற்படி*: 3,6.
29. *திருமுருகாற்றுப்படை*, 67-71.
30. *மணிமேகலை*, 28-ம் காதை, அடி: 24-28.
31. *மேற்படி* 26-ம் காதை, அடி: 72-76.
32. *சிலப்பதிகாரம்*, பதிகம், அடி: 1-2.
33. *மேற்படி* 30-ம் காதை, அடி: 179.
34. 'A Note on Gunavail Kottam', A. Govinda Wariar, p. 232ff. *Quarterly Journal of Mythic Society*, Bangalore, Vol. XIX; `Kunavayirkkottam and Vanci', Rao Sahib Sahityabushana S. Paramesvera Aiyar, pp. 241-254, *Professor K. V. Rengaswami Aiyengar Commemmoration Volume,* 1940; *விஞ்ஞான தீபிகா*, மூன்றாம் தொகுதி, பக்கம்: 21., தொகுதி 4 (மலையாள மொழி).
35. *சிலப்பதிகாரம்* 30-ம் காதை, அடி: 168-170.
36. *சிலப்பதிகாரம்* 30-ம் காதை, அடி: 170-171.
37. *சிலப்பதிகாரம்* 28-ம் காதை, அடி: 196-198.
38. *சிலப்பதிகாரம்* 28-ம் காதை, அடி: 123-132.
39. 'மணிமேகலையின் விண்வழிச் செலவு, மயிலை. சீனி. வேங்கடசாமி, பக்கம்: 176-182, *கரந்தைத் தமிழ்ச் சங்கம் மணிவிழா மலர்*, 1973.

40. *சிலப்பதிகாரம்* 26-ம் காதை, அடி: 43-45.
41. *மணிமேகலை*, 28-ம் காதை, அடி: 2-4.
42. *அகநானூறு*, 57:15.
43. *புறநானூறு*, 343:10.
44. Sir Mortimer Wheeler., *Rome Beyond the Imperial Frontiers*, p. 209.
45. *பதிற்றுப்பத்து*, ஏழாம்பத்து, 7: 1-4.
46. *மேற்படி*, எட்டாம்பத்து, 4:5-6 'நன்கல வெறுக்கை துஞ்சும்பந்தர்' 5:5.4.
47. *அகநானூறு*, 149: 7-11.
48. *புறநானூறு*, 343: 3-6.
49. *அகநானூறு*, 149: 11-13.
50. *மேற்படி* 57: 14-16.
51. *பதிற்றுப்பத்து*, 3: 8. 8-10.
52. *மேற்படி* ஒன்பதாம்பத்து, 8:25.
53. *மேற்படி* ஐந்தாம் பத்து, 3:13-15.

தமிழியல், ஜூன் 1976

# சாக்கைக் கூத்தர்

சிவபெருமான் ஆடியருளும் தாண்டவங்களை, பயிற்சி பெற்ற சாக்கையர் என்பவர் ஆடிவந்தனர் என்றும், அவர்களுக்குச் சில கோயில்களிலே சாக்கைக்காணி அல்லது கூத்தக்காணி என்னும் பெயருடன் நிலங்கள் நன்கொடை யாகக் (மானியமாக) கொடுக்கப்பட்டன என்றும் சாசனங் களினால் அறிகிறோம்.

நட்டுவநிலை, நட்டுவக்காணி, வீணைக்காணி, நிருத்திய போகம், தலைக்கோல் காணி, கூத்தக் காணி முதலிய மானியங்களை நாம் இங்குக் குறிப்பிடவில்லை. இவை சாந்திக்கூத்து, நடனம், இசைப்பாட்டு முதலியவற்றுக்காகக் கொடுக்கப்பட்ட மானியங்கள். நாம் இங்குக் குறிப்பிடுவது தாண்டவக் கூத்தையாடும் சாக்கையரைப் பற்றியே.

சங்க காலத்திலே, அதாவது கி. பி. 300-க்கு முன்னே, பொது மேடைகளில் திருவிழாக் காலங்களில் ஆடப் பெற்ற பதினொரு ஆடல்களில், சிவபெருமான் ஆடிய தாண்டவங்களில் கொடுகொட்டி, பாண்டரங்கம், கபாலம் என்னும் மூன்று ஆடல்கள் ஆடப்பெற்றன என்று *சிலப்பதிகாரம்,* *மணிமேகலை* முதலிய நூல்களினால் அறிகிறோம். பறையூர் கூத்தச்சாக்கையன், கொடுகொட்டி யாடலைச் சேரன் செங்குட்டுவன் முன்னர் ஆடினான் என்னும் செய்தியைச் *சிலப்பதிகாரம்* கூறுகிறது.

பிற்காலத்திலும் சாக்கையர் இருந்தனர் என்பதும் அவர்களைத் தமிழ் மன்னர் போற்றி வந்தனர் என்பதும் சாசனங்களால் அறியப்படுகிறது. திருவிடைமருதூரில் மகாலிங்க சுவாமி கோவிலில் உள்ள சாசனம் ஒன்று திருவெள்ளறை சாக்கை என்னும் ஆடலாசிரியருக்கு நிலம் மானியம் வழங்கப்பட்ட செய்தி கூறுகிறது. "தைப்பூசத் திருநாளிலே கூத்தாடுவதாகவும் நிருத்தம் ஆடின பிற்றைநாள் துடங்கி மூன்று கூத்தாடுவதாகவும், ஆக இக்கூத்து ஏழு அங்கமும் ஆடுவதாகவும்" என்று இந்தச் சாசனம் கூறுகிறது. இந்தச் சாசனம் ஏற்பட்டது, பாண்டியன் தலைக்கொண்ட கோப் பரகேசரி வர்மன் என்னும் சோழ அரசனுடைய ஆட்சியில் 4-வது ஆண்டில் ஆகும் (154 ஆப் 1985. எஸ்.ஐ.ஐ. வால்யூம் 5 நம்பர் 718).

காமரச வல்லியில் (திருச்சி ஜில்லா, உடையார்பாளையம் தாலுக்கா) உள்ள கார்க்கோடகேசுவரர் கோவில் சாசனம், சாக்கை மாராயன் விக்கிரம சோழதேவன் என்னும் ஆடலாசிரியரைப் பற்றிக் கூறுகிறது. இவர் இக்கோவிலில், திருவாதிரையில் மூன்று சாக்கைக் கூத்தும் வைகாசித் திருவாதிரையில் மூன்று சாக்கைக் கூத்தும் ஆடுவதற்காக நியமிக்கப்பட்டிருந்தார். இந்தச் சாசனம், பரகேசரிவர்மன் என்னும் உடையார் இராஜேந்திர சோழருடைய 29-வது ஆண்டில் ஏற்பட்டது (65 ஆப் 1914).

மற்றும், விக்கிரமாதித்தன் திருமுதுகுன்றன் என்னும் விருதராஜ பயங்கர ஆசாரியன் (90 ஆப் 1951), குமரன சீகண்டன் (120 ஆப் 1925), பாரசிவன் பொன்னன் என்னும் கலாவினோதப் பேரரையன் (255 ஆப் 1925) முதலிய ஆடலாசிரியர்களின் பெயர்கள் சாசனங்களில் கூறப்படுகின்றன. இவர்கள், நமது ஆராய்ச்சிக்குரிய சாக்கைக் கூத்தர்களோ, வேறு வகைக் கூத்தர்களோ என்பது விளங்கவில்லை.

*தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றம் வெள்ளிவிழா மலர்,* 1980

# கல் சொல்லும் வரலாறு

## சமண சமயச் சார்பான சாசனச் சின்னங்கள்

இச்செய்யுள் வட ஆற்காடு மாவட்டம், போளூருக்கு அருகில் உள்ள திருமலை என்னும் குன்றின் மேல் உள்ள சிகாமணிநாதர் கோயிலின் சுவரில் உள்ளது.

தகடூர் அதிகமான் குலத்தில் பிறந்த விடுகாதழகிய பெருமாள் இத்திருமலையில் இருந்த இயக்கர் இயக்கியரின் உருவங்களைப் புதுப்பித்ததை இச்சாசனச் செய்யுள் கூறுகிறது.

வஞ்சியர் குலபதி எழினி வகுத்த வியக்கரியக்கியரோ
டெஞ்சிய வழிவு திருத்தியிவ் வெண்குணவிறை திருமலை
வைத்தான்
அஞ்சிதன் வழிவருமவன் வழிமுதலி அதிகன் வகன் நூல்
விஞ்சையர் தலைபுனை தகடையர் காவலன்
விடுகாதழகிய பெருமாளேய்.

(வகன் - குபேரன்)

இச்செய்யுள் சாசனம், வட ஆற்காடு மாவட்டம் போளூருக்கு அருகில் உள்ள வைகாவூர் திருமலை என்னும் ஊரில் உள்ளது. இவ்வூர் ஏரியில் கணிசேகர மருபொற் சூரியன் என்பவர் பெயரால் குணவீர மாமுனிவன் கலிங்கு கட்டியதை இச்செய்யுள் கூறுகிறது.

அலைபுரியும் புனற்பொன்னி ஆறுடைய சோழன்
அருமொழிக்கு யாண்டு இருபத்தொன் றாவதென்றுங்
கலைபுரியு மதிநிபுணன் வெண்கிழான் கணிச்செக்
கரமருபொற் சூரியன்றன் நாமத்தால்வாம
நிலைநிற்குங் கலிஞ்சிட்டு நிமிர்வைகை மலைக்கு
நீடூழி இருமருங்கும் நெல்விளையக் கண்டோன்
கொலைபுரியும் படை அரைகள் கொண்டாடும் பாதன்
குணவீர மாமுனிவன் குளிர்வைகைக் கோவேய்

தென் ஆற்காடு மாவட்டம், திருக்கோயிலூர் தாலூகா சிற்றாமூர் இவ்வூர் மலைநாதர் கோயிலின் பின்புறத்தில் இருக்கிற பொடவின் அடியில் உள்ள சாசனச் செய்யுள் இக்

கோயிலுக்குச் சோழ அரசி தானஞ் செய்ததைக் கூறுகிறது. இச்செய்யுள் (No. 830, *S.I.I.*, Vol. VII):

காடவர்கோன் பாவை கனைகழற்காற் சோழற்கு
நீடுபுகழ் தேவியர் நீணிலத்துப் - பீடுசிறந்
தமரும் சிற்றாமூர் செய்திறங்கல் மீட்பித்
தறம்பெருக வாக்கு மவள்

செங்கற்பட்டு மாவட்டம் காஞ்சீபுரம் தாலுக்கா ஜினகாஞ்சி (திருப்பருத்திக்குன்றம்) திரைலோக்ய நாதர் என்னும் ஜைனக்கோயிலில் உள்ள ஒரு சாசனச் செய்யுள் (No. 399, *S. I. I.*, Vol. VII.):

தன்னளவிற் குன்றா துயராது தண்காஞ்சி
முன்னுளது மும்முனிவர் மூழ்கியது - மன்னவன்தன்
செங்கோல் நலங்காட்டுந் தென்பருத்தி குன்றமர்ந்த
கொங்கார் தருமக் குரா

இந்தச் சாசனச் செய்யுள் வட ஆற்காடு மாவட்டம், ஆரணி தாலுக்கா பூண்டி கிராமத்தில் உள்ள பொன்னிநாதர் என்னும் ஜைனக் கோயிலில் மேற்புறச் சுவரில் உள்ளது. இக் கோயிலின் பழைய பெயர் வீரவீர ஜினாலயம் என்பது. இக்கோயிலுக்கு ஒரு அரசன் நிலம் முதலியவற்றைத் தானம் வழங்கியதை இச்செய்யுள் கூறுகிறது.

சிறப் பருளிக்
கொற்றவன் மகிழ்ந்த கொள்கைய னாகி
மெய்த்தவத் தீர்க்கு வேண்டுவ தியாதென
அத்தவ னுரைப்போ னின்னசன்றலை ஞாலத்துச்
செயங்கொண்ட சோழ மண்டலந் தன்னிற்
பயன்படு சோலைப் பன்குன்றக் கோட்டத்து
வேண்டியது சுரக்கு மெயூர் நாட்டுப்
பூண்டி யென்பது காண்டகு திருநகர்
சீயன் சம்புவன் திரு ... றமாப் போய்
காலத்துப் புரந்துடன் வந்தது
அறநெறி வரை வருணமக் கென்ன
மறமலி தானை மன்னர் மன்னன்
சினவரன் றனக்குச் செம்பொற் கோயி
னிவன்தக வருளி நின்று நீடுவிளங்க
வீரவீர சினாலய மென்று தன்
பெயர் பொறித்தமைத்துப் பெருஞ்சிறப் பியற்றி
முனிகள் பூண்டியென் றினிதினி நடப்ப
வெல்லை தழுவிய விரும்பே டுட்பட
நல்லறந் தழைப்ப நன்கமைத் தனனே

அஃதான்று
அணிநகரசன் பெயரெல்லை யாவதுங்
கணியிலுப்பைக்குக் காண்டகு மேற்கும்
நெருநற் பாக்கத் தெல்லைவட மேற்கும்
பொருநற் குன்றிப் புனல்யாற்றின் வடக்குங்
குலாமலி குண்டிகைத் துறைக்கு வடகிழக்கு
மிலாறையாதித்த மங்கலத் தெல்லைக்கேய் கிழக்கு
மிரும்புனற் பொய்கை மெயூரெல்லை... ந்ததென்கிழக்கு
மல்லற் றொல்சீர் மறையோ ராதை
யெல்லை நிலத்துக் கியைந்த தெற்கு
மெண்டிசைம ருங்கினு மியன்ற வெல்லையிற்
குண்டிகைக் கல்லுநாட்டிக் கண்கவர்
கொல்லை நன்னிலங் குறைவின்றி விரிந்...
னெல்லை முற்று மிறையும் வரியு
மந்தராயமு மாயமும மஞ்சியும்
வந்தன பிறவு மாற்றி வளமலி
மாளிகை யெடுக்கவு மணிக்குலைக் கமுகு
நாளிகோமு நன்குடனுக்கவுங்
கரும்புஞ் செந்நெலு மொருங்குட டைவுஞ்
சம்பகந் தமனகஞ் சாதி கேதகை
வண்கழு நீருடன் மலர்பல வியற்றவும்
... ஞ்செக்கு மமைக்கவு மருளிச்
சாலையுந்த தவமுந் தருமமுந் தழைப்பச்
செம்பிலுங் கல்லிலுஞ் செய்து தன்புக
ழலர்கதி ரளவுஞ் செல்ல
மலர்தலை யுலகின் வாழ்வமைத் தனனே.

நல்லறம் (ஆண்டு தெரியவில்லை)

# பண்டைத் தமிழகத்தின் வடவெல்லை

பண்டைத் தமிழகத்தின் வடவெல்லையைக் குறிக்கும் போதெல்லாம் நெடியோன் குன்றமாகிய வேங்கடமலையை மட்டுமே பண்டை ஆசிரியர் குறிப்பிட்டுள்ளனர். 'வடவேங் கடந் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுகம்' என்று கூறிப்போந்தது *தொல்காப்பியச்* சிறப்புப் பாயிரம்.

நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்
தமிழ்வரம் பறுத்த தண்புன னாட்டு

(*சிலப்*. வேனிற்காதை)

என்றும்,

குமரி வேங்கடம் குணகுட கடலா
மண்டிணி மருங்கிற் றண்டமிழ் வரைப்பில்

(*சிலப்*. வஞ்சி, கட்டுரை)

என்றும் இளங்கோவடிகள் கூறியுள்ளார். பிற்காலத்து *நன்னூலாரும்*.

குணகுடல் குமரி குடகம் வேங்கடம்
எனுநான் கெல்லையி னிருந்தமிழ்க் கடலுள்

என்று வேங்கடமலையினையே வடவெல்லையாகக் கூறியிருக் கின்றார். இங்கு நாம் ஆராயப் புகுவது நன்னூலார் கூறிய தமிழ் நாட்டு எல்லையைப் பற்றி அன்று; இற்றைக்கு ஆயிரத்து எண்ணூறு ஆண்டுக்கு முற்பட்ட, அதாவது, கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் இருந்த தமிழ் நாட்டின் வடவெல்லையைப் பற்றியே இங்கு ஆராய்ச்சி செய்யப்படுகின்றது.

திருவேங்கடமலை தமிழ் நாட்டின் வடவெல்லையாக இருந்ததென்பதில் சற்றும் ஐயமில்லை. ஏனென்றால், பண்டை ஆசிரியர் அனைவரும் அதனையே வடவெல்லையாகக் கூறி யுள்ளனர். திருவேங்கடமலைக்கு அப்பால் வேறு மொழி பேசப்பட்டது என்பதை.

பனிபடு சோலை வேங்கடத் தும்பர்
மொழிபெயர் தேஎத்தர்" (*அகம்.* 211)

என்று மாமூலனார் என்னும் புலவர் கூறுகின்றார் அக்காலத்து, திருவேங்கட மலையையும் அதைச் சூழ்ந்த நாட்டினையும்

புல்லி என்னும் சிற்றரசன் ஆண்டான் என்றும் (*அகம்* 61) அப்புலவரே கூறுகின்றார். அன்றியும், வேங்கடமலைக்கு அப்பால் உள்ள மொழிபெயர் தேயத்தில் வடுகர் வாழ்ந்ததாக அப்புலவரே கூறியுள்ளார்:

புடையலங் கழற்காற் புல்லி குன்றத்து
நடையருங் கானம் விலங்கி நோன்சிலைத்
தொடையமை பகழித் துவன்றுநிலை வடுகர்
பிழியார் மகிழர் கலிசிறந் தார்க்கும்
மொழிபெயர் தேஎம்... (*அகம்* 295)

எனவே, வேங்கடமலை தமிழ் நாட்டின் வடவெல்லை என்பதும், அம்மலைக்கு அப்பால் வேறு மொழி பேசப்பட்ட 'மொழிபெயர் தேயம்' இருந்தது என்பதும் வெள்ளிடை மலைபோல் விளங்குகிறது.

ஆனால், வேங்கடமலையை மட்டும் வடவெல்லையாகக் கூறியது எவ்வாறு பொருந்தும்? வேங்கடமலை தமிழகத்தின் வடக்கே குணகடல் முதல் குடகடல் வரையிலும் கிழக்கு மேற்காய் நீண்டு கிடக்கும் ஒரு மலையன்று; அது குணகடலின் பக்கமாகக் கிழக்குத் தொடர்ச்சி மலையைச் சேர்ந்த ஒரு பகுதி மட்டுமே. எனவே, கீழ்க்கடற் பக்கமுள்ள ஒரு மலையை மட்டும் வடவெல்லையாகக் கூறியது தமிழ் நாட்டின் வடவெல்லையை முற்றும் குறிப்பிட்டதாகுமோ? தமிழ் நாட்டின் வடக்கே மேற்கடற் பக்கமாகவும் ஓர் எல்லை கூறவேண்டுவது இன்றியமையாததன்றோ? அவ்வாறு ஓரெல்லை இருந்தே தீரவேண்டும். இல்லையென்றால், அது தமிழகத்தின் வடவெல்லை முழுவதும் கூறப்பட்டதாகாது. கிழக்குத் தொடர்ச்சி மலையிலுள்ள வேங்கடமலையை வடவெல்லையாகக் கூறியதுபோல மேற்குத் தொடர்ச்சி மலையிலும் ஓர் எல்லை கூறப்படவேண்டும். அவ்வாறு ஏதேனும் ஓர் எல்லை இருந்ததா? சங்க நூல்களில் இதற்கு ஏதேனும் விடை கிடைக்கின்றதா என்பதை ஆராய்வோம்.

இந்த ஆராய்ச்சிக்கும் மேற்குறித்த சங்கப் புலவர் மாமூலனாரே நமக்குத் தோன்றாத்துணையாக இருந்து வழி காட்டுகின்றார். குடகடலுக்கு அருகில், தமிழ் நாட்டின் வடவெல்லையாக ஒரு மலையை அவர் குறிப்பிடுகின்றார். அது ஏழில்மலை அல்லது ஏழிற்குன்றம் என்பது. தலைமகன் (காதலன்) பிரிவின்கண் தலைமகள் (காதலி) தோழிக்கு சொல்லியதாக இப்புலவர்பெருமான் செய்த செய்யுள் ஒன்றில் தற்செயலாக இதனைக் குறிப்பிடுகின்றார். அது வருமாறு:

அரம்போ ழவ்வளை செறிந்த முன்கை
வரைந்துதாம் பிணித்த தொல்கவின் றொலைய

வெவனாய்ந் தனர்கொல் தோழி ஞெமன்ன்
தெரிகோ லன்ன செயிர்தீர் செம்மொழி
யுலைந்த வொக்கல் பாடுநர் செலினே
யுரன்மலி யுள்ளமொடு முனைபா ழாக
அருங்குறும் பெறிந்த பெருங்கல வெறுக்கை
சூழாது சுரக்கும் நன்ன னன்னாட்டு
ஏழிற் குன்றத்துக் கவாஅற் கேழ்கொளத்
திருந்தரை நிவந்த கருங்கால் வேங்கை
யெரிமருள் கவள மாந்திக் களிறுதன்
வரிநுதல் வைத்த வலிதேம்பு தடக்கை
கல்லூர் பாம்பிற் றோன்றும்
சொல்பெயர் தேஎத்த சுரனிறந் தோரே (அகம் 349)

நன்னன் என்னும் சிற்றரசனது ஏழிற் குன்றத்துக்கப்பால் மொழிபெயர் தேயம் - அஃதாவது, தமிழ் அல்லாத வேறு மொழி வழங்கும் தேசம் இருந்ததென்பது இப் பாட்டினால் பெறப்படுகின்றது. இந்த ஏழிற்குன்றம் குடகடற் பக்கமாக மேற்குத் தொடர்ச்சி மலையைச் சேர்ந்த கொங்கண நாடாகிய துளுநாட்டில் உள்ளது. எனவே, தமிழ் நாட்டின் வடவெல்லை மேல்கடற் பக்கமாகவுள்ள ஏழிற் குன்றத்தையும் கீழ்க்கடற் பக்கமாகவுள்ள வேங்கடமலையையும் கொண்டிருந்தது என்பது நன்கு விளங்குகின்றது.

ஏழில்மலை இப்போது மலபார் மாவட்டத்தில் உள்ள கண்ணனூருக்கு வடக்கே பதினெட்டு மைலுக்கப்பால் இருக்கிறது. இங்கு ஏழில்மலை என்னும் இரயில் நிலையமும் உண்டு. ஏழில்மலை என்பதை உச்சரிக்கத் தெரியாதவர்கள் அதனை எலிமலை என்று வழங்கினர். பிற்காலத்தில் அந்த எலிமலையை வடமொழியில் மூஷிகமலை (மூஷிகம்-எலி) என்று மொழிபெயர்த்துக் கொண்டனர். அந்த மலைப் பகுதியை ஆண்ட அரசகுலத்தைப் பற்றி மூஷிக வம்சம் என்னும் வடமொழி நூலையும் எழுதிவிட்டனர். பிற்காலத்துப் போர்ச்சுகீசியர் இந்த மலையை மவுண்ட் டி எல்லி என்று கூறினர். தமிழ் நாடாக இருந்த சேரநாடு பிற்காலத்தில் மலையாள பாஷை பேசும் நாடாக மாறிவிட்ட பிறகு, ஏழில்மலை தமிழகத்தின் வடவெல்லையைக் குறிக்காமற் போயிற்று. ஆனால், சங்க காலத்தில் தமிழகத்தின் மேற்குக் கரையில் வடவெல்லையாக இருந்தது ஏழில்மலை என்பது நன்கு தெரிகின்றது.

பண்டைத் தமிழ் நாட்டின் வடவெல்லை கீழ்ப்புறமாக வேங்கடமலையும், மேற்புறமாக ஏழிற்குன்றமும் என

அறிந்தோம். இனி, இந்த இரண்டு மலைகளுக்கும் இடையில் உள்ள நாடுகளில் வடவெல்லையாக இருந்தவை எவை என்பதையும் ஆராய்வோம். இதனையும் மாமூலனாரே விளக்குகின்றார்.

குல்லைக் கண்ணி வடுகர் முனையது
பல்வேற் கட்டி நன்னாட் டும்பர்
மொழிபெயர் தேயம்! (*குறும்.* 11)

என்று கட்டி என்னும் சிற்றரசனது நாடு தமிழ் நாட்டின் வடவெல்லையாக இருந்ததென்றும், அவனது நாட்டுக்கப்பால் வேறு மொழி பேசப்படும் தேயம் இருந்ததென்றும் அவர் கூறுகின்றார். *அகநானூறு* 44ஆம் பாட்டில், சோழனுக்கும் சேரனுக்கும் நடந்த போரில் பல சிற்றரசர்கள் சேரனுக்குத் துணையாக இருந்தனர் என்றும், அவர்களுள் கட்டி என்பவனும் ஒருவன் என்றும் அறியக் கிடக்கின்றது. *குறுந்தொகை* கூறும் கட்டியும், *அகநானூறு* கூறும் கட்டியும் ஒருவனே என்பது ஆராய்ச்சியினால் விளங்குகின்றது. கட்டியரசர் கொங்கு நாட்டின் வடபகுதியை ஆண்டனர்.

அன்றியும், சேரனுக்கு உதவியாகச் சென்றவர்களுள் கங்கன் என்பவனும் கூறப்படுகின்றான் (*அகம்* 44.) இந்தக் கங்கன் என்பவனும் தமிழ் நாட்டின் வடவெல்லையில் இருந்த நாட்டினை அரசாண்ட ஒரு சிற்றரசன் ஆவான். *சிலப்பதிகாரம்* கட்டி, கங்கன் என்பவர்களைக் கட்டியர், கங்கர் என்று இரண்டு குழுவினராகக் கூறுகின்றது. பங்களர் என்பவர் பங்கள நாட்டை ஆண்டனர். பங்கள நாடு இப்போதைய சித்தூர், வட ஆர்க்காடு மாவட்டங்களில் இருந்தது. இது வங்காள நாடு என்னும் வங்கநாடு அன்று. *சிலப்பதிகாரம்*, காட்சிக் காதை 157ஆம் அடியில் "பங்களர் கங்கர் பல்வேற்கட்டியர்" என்று பங்களரையும் கூறுகிறது. பங்களரும் தமிழகத்தின் வடவெல்லையில் இருந்தனர். பங்களர், கங்கர், கட்டியர் ஆகிய இவர்கள் தமிழ் நாட்டின் வடவெல்லையில் இருந்தவர் என்பதற்குச் சாசனச் சான்றுகள் உள்ளன.

பாணன் நன்னாட் டும்பர் (*அகம்* 113:17)

என்றும்,

பல்வேற் பாணன் நன்னாடு (*அகம்* 325:17)

என்றும் கூறப்படுகிற வாணாதிராயரின் நாடும், தமிழகத்தின் வடவெல்லையில் இருந்ததாகும்.

எனவே, பங்களர், கங்கர், கட்டியர், பாணர் (வாணாதிராயர்) ஆகியோர் தமிழகத்தின் வடவெல்லையில் இருந்தவர் என்பது தெரிகின்றது.

இதுகாறும் ஆராய்ந்தவற்றால், வேங்கடமலை மட்டும் தமிழகத்தின் வடவெல்லை அன்றென்றும், மேற்குத் தொடர்ச்சி மலையைச் சேர்ந்த ஏழில்மலையும் ஓர் எல்லையென்றும், இம்மலைகளுக்கிடையில் இருந்த நாடுகளில் கங்கர், பங்களர், கட்டியர், பாணர் முதலியோர் வாழ்ந்து வந்தனரென்றும், இவர்கள் வாழ்ந்த நாடுகள் தமிழகத்தின் வடவெல்லையாக இருந்தனவென்றும் அறிந்தோம்.

*சமயங்கள் வளர்த்த தமிழ்,* 1966

# யானைக்கோவில்

### பாரதநாட்டுக் கோவில்கள்

பாரத நாட்டிலே பழைய காலம் முதல் பலவகையான கோவில் கட்டடங்கள் அமைக்கப்பட்டு வருகின்றன. அந்தக் கட்டடங்களை நாகரம், திராவிடம், வேசரம் என்று மூன்று பெரும்பிரிவுகளாகப் பிரித்துச் சிற்பசாஸ்திர நூல்கள் கூறுகின்றன. நாகர அமைப்புக் கோவில்கள் விந்திய மலைக்கு வடக்கேயும், திராவிட அமைப்புக் கோவில்கள் விந்திய மலைக்குத் தெற்கேயும் அமைக்கப்பட்டன என்று சிற்ப சாஸ்திர நூல்கள் கூறுகின்றன. வேசர அமைப்புக் கோவில்கள் பாரத நாடு முழுவதிலும் அமைக்கப்பட்டன. வேசர அமைப்புக் கட்டடங்களை ஆதிகாலத்தில் பௌத்த மதத்தார் அதிகமாகக் கட்டினார்கள். வேசரக் கட்டடங்களில் சில உட்பிரிவுகளும் உண்டு. ஆனால், பொதுவாகப் பார்க்கும் போது வேசரக் கட்டடங்கள் தரையமைப்பிலும் கட்டட அமைப்பிலும் விமான(கூரை) அமைப்பிலும் வட்ட வடிவம் அல்லது அரைவட்ட வடிவம் உடையவை என்பது தெரியவரும். இவற்றில் சில முழுவட்டமாகவும் சில அரைவட்ட வடிவமாகவும் சில விமானம் மட்டும் வளைந்த (அரைவட்ட) அமைப்புள்ளனவாகவும் இருக்கின்றன. வேசரக் கோவில் கட்டட அமைப்புகளில் யானைக்கோவில் என்றும் கஜபிருஷ்டம் என்றும் கூறப்படுகிற ஒருவகைக் கோவிலைப்பற்றி இங்கு ஆராய்வோம்.

### கஜபிருஷ்டக் கோவில்கள்

கஜபிருஷ்டக் கோவில் அமைப்பைச் சேதியகிருஹம் என்று பௌத்த நூல்கள் கூறுகின்றன. பிராகிருத மொழியில் இது 'சேதியகர' என்று கூறுப்படுகிறது. தமிழில் இது யானைக் கோவில் என்று பெயர் கூறப்படுகிறது. சிற்பசாஸ்திர நூல் இந்தக் கட்டடங்களை கஜபிருஷ்டம் என்றும் ஹஸ்தி பிருஷ்டம் என்றும் குஞ்சரபிருஷ்டம் என்றும் கூறுகின்றன. கஜம், ஹஸ்தி, குஞ்சரம் என்னும் சொற்களின் பொருள் யானை என்பது. யானையைப் பக்கங்களிலிருந்தும் பின்புறத்தி லிருந்தும் பார்த்தால் எவ்விதமான தோற்றமாகக் காணப்படு

கிறதோ அப்படிப்பட்ட வடிவமுடையது இந்தக் கட்டடங்கள். ஆகவேதான் இக்கட்டடங்களுக்குக் கஜபிருஷ்டக் கோவில், ஹஸ்திபிருஷ்டக் கோவில், குஞ்சரக்கோவில் என்று பெயர்கள் கூறப்படுகின்றன. குஞ்சரக்கோவில் என்பதை *மணிமேகலை* காவியத்தில் குச்சரக்குடிகை என்று கூறப்படுகிறது. குச்சரம் என்பது குஞ்சரம் என்பதன் வலித்தல் விகாரம். காவிரிப் பூம்பட்டினத்தில் இருந்த பௌத்தக் கோவிலாகிய சம்பாபதிக் கோவில் இந்த அமைப்பாக இருந்தது. ஆகவே இக்கோவில் குச்சரக்குடிகை என்று பெயர்பெற்றிருந்தது.

தமிழ்நாட்டுக் கோவில் கட்டடங்களின் பெயர்களைக் கூறுகிற அப்பர் (திருநாவுக்கரசு) சுவாமிகள் யானைக் கோவிலை ஆலக்கோவில் என்று கூறுகிறார். அவர் அருளிச் செய்த *தேவாரப்* பதிகங்களில் திருத்தாண்டகம் ஒன்றில் இப்பெயரைக் கூறுகிறார்.

பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்
பெருங்கோயில் எழுபதினோ டெட்டும் மற்றும்
கரக்கோயில் கடிபொழில்சூழ் ஞாழற்கோயில்
கருப்பறியல் பொருப்பனைய கொகுடிக் கோயில்
இருக்கோதி மறையவர்கள் வழிபட்டேத்தும்
இளங்கோயில் மணிக்கோயில் ஆலக்கோயில்
திருக்கோயில் சிவனுறையுங் கோயில்சூழ்ந்து
தாழ்த்திறைஞ்சத் தீவினைகள் தீருமன்றே.

*(திருஅடைவு. திருத்தாண்டகம் 5)*

இதில் ஆலக்கோவில் கூறப்படுவது காண்க.

'ஆலக்கோவில்' என்பதை ஆலமரத்தின்கீழே அமைந்த கோவில் என்று தவறாகச் சிலர் கருதுகிறார்கள். அப்படி யானால், புன்னைமரம், மகிழமரம், வேப்பமரம், அரசமரங் களின் கீழிருக்கும் கோவில்கள் முறையே புன்னைக்கோவில் மகிழக்கோவில், வேப்பங்கோவில், அரசங்கோவில் என்று பெயர்கள் கூறப்படவேண்டுமன்றோ? அவ்வாறு கூறுப்படுவது இல்லையாகையால், ஆலக்கோவில் என்பது யானைக்கோவில் என்பதன் மருஉ என்பது தெளிவாகத் தெரிகிறது. எனவே, ஆலக்கோவில் என்பதற்கு ஆலமரத்தின் கீழிருக்கும் கோவில் என்று கூறுவது தவறு. (தொடர்புரை காண்க.)

யானைக்கோவிலை 'ஆனை மாடம்' என்றும் அப்பர் சுவாமிகள் கூறுகிறார். திருக்கடந்தைத் தூங்கானை மாடத் திருப்பதிகம் காண்க (அப்பர் தேவாரம், முதற்றிருமுறை).

'பெண்ணாகடத்துப் பெருந்தூங்கானை மாடத்தை'யும் கூறுகிறார் (அப்பர் *தேவாரம்*, 3ஆந் திருமுறை, திருவீழிமிழலை 3). திருஞானசம்பந்தரும் தூங்கானைமாடம் திருக்கோவிலைக் கூறுகிறார் (சம்பந்தர் *தேவாரம்*, முதல் திருமுறை). இவ்வாறு, ஆனைக்கோவில் கட்டடங்கள் தேவாரத்திலும் கூறப்படுகின்றன.

**அதன் வளர்ச்சி**

யானைக்கோவில் கட்டடங்கள் ஆதிகாலத்தில், அதற்குரிய சாதாரண அமைப்பாகக் கட்டப்பட்டன. பிறகு காலஞ் செல்லச்செல்ல யானைக்கோவில் கட்டட அமைப்பில் சில சிறு அமைப்புகள் தோன்றலாயின. ஆகவே ஆனைக்கோவில் கட்டட வரலாற்றில் மூன்றுவித வளர்ச்சியைக் காண்கிறோம். அவற்றை ஆதிகாலம், இடைக்காலம், பிற்காலம் என்று மூன்று வகையாகப் பிரிக்கலாம். ஆதிகாலம் என்பது ஏறத்தாழ கி.மு. 3ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 7ஆம் நூற்றாண்டு வரையில் உள்ள காலம். இக்காலத்து யானைக்கோவில் கட்டடங்களைப் பௌத்தக் காலத்து யானைக்கோவில் என்று கூறலாம். ஏனென்றால், அக்காலத்தில் பௌத்த மதத்தார்களால் இக்கோவில் கட்டடங்கள் பெரும்பாலும் கட்டப்பட்டன.

இடைக்கால யானைக்கோவில் கட்டடங்கள் ஏறத்தாழக் கி.பி. ஏழாம் நூற்றாண்டு முதல் 10ஆம் நூற்றாண்டு வரையில் அமைக்கப்பட்டவை. இவற்றைப் பல்லவர் காலத்து யானைக்கோவில்கள் என்று கூறலாம். ஏனென்றால், இவை பெரும்பாலும் பல்லவ அரசர் காலத்தில் அமைக்கப்பட்டவை.

பிற்காலத்து யானைக்கோவில்கள் ஏறத்தாழக் கி.பி. 10ஆம் நூற்றாண்டு முதல் தற்காலம் வரையில் அமைக்கப்பட்டவை. இக்கால யானைக்கோவில்களுக்குச் சோழ பாண்டியர் காலத்து யானைக்கோவில் என்று பெயர் கூறலாம். ஏனென்றால், பிற்காலச் சோழரும் பாண்டியரும் இக்கோவில்களை அமைத்தார்கள். சோழ பாண்டியருக்குப் பிறகு விஜயநகர அரசர் காலத்திலும் சில யானைக்கோவில் கட்டடங்கள் அமைக்கப்பட்டிருக்கலாம்.

இந்த முறைப்படி யானைக்கோவில் கட்டட அமைப்பையும் அதன் வளர்ச்சியையும் ஆராய்வோம்.

**பௌத்தக் காலத்து யானைக்கோவில்கள்**

**(கி.மு. 3ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 7ஆம் நூற்றாண்டு வரை)**

பௌத்தர் தொன்றுதொட்டு சைத்தியாலயம் (சைத்தியக் கிருஹம்) என்னும் கோவில்களை அமைத்தார்கள் என்றும்

அக்கோவில்கள் கஜபிருஷ்டக்கோவில்கள் என்றும் யானைக் கோவில்கள் என்றும் பெயர்பெற்றன என்றும் கூறினோம். பௌத்தமதம், தென் இந்தியாவிலும் தமிழ்நாட்டிலும் இலங்கைத் தீவிலும் கி.பி. மூன்றாம் நூற்றாண்டில், அசோக சக்கரவர்த்தி காலத்தில் பரவிற்று.[1] எனவே, தமிழ்நாட்டில், பௌத்தக் கால யானைக்கோவில் கட்டடங்கள் கி.மு. இரண்டாம் நூற்றாண்டு முதல் அமைக்கப்பட்டன என்று கொள்ளலாம். பௌத்தக் காலத்து யானைக்கோவில்களை இரண்டுவிதமாகப் பிரிக்கலாம். அவை: மலைப் பாறைகளைக் குடைந்து அமைக்கப்பட்ட யானைக்கோவில்கள்; செங்கற் களால் கட்டப்பட்ட யானைக்கோவில்கள் என்பன.

மலைப்பாறைகளைக் குடைந்து அமைக்கப்பட்ட அக்காலத்து யானைக்கோவில்கள் இன்றும் அழியாமல் நின்று நிலவுகின்றன. அந்தப் பாறைக்கோவில்களைப் பார்த்து அதன் அமைப்பு எப்படியிருந்தன என்பதைத் தெரிந்து கொள்கிறோம். ஆனால், அந்த யானைக்கோவில்களின் உட்புற அமைப்பும் முகப்பு (வாயிற்புற) அமைப்பும் எவ்வாறு இருந்தன என்பது மட்டும் இவைகளிலிருந்து அறிந்துகொள்ள முடிகிறது. ஆனால், அக்கோவில்களின் மேற்புற அமைப்பு பாறைக்கோவில்களில் அமைக்கப்படவில்லை. அக்கோவில் களின் மேற்புறங்கள் (விமானங்கள்) பாறையில் அமைக்கப் படாமல், வெறும் பாறையாகவே விடப்பட்டிருக்கிறபடியால், மேற்புற அமைப்பைத் தெரிந்துகொள்ள முடியவில்லை.

பௌத்தக் காலத்தில் செங்கற்களினால் கட்டப்பட்ட யானைக்கோவில்கள் ஏறக்குறைய எல்லாம் அழிந்துவிட்டன. ஏனென்றால், செங்கற்கட்டடங்கள் நெடுங்காலம் நிற்பது இல்லை. கி.பி. இரண்டாம் நூற்றாண்டில், சோழநாட்டுக் காவிரிப்பூம்பட்டினத்தில், சம்பாபதி என்னும் பௌத்தத் தெய்வத்துக்குக் குச்சரக்குடிகை (குஞ்சரக்குடிகை) என்னும் கோவில் அமைந்திருந்தது என்றும், அது யானைக்கோவில் உருவமாக அமைந்திருந்ததென்று அதன் பெயரிலிருந்து (குச்சரக்குடிகை - குஞ்சரக்குடிகை - யானைக்கோவில்) தெரிகிறது என்றும் இச்செய்தி *மணிமேகலை* காவியத் திலிருந்து அறியப்படுகிறது என்றும் கூறினோம். அந்தக் கோவில் இப்போது மறைந்து போயிற்று. தமிழ்நாட்டிலிருந்த பௌத்தக் காலத்து யானைக்கோவில்கள் எல்லாம் செங்கற்களால் கட்டப்பட்டபடியால் ஒன்றைத் தவிர மற்றவை அடியோடு அழிந்துபோயின. ஆனால், ஆந்திர தேசத்தில்

கட்டப்பட்ட பௌத்தக் காலத்து யானைக்கோவில்களின் முழு கட்டடங்கள் அழிந்துபோனபோதிலும் அவற்றின் அடிப் பகுதிகளாவது இப்போதும் காணப்படுகின்றன.

தமிழ்நாட்டில் பௌத்தர் காலத்து யானைக்கோவில் கட்டடங்கள் முழுவதும் அழிந்துபோக, ஆந்திரநாட்டுப் பௌத்தக்கால யானைக்கோவில்களில் அடிப்பகுதிகளாவது அழியாமல் நிலைபெற்றிருப்பதற்குக் காரணம் என்ன? தமிழ்நாட்டிலே பக்தி இயக்கம் தோன்றிச் சைவ நாயன் மார்களும் வைணவ ஆழ்வார்களும் வெளிப்பட்டுப் பௌத்த ஜைன மதங்களுடன் சமயப்போர் செய்தார்கள். தமிழ்நாட்டில் சமயப் போர் தொடங்கிய சில நூற்றாண்டுக்குப் பிறகு ஆந்திர நாட்டில் சமயப்போர் ஆரம்பித்தது. ஆகவே, தமிழ்நாட்டி லிருந்த பௌத்தர் காலத்து யானைக் கோவில் கட்டடங்கள் போற்றுவார் இல்லாமல் விரைவாக அழிந்துவிட்டன. ஆந்திரநாட்டில் பௌத்த மதம் சில நூற்றாண்டுக்குப் பிறகும் நிலைபெற்றிருந்து பிறகு அழிக்கப்பட்டது. ஆகையினால்தான் ஆந்திரநாட்டில் பௌத்தக்கால யானைக்கோவில்களின் சிதைவுகள் இப்போதும் காணப்படுகின்றன.

ஆந்திர நாட்டிலே காடுகளிலும் குன்றுகளிலும் ஆங்காங்கே சிதைந்து அழிந்து கிடக்கிற பௌத்தக் கோவில் களை அரசாங்கத்துப் புதைபொருள் ஆராய்ச்சிக்காரர் (ஆர்க்கியாலஜி இலாகா) கண்டுபிடித்துள்ளனர். அவ்வாறு கண்டுபிடிக்கப்பட்ட கட்டடங்களுள் நமது ஆராய்ச்சிக்குரிய ஆனைக்கோவில் கட்டடங்களும் காணப்படுகின்றன. அவை, மேற்கூரையும் சுவர்களும் இல்லாமல் தரைப்பகுதி மட்டும் காணப்படுகின்றன. இத்தரையமைப்பைக் கொண்டு, அக்கோவில்கள் நீண்ட அரைவட்டமாக இருந்தன என்பதை அறிகிறோம்.

நாகார்ச்சுனகொண்டா என்னும் மலை முற்காலத்தில் பேர்போன பௌத்தத் திருப்பதியாக இருந்தது. இது ஆந்திர நாட்டிலே குண்டூர் மாவட்டத்திலே கிருஷ்ணையாற்றங் கரையிலே இருக்கிறது. குண்டூர் ரெயில் நிலையத்திலிருந்து ரெயில் வண்டியில் மாசெர்லா என்னும் இடத்துக்குப் போய் அங்கிருந்து 16 மைல் சென்றால் இந்த மலையையடையலாம். இங்கு, அழிந்துபோன சில பௌத்தக் கட்டடங்கள் உள்ளன. அவற்றில் மூன்று, யானைக்கோவில் அமைப்பில் காணப் படுகின்றன. இவற்றின் தரையமைப்பைப் படத்தில் காண்க.

அழிந்துபோய் தரையமைப்பு மட்டும் காணப்படுகிற இந்தப் பௌத்த யானைக்கோவில் கட்டடத்தைக் கட்டியவர்

சாந்திஸ்ரீ என்னும் அரசியார். இவர் அக்காலத்தில் இப் பகுதியை யரசாண்ட இக்காகு (இஷ்வாகு) அரசகுலத்தைச் சேர்ந்தவர். இச்சயித்தியக் கோவிலை இவர் கி.பி.2ஆம் நூற்றாண்டில் கட்டினார். இந்தக் கோவிலின் தரையிலே கல்லின் மேல் எழுதப்பட்ட சாசன எழுத்து இவ்வாறு தொடங்குகிறது.

ஸித்தம் நமோ பகவதோ புத்தஸ சேதிய கர

இதன் பொருள் : "பகவானுக்கு வணக்கம். புத்தருடைய சேதிய கிருகம்". இதனால், இது பகவன் புத்தருக்கு அமைக்கப்பட்ட சயித்தியக்கோவில் என்பது தெரிகிறது.

இவ்விடத்திலேயே வேறு இரண்டு யானைக் கோவில்களின் தரையமைப்புக்கள் காணப்படுகின்றன. இவற்றைக் கட்டியவர், மேற்படி இக்காகு அரச குலத்தைச் சேர்ந்த போதிஸ்ரீ என்னும் அரசியார்.[2]

குண்டபல்லி கிராமம் கிருஷ்ணா மாவட்டத்தைச் சேர்ந்த எல்லூர் தாலுகாவில் இருக்கிறது. இக்கிராமத்தில் இடிந்துபோன பௌத்தக் கட்டடங்கள் உள்ளன. அவற்றில் யானைக்கோவிலும் ஒன்று. இதன் தரையமைப்பு நீண்ட அரைவட்டமாக இருக்கிறது. இதன் நீளம் 53 அடி, 7 அங்குலம். அகலம் 14 அடி, 5 அங்குலம். சுவரின் கனம் 4 அடி, 3 அங்குலம்.[3]

கஞ்சம் மாவட்டம் சிக்ககோல் தாலுகாவில் வம்சதாரை என்னும் ஆற்றின் தென்கரையில் சாலிஹுண்டம் என்னும் கிராமம் இருக்கிறது. கலிங்கபட்டணம் என்னும் துறைமுகத்திற்குத் தெற்கே 6 மைலில் இது இருக்கிறது. இந்தக் கிராமத்தையடுத்துள்ள குன்றின் மேலே உள்ள அழிந்துபோன பௌத்தக் கட்டடங்களில் ஒன்று யானைக்கோவிலின் தரையமைப்புடையது. இதன் நீளம் ஏறக்குறைய 24 அடி, அகலம் 12½ அடி. சுவரின் கனம் 3 அடி. இக்கட்டடம் கி.பி. 7ஆம் நூற்றாண்டுக்கு முன்பு கட்டப்பட்டிருக்கவேண்டும். இக்கட்டடச்சுவரில் உள்ள செங்கற்கள் 18" × 11" × 3" அளவுள்ளன.[4]

விசாகப்பட்டணம் மாவட்டத்தில் உள்ள விஜய நகரத்திலிருந்து வடகிழக்கே 8 மைலுக்கப்பால் இராமதீர்த்தம் என்னும் கிராமம் இருக்கிறது. இந்தக் கிராமத்தின் வடக்கேயுள்ள குருபக்தகொண்ட என்னும் குன்றின்மேல் இடிந்துபோன பௌத்தக் கட்டடங்கள் சில உள்ளன. அவற்றில் ஐந்து கட்டடங்கள் யானைக்கோவில்கள். இவற்றின் தரையமைப்பு அகல நீளங்கள் வருமாறு :

**1ஆவது யானைக்கோவில்:** இது மேற்குப் பக்கத்தில் உள்ளது. உட்புறமாக இதன் நீளம் 40 அடி. அகலம் 11 அடி.

வாயிலின் அகலம் 4 அடி. சுவர் கனம் 4½ அடி. இதில் 7 அடி உயரம் உள்ள, கருங்கல்லால் அமைந்த தாதுகர்ப்பம் (சேதியம்) காணப்படுகிறது.

**2ஆவது யானைக்கோவில்:** இது 4 அடி 8 அங்குலம் உயரம் உள்ள மேடை மீது கட்டப்பட்டிருக்கிறது. நீளம் 26 அடி 9 அங்குலம். அகலம் 11 அடி 4 அங்குலம். வாயிலின் அகலம் 4 அடி 5 அங்குலம். சுவர் கனம் 2 அடி 4 அங்குலம். இதில் 9 அடி உயரம் உள்ள கருங்கல்லினால் அமைந்த சேதியம் இருக்கிறது.

**3ஆவது யானைக்கோவில்:** இது மேலே கூறப்பட்ட வற்றைவிடச் சற்றுப் பெரியது. இதன் முன்புற வாயிலின் அகலம் 4 அடி 10 அங்குலம். இதில் இருந்த தாதுகர்ப்பத்தின் அடிப்புறம் மட்டும் இப்போது காணப்படுகிறது. இதன் சுற்றளவு 9 அடி 9 அங்குலம்.

**4ஆவது யானைக்கோவில்:** இதன் நீளம் 33 அடி 5 அங்குலம். அகலம் 11 அடி 6 அங்குலம். சுவர் கனம் 4 அடி 9 அங்குலம். இதிலும் கருங்கல்லினால் அமைந்த சேதியம் காணப்படுகிறது.

**5ஆவது யானைக்கோவில்:** இதன் நீளம் 30 அடி. அகலம் 13 அடி 6 அங்குலம். சுவர் கனம் 3 அடி 6 அங்குலம்.[5]

குருபக்தகொண்டாவுக்கு வடக்கே கால் மைலுக்கப்பால் துர்க்ககொண்ட என்னும் குன்று இருக்கிறது. இங்கு அழிந்து கிடக்கும் பௌத்தக் கட்டடங்களில் ஒன்று யானைக்கோவில். இதன் நீளம் 60 அடி. அகலம் 13 அடி.[6]

சாஞ்சி என்னும் இடம் போபால் சமஸ்தானத்தில் இருக்கிறது. சாஞ்சியின் பழைய பெயர் சேதியகிரி என்பது. சேதியகிரி என்பது சிதைந்து சாஞ்சி என்று கூறப்படுகிறது. இங்குப் பௌத்தக் கட்டடங்கள் சிதைந்து இடிந்து உள்ளன. இவற்றில் முக்கியமான கட்டடம் புப்புலாகாரமாக அதாவது நீர்க்குமிழிபோன்ற அமைப்புடையது. இங்குள்ள ஒரு கட்டடம் யானைக்கோவில் அமைப்பாக இருந்தது.[7]

இதுகாறும் இடிந்து சிதைந்து அழிந்துபோன யானைக் கோவில்களின் செங்கற் கட்டடங்களின் தரையமைப்பைக் கண்டோம். யானைக்கோவிலின் செங்கற் கட்டடங்களை முழு உருவத்துடன் பார்க்கவில்லை. பௌத்தக் காலத்து யானைக் கோவில்களின் முழு உருவமுள்ள யானைக்கோவில்கள் உண்டா என்பதைப் பார்ப்போம். ஆம், உண்டு. சிறிதும் சிதையாமல், முழு உருவத்தோடு உள்ள, செங்கற்களால்

கட்டப்பட்ட பௌத்தக் காலத்து யானைக்கோவில்கள் மூன்று இருக்கின்றன! அந்த மூன்று யானைக்கோவில்கள் இப்போது கபோதேசுவரர் கோவில் என்றும், திரிவிக்ரமன் கோவில் என்றும் தூங்கானைமாடம் என்றும் பெயர் பெற்றுள்ளன. இந்தப் பௌத்த காலத்து யானைக்கோவில்களைப் பார்த்து, ஆதிகாலத்தில் எவ்வாறு ஆனைக்கோவில்கள் செங்கற்களால் அமைக்கப்பட்டன என்பதைத் தெரிந்துகொள்ளலாம்.

ஆதிகாலத்து யானைக்கோவிலில், அதாவது பௌத்தக் காலத்துக் கஜபிருஷ்ட விமானக்கோவிலில், இப்போது முழு அமைப்போடு உள்ளவை கபோதேசுவரர் கோவிலும் திரி விக்கிரமன் கோவிலும் பெண்ணாகடத்து யானைமாடக் கோவிலும் என்று கூறினோம். இக்கட்டடங்களின் அமைப்பை ஆராய்ந்து பார்ப்பதற்கு முன்பு இக்கோவில்களைப் பற்றிய பொதுவான சில வரலாறுகளைத் தெரிந்துகொள்வோம்.

**கபோதேசுவரர் கோவில்**

ஆந்திர தேசத்துக் குண்டூர் மாவட்டத்தில் உள்ள நரசராவ்பேட்டை இரயில் நிலையத்திலிருந்து வடமேற்கே 15 மைல் தூரத்தில் உள்ள சேஜர்லா கிராமத்தையடைந்தால் அங்குக் கபோதேசுவரர் கோவிலைக் காணலாம். முற்காலத்தில் பௌத்தமதக் கோவிலாக இருந்த இது பிற்காலத்தில் சைவசமயக் கோவிலாக மாற்றப்பட்டுள்ளது.

**திரிவிக்கிரமன் கோவில்**

இது பம்பாய் மாகாணத்தைச் சேர்ந்தது. இப்போதைய மகாராஷ்டிர தேசத்தில் உள்ளது. ஷோலாப்பூர் மாவட்டத்தில் உள்ள பார்சி என்னும் நகரத்திலிருந்து கிழக்கே 30 மைலுக்கப்பால் தேர்னா ஆற்றின் கரைமேல் உள்ள தேர் என்னும் கிராமத்தில் இக்கோவில் இருக்கிறது. தேர் கிராமத்தின் பழைய பெயர் தகரை என்பது. தேர் என்னும் இக் குக்கிராமம் பண்டைக்காலத்தில் தகரை என்று பேர் பெற்றிருந்த வாணிகம் செழித்த நகரமாக இருந்தது. பழம் பெருமையை இழந்து இப்போது குக்கிராமமாக இருக்கிற இவ்வூரில், பௌத்தக் காலத்து யானைக்கோவில் அழியாமல் இருக்கிறது. பௌத்தக் கோவிலாக இருந்த இது பிற்காலத்தில் வைணவக் கோவிலாக மாற்றப்பட்டுத் திரிவிக்கிரமன் கோவில் என்று பெயர் கூறப்படுகிறது.

செங்கல்லினால் கட்டப்பட்ட பௌத்தக் காலத்து யானைக்கோவில்கள் அழியாமல் முழு உருவத்துடன் இருப்பவை இவ்விரண்டு கோவில்கள் மட்டுமே. இவை

இரண்டும் கி.பி. 5ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டவை என்று கருதப்படுகின்றன.

இக்கோவில்களைச் சூழ்ந்து முன்பக்கத்திலும் சுற்றுப் புறங்களிலும் மண்டபங்களும் கட்டடங்களும் பிற்காலத்தில் புதிதாக அமைக்கப்பட்டன. ஆதிகாலத்தில் இந்த மண்டபங்களும் கட்டடங்களும் இல்லை. இக்கோவில்களைப் பௌத்தரிடமிருந்து சைவ, வைணவர்கள் கைப்பற்றிக் கொண்ட பிறகு, புதிய மண்டபங்களும் கட்டடங்களும் மூலக் கோவிலைச் சூழ்ந்து கட்டினார்கள். சுற்றிலுமுள்ள கட்டடங்களை நீக்கிவிட்டுப் பார்த்தால் நடுவில் உள்ள பழைய பௌத்தக் காலத்து யானைக்கோவிலைக் காணலாம். இனி, இவற்றின் கட்டட அமைப்பைப் பார்ப்போம்.[8] (படம் காண்க)

இரண்டு கட்டடங்களும் ஒரேவிதமாக அமைப்புள்ளவை யாகத் தெரிகின்றன. தரையமைப்பு நீண்டு பின்புறம் வளைந்து அரைவட்டமாக இருக்கின்றன. சுவர்களும் அதே அமைப்புள்ளதாக இருக்கின்றன. மேற்கூரை (விமானம்) யானைமுதுகு போன்று வளைவாக இருக்கிறது. அதாவது படகைக் கவிழ்த்துவைத்தது போன்று இருக்கிறது. முன்புறத்தில் வாயிலும் வாயிலுக்கு மேலே 'நெற்றி முகமும்' அமைந்துள்ளன. இரண்டு கட்டடங்களிலும் உள்ள செங்கற்கள் ஒரே அளவுள்ளவையாக இருக்கின்றன. ஒவ்வொரு கல்லும் 17 அங்குல நீளமும் 9 அங்குல அகலமும் 3 அங்குல கனமும் உள்ளதாக இருக்கிறது. முழுவதும் சுடுமண்ணால் (செங்கல்லினால்) கட்டப்பட்டு வெளிப்புறத்திலும் உட் புறத்திலும் வெண்சுதை பூசப்பட்டுள்ளன. யானையை நிறுத்தி அதைப் பின்புறத்திலிருந்தும் பக்கங்களிலிருந்தும் பார்த்தால் எப்படி இருக்குமோ அவ்வித அமைப்புள்ளதாக இந்த யானைக் கோவில் கட்டடங்கள் இருக்கின்றன.

இரண்டு கட்டடங்களிலும் சுவரில் சிறு வேறுபாடுகள் காணப்படுகின்றன. கபோதேசுவரர் கட்டடத்தில் சுவருக்கும் கூரைக்கும் இடையிலே 'கழுத்து' என்னும் உறுப்பு இல்லாமல் சுவரும் கூரையும் ஒன்றாக இருக்கின்றன. ஆனால், திரிவிக்கிரமன் கட்டடத்தில் சுவருக்கும் கூரைக்கும் இடையிலே 'கழுத்து' என்னும் உறுப்பு அமைந்திருக்கிறது. மேலும், சுவரில் இடையிடையே சுவரோடு சுவராகத் தூண்கள் அமைக்கப்பட்டுள்ளன. இந்தத் தூண்கள் 'கழுத்து' வரையில் அமைந்துள்ளன. 'கழுத்து'க்குக் கீழே எழுதகம் அமைந் திருக்கிறது. 'கழுத்து' தூண்கள், எழுதகம் ஆகிய இவை யெல்லாம் இக்கட்டடத்துக்கு அழகு தருகின்றன.

இச்சிறு வேறுபாடுகள் தவிர இரண்டு கட்டடங்களுக்கும் வேறுபாடுகள் இல்லை. இரண்டு கட்டடங்களில் (பக்கங் களிலும் பின்புறத்திலும்) சாளரங்கள் இல்லை.

வாயிலுக்கு மேலேயுள்ள 'நெற்றி முகம்' சாளரங்களாக அமைந்துள்ளன. இதன் வழியாகக் காற்றும் வெளிச்சமும் கட்டடத்துள் சென்றன. இப்போது, சைவ வைணவர்கள் இச்சாளரங்களை அடைத்துவிட்டார்கள். ஆனால், 'நெற்றி முகம்' அமைக்கப்பட்டதன் முதல் நோக்கம் காற்றும் வெளிச்சமும் கட்டடத்துக்கு உள்ளே வருவதற்காகவே.

கபோதேசுவரர் கட்டடத்தின் உட்புறத்தில் 7½ அடி உயரத்துக்குமேலே, விதானம் அமைத்ததுபோல (தளம் இட்டது போல) மேற்புறம் தெரியாதபடி மறைத்துவிட்டார்கள். இது பிற்காலத்தில் அடைக்கப்பட்டது. திரிவிக்கிரமன் கட்டடத் தில் இவ்வாறு அடைக்கப்படவில்லை.

இரண்டு யானைக்கோவில்களும் செங்கல் கட்டடங்கள் என்றும், இச்செங்கற்கள் ஒவ்வொன்றும் 17 அங்குல நீளமும் 9 அங்குல அகலமும் 3 அங்குல கனமும் உள்ளது என்றும் கூறினோம். இக்கற்களின் அளவைக் கொண்டு இக்கட்டடங் கள் அமைக்கப்பட்ட காலத்தைக் கண்டறியலாம். இக்கற்கள் மௌரிய அரசர் காலத்துக் கற்களைவிடச் சற்றுச் சிறியனவாகவும், குப்த அரசர் காலத்துக் கற்களைவிடச் சற்றுப் பெரியதாகவும் இருக்கின்றன. ஆகவே இக்கட்டடங்கள் இவ்விரண்டு அரச பரம்பரையார் ஆண்ட காலத்துக்கு இடைப்பட்ட காலத்தில் கட்டப்பட்டிருக்கவேண்டும் என்று கருதுகிறார்கள். அதாவது கி.பி. 5ஆம் நூற்றாண்டில் இவை கட்டப்பட்டவை என்று கூறுகிறார்கள். வேறு சிலர் கி.பி. 2ஆம் நூற்றாண்டில் இக்கட்டடங்கள் கட்டப்பட்டவை என்று கூறுகின்றனர். எப்படியிருந்தபோதிலும் இந்த யானைக்கோவில் கட்டடங்கள் ஆதிகாலத்துக் கட்டடங்களாகும். அதாவது பௌத்தக் காலத்து யானைக்கோவில் கட்டடங்களாகும்.

**ஆனைமாடம்**

தமிழ் நாட்டிலேயுள்ள ஆதிகாலத்து (பௌத்தக்காலத்து) யானைக்கோவில் ஒன்று இருக்கிறது என்று கூறினோம். இக்கோவிலைக் 'கடந்தைத்தூங்கானைமாடம்' என்று கூறுவர். பெண்ணாகடம் என்னும் ஊரில் இக்கோவில் இருக்கிறது (திருவானைக்கா என்றும் பெயர் கூறுவர்). விழுப்புரம் - திருச்சி இருப்புப்பாதையில் பெண்ணாகடம் ரெயில் நிலையத்தி

லிருந்து மேற்கே ஒரு நாழிகை தூரத்தில் இக்கோவில் இருக்கிறது. இக்கோவிலைக் கட்டியவன் சோழன் செங் கணான் என்பவன். சோழன் செங்கணான் கி.பி. 3ஆம் நூற்றாண்டில் இருந்தவன். அவனால் கட்டப்பட்ட இந்த யானைமாடக்கோவில் கி.பி. மூன்றாம் நூற்றாண்டில் அமைந்தது. எனவே, கபோதேசுவரர், திருவிக்கிரமன் யானைக்கோவில் களைவிட இது பழமையானது.

யானைக்கோவில் அமைப்பாக உள்ள இந்தக் கட்டடம், ஏனைய பௌத்தக் காலத்து யானைக்கோவிலைப் போன்றதே. இது சிவபெருமானுக்காகச் சோழன் கட்டிய கோவில். ஆனால், இதைப் பௌத்தக் காலத்துக் கோவில் என்று ஏன் கூறுகிறோம் என்றால், பௌத்த மதத்தார்களால் சிறப்பாகக் கட்டப்பட்ட காலத்தைச் சேர்ந்தபடியால் இப்பெயர் கூறுகிறோம். இது ஆதிகாலத்திலிருந்தே சிவனுக்காகக் கட்டப்பட்ட கோவில். அதாவது பௌத்தக் கோவிலாக இருந்து சைவக் கோவிலாக மாற்றப்பட்டது அன்று.

இந்தப் பெண்ணாகடத்து யானைக்கோவில் கட்டடத் தில், ஏனைய யானைக்கோவில் கட்டடங்களில் இல்லாத தனிச்சிறப்பு உண்டு. அது என்னவென்றால், இக்கட்டடத்தின் சுவர்களில் சாளரங்கள் அமைத்திருப்பதுதான். இருபுறத்துச் சுவர்களிலும் பின்புறத்துச் சுவரிலும் ஒவ்வொரு சாளரம் வீதம் மூன்று சாளரங்கள் இக்கட்டடத்தில் சிறப்பாக அமைந் துள்ளன. இது அக்கட்டடத்துக்கே உரிய தனிச்சிறப்பு. ஆதிகாலம், இடைக்காலம், பிற்காலம் ஆகிய காலங்களில் அமைக்கப்பட்ட யானைக்கோவில் கட்டடங்கள் ஒன்றி லேனும் இதுபோன்ற சாளர அமைப்புகள் கிடையா. செங்கட்சோழன் கட்டிய இந்த யானைக்கோவிலில் மட்டும், தனிச்சிறப்பாகச் சாளரங்கள் இருக்கின்றன. ஏன்? இதன் காரணம் என்ன?

இந்த யானைமாடக் கோவிலில் அகநாழிகையில் (அகநாழிகை - திருவுண்ணாழிகை - கர்ப்பக்கிருகம்) எப்போதும் நீர் இருந்துகொண்டேயிருக்கிறது. நீரிலே இலிங்க உருவம் எழுந்தருளப்பட்டிருக்கிறது. இது பஞ்சபூத இலிங்கங்களில் அப்புலிங்கம். ஆகவே இது நீரின் இடையே அமைக்கப்பட்டிருக்கிறது. அப்பர் சுவாமிகள் தாம் அருளிய திருவானைக்கா திருத்தாண்டகத்தில், நீரில் எழுந்தருளியுள்ள இச்சிவலிங்க மூர்த்தியைச் 'செழுநீர்த்திரள்' என்று கூறுகிறார்.

சூரியவெளிச்சம் படாத இடத்தில் நீர்தேங்கியிருந்தால் அந்நீர் கெட்டுப்போகும். காற்றும் வெளிச்சமும் புகாதபடி

இக்கோவிலில் நீர் இருந்தால் கெட்டுப்போகும் அல்லவா? ஆகவே, காற்றும் சூரியவெளிச்சமும் உள்ளே புகும்படியாக இந்த யானைக்கோவில் கட்டடத்தின் சுவர்களில் சாளரங்கள் அமைத்திருக்கிறார்கள். இதுதான் இக்கட்டடத்துக்குத் தனிச்சிறப்பாகச் சாளரம் அமைக்கப்பட்டிருப்பதற்குக் காரணம் எனத் தோன்றுகிறது. (படம் காண்க.)

கி.பி. 3ஆம் நூற்றாண்டில் செங்கட்சோழனால் கட்டப்பட்ட இத்தூங்கானை மாடக்கோவிலை கி.பி. 7ஆம் நூற்றாண்டில் இருந்த அப்பர் (திருநாவுக்கரசர்) சுவாமிகளும் திருஞானசம்பந்தரும் தமது தேவாரப் பாடல்களில் பாடியிருக்கிறார்கள். அப்பர் சுவாமிகள் 'கடந்தையுள் தூங்கானைமாடம்' என்றும் 'பெண்ணாகடத்துப் பெருந்தூங்கானை மாடம்' என்றும் கூறுகிறார். திருஞானசம்பந்த சுவாமிகள் 'கடந்தைத் தடங்கோயில் தூங்கானை மாடம்' என்றும் 'பெண்ணா கடத்துப் பெருங்கோயில்' என்றும் கூறுகிறார்.

இந்த ஆராய்ச்சியினாலே பௌத்தக் காலத்து யானைக் கோவிலின் அமைப்பைக் கண்டோம். அந்தக் காலத்து யானைக்கோவில்கள் நீண்ட சதுரமாய்ப் பின்புறம் அரைவட்ட வளைவாய் அமைந்த தரையமைப்பையும் சுவர் அமைப்பையும் உடையதாய் யானைமுதுகு போன்ற (அல்லது படகைக் கவிழ்த்து வைத்ததுபோன்ற) கூரையையுடையது. முன்புற வாயிலுக்கு மேலே 'நெற்றி முகம்' என்னும் சாளரம் அமைந்திருந்தது. செங்கல்லினால் கட்டப்பட்டு உட்பக்கமும் வெளிப்பக்கமும் சுதையும் சுண்ணமும் பூசப்பட்டது. நெற்றிமுகத்தைத் தவிர வேறு சாளரங்கள் இல்லாதது (பெண்ணாகடத்து யானைக்கோவில் இதற்கு விதிவிலக்காக உள்ளது). யானையின் உருவம்போல அமைந்திருந்தபடியால் யானைக்கோவில் என்றும் குஞ்சரக்குடிகை (குச்சரக்குடிகை) என்றும், கஜபிருஷ்டம், ஹஸ்திபிருஷ்டம் என்றும் பெயர் பெற்றது.

இக்கட்டட அமைப்பில் முக்கியமாகக் கவனிக்க வேண்டியது ஒன்று உண்டு. அது என்னவென்றால், ஏனைய கோவில் கட்டட அமைப்புகளில் கழுத்தாகிய பிரஸ்திரத்துக்கு மேலே அமைக்கப்படுகிற கர்ணகூடு, பஞ்சரம்சாலை என்னும் உறுப்புகள் அக்காலத்து யானைக் கோவில்களுக்குக் கிடையா. மேலும், சுவரின் வெளிப்புறத்தில், ஏனைய கோவில் கட்டடங்களில் அமைக்கப்படுகிற 'கோஷ்ட பஞ்சரம்' என்னும் உறுப்பும் ஆதிகால யானைக்கோவில்களில் கிடையா.

ஏறத்தாழக் கி.பி. 10ஆம் நூற்றாண்டிலே, காஞ்சிபுரத்தில் எழுதப்பட்ட *காமிகாகமத்தில்* கஜபிருஷ்ட ஹஸ்திபிருஷ்டக் கோவில்களைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது. ஏனைய சிற்பசாத்திர நூல்களிலும் கூறப்பட்டுள்ளன.

**பல்லவர் காலத்து யானைக்கோவில்கள்**

கி.பி. 600 முதல் 900 வரையில் அமைக்கப்பட்ட யானைக்கோவில் கட்டடங்களுக்குப் பல்லவர் காலத்து யானைக்கோவில்கள் என்று பெயர் கூறலாம். ஏனென்றால் பல்லவ அரசர் ஆட்சி கி.பி. 600க்கும் 900க்கும் இடைப்பட்ட காலத்தில் சிறப்புப் பெற்றிருந்ததோடு இக்காலத்திலே பல்லவ அரசர்கள் பலவிதமான கோவில் கட்டடங்களைச் சிறப்பாகச் செய்து அமைத்தார்கள் என்று சரித்திரங் கூறுகிறது. கி.பி. 600க்கு முற்பட்ட காலத்து யானைக்கோவில்களைப் பௌத்த கால யானைக்கோவில்கள் என்று பெயர் சூட்டினோம். பல்லவர் காலத்து யானைக்கோவில் கட்டடங்கள் சில இப்போதும் உள்ளன. சில அழிந்து மறைந்து போயின. முதலாம் மகேந்திரவர்மன் காலம் முதல் அபராஜிதவர்மன் காலம் ஈறாக அமைக்கப்பட்ட யானைக்கோவில்களைத்தான் பல்லவர் காலத்து யானைக்கோவில்கள் என்று கூறுகிறோம்.

இவைகளில், காஞ்சிபுரத்துக்கு அடுத்துள்ள கூரம் கிராமத்தில் இருந்த எச்சாதர பல்லவேச்சுரம் என்னும் யானைக்கோவில் அழிந்து மறைந்துவிட்டது. இதுபற்றிப் பின்னர்க் கூறுவோம். இப்போது நன்னிலையில் உள்ள பல்லவர் காலத்து யானைக்கோவில்கள் நாம் அறிந்த வரையில் நான்கே. அவை: மாமல்லபுரத்துச் 'சகாதேவரதம்' எனப்படுகிற யானைக்கோவிலும், ஒரகடத்து வாடாமல்லீச்சுரர் கோவிலும், குடிமல்லத்துப் பரசுராமேச்சுரக் கோவிலும், திருத்தணிகை வீரட்டானேச்சுரர் கோவிலும் ஆகும். இவற்றின் அமைப்புகளை ஆராய்ந்து பார்ப்போம்.

**மாமல்லபுரத்து யானைக்கோவில்**

மகாபலிபுரம் என்று இப்போது பெயர் வழங்கப்படுகிற மாமல்லபுரம் செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள செங்கற்பட்டு இரயில் நிலையத்திலிருந்து கிழக்கே 18 மைல்தூரத்தில் கடற்கரையோரத்தில் இருக்கிறது. இங்குப் பாறைகளைச் செதுக்கியமைக்கப்பட்ட சிற்பங்களும் கோவில்களும் உள்ளன. இப்பாறைக் கோவில்களில் 'பஞ்ச பாண்டவரதங்கள்' என்னும் பெயருள்ள தொகுதி ஒன்றுண்டு. இத்தொகுதிகளைச் சேர்ந்த

ஒன்றுதான் நாம் கூறுகிற மாமல்லபுரத்து யானைக் கோவில் என்பது. இந்தக் கோவில் அமைப்பைப் பாமரமக்கள் 'நகுல சகாதேவ ரதம்' என்று பெயர் கூறுகிறார்கள்.

'பஞ்சபாண்டவரதங்கள்' என்று பெயர் கூறப்படுகிற இவை உண்மையில் இரதங்கள் அல்ல; கோவில்களாகும். அக்காலத்தில் தமிழ்நாட்டில் இருந்த கோவிற் கட்டட அமைப்புக்களின் உருவத் தோற்றத்தை இக்கருங்கற்பாறை களில் அக்காலத்துச் சிற்பிகள் அமைத்துக் காட்டியுள்ளனர். இளங்கோவிலின் அமைப்பு, இரண்டுநிலை மூன்றுநிலை மாடக் கோவில்கள், யானைக்கோவில் முதலிய கோவில்களின் வெளித் தோற்றமும் அமைப்பும் எவ்வாறிருந்தன என்பதைக் காட்டுவதற்காகவே இக்கோவில்கள் கருங்கற்களில் செதுக்கி வைக்கப்பட்டுள்ளன. இக்கோவில் கட்டடங்களின் உட்புற அமைப்புகளைக் காட்டுவது இவற்றை அமைத்த சிற்பிகளின் நோக்கம் அன்று. உட்புற அமைப்புகளையும் அமைத்துக் காட்டுவது அச்சிற்பிகளின் நோக்கமாயிருந்தால், உட்புற அமைப்புகளையும் அமைத்துக்காட்டியிருப்பார்கள். அவ்வா றில்லாமல், பலவிதக் கோவில் அமைப்புகளின் வெளித் தோற்றத்தை மட்டும் காட்டுவதே அவர்கள் நோக்கமாக இருந்தபடியால், கருவறையாகிய திருவுண்ணாழிகைகளை அமைக்காமல், விமானங்கள், சுவர்கள், கூடுகள், கூடகோஷ்டபஞ்சரங்கள் ஆகிய வெளித்தோற்றங்களை மட்டும் செம்மையாகவும் செப்பமாகவும் அமைத்துக் காட்டியுள்ளனர். சில பாறைக் கோவில்களின் விமான அமைப்புகளை மட்டும் நுணுக்கமாகவும் செப்பமாகவும் செய்துவிட்டு, மற்றப் பகுதிகளைச் செம்மையாக முடிக்காமல் விட்டிருக்கின்றனர்.

இந்த நோக்கத்தைக் கொண்டுதான், அதாவது கோவில் கட்டடத்தின் விமானத்தையும் சுவர் அமைப்பு, கூடகோஷ்ட பஞ்சர அமைப்பு ஆகியவற்றை மட்டும் (கர்ப்பக்கிருகமாகிய உண்ணாழிகையின் அமைப்பைக் காட்டுவது நோக்கமாக இல்லாமல்) கொண்டுதான், 'நகுல சகாதேவ ரதம்' என்று பெயர் கூறப்படுகிற யானைக்கோவிலையும் அமைத்திருக் கிறார்கள். இது வெறும் யானைக்கோவில் அமைப்பு மட்டுமன்று, யானைக்கோவிலில் மாடக்கோவில் அமைப்பும் ஆகும். இந்த யானைக்கோவில் மூன்று நிலையுள்ள மாடக் கோவிலாகும்.

கி.பி. 600க்கு முற்பட்ட பௌத்தர் காலத்து யானைக் கோவில் கட்டடங்களில் இரண்டுநிலை மாடக் கோவில்

மூன்றுநிலைமாடக் கோவில்கள் காணப்படவில்லை. ஆனால், மூன்று நிலையுள்ள மாடக்கோவிலாக அமைந்த யானைக் கோவிலை மாமல்லபுரத்தில் காண்கிறோம். இது மாடக் கோவில் கட்டடங்களில் புதிதாகப் புகுத்தப்பட்ட மாறுதல் ஆகும். இரண்டுநிலை மூன்று நிலைகளையுடைய யானைக் கோவில்களைச் *காமிகாகமம்* கூறுகின்றது. இவ்யானைக் கோவில்களுக்கு 'ஹஸ்திபிருஷ்டம்' என்றும் 'கஜபிருஷ்டம்' என்றும் காமிகாகமம் பெயர் கூறுகின்றது (காமிகாகமம் 60 ஆவது ஏகபூமியாதி விதிபடலம்). ஆனால், இரண்டுநிலை மாடமாக அமைந்த யானைக்கோவில் கட்டடம் இப்போது காணக்கிடைக்கவில்லை. முன்பு இருந்து பிற்காலத்தில் மறைந்துவிட்டனபோலும். ஆனால், மூன்றுநிலை மாடமாக அமைந்த யானைக்கோவில் மாமல்லபுரத்து 'நகுல சகாதேவ ரதம்' ஒன்றே. யானைக்கோவில் அமைப்பில் உள்ள மூன்று நிலைமாடக் கோவில் இதைத் தவிர வேறொன்றும் கிடையாது.

இதன் அமைப்பை ஆராய்ந்து பார்ப்போம். நீண்ட அரைவட்டமாக அமைந்துள்ள இந்த யானைக் கோவில் தெற்கு நோக்கி நிற்கிறது. தெற்கு வடக்காக இதன் நீளம் 18 அடி. அகலம் 11 அடி. உயரம் ஏறத்தாழ 16 அடி. இக்கட்டடத்தின் முன்பாகத்தில் ஒரு மண்டபம் காணப்படுகிறது. அந்த மண்டபத்தை இரண்டு சிங்கத்தூண்கள் தாங்குகின்றன. இந்த மண்டபம் இக்கட்டடத்துக்கு அழகையளிக்கின்றது. மண்டபத்துக்குள் நுழைந்தால் கட்டடத்தின் உள்ளே நுழைய வாயில்நிலை அமைக்கப்பட்டிருக்கிறது. ஆனால் வாயிலுக்குள் நுழையமுடியாது. ஏனென்றால், முன்பு கூறியதுபோன்று திருவுண்ணாழிகை என்னும் அகநாழிகை (கருவறை) அமைக்கப்படாமல் இருக்கிறது. வாயிலின் இருபக்கங்களிலும் யானையின் முன்பக்க உருவம் (யானையின் தும்பிக்கையும் தலையும் காதுகளும்) சிற்பமாக அமைந்துள்ளது.

இதன் முதல் நிலையமைப்பைப் பார்ப்போம். இதன் சுவர் அமைப்பு நீண்ட அரைவட்டமாக அமைந்து, 'அதிஷ்டானம்' என்னும் சிறு மேடையின்மேல் நிற்கிறது. சுவர்களில் இடையிடையே சுவர்களைச் சார்ந்து (திரிவிக்கிரமன் யானைக் கோவிலில் கண்டதுபோல) தூண்கள் அமைந்து கட்டடத்துக்கு அழகு தருகின்றன.

இதன் இரண்டாம் நிலையின் சுவர் அமைப்பும், முதல் நிலைச் சுவர் அமைப்புப் போன்றே நீண்ட அரை வட்ட மாகவும் சுவரின் இடையிடையே தூண்களுடையதாகவும் அமைந்திருக்கிறது. ஆனால், முதல் நிலைச் சுவரைவிடச் சற்று

உள்ளடங்கியிருக்கிறது. இரண்டாம் நிலையின் சுற்றுப்புறங்களில், முதல் நிலைச் சுவரையொட்டி, 'கூடகோஷ்ட பஞ்சரங்கள்' அமைந்து கட்டடத்துக்கு அழகைத் தருகின்றன.

மூன்றாவது நிலையின் சுவர்கள் இரண்டாவது நிலைச் சுவரைவிடச் சற்று உள்ளடங்கி, நீண்ட அரைவட்ட அமைப்பாக இடையிடையே தூண்களைப் பெற்றிருக்கின்றது. மூன்றாம் நிலையின் சுற்றுப்புறங்களிலும், இரண்டாம் நிலையில் உள்ளதுபோலவே கூடகோஷ்டபஞ்சரங்கள் அமைந்துள்ளன. இவ்வாறு மூன்று நிலைகளும் அழகுபட அமைந்துள்ளன.

மூன்றாவது நிலைக்கு மேல் உள்ள விமானத்தின் (கூரை) அமைப்பு யானையின் முதுகு போன்று அமைந்திருக்கின்றது. இந்த விமானத்தைப் பக்கங்களில் இருந்து பார்த்தால் யானைமுதுகின் தோற்றம் போன்றும் பின்புறத்திலிருந்து பார்த்தால் யானையின் பின்தோற்றம் போலவும் காணப்படுகின்றது. விமானத்தின் உச்சியில் வரிசையாகக் கலசங்கள் இருந்தன. இப்போது அவை காணப்படவில்லை. அவை இருந்த அடையாளங்கள் மட்டும் தெரிகின்றன. இந்த விமானத்தின் முன்புறம் 'நெற்றிமுகம்' என்று பெயர் பெறும். நெற்றிமுகத்தின் மேலே, மூன்று கொம்புள்ள மனிதன் தலையுருவம் அமைந்திருக்கிறது. அது உடைந்திருக்கிறது.

விமானத்தின் முன்புறமாகிய நெற்றிமுகத்தில், மூன்று வாயில்கள் போன்ற அமைப்பும் நடுவாயிலின் மத்தியில் சேதியம் (தாகோப - தாதுகர்ப்பம்) போன்ற உருவமும் புடைப்புச்சிற்பமாக அமைக்கப்பட்டுள்ளன. கோவிலின் திருவுண்ணாழிகை (கர்ப்பக்கிருகம்) அமைக்கப்பட்டிருந்தால், அதனுள் எழுந்தருளப்பண்ணியிருக்கும் சேதியத்தின் உருவம் எவ்வாறு அமைந்திருக்கும் என்பதை இது காட்டுகிறது. நெற்றிமுகத்தில் காணப்படுகிற இந்தச் சேதிய உருவப் புடைப்புச்சிற்பம், யானைக் கோவில்கள் பௌத்தர் வழிவந்த கட்டடம் என்பதை நினைவூட்டுகின்றன. இந்தப் பௌத்தச் சேதிய அடையாளங்கள் பல்லவர் காலத்திலும் விடாமல் தொடர்ந்து வந்துள்ளன என்பது கருதத்தக்கது.

பௌத்தர் கால யானைக்கோவில் விமானங்களில் காணப்படாத புதிய அமைப்பு இந்த விமானத்தில் காணப்படுகிறது. அது, விமானத்தின் மூன்று பக்கங்களிலும் பின்புறத்திலும் நீண்டு குறுகிய மூன்று 'பஞ்சரங்கள்' அமைக்கப்பட்டிருப்பதுதான். இந்தப் பஞ்சரங்கள் இரத விமானத்துக்கு அழகு தருகின்றது.

இந்த யானைக் கோவிலின் கிழக்குப் பக்கத்தில், யானை ஒன்று நிற்பது போலக் கல்லில் செதுக்கப்பட்டுள்ளது. (படம் காண்க)

இந்த யானையின் உருவம் இங்கு இருப்பது காரணமாக, இக்கட்டடம் இந்திரனுக்காக அமைக்கப்பட்ட கோவிலாக இருக்கலாம் என்று சிலர் கருதுகின்றனர். ஐராவதம் என்னும் வெள்ளை யானை இந்திரனுடைய ஊர்தி என்பது உண்மைதான். ஆனால் இந்த யானைக்கோவில் இந்திரனுக்காக அமைக்கப்பட்டது அன்று. ஏனென்றால் இது அமைக்கப் பட்ட கி.பி. 7ஆம் நூற்றாண்டில் (இக்கோவில் மாமல்லன் என்னும் நரசிம்மவர்மன் முதலாவன் - வாதாபி கொண்ட நரசிம்மவர்மன் காலத்தில்) அமைக்கப்பட்டது. அக்காலத்தில் தமிழ்நாட்டில் ஏன் இந்தியாவிலேயே, இந்திரன் வழிபாடு குறைந்துவிட்டது. ஆகவே இது இந்திரனுக்காக அமைக்கப் பட்ட கோவில் அன்று.

இந்த யானையின் உருவம் இக்கட்டடத்துக்கு அருகில் அமைக்கப்பட்டிருக்கிற காரணம் என்னவென்றால், இது யானையின் முதுகு போன்ற விமானத்தை (உச்சியை) யுடைய கஜபிருஷ்ட விமானக்கோவில் என்பதைக் காட்டுவதற்காகத் தான் என்று தோன்றுகிறது. இந்த யானையின் உருவத்தைப் போலவே இக்கட்டடத்தின் உருவமும் அமைந்திருக்கிறது என்பதைக் கூறுவதுபோல இக்கட்டடத்தையமைத்த சிற்பி இந்த யானையின் உருவத்தையும் அமைத்தார் போலும்.

மாமல்லபுரத்து அழகான கோவிற் சிற்பங்களில் இந்த யானைக்கோவில் சிற்பமும் கண்ணுக்கும் காட்சிக்கும் இனிமை யானது. இதையமைத்த சிற்பியின் பெயரை வாழ்த்துவதற்கு அவன் பெயர் கூடத் தெரியவில்லையே!

## அடிக்குறிப்புகள்

1. தமிழ் நாட்டுப் பௌத்த வரலாற்றினை, இந்நூலாசிரியர் எழுதியுள்ள *பௌத்தமும் தமிழும்* என்னும் நூலில் காண்க.
2. The Buddist antiquities of Nagarjuna Konda, Madras Presidency by A.H. Longburst, *Memories of the Archaeological Survey of India*. No.54.
3. Plate XXI, *Annual Report of Archaeology*, 1916-17.
4. *Annual Report of Archaeology*, 1919-20, p.36, Fig.2, Plan of the Chaitya with broken Buddha.

5. Plate XL, Page.79 Buddist Monastries in the Guru Bhakta Konda and Durga Konda Hills at Rama Tirtham by A. Rea, pp.78-88, *Archaeological Survey of India Annual Report* 1910-11.
6. *Ibid*, Plate XLVI, p.86.
7. Plate 47. Fergusion
8. Plate 50,51,52. *Archaeological Survey of India Annual Report*, 1902-03.

*மயிலை சீனி. வேங்கடசாமி அவர்கள் தமது தமிழர் வளர்த்த அழகுக் கலைகள் என்னும் நூலின் துணை நூற்பட்டியலில் 'ஆணைக் கோவில் கையெழுத்துப்பிரதி' என்று குறிப்பிட்டுள்ளார். இதைத் தனிநூலாக எழுத அவர் திட்டமிட்டிருந்தார் என்று தோன்றுகிறது. கையெழுத்துப் படியாக இருந்த இக்கட்டுரை முதன் முதலாக அச்சில் வெளிவருகிறது. 'படம் காண்க' என்று அவர் எழுதியிருப் பினும் இந்தப் படியில் எங்கும் படம் வரையப்படவில்லை.*

(ப-ர்)



